உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவாவடுதுறை ஆதீனத்துத்

திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய

**சிவஞானயோகிகள்**

அருளிச்செய்த

# பிரபந்தத்திரட்டு.

இராமநாதபுரசமஸ்தானம்

ம-ா-ா-ஸ்ரீ பொன்னுச்சாமித்தேவரவர்களுடைய

புத்திரர் ம-ா-ா-ஸ்ரீ

**பாண்டித்துரைத்தேவரவர்கள்**

விரும்பியவண்ணம்

மதுராபுரிவாசியாகிய

இ. இராமசுவாமிப்பிள்ளை என்று

வழங்குகின்ற

**ஞானசம்பந்தப்பிள்ளையால்**

அகப்பட்டபிரதிகள் கொண்டுபரிசோதித்து

சென்னை:

இந்து தியலாஜிகல் யந்திரசாலையிலும்

சித்தாந்தவித்தியாநுபாலனயந்திரசாலையிலும்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதி௵ இடபமதி.

இதன்விலை ரூபா-கவ.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
ம-ள-ள-ஸ்ரீ,
சாமிநாதையரவர்கள் இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமேவுபாவையிடைக்கமலைவருமிடம்புறமாப்போக்கிமா
றுத், தேமேவுகமலையிடைப்பாவைவருமிடமகமாச்சேர்த்தி
லங்கு, மாமேவுபுகழ்ச்சோழவளநாட்டிலாகந்தவாரிமூழ்கத்,
தூமேவுவிருப்புடையோர்க்கொருதுறையாமாவடுதண்டுறைமூ
தூரில். (க)

உளம்பழுத்தகயிலாயபரம்பரையென்றுலகேத்தவுறுமா
தீன, வளம்பழுத்தமடாலயத்திறசித்தாந்தபாநுவாவயங்கிப்
பொல்லாங், களம்பழுத்தமலந்துமித்துக்கருணைபழுத்திலகுப
ஞ்சாக்கரதேவன்பொற், றளம்பழுத்தபுண்டரிகத்தாள்பழுத்த
வுளப்பெரியர்தலைவராகி. (உ)

வடமொழிசெய்தவந்தானென்மருமென்கதென்பொதியி
ல்வரையின்மேய, திடமொழிசெய்தவந்தானென்மருமென்கக
த்தவமேதிரண்டதென்று, மடமொழிபல்லறிஞரினிதேத்தவரு
ம்பெரும்புலமைவயங்கவாய்ந்து,விடலருஞ்சீர்ச்சிவஞானயோ
கிகளென்றொருபெரியர்விளங்கினரால். (ங)

புலங்குலவுதம்பெயர்க்கேற்புறத்தமிழிற்சிவஞானபோத
மெய்ந்நூற், கிலங்குறுபாடியஞ்செய்துதிராவிடபாடியகருத்த
ரெனும்பேர்பெற்றார், பலங்குலவுமாதீனகுலதெய்வமெனவும
வர்பகர்வர்சான்றோர், அலங்குலவுமவர்பெருமையெடுத்து
ரைப்பச்சிறியேனாலாகுங்கொல்லோ. (ச)

அன்னபுகழ்ச்சிவஞானயோகிகளிந்நாடுய்யவருளிச்செய்
த, பன்னவரும்பலநூலுளுறல்வேதாகமசாரப்பயன்கள்யாவுந்,
துன்னவமைந்தமுதொழுகு மூவைந்தாம்பிரபந்தத்தொகுதித
ன்னை, என்னருமற்றொருங்கெளிதினடைந்துபொருளுணர்ந்து
பயனெய்தமன்றே. (ரு)

எழுதாதவெழுத்தமைத்துநல்குகெனவளங்குலவியிசையினோங்கிக், கொழுதாரும்வரிவண்டுமுரலுமலர்ப்பொழிற்செம்பிக்குலநாடாள்வோன், முழுதாரும்வளப்புதுவைமாநகரான்முரசுறங்காமுன்றிலான்றேங், கெழுதாமமணிந்துமடமாதர்விழிகவர்ந்தழகுகெழுமுமார்பான். (௬)

யானேசகலர்க்குமிறையென்னமறையிடைச்சொலியாமேசன்றனைத், தானேசமுடன்போற்றுஞ்சேதுபதிமாநேசத்தன்மைமேவி, மானேசராம்பொன்னுச்சாமிவரோதயன்புதல்வன்மறுவிலாண்மைக், கோனேசறவிர்ந்திலகுபீவோராவிரப்போர்ச்செய்கொடைமைவாய்ந்தோன். (௭)

கரிசிலாப்புலவருடனொருங்கிருந்தாராய்ச்சிபுரிகலைவினோதன், துரிசிலாப்பரிதிமதிதிறம்பிடினுந்திறம்பாதசொல்லான்மிக்கான், பரிசிலார்க்கொருநாளுமடையாதகடையாளன்பகைவர்க்கஞ்சாக், குரிசிலானேற்றமருமலனையேயநுதினமுங்குறித்துவாழ்வோன். (௮)

வாங்குதிரையெனவிரைந்துவாங்குதிரையானிருநான்மாதங்கங்கள், தாங்குதிசைகளைத்தனியேசுமக்கலாமமைப்பினெனுந்தந்தியான்றன், ஓங்குபெயரதனாற்றான்றமிழ்புராணத்தற்குரியனெனவுணர்த்துமேந்தல், பாங்குபெறுநயசுகுணமிகுபாண்டித்துரைவள்ளல்பகரக்கேட்டு. (௯)

எண்ணியகாரியமினிதுகைகூடிற்றெனமகிழ்கூர்ந்திணையில்சான்றோர், நண்ணியசீர்முகவைநகருறுசுகுணமிகுசாமிநாதவேண்முன், பண்ணியபுண்ணியத்தால்வந்துதித்தோன்காவிரித்துறைசைப்பதிவாழெங்கள், புண்ணியன்சுப்பிரமணியகுருமணிசேவடிசென்னிபுனைந்ததூயோன். (௧௦)

வெம்பந்தமகற்றுசைவசித்தாந்தநூல்பலவும்விளங்கத்தேர்ந்து, நம்பந்தநூல்வழிச்செனலமுடைமைக்கேற்புறவோங்கிலுஞான, சம்பந்தனெனத்தீட்சாநாமமருவியபுனிதன்றவிர்த்துமேவுங், கொம்பந்தமுறுமேனியயில்விழிமாதர்களாசைக்கோதிலாதோன். (௧௧)

இயன்மருவுபுகழ்த்தெய்வப்புலவர்நச்சினார்க்கினியரனை யொத, செயன்மருவுபெரியர்பலரெழுந்தருளியிருந்துதமிழ் செழிக்கவாய்ந்த, பயன்மருவுமாமதுராபுரிவதிந்தத்தமிழாயும் பான்மைவாய்ந்தோன், கயன்மருவுவிழியன்னைபயன்மருவு மொருபொருளைக்கருதிவாழ்வோன். (௧௨)

குலம்பூத்தநயிட்டிகப்பிரமசாரியநிலைபூண்டுகுலவுஞ்சில ன், புலம்பூத்தகண்மணியோடைந்தெழுத்தும்வெண்ணீறும் பொருளாக்கொண்டோன், கலம்பூத்தகலையாயுங்கலையன்றிக் கலையாயாக்கலையிலாதோன், நலம்பூத்தவிராமசாமிக்குரிசில்பதி ப்பித்தநூல்கிறமேனை. (௧௩)



இஃது,

மதுரை ஐஸ்கூல்

உபாத்தியாயராகிய தமிழ்ப்பண்டிதர்

ம-ா-ா-ஸ்ரீ,

## சபாபதிமுதலியாரவர்கள் இயற்றியது.

தரவுகொச்சகக்கலிப்பா.

திருவளருந்தடங்கமலச்செழுந்தேறல்வாய்த்தேக்கிக்
கருவளருஞ்சினைவாளைகந்திமிசையெழத்தாவி
உருவளருமுகில்பொதுத்திட்டும்பருடுக்கணமுழக்குந்
தருவளரும்பொழில்வளருந்தமிழ்வளர்பாண்டியனாட்டில். (௧)

ஓதுபுகழ்விக்கிரமசிங்கபுரத்துயர்மலய
மாதவன்பாலருள்பெற்றுவயங்குமுதற்பெருங்குடியாங்
கோதில்சீர்வேளாண்மைக்குலமாருங்கனிமணியிற்
றீதகலவந்துதித்தார்சிவஞானமாமுனிவர். (௨)

புக்கலையும்பலபிறவிப்புதவடைக்குங்கல்லாமென்
றொக்கலையுமுயர்தாயாருணர்வுடையதந்தையார்
பக்கலையுநீத்திளையபருவத்தேதுறவினிலுற்
றெக்கலையும்வடதென்மொழியினிற்பயின்றொப்பிலரானார். (௩)

மின்னுமணிப்புனற்றுறைசைமேவுமருட்குருவருளான்
மன்னுபரசிவாநுபவமாணுகிவயங்கிட்டார்
பன்னும்வரம்பிலக்கியமுமிலக்கணமும்படும்பன்னூல்
பின்னுமரன்புகழ்ப்பல்பிரபந்தமிவைபெட்டிசைத்தார். (ச)

அவஞானந்தனையொழித்திட்டரனடியையடைவிக்குஞ்
சிவஞானபோதநூற்றிபபியமாபாடியமு
நவஞானசித்திபிற்கோர்நல்லுரையுநவின்றனர்மேற்
பவஞானமறமாற்றியுயிர்கள்பயன்படுமாறே (ரு)

அன்னவர்செய்சிறுநூலாமரும்பிரபந்தங்கடமைச்
சொன்னமுறையச்சிட்டுத்தருகவெனத்தொடுகடல்சூர்
மன்னுமணித்திரளைக்கொழிக்கமலர்க்கழனிவளங்கொழிக்கத்
தென்னுறையும்புகழுறையுஞ்செயச்செம்பிநாடுடையான். (சு)

அரும்புதுவையளிகாவேயரும்புதுவைநகரான்விண்
விரும்புகடக்குஞ்சரத்தான்வேலைகடக்குஞ்சரத்தான்
கரும்புருவக்கவின்வேள்விற்கரும்புருவாமாதரனை
வரும்பரியப்பரியவுலாவரும்பரியபரியாளன். (எ)

வளத்தாருகிழல்வாழும்வாசவனேயெனுந்திருவோன்
உளத்தாருமெய்ம்மையரிச்சந்திரனேயெனவுவப்போன்
துளத்தாருநல்விழியார்க்கன்பென்றுங்குறைவில்லோன்
ளத்தாருமுடித்தாருமளிமுரலுங்கவின் மிக்கோன். (அ)

மானமுயர்தருபொன்னுச்சாமிதருமணிச்சாமி
யானசெல்வத்துரையாகுமரும்பாண்டித்துரையறையத்
தானதையச்சினிலிட்டுத்தநதனன்மெய்த்தவஞான
மோனகுருமுதலானமும்மையினுமவழிபடுவான். (கூ)

தோற்றுபுகழ்முகவையினிற்றொல்வேளாண்குலத்துதித்தோ
சாற்றரியகுணசாமிநாதனிறைதவத்தோன்றல் ன்
ஏற்றமுறுமொழுக்கத்தோனிராமசாமிப்பெயரோன்
போற்றுபுலமையினுயர்ந்தபுண்ணியநாவலரேறே. (கo)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாசபரம்பரைச்சித்தாந்தசைவபாநுவாகிய

## நமச்சிவாயமூர்த்திகள்மரபில்

அநுக்கிரகம்பெற்றவரும்

## திராவிடமகாபாஷ்யகர்த்தருமாகிய

# சிவஞானயோகிகள்வரலாறு.

*கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்*
*பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபாநுவாகிக்*
*குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சிவாயதேவன்*
*சயிலாதிமரபுடையோன்றிருமரபுநீடூழிதழைகமாதோ.*

திருக்கைலாசமலையிலே, அருள்வடிவாகிய கல்லாலமரநிழலிலே, தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீகண்டபரமசிவன்பால், ஆகமங்களையெல்லாம் கேட்டருளிய நந்திபெருமான் சீகண்டமுதல்வரை வணங்கி நின்று, காமிகமுதலிய சைவாகமங்களின் ஞானபாதப்பொருளின் இகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அம்முதல்வர் நன்றேவினாயினாய், அவ்வுண்மை ரௌரவாகமத்துட் பன்னிருசூத்திரத்தாற் கூறப்பட்டதுசிவஞானபோதமென்பதோர்படலம், அதுகேட்டவர்க்குஎல்லா ஆகமப்பொருள்களுமாறுகோளின்றிஇனிதுவிளங்குமெனக்கூறி;அச்சிவஞானபோதத்தைநந்திபெருமானுக்குஅருளிச்செய்தார். நந்திபெருமானும் அதுகேட்ட துணையானே எல்லா ஐயமுநீங்கி, மெய்ப்பொருள் தெளிந்து, பின் அதனைத்தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சநற்குமாரமுனிவருக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ்சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ்சிறந்த பரஞ்சோதிமுனிவருக்கு அருளிச்செய்தார்.

பின்பு நடுநாட்டிலே, திருப்பெண்ணுகடத்திலே, பாம்பரைச் சைவவேளாளகுலதிலகரும், சிவபத்தி அடியார்பத்திகளினும் கல்வி செல்வங்களினுஞ் சிறந்தவரும், அச்சுதர் களப்பாளர் என்னும் பெயருடையவரும் ஆகிய ஒருவர் இருந்தார். அவர் நெடுங்காலம் பிள்ளைப் பேறின்மையால், அதற்கு உரிய அரிய விரதாதிகளையெல்லாம், ஆதிசைவரும், சகலாகமபண்டிதரும் ஆகிய தம்முடைய குலாசாரியர்முகமாக உணர்ந்து அநுட்டித்துவந்தனர்; வந்தும் சித்திபெறாதுவருந்தி, பின்னும் சகலாகமபண்டிதரிடத்தில் விண்ணப்பஞ்செய்தனர்; அதனை உணர்ந்த சகலாகமபண்டிதர் உற்றுநோக்கி அறிவித்தபடி, அச்சுதர் களப்பாளர் தமிழ்வேதமாகிய தேவாரத்திலே, விதிப்படி அருச்சித்து வணங்கிக் கயிறுசாத்தினர்; சாத்தியவழி, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருவாய்மலர்ந்தருளிய "கண்காட்டு நுதலானும்" என்னுந் திருவெண்காட்டுத் திருப்பதிகத்திலே, அருட்சத்தியாகிய உமாதேவியார் திருநாமசம்பந்தமான "பேயடையா பிரிவெய்தும்" என்னுந் திருப்பாடல் உதயமாயிற்று; அதிலே "வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார்பிள்ளையினோடு உள்ளநினைவாயினவேவரம்பெறுவர் ஒன்றும் ஐயுறவேண்டா" என்னும் பொருளைச் சகலாகமபண்டிதர் நோக்கி நோக்கி, மிகமகிழ்ந்து கொண்டாடி அச்சுதர்களப்பாளர்க்கு உரைத்தனர்.

அதன்பின் அச்சுதர்களப்பாளர் ஆசிரியரிடத்தே விடைபெற்றுக் கொண்டு, திருவெண்காடு என்னுந்திருப்பதியைத் தம்முடைய மனைவியாரோடு அடைந்து, திருக்கோயிலின்கண்ணே, சோமசூரியாக்கினி என்னும் முச்சுடர்களின் திருநாமம்பெற்ற முக்குளத்திலே, விதிப்படி ஸ்நாநம்பண்ணி, சிவபிரானையும் உமாதேவியாரையுந் தரிசித்து வழிபடுவாராயினர். அங்ஙனம் வழிபடுநாளிலே, ஒருநாள் அவருக்குச் சொப்பனத்திலே, சிவபிரான்தோன்றி, "உனக்குஇப்பிறவியிலே, பிள்ளைப்பேறு அரியதாயினும், சர்வாபீஷ்டமும்தரத்தக்கதாய், நமக்குமிக்க பிரீதியுடையதாயுள்ள தேவாரத்தைப் பரமப்பிரமாணமாகக்கொண்டு, நீ ஒழுகுகின்றமையால், அத்தேவாரத்தைப்பாடிச் சைவஸ்தாபனஞ் செய்த திருஞானசம்பந்தப்பிள்ளை என்றேகொள்ளும்படி நமது திருவருளினாலே, இன்னும் தமிழ்நாடுஉய்யும்வண்ணம், அத்தேவாரத்தின் மெய்ப்பொருளை உள்ளடக்கிய சைவசித்தாந்த சாத்திரத்தை வெளிப்படுத்திச் சைவஸ்தாபனஞ் செய்யத்தக்கவனாக; உன்னிடத்தில் ஒரு

புத்திரன் அவதரிப்பான்'' என்று சொல்லி மறைந்தருளினர்; உடனே விழித்தெழுந்த அச்சுதர்களப்பாளர் பெருமகிழ்ச்சிகொண்டு மனைவியாருக்குத்தெரிவித்து, அவரோடு தாமும் பேரன்புடன் சுவேதாரணியனையும், பிரமவித்தியாநாயகியாரையும் வழிபட்டு வசித்தார்; அங்ஙனம் வசிக்குநாளிலே, தம்முடைய மனைவியாரது அருமைத்திருவயிற்றிலே, கருப்பம் உண்டாகி, ஒருசற்புத்திரர் திருவவதாரஞ்செய்தார். பின்பு தந்தையார் அப்பிள்ளையாருக்கு உரிய பருவத்திலே சுவேதவனப்பெருமாள் என்னுந்திருநாமம் சாத்தினர்.

அதன் பின்பு சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத்திருநாமமுடைய அப்பிள்ளையார் திருவெண்ணெய் நல்லூர் என்னுந்திருப்பதியிலே தம்முடைய நன்மாமனார்வீட்டிலே வளருவாராயினர். வளர்ந்து, இரண்டு பிராயத்திற்றானே மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையாராய், எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே, பரஞ்சோதிமுனிவர் திருக்கைலாசமலையினின்று நீங்கி, திருவெண்ணெய்நல்லூரை அடைந்து, அம்மெய்யுணர்வுடையாரைச் சந்தித்து, சிவஞானபோதத்தை நல்கி, இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்துய்தற்பொருட்டு, மொழிபெயர்த்துப் பொழிப்பும் உரைக்கவென்றருளிப் பொழிப்புரைக்குமாறும் சத்தியஞானதரிசனிகள்பால், தாங்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து, பொய்ச்சமயங்களின் நெறி இது இது என்று கண்டு கழிப்பித்து, மெய்ச்சமயமாகிய சைவத்தின் உண்மை உணர்ந்து, அதனை ஸ்தாபனஞ்செய்யும் காரணத்திற்கும், தம்முடைய ஆசிரியர் சத்தியஞானதரிசனிகள் திருநாமத்திற்கும் இணங்க, அம்மெய்யுணர்வுடையாருக்கு மெய்கண்டதேவர் எனத் திருநாமஞ்சாத்தி நீங்கினர்.

பின்பு மெய்கண்டதேவர் அத்திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கின்ற சுயம்புமூர்த்தியாகிய பொல்லாவிநாயகக்கடவுள் சந்நிதியில் சிவஞானபோதத்தைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடி, சிவபிரான் திருவருளும், ஆசிரியர் பரஞ்சோதிமுனிவர் கருத்தும் நோக்கி, தமிழ்நாடு உய்யும்வண்ணம், அவ்வடமொழிச் சிவஞானபோதத்தைத் தமிழில் *வார்த்திகப்பொழிப்பாக மொழிபெயர்த்து, பல அற்புதங்களை விளக்கி, சைவஸ்தாபனஞ்செய்து, தம்முடைய மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள்ளும் சிறந்தவரும், திருத்துறையூரிலே அவதரித்தருளிய ஆதிசைவரும், சகலாகமபண்டிதரென்னுங் காரணப்பெயருடையவருமாகிய அருணந்தி சிவாசாரியருக்கு அளித்தருளினர்.

*வார்த்திகமெனினும் பொழிப்பெனினும் காண்டிகையெனினும்ஒக்கும்.

அருணந்திசிவாசாரியர் முதனூலாகிய சிவஞானபோதத்திற்கு வழிநூலாகச் சிவஞானசித்தியாரும், இருபாவிருபதும் ஆகிய இரண்டு சைவசித்தாந்தசாத்திரங்களை அருளிச்செய்து, அவைகளையும் சிவஞானபோதத்தையும் திருப்பெண்ணாகடத்திலே பிராமணகுலத்திலே அவதரித்தருளிய மறைஞானசம்பந்த சிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

மெய்கண்டதேவர் மாணாக்கருள்ளே திருவதிகைமனவாசகங்கடந்தார் உண்மைவிளக்கமென்னுஞ் சைவசித்தாந்த சாத்திரத்தை இயற்றியருளினார்.

மேற்கூறிய மறைஞானசம்பந்தசிவாசாரியர் சிதம்பரத்தைச் சார்ந்த திருக்களாஞ்சேரியில், சிருங்காரவனத்தில், பிரமபுரீசர்சந்நிதியில், எழுந்தருளியிருந்துகொண்டு, தில்லைவாழந்தணர்களுள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

உமாபதிசிவாசாரியர் சிதம்பரத்தைச்சார்ந்த கொற்றவன்குடியிலே எழுந்தருளியிருந்துகொண்டு, வடமொழியிலே பௌஷ்கராகமத்துக்கு வியாக்கியானத்தையும், தமிழிலே புடைநூலாகிய சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் எட்டுச் சைவசித்தாந்த சாத்திரங்களையும், கோயிற்புராணம், திருத்தொண்டர்புராணசாரம், திருமுறைகண்டபுராணம் சேக்கிழார்நாயனார்புராணம், திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை முதலியவற்றையும் செய்தருளினார். சங்கற்பநிராகரணம்செய்தருளிய காலம் சாலிவாகனசகாப்தம் (௧௨௩௫.)

உமாபதிசிவாசாரியர் அருணமச்சிவாயதேசிகர் முதலிய மாணாக்கர்களுக்கு உபதேசித்தருளினார். அன்றியும் சபாநாயகர் விடுத்தருளிய "அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங், குடியாற் கெழுதியகைச் சீட்டுப்-படியின்மிசைப், பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து, முத்தி கொடுக்க முறை." என்னுந் திருமுகத்தைப் பெற்றுக்கொண்டு, பெற்றான்சாம்பானுக்கு உடனே முத்திகொடுத்தருளினார். பின்பு அப்பெற்றான்சாம்பானுடைய மனைவியும் அரசன் முதலாயினோருங்காண அதனுண்மையை வெளிப்படுத்தி அவர்கள் ஐயத்தை ஒழித்தற்பொருட்டுத் தம்முடைய ஆன்மார்த்தபூசைகொண்டருளிய சிவபிரான் ஆடியருளிய தீர்த்தத்தினால் வளர்ந்து பரிபக்குவம் அடைந்துள்ள முள்ளிச்செடிக்கு முத்திகொடுத்தருளினார்.

சிதம்பரமான்மியத்தின் வழித்தாக அருளிச்செய்யப்பட்ட கோயிற்புராணம் அரங்கேற்றப்படாது பேடகத்துள் இருந்தபொழுது, சபாநாயகசர் தில்லைவாழந்தணர்களுக்குச் சொப்பனத்திலேதோன்றி "நாம்கொற்றவன்குடிஉமாபதியுடையபேடகத்துள்இருக்கின்றோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதனைத் தில்லைவாழந்தணர்கள் உமாபதிசிவாசாரியருக்கு விண்ணப்பஞ்செய்ய, அவர் கோயிற்புராணத்தைச் சபாநாயகர் சந்நிதியில் விரைவில் அரங்கேற்றியருளினார்.

[திருக்கடவூரிலே அவதரித்தருளிய உய்யவந்ததேவநாயனார் பெரும்பற்றப்புலியூரில் எழுந்தருளியிருந்தபொழுது, தம்முடைய ஆசாரியராகிய திருவியலூர் ஆளவந்ததேவநாயனார் தமக்கருளிச்செய்த திருவுந்தியாரென்னுஞ் சைவசித்தாந்த சாத்திரத்தை விரித்துத், தம்மையடைந்த ஓரதிபரிபக்குவர்பொருட்டு ஒரு சைவசித்தாந்த சாத்திரத்தை அருளிச்செய்து, அதன்பெருமையை உலகத்துள்ளாரும் உணர்ந்துய்யுமாறு திருவுளங்கொண்டு, திருவம்பலத்திற்சென்று வணங்கி, திருக்களிற்றுப்படியிலே அந்நூலை வைக்குமளவில், அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து அதனை வாங்கிப் பரமகருணாநிதியாகிய நடராஜரது திருவடியிலே கொடுத்தமையால், அத்திருப்படைவீட்டினுள்ள எழுநூறு திருமடத்துமுதலிகளும் தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் மாகேசுரர் நாற்பத்தெண்ணாயிரவரும் திருக்கோயிற்றிருத்தொண்டு செய்யுந் திருப்பேர் ஏழாயிரத்துத்தொளாயிரவரும் பிறரும் சந்நிதியிலே கூடிநின்று வியப்புற்று, அந்நூற்குத்திருக்களிற்றுப்படியாரெனத் திருநாமஞ்சாத்தினார்கள். ஆகலான் மேற்கூறிய திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் ஆகிய இரண்டும், மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞானபோதம் ஒன்றும், அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார், இருபாவிருபது ஆகிய இரண்டும், மனவாசகங்கடந்தார் அருளிச்செய்த உண்மைவிளக்கம் ஒன்றும், உமாபதி சிவாசாரியர்அருளிச்செய்த சிவப்பிரகாசமுதலிய எட்டும், ஆகப்பதினான்குசைவசித்தாந்த சாத்திரங்களும் மெய்கண்டசாத்திரமென அடிப்பட்ட சான்றோரால் வழங்கப்பட்டுவருகின்றன.]

"உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம் - வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப மூற்று."

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் திருப்பாட்டே யுள்ளுறுநெய் - போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்."

மேற்கூறிய உமாபதிசிவாசாரியரிடத்தே அநுக்கிரகம்பெற்ற அருணமச்சிவாயதேசிகர் நவகோடிசித்தவாசபுரமென்னும் திருநாமமுடைய திருவாவடுதுறையிலே சித்தமூர்த்தியாக எழுந்தருளியிருந்த சித்தர் சிவப்பிரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினார்.

சித்தர்சிவப்பிரகாசதேசிகர் திருமூவலூரிலே பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே திருவவதாரஞ்செய்து, பிரமசரிய நிலையிலே துறவறத்தினராய்ச் சத்திநிபாதத்துத்தமராய் எழுந்தருளியிருந்த நமச்சிவாயமூர்த்திகளுக்கு உபதேசித்தருளினார்.

நமச்சிவாயமூர்த்திகள் தம்முடையஆசிரியர் ஆஞ்ஞாபித்தருளியபடி திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்துகொண்டு, சிவப்பிரகாசதேசிகருக்கு ஞானவதிமுறைப்படி சிவதருமிணியென்று நைட்டிகதீக்ஷைசெய்து அபிஷேகம்பண்ணிச் சைவசித்தாந்தசாத்திரத்தை உபதேசித்தருளினார். சிவப்பிரகாசதேசிகர் வைணவர்களாலே சிதம்பராலயபூசைக்கு முட்டுப்பாடு வந்தவழி, ஞானதேசிகராகிய நமச்சிவாயமூர்த்திகள்பால் ஆஞ்ஞைபெற்றுக்கொண்டு சென்று, தம்மை வழிபடும்வண்ணம் அக்காலத்துள்ள அரசனை வசப்படுத்திச் சிதம்பராலயபூஜை சிறப்புற நடாத்துவித்துப் பின்பு நிட்டையிலே வீற்றிருந்தருளினார்.

பின்பு பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள் திருவாவடுதுறையிலே திருவவதாரஞ்செய்து, தீவிரதரபக்குவராய் எழுந்தருளியிருந்த மறைஞானதேசிகருக்கு அபிஷேகஞ்செய்து உபதேசித்தருளினார். மறைஞானதேசிகர் சைவசித்தாந்த சாத்திரோபதேசம் கேட்டதுணையானே சிந்தித்துத் தெளிந்து தைலதாரைபோல இடையறாது நிட்டையிலே வீற்றிருந்தருளினார்

பின்பு நமச்சிவாயதேசிகோத்தமர் ஆதீனபரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் விளங்கிவரும்வண்ணம் திருவுளங்கொண்டு, அம்பலவாணதேசிகருக்கும், தக்ஷிணாமூர்த்திதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித்தருளினார்.

தக்ஷிணாமூர்த்திதேசிகர் மெய்கண்டசாத்திரத்தின் கருத்தை உள்ளடக்கிய தசகாரியம் உபதேசப்பஃறொடையென்னும் இரண்டுஞான நூல்களைச் செய்தருளிச் சின்னப்பட்டத்தில் எழுந்தருளி யிருந்தபடியே பரிபூரணதசை அடைந்தார்.

அம்பலவாணதேசிகர் தசகாரியம், சன்மார்க்கசித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாயநிட்டைவெண்பா,உபதேசவெண்பா, நிட்டைவிளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை எனப்பத்தியரூபமாகப்பத்துஞானநூல்களையும், பூப்பிள்ளையென்னும் திருப்பெயருடைய ஒருபரிபக்குவர்பொருட்டு உயிர் அட்டவணை எனவும் பூப்பிள்ளை அட்டவணை எனவும் பெயர்பெற்ற கத்தியரூபமாகிய ஒரு ஞானநூலையும் செய்தருளினார்.

அன்றியும் அம்பலவாணதேசிகர் தம்மையடைந்த வைணவப் பிராமணரும் கல்வியறிவொழுக்கங்களிற்சிறந்த பரிபக்குவருமாகிய உலகுடையநாயனார் என்பவருக்குச்சைவசந்நியாசங்கொடுத்து, நைட்டிக நிருவாணதீக்ஷைசெய்து, மெய்கண்டசாத்திரங்களையும், தாம் இயற்றியருளிய தசகாரியமுதலிய நூல்களையும் உபதேசித்தருளினார். உலகுடையநாயனார் தம்முடைய ஞானாசாரியர்மீது சைவசித்தாந்த சாத்திரக்கருத்தை உள்ளடக்கிய தோத்திரரூபமாக "மலமெனுந்தடத்திற் கருமசேதகத்தின்" என்றதற்றொடக்கத்துப் பத்துத்திருவிருத்தங்களைப் பாடியருளினார்.

பின்னும் அம்பலவாணதேசிகரிடத்தே சிவதீக்ஷைபெற்றுச் சித்தாந்தசைவோபதேசங் கேட்டருளிய சிவபுரம் பெரியபிள்ளை என்பவர் தம்முடைய ஆசாரியர்மீது "அந்தமலத் தத்துவிதம்" என்றதற்றொடக்கத்துப் பத்துத் திருவெண்பாக்களைப் பாடியருளினார்.

[பிரமசரிய நிலையிலே துறவறத்தினராய்த் திருவாவடுதுறையின்கண் எழுந்தருளியிருந்துகொண்டு, ஆதீனபரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் நிகழ்ந்துவரும்வண்ணம் திருவுளங்கொண்டு, மாணாக்கர்களுக்கு அபிஷேகஞ்செய்து உபதேசித்தருளிய ஞானாசாரியராகிய நமச்சிவாயமூர்த்திகள் ஆதீனத்துக்குப் பிரதம பரமாசாரியரும், உபதேசபரம்பரை அங்குரித்தற்கு அருகமாய் அப்பிரதமாசாரியர்காலத்தில் இருந்தருளிய அம்பலவாணதேசிகர் துவிதீயாசாரியருமானதால், இந்தஞானாதீனத்துக்கு வந்தருளும் ஆசாரியர்கள் நைட-

டிகதுரியாச்சிரமிகளா யிருத்தலும், பெரியபட்டத்தில் எழுந்தருளியிருக்கும்பொழுது அடியவர்முதலாயிைருக்கு அனுப்பியருளுந் திருமுகங்களில் (நமசிவாய) எனவும், சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருக்கும்பொழுது (அம்பலவாணர் துணை) எனவும் திருக்கைச்சாத்திடுதலும சாம்பிரதாயமாகப் பண்டைக்காலந்தொடங்கி இன்றுகாறும்நிகழ்ந்துவருகின்றன.]

அம்பலவாணதேசிகர் உருத்திரகோடிதேசிகருக்கும், அவர் வேலப்பதேசிகருக்கும், அவர் குமாரசுவாமிதேசிகருக்கும், அவர் பிற்குமாரசுவாமிதேசிகருக்கும், அவர் மாசிலாமணிதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்தசாத்திரத்தை உபதேசித்தருளினூர்.

மாசிலாமணிதேசிகர் திருவாவடுதுறையிலே மாகேசுவரபூசை சிறப்புறநடாத்திமடாலயத்தில்எழுந்தருளியிருக்குங்காலத்திலே, ஒருநாள் இரவிலே பேயும்உறங்கும் அர்த்தயாமத்திலே, தஞ்சைநகரத்து மன்னவர் பஞ்சமவேடம்பூண்டுசென்று, அம்மடாலயத்தின்புறத்தே தூரத்தேநின்று "ஓசாமீ அடியேனைப் பசிவருத்துகின்றதே" என்று பேரொலியிட்டு அழைத்தபொழுது, ஒடுக்கத்திலே சிவத்தியானத்தோடு அறிதுயிலமர்ந்த மாசிலாமணிதேசிகர் ஓலமிட்டு அழைப்பவன் நீசன்என்றும் பசியால்வருந்தி அழைக்கின்றுன்என்றும், உணர்ந்து, மடைப்பள்ளியிற்புகுந்து, ஒருபாத்திரத்தில் அன்னமும் கறிமுதலியவும் எடுத்துவைத்துத் தலைவாயிற்கதவைத் திறந்து புறத்தேவந்து, தூரத்தே அப்பாத்திரத்தைவைத்துப் பசிநீங்கப்புசிக்கும்படி அருமையாகச்சொல்லி, மடாலயத்துள்ளே புகுந்து, விடிந்தபின்னர்த் தவசிப்பிள்ளைகளை அழைப்பித்து, இராத்திரி மடைப்பள்ளி திறந்துகிடந்தமையால், சுவானம் உள்ளே பிரவேசித்துவிட்டது; ஆகையால் மடைப்பள்ளியிலுள்ள அமுதுமுதலியவற்றை வெளிப்படுத்தி முற்றுஞ்சுத்திசெய்து, புண்ணியாகவாசனம் செய்வித்தபின்பு பாகஞ்செய்யத்தொடங்கும்படி கட்டளையிட்டருளினூர். அரசர் அப்பாத்திரத்தைச்சேமித்து வைத்து, தருமபுர ஆதீனஞ்சார்ந்து பேரொலியிட்டுப் பிக்ஷைகேட்டவழி, பண்டாரக்கட்டிலே திருவடிச்சிந்தனையோடுசயனித்திருந்த பண்டாரசந்நிதிகள் "பிக்ஷைகேட்பவன் பஞ்சமன்போலும்" என்று திருவுளங்கொண்டு "மடாலயத்திலேநீசனுக்குப் பிக்ஷையிடமாட்டார்கள்" என்று சொல்லிப்போக்கிவிட்டார்கள். இங்ஙனம் இரவிலே நிகழ்ந்த செய்திகளை அரசர் தஞ்சைநகரஞ்சேர்ந்து அரசிருக்கைமண்டபத்தில் வீற்றிருந்துசமஸ்தரும் அறியச்செய்தனர்.

பின்பு ஒருவிசேடபுண்ணியகாலம் வந்தபொழுது, மாசிலாமணி தேசிகர் காவேரிசங்கமஸ்நாநத்துக்கு எழுந்தருளினர். அப்போது தஞ்சைநகரவேந்தரும் போந்து, காவேரிசங்கமஸ்நாநஞ்செய்து திருவெண்காடு சேர்ந்தனர். மாசிலாமணிதேசிகரும் திருத்தொண்டர் திருக்கூட்டத்துடன் ஸ்நாநஞ்செய்துகொண்டு அச்சுவேதாரணியத்துக்கு வந்தருளினர். பின்னர் ஞானதேசிகரும் அரசரும் கலந்து வசிக்குங்காலத்திலே, அரசர் ஒருமண்டலங்காறும்பிராமணபோஜனம் பெரிதுஞ் சிறப்புறச்செய்வித்து அவ்வுயர்ச்சி அனைவர்க்கும் புலப்படும்வண்ணம் அவ்வுச்சிட்டத்தை உவர்க்கூபத்திலே போடச்செய்து, முடிவிலே தூர்வை எடுப்பித்தபின்பு அக்கிணற்றுநீரிலே புழுக்களும் உவரும் நீங்காமலிருந்தன. இதனையுணர்ந்த ஞானதேசிகர் ஒருமண்டலங்காறும் அரசர்முகமாக மாகேசுரபூசை சிறப்புற நடாத்தித் தம் மடாலயத்துள்ள உவர்க்கூபத்திலே அடியவர் பரிகலத்தைப் போடச்செய்து, இறுதியிலே அரசனையும் அழைத்து வைத்துக்கொண்டு அக்கிணற்றைத்தூர்வையெடுப்பித்தபொழுது, அதிலுள்ளஉவர்நீங்கிக்கங்காஜலம்போல நறுநீர்சுரந்து பெருகியது. அரசர் "அக்கிணற்றுக்குப் பரிகலக்கிணறு" என்று நாமம் இட்டு அம்மடாலயத்துக்குச் சருவமானியநிலமும்விட்டனர். அப்பரிகலக்கிணறும், சருவமானியநிலமும் இப்போதும் விளக்கமாயுள்ளன. ஞானதேசிகர் அம்மடாலயத்திலே நெடுங்காலம் அமர்ந்து நிட்டையில் இருந்தருளினர்.

பின்னும் அக்காலத்திலே ஆதீனசிஷ்யவர்க்கங்களிலே கல்வியினும் செல்வத்தினும் அதிகாரத்தினும்சிறந்து திருநெல்வேலியிலிருந்த மயிலேறும்பெருமாள்பிள்ளையிடத்தே தமிழிலே தொல்காப்பியமுதலிய இலக்கண இலக்கியங்களை உணர்ந்தவரும், செப்பறைப்பதியிலிருந்த சிவப்பிராமணராகியகனகசபாபதிசிவாசாரியரிடத்தேவடமொழியை உணர்ந்தவரும் ஆதீனஞானதேசிகரிடத்தே சங்காபிஷேகமும்ஈசான தேசிகரென்னுஞ் சிறப்புத்திருநாமமும் சைவசித்தாந்த சாத்திரோபதேசமும்பெற்றுத் திருநெல்வேலியில் ஆதீனத்தைச்சார்ந்த ஈசான மடாலயத்தில் இருந்தவருமாகிய சுவாமிநாததேசிகர் அரிய இலக்கணவிதிகளைத்திரட்டி இலக்கணக்கொத்தென்னு நூலையும் தசகாரியமாகிய ஞானநூலையும் இயற்றியருளினர். அன்றியும் நன்னூலுக்கு விருத்தியுரைசெய்த சங்கரநமச்சிவாயப்புலவர் முதலாகிய மாணாக்கர்களுக்குக்கல்வி கற்பித்தனர்.

மாசிலாமணிதேசிகர் இராமலிங்கதேசிகருக்கும், அவர்வேலப்ப தேசிகருக்கும், அவர் பின்வேலப்பதேசிகரெனப்பெயர்பெற்ற இருவ

ருக்கும் அபிஷேகம்செய்து, சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித்தருளினார்.

பெரியபட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகர் திருப்பறியலூர்ப்புராணத்தை மொழிபெயர்த்தருளினார்.

சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகர் பஞ்சாக்கரப்பஃறொடையென்னும் ஞானநூலைச்செய்தருளினார்.

பின்னும் வாதுளாகமப்படி ஞானபூஜாவிதி மொழிபெயர்ப்பு, மரபட்டவணை, அநாதியட்டணை, அநுபோகவெண்பா, வருணசிவாசாரியர் பத்ததிப்படி கிரியாபூஜாவிதி மொழிபெயர்ப்பு முதலாயின அம்மரபில் அநுக்கிரகம்பெற்ற ஆன்றோராற் செய்தருளப்பெற்று வழங்குகின்றன.

[அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த தசகாரிய முதலாயின பத்தும், தக்ஷிணாமூர்த்திதேசிகர் அருளிச்செய்த தசகாரியமுதலாயின இரண்டும், சுவாமிநாததேசிகர் அருளிச்செய்த தசகாரியம் ஒன்றும், பின்வேலப்பதேசிகர் அருளிச்செய்த பஞ்சாக்கரப்பஃறொடை ஒன்றும், ஆகப்பதினான்கு ஞானநூல்களும் பண்டாரசாத்திரமென ஆன்றோரால் வழங்கப்பட்டு வருகின்றன.]

அவ்வேலப்பதேசிகராகிய ஞானாசாரியர்காலத்திலே பாண்டிவளநாட்டிலே, பொதியமலைச்சாரலிலே, பாவநாசமென்னுந் திருப்பதியைச்சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே, அகத்தியமகாமுநிவரிடத்தே ஏழுதலைமுறையளவும் பிறைமதிபோல முறையே வளர்ந்து அருட்புலமை நிரம்பும்வண்ணம் வரம்பெற்ற பரம்பரைச்சைவவேளாளர் குலத்திலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவராய்க் கல்விச் செல்வம்போலப் பொருட்செல்வமும் ஒருங்குடையராய் இருந்த ஆனந்தக்கூத்தர் என்பவருக்கு அவர்மனைவியாராகிய கற்பினிற்சிறந்த மயிலம்மையார் திருவயிற்றிலே, ஏழாவதுதலைமுறையாகத் தமிழ்நாடு செய்த தவத்தானே, ஒருவர் திருவவதாரஞ்செய்து முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத்திருநாமம்பெற்று ஒழுக்கம் அன்பு அருள்முதலிய நற்குணங்களோடு வளருவாராயினார்.

பின்பு முக்களாலிங்கர் ஐந்துபிராயத்திலே, பிதாமாதாக்களாலே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப் பாடசாலையில் அமர்ந்தனர்; அங்ஙனம் அமரும்பொழுது, திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து சிவஸ்தலயாத்திரையாகப் புறப்பட்ட சிலமுநிவர்கள் விக்கிரமசிங்க

புரத்துத் திருவீதியிலே சென்ருர்கள்; பாடசாலையினின்றும் புறப்பட்ட முக்களாலிங்கர் அம்முனிவர்களைச் சந்தித்துத் தரிசித்துவணங்கி "சுவாமிகள் அடியேன் கிருகத்துக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்து, பின்பு சென்றருளவேண்டும்" என்று பிரார்த்திக்க அம்முனிவர்கள் ஆண்டின் இளையரும் அறிவின் முதியருமாகிய முக்களாலிங்கர் வழிபாட்டுக்கு இரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டனர்; உடன்பட்ட முனிவர்கள் முக்களாலிங்கர் பிறகே கிருகத்துக்குப்போய் முக்களாலிங்கர் அருமைக்கருத்தையுணர்ந்து அருந்ததியினுஞ்சிறந்த மயிலம்மையார் உபசரிக்கத் திருவமுதுசெய்து சென்றருளினூர்கள்; முக்களாலிங்கர் தமது கருத்தின்படி அடியார்களை உபசரித்த தாயாரைப் பற்றி"அருந்ததியென்னம்மை யடியவர்கட் கென்றுந், திருந்த வமுதளிக்குஞ் செல்வி-பொருந்தவே, யானந்தக் கூத்தரகமகிழத் தொண்டுசெயு, மானந் தவாத மயில்.,, என்னுஞ்செய்யுளை இயற்றியருளினூர்; புறத்தேபோயிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டிற்குவந்து, நிகழ்ந்த அற்புதச்செய்திகளைக் கேள்வியுற்றுப் பேரின்பக்கடலிலே முழுகினூர்.

உடனே ஆனந்தக்கூத்தர் புத்திரராகிய முக்களாலிங்கரோடு ஆதீனமுனிவர்களிடத்தேபோய் வணங்கியவழிச் சத்திநிபாதமுடைய புத்திரர் பிறவிப்பெருந்துன்பக்கடலினின்றுங் கரையேறக்கருதி, அம்முனிவர்களோடு தாஞ்செல்லவேண்டுமென்னுங் குறிப்பினை யுணர்த்தப், புத்திரரைப்பிரியச் சிறிதும் மனமில்லாதிருந்தும் தந்தையார் ஒருவாறிசைந்து வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

தந்தையார் நீங்கியபின்பு, முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக்கொண்டு மார்க்கங்களிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, சோணாட்டிலுள்ள திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, ஆதீனபரமமுதற்குரவராகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம் பெற்றுக்கொண்டு, அப்பொழுது சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானுசாரியராகிய பின்வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலேபோய்த் தரிசித்துப் பேரன்போடு வணங்கினூர்.

வணங்கியவர் ஞானதேசிகரிடத்தே சைவசந்நியாசமும் சிவதீக்ஷையும் சிவஞானயோகிகளென்னுந் தீக்ஷாநாமமும்பெற்று மெய்கண்டசாத்திர பண்டாரசாத்திரங்களைக் கேட்டருளினூர்; சிவஞானயோகிகள் அகத்தியமகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவராகலின், எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்

ெருங்குணர்ந்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் அமர்ந் தருளினர்; வேலப்பதேசிகர் சிவஞானயோகிகளுக்கு உபதேசித்தரு ளியஞானசாரியரென்பது "எவ்வெவகோட்டபடுபொருளுமஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி, மெய்வகையஞ் சவத்தையினு நிற்கு முறை யோதுமுறை விளங்கத் தேற்றி, யவ்வெழுத்தி னுள்ளீடு மறி வித்துச் சிவபோகத்தழுத்தி நாயேன், செய்வினையுங் கைக்கொண்ட வேலப்பதேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்." எனக் காஞ்சிப்புராணத் துட்கூறியவாற்றால் விளங்கும்.

சிவஞானயோகிகள் ஜமதக்கினிமுனிவருடையபுத்திரரும், அகத்திய மகாமுனிவருடைய முதன்மாணுக்கரும், இடைச்சங்கப்புலவர் ஐம்பத் தொன்பதின்மருள் ஒருவருமாகிய திரணதூமாக்கினி என்னுந்தொல் காப்பியமுனிவர் அருளிச்செய்த இலக்கணநூலாகிய தொல்காப்பியத் திற்கு உரையாசிரியராகிய இளம்பூரணர்செய்த உரையாகிய இளம் பூரணமும், சேனாவரையர்செய்த உரையாகிய சேனாவரையமும், நச் சினார்க்கினியர்செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் எனப்படு மூன்றுரைகளினுமுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும் சூத் திரவிருத்தியெனப் பெயர்பெற்ற பாஷ்யமும், வடமொழித் தருக்க சங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும், நன்னூலுக்குச் சங்கரநமச்சிவாயப்புலவர்செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திரு த்தமும் செய்தருளினர்; இவைமூன்றும் திராவிடமகாபாஷ்யத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

அன்றியும் சர்வாத்மசம்புசிவாசாரியர் அருளிச்செய்த சுத்திய ரூப சித்தாந்தப்பிரகாசிகையை அவ்வாறே மொழிபெயர்த்தருளினர். அன்றியும் மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய வார்த்திகப் பொழிப்பாகிய சிவஞானபோதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெ ய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிடமகாபாஷ்யமெனப் பெயர் பெற்ற விருத்தியுரையும், இலகு வியாக்கியானமாகிய சிற்றுரையும், அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார் சுபக்ஷத் திற்குப பொழிப்புரையுஞ் செய்தருளினர்.

அன்றியும் காஞ்சிப்புராணத்தின் முதற்காண்ட மொழிபெயர்ப் பும், சிவாக்கிய சோழமகாராஜா காலத்திலே கஞ்சனூரிலே அவதரித் தருளிய ஆசாரியசரணராகிய ஸ்ரீஅரதத்தசிவாசாரியர் வைணவமத கண்டனஞ்செய்து சைவமதஸ்தாபனஞ் செய்யும்பொருட்டு, நெருப் பிலே பழுக்கக்காய்ச்சிய இருப்புமுக்காலியிலே எழுந்தருளியிருந்து,

சிவபெருமானேபரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக்களாலேநாட்டியருளிய சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், ஸ்ரீஅப்பயதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேகமூல சுலோகங்களின் மொழிபெயர்ப்பும்செய்தருளினர்.

அன்றியும் பெரும்பாலும் உண்மைநாயன்மார் சரிதமுதலியவற்றைத் தழுவிப் பூருவார்த்தமும் அதற்கு எடுத்துக்காட்டாகத் திருவள்ளுவநாயனர் திருக்குறள் உத்தரார்த்தமுமாகக்கொண்டு சோமேசர்மீது முதுமொழிவெண்பா, யமகரூபமான திருவேகம்பரந்தாதி, திருக்ரூபமான திருமுல்லைவாயிலந்தாதி, குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு,செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ்,அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ், செப்பறைப்பதி அகிலாண்டேசுவரிபதிகம், மார்கழிமதித் திருவாதிரையுற்சவத்திலே தேவாரமுதலிய அருட்பாக்கள் ஐந்தும் திருக்காப்பிடப்பட்டுத் திருவெம்பாவையென்னுந் திருவாசகத்திருப்பதிகம் ஒன்றுமே ஆன்மார்த்த பரார்த்த சிவபூஜாகாலங்களில் ஓதப்பெற்றுவருஞ் சாம்பிரதாயத்தால் நித்தநியமமந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதியுய்யவேண்டுவோர் கருத்துத்தடையுறுவண்ணந் திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியராகிய நமச்சிவாயமூர்த்திகண்மீது மாலைமுதலிய பிரபந்தங்களைச் செய்தருளினர்.

அன்றியும் மரபட்டவணை எனப்பெயர்பெற்ற திருவாவடுதுறை ஆதீனசாம்பிரதாயக்கட்டளையைத் தருமபுர ஆதீனத்தார் மறுத்தெழுதியதற்கு மறுப்பின்மறுப்பு என ஒன்று செய்தருளினர்.

அன்றியும் காஞ்சீபுரத்தில் யாத்திரையாக வந்தருளிய திருவண்ணமலை ஆதீனத்துப் பண்டாரசந்நிதிகள் "சிவஞானசித்தியாரில் (என்னையிப் பவத்திற்சேரா வகையெடுத்து) என்னுஞ் செய்யுளில் (எடுத்து)என்னுஞ்சொல்லுக்குப் பொருள்என்னை" என்று தம்மாதீனத்து ஞானப்பிரகாசமுநிவர் இயற்றிய சிவசமவாதவுரையின் உயர்வு தொனிக்கும்வண்ணம், சிவஞானயோகிகளிடத்தே வினவுவித்தபொழுது, (எடுத்து) என்னுஞ்சொல்லுக்குச் சிவசமவாதவுரைமறுப்புஎன ஒன்றும், அதன்மேற் பிரதிகண்டனம் உண்டாயவழி மேன்மறுத்த மறுப்பு குதர்க்கவுரையாளராற் போழ்படாதவாறு (எடுத்து)என்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம் என ஒன்றும், சிவஞானசித்தியாருக்கு ஞானப்பிரகாசமுநிவர் இயற்றியவுரை முற்றும் போலியுரை என விளக்கச் சிவசமவாதவுரைமறுப்பு என ஒன்றும் சிவஞானயோகிகள் செய்தருளினர்.

அன்றியும் கம்பராமாயணகாவியம் ஒன்றுமே தமிழிற் சிறந்திருப்பதெனச் செருக்கொடு கழறிய காஞ்சீபுரத்து வைணவர்கள் வாயை அடைக்கக்கருதி அக்கம்பராமாயணத்து நாந்தியாகிய "நாடிய பொருள்கைகூடும்" என்னுஞ்செய்யுள் முற்றும் குற்றமே எனச் சங்கைசெய்தவழி, அவ்வைணவர்கள் அச்சங்கைக்கு உத்தரஞ்சொல்ல இயலாமல் வருந்தித் தெரியாது பிதற்றினேம் எனச் சொல்லி வணங்கித் துதித்தவழி, சிவஞானயோகிகள் மகிழ்ந்து உத்தரங்கூறி, அவ்வைணவர்களை உவப்பித்தருளினர்; அச்சங்கையுத்தரங்களை வரைந்த நூலுக்கு "கம்பராமாயணமுதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தி" என்று பெயர் வழங்கிவருகின்றது.

அன்றியும் திருவாரூர் வைத்தியநாதநாவலர் இயற்றிய இலக்கணவிளக்கத்தில், எழுத்ததிகாரம் சொல்லதிகார முதலியவற்றிலுள்ள வழுக்களை வெளியிடக்கருதி இலக்கணவிளக்கச் சூறாவளி என ஒன்று செய்தருளினர்.

திருநாவுக்கரசுநாயனார் கடலினின்றுங் கரையேறிய திருப்பாதிரிப்புலியூர்ச்சிவாலயத்தின் கண்ணே, சிலவித்துவான்களும் பிரபுக்களுங் கூடியசபையில் நூறுபொன்னைக் கிழியாகக்கட்டிவைத்து, "கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ" என்று ஈற்றடியெடுத்துக் கொடுத்துச் செய்யுளைப் பூர்த்திசெய்பவர் "இப்பொற்கிழியை எடுத்துக்கொள்ளலாம்" என்று சொன்னார்கள்; அப்பொழுது யாத்திரையாகவந்தருளிய சிவஞானயோகிகள் ஆலயத்துக்கு எழுந்தருளுங்கால் அங்கு நிகழ்ந்த செய்தியையுணர்ந்து, ஒரு ஏழைப்பிராமணனைநோக்கி அப்பொற்கிழியை எடுத்துக்கொள்ளும்படி கட்டளையிட்டு "வரையேற விட்டமுதஞ் சேர்ந்தனிட வருந்தினைவல் வினமென் றூலு, முரையேற விட்டமுத லாகுமோ வெனச்சித்தென் றுரைக்கி லென்னு, நரையேற விட்டமுத னளவனுக் கொண்டெறும் புலிசை மேவுங், கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ." என்று செய்யுளைப்பேசுவதுபோலப் பூர்த்திசெய்தருளினர்.

இங்ஙனம் உலகோபகாரமாகப் பலவுரைகளையும் பலநூல்களையும் பலகண்டனங்களையும் செய்து பல நன்மாணுக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினுந் தென்மொழி சிறந்ததென்னும்படி அபிவிருத்திசெய்து, தவமே திருவுருக்கொண்டாற்போலும் விளங்கிச் சிவப்பேற்றிற்குக் காரணமாகிய நிட்டையில் வீற்றிருந்தருளிய திராவிடமகாபாஷ்ய கர்த்தராகிய சிவஞானயோகிகள் திருவாவடுதுறையிலே சித்திரைமதி ஆயிலியநக்ஷத்திரத்திலே சிவபரிபூரணதசை அடைந்தனர்.

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பசலோ தாயிலியம் - பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
றிருமேனி நீங்கு தினம்.

சிவஞான யோகிகளுக்கு மாணாக்கர்கள் இலக்கணம் சிதம்பரநாதமுநிவர், கச்சியப்பமுநிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுநிவர், காஞ்சீபுரம் சரவணபத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை முதலாகிய பன்னிருவர் உளர்.

அவருள்ளே இலக்கணம் சிதம்பரநாதமுநிவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணத்தை மொழிபெயர்த்தனர்.

கச்சியப்பமுநிவர் திருவானைக்காப்புராணம், பூவாளூர்ப்புராணம், பேரூர்ப்புராணம், திருத்தணிகைப்புராணம், விநாயகபுராணம், காஞ்சிப்புராணத்து இரண்டாங்காண்ட மொழிபெயர்ப்புகளையும், சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், யமகவந்தாதி, கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது, பதிற்றுப்பத்தந்தாதி, தணிகையாற்றுப்படை, பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்சாக்கரதேசிகரந்தாதி முதலியவற்றையும்இயற்றியருளினார்;தம்மாணாக்கரிற்சிறந்த கந்தப்பையர்க்குண்டான குன்மரோயை மாற்றுதற்பொருட்டுத் தணிகையாற்றுப்படை பாடியருளினது; பின்னும் பேரூரில் வசித்தபோது அரசம்பலவாணர் மீது ஒருபிரபந்தம்பாடி மழை வருஷிக்கவும், பட்டீசர்மீது பலபதிகங்கள்பாடிப் பலருக்குக் குட்டரோய் முதலியவற்றைப் போக்கியுமருளினர்.

தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுநிவர் துறைசைக்கோவை, கலைசைக்கோவை, கலைசைச்சிலேடைவெண்பா, சிதம்பரேசர்வண்ணம், திருக்குற்றாலச்சித்திரசபைத்திருவிருத்தம், பழநிமுருகக்கடவுள் பஞ்சரத்நமாலை, சுப்பிரமணியர் திருவிருத்தம், திருத்தணிகைத்திருவிருத்தம், திருச்சிற்றம்பலதேசிகர்மீது சிந்து, பஞ்சரத்நமாலை, அம்பலவாணதேசிகர்மீது ஆனந்தக்களிப்பு, சிவஞானயோகிகள்மீது கீர்த்தனை, செய்யுள்முதலியவற்றை இயற்றியருளினர். சுப்பிரமணியர் திருவிருத்தமும், திருத்தணிகைத்திருவிருத்தமும், முறையே குட்டரோகியும், அந்தகனுமாகிய இருவர்பொருட்டுச்செய்து கொடுத்தவளவில், அவைகளை அவ்விருவரும் முருகக்கடவுள் சந்நிதியில் ஓதிக்குட்டரோகமும், அந்தகத்தன்மையுநீங்கி உய்ந்தனர்.

மேற்கூறிய பின்வேலப்பதேசிகர் திருச்சிற்றம்பலதேசிகருக்கு அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாஸ்திரத்தை உபதேசித்தருளினார்; பின்பு வடமொழிப் பயிற்சியின் வல்லுநராய்ச் சிவாகமங்களில் இரண்டுலக்ஷங்கிரந்தம்வரையுணர்ந்த உத்தமோத்தம குரவராகிய திருச்சிற்றம்பலதேசிகர் சிவக்ஷேத்திரயாத்திரையாகத் திருக்கூட்டத்துடன் செல்லும்பொழுது, மார்க்கத்திலுள்ள இராமநாதபுரத்தில்

வசித்தவழி, அந்நகரத்தில் அமர்ந்த சேதுபதியென்னும் மன்னவர்
க்கு அமைச்சர் முதலாயினார் ஞானாசாரியர் எழுந்தருளியிருத்தலைத்
தெரிவித்தனர்; "அப்போது மழையில்லாது ஜனங்கள் வருந்துங்கால
மாயிருந்தமையால், மழைவருவிக்கும்படி உங்கள் குருமூர்த்திகள்
செய்விப்பார்களா" என்று அரசர் வினாவியதற்கு அமைச்சர் "அங்ஙன
னம் அநுக்கிரகஞ் செய்வார்கள்" என்று தெரிவித்து, அரசனை அழை
த்துக்கொண்டுபோய் ஞானாசாரியர் திருவடிகளில் வணங்கச்செய்து
அரசர்கருத்தையும்விண்ணப்பம்பண்ணினார்; அதற்கு "அவ்வண்ணமே
திருநடராஜர் திருவருள்செய்வார்" என்று ஞானாசாரியர் திருவாய்
மலர்ந்து, திருநடராஜர்பூஜை சிறப்புறச்செய்து அச்சந்நிதானத்தி
லே திருவடித்தியானத்தோடு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஜபித்துக்கொண்
டிருந்தனர்; உடனே மேகங்கள் மழைபொழிந்து நாடுகளை வளப்படு
த்தின: சேதுபதி பெரிது மகிழ்ந்து திருவாவடுதுறை ஆதீனத்துக்கே
அடிமையாகிச் சருவமானியக்கிராமங்கள் விட்டுத் தம்மராசாட்சிக்
குரிய அம்முகவைநகரத்தில் மடாலயஞ்சிறப்புறக்கட்டுவித்து ஆதீன
பரமாசாரியராகிய ஸ்ரீபஞ்சாக்கரதேசிகர் குருபூஜை வருடந்தோறும்
முன்னைநாளிலும் சிறப்பாக எந்நாளும் நடந்து வரும்படி அநுமதி
செய்தனர்: அவ்வாறே இந்நாள் வரையும் நடந்து வருகின்றன.

திருச்சிற்றம்பலதேசிகர் அம்பலவாணதேசிகருக்கும், அவர் சுப்
பிரமணியதேசிகருக்கும், அவர் அம்பலவாணதேசிகருக்கும் அபிஷே
கஞ்செய்து சைவசித்தாந்த சாஸ்திரத்தை உபதேசித்தருளிய பின்பு
அம்பலவாணதேசிகரிடத்தே அபிஷேகமுஞ் சைவசித்தாந்தோபதேச
மும்பெற்று, வடமொழி தென்மொழிகளை உணர்ந்து, சிவஞானசித்தி
யாருக்குச் சிவஞானயோகிகளால் அரிதினுணர்தற் பாலதாகச் செய்த
ருளப்பட்ட பொழிப்புரைக்கிணங்க எளிதினுணர்தற்பாலதாகப் பத
வுரை செய்தருளிய சுப்பிரமணியதேசிகமூர்த்தி கட்டளையிட்டருளிய
படி இவ்வரலாறு வரைந்து பதிப்பிக்கப்பெற்றது.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.

சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாசபரம்பரை ஆசாரியர்கள்

# பரிபூரணதசை அடைந்ததலமும், திருநக்ஷத்திரமும் வருமாறு.

| | ஆசாரியர்கள். | பரிபூரணமான ஸ்தலம். | மாசம். | திருநக்ஷத்திரம். |
|---|---|---|---|---|
| | மெய்கண்டதேவர் | திருவெண்ணெய்நல்லூர் | ஐப்பசி | சுவாதி |
| | அருணந்திசிவாசாரியர் | திருத்துறையூர் | புரட்டாசி | பூரம் |
| | மறைஞானசம்பந்தசிவாசாரியர் | திருக்களாஞ்சேரி | ஆவணி | உத்தரம் |
| | உமாபதிசிவாசாரியர் | கொற்றவன்குடி | சித்திரை | அஸ்தம் |
| | அருணமச்சிவாயதேசிகர் | ஷை | மார்கழி | திருவாதிரை |
| க | நமச்சிவாயதேசிகர் | திருவாவடுதுறை | தை | அசுவதி |
| | துவிதீய, சிவப்பிரகாசதேசிகர் | பட்டீச்சுரத்துக்கடுத்தவடதளி | ஆனி | பரணி |
| உ | மறைஞானதேசிகர் | திருவாவடுதுறை | தை | சுவாதி |
| ௩ | அம்பலவாணதேசிகர் | ஷை | சித்திரை | அவிட்டம் |
| | துவிதீய, தக்ஷிணாமூர்த்திதேசிகர் | ஷை | மாசி | சித்திரை |
| ச | உருத்திரகோடிதேசிகர் | மதுரை | கார்த்திகை | அநுஷம் |
| ரு | வேலப்பதேசிகர் | திருப்பூவணம் | ஷை | உத்தராடம் |
| சா | குமாரசுவாமிதேசிகர் | சுசீந்திரம் | ஷை | ஷை |
| எ | பிற்குமாரசுவாமிதேசிகர் | ஷை | ஆவணி | உத்தரட்டாதி |
| | துவிதீய, முத்தம்பலவாணதேசிகர் | திருக்குற்றாலம் | மாசி | சித்திரை |

| | ஆசாரியர்கள். | பரிபூரணமான ஸ்தலம். | மாசம். | திருநக்ஷத்திரம். |
|---|---|---|---|---|
| அ | மாசிலாமணிதேசிகர் | திருவெண்காடு | சித்திரை | உரோகிணி |
| | துவிதீய, சிவக்கொழுந்துதேசிகர் | திருவாவடுதுறை | மார்கழி | மூலம் |
| | திரிதீய, சுவாமிநாததேசிகர் | திருவண்ணாமலை | கார்த்திகை | உத்தரம் |
| கூ | இராமலிங்கதேசிகர் | திருவாவடுதுறை | ௸ | அநுஷம் |
| க0 | வேலப்பதேசிகர் | சங்கரநாயனார்கோயில் | புரட்டாசி | மூலம் |
| கக | பின்வேலப்பதேசிகர் | திருப்பெருந்துறை | வைகாசி | பூரட்டாதி |
| | துவிதீய, வேலப்பதேசிகர் | பேரூர் | ஆனி | பரணி |
| கஉ | திருச்சிற்றம்பலதேசிகர் | திருவாவடுதுறை | ௸ | ௸ |
| கா | அம்பலவாணதேசிகர் | ௸ | மார்கழி | கேட்டை |
| கச | சுப்பிரமணியதேசிகர் | ௸ | கார்த்திகை | கார்த்திகை |
| | துவிதீய, கனகசபாபதிதேசிகர் | தளிகை | தை | ௸ |
| | ௸, சுப்பிரமணியதேசிகர் | திருவாவடுதுறை | மாசி | அவிட்டம் |
| கரு | அம்பலவாணதேசிகர் | ௸ | ஆனி | பூரம் |
| கசா | சுப்பிரமணியதேசிகர் | ௸ | மார்கழி | சுவாதி |
| | துவிதீய, நமச்சிவாயதேசிகர் | தளிகை | தை | கார்த்திகை |

சிவமயம்.

# சிவஞானயோகிகள்

அருளிச்செய்த

# பிரபந்தங்கள்.





## குருதோத்திரங்கள்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## அரதத்தசிவாசாரியர்சுலோகபஞ்சக

# மொழிபெயர்ப்பு.

உயர்காயத்திரிக்குரிப்பொருளாகலிற்
றசரதன்மதலைதாபித்தேத்தலிற்
கண்ணன்கயிலையினண்ணிநின்றிரப்பப்
புகழ்ச்சியினமைந்தமகப்பேறுதவலிற்
றனுதுவிழியுடனோராயிரங்கமலப்
புதுமலர்கொண்டரிபூசனையாற்றலின்
ஆங்கவற்கிரங்கியாழியீந்தருடலின்
ஐங்கணைக்கிழவனையழல்விருந்தாக்கலின்
அமைப்பருங்கடுவிடமமுதுசெய்திடுதலிற்
றென்றிசைத்தலைவனைச்செகுத்துயிர்பருகலின்
அவுணர்முப்புரமழியவில்வாங்கலிற்
றக்கன்வேள்விதகர்த்தருள்செய்தலிற்
றனஞ்சயன்றனக்குத்தன்படைவழங்கலின்
மானுடமடங்கலைவலிதபக்கோறலின்
மாயோன்மகடூஉவாகியகாலைத்
தடமுலைதிளைத்துச்சாத்தனைத்தருதலின்
ஆழ்கடல்வரைப்பினுன்றோரநேகர்
அன்புமீதூரவருச்சனையாற்றலின்
நான்கிருசெல்வமுமாங்கவர்க்கருடலின்
ஐயிருபிறப்பினுமரியருச்சித்தலின்

இருவருமன்னமுமேனமுமாகி
அடிமுடிதேடவழற்பிழம்பாகலிற்
பிறப்பிறப்பாதியுயிர்க்குணமின்மையிற்
கங்கைசூழ்கிடந்தகாசிமால்வரைப்பிற்
பொய்புகல்வியாதன்கைதம்பித்தலின்
முப்புரமிறுப்புழிமுகுந்தப்புத்தேள்
மால்விடையாகினாலமொடுதாங்கலின்
அயன்சிரமாலையளவிலவணிதலின்
ஞானமும்வீடும்பேணினர்க்குதவலிற்
பசுபதிப்பெயரியதனிமுதற்கடவுள்
உம்பர்களெவர்க்குமுயர்ந்தோன்
என்பதுதெளிகவியல்புணர்ந்தோரே.

அரதத்தசிவாசாரியர்சுலோகபஞ்சக
மொழிபெயர்ப்புமுடிந்தது,



மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.



கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவதத்துவவிவேகமூல

## மொழிபெயர்ப்பு.

### பாயிரம்.

உலகெ லாந்தன தொருசிறு கூற்றினு ளமைய
வலகி லாற்றலா னிறைந்தவ னெனவரு ணூலோர்
குலவி யேத்துவோ னெவனவ னுமையொரு கூற்றி
னலர்க றைக்களச் சிவபிரா னடியிணை போற்றி. (க)

வேறு.

செவியுற வாங்கி மோகத் திண்படை சிலையிற் பூட்டுங்
கவிகைவேள் மடியச் சற்றே கறுத்தியோ குறையும் பெம்மான்
குவிதழை நிறையப் பூத்த கோழிணர்ப் பதுமச் செங்கே
ழவிர்தரு விழித்திக் கென்றன் வினையிலக் காகு மாலோ. (உ)

வேறு.

திருமாலின் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வே ளாதி, தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி, வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கை மலரும் வாய்ந்த, வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம். (ங)

வேறு.

எல்லை யில்கலை யென்னுங் கொடிபடர்
மல்லல் வான்கொழு கொம்பரின் வாய்ந்தருள்
கல்வி ஞானக் கடலமு தாயசீர்
பல்கு தேசிகர் பாத மிறைஞ்சுவாம். (ச)

வேறு.

மறைமுடிவிற் பயில்கருத்து மன்னியமெய்ப் பொருள்விருப்புங்
கறைமிடற்றோன் றிருவடிக்கீழ் மெய்யன்புங் கடுந்துயர்நோய்
பறையவரு மிம்மூன்றும் பரிந்தியல்பாக் கிடைத்தமன
நிறைவுடையோ ரேவரவர் நீடூழி வாழியவே. (ரு)

வே று.

பரசி வன்றனை துயர்ச்சியே தெரிப்பதிற் பகரொருப் பாட்டிற்கு
யரிய கால்கதிர் வியாதனு தியர்மொழி யால்விளங் கெலீர்க்காய்த்
திரிவு காட்சிய ருளத்தூறு தறிகர் செம்பொருட் கோவைத்தாய்
விரியு நீருல கினுக்கிதந் தருமுதல் வித்தையோங் குகமாதோ. (௯)

வே று.

எட்படுநெய் யெனவுயிருக் குயிரா யெங்கு மேகமாம் பகபதியை ளோத்துஞ் செய்யுள், விட்பருமுண் ணிறைந்துபொருட் சுவைய வாகி மேலோர்தம் வழிச்செல்லு மறுபா னுக்கு, முட்கருத்து வெளிப்படுப்ப விழிந்த மார்க்கத் துழல்வோர்தம் பிதற்றுரைகட் கழுவுகோ ளுரு, நட்புடைய வுரையீண்டுச் செய்ய லுற்றே னல்வழிச்செல் லறிவா ளர் நயக்கு மாறே. (௰)

## நூல்.

நின்பெருந் தன்மை வானவர் தமக்கு நிகழ்த்தரி தாதலின் மனிதர், னன்பொடும் வழுத்த விழைந்திடி னவையே யனைவதுந் கையமின் றேனு, முன்பெயர் கருதும் பெருந்தவ வருவா யொருவழி யாற்கிடைத் திடுக, வென்பதோர் மதிவந் தென்னையீர்த் தெழுமா லெங்கணு நிறைந்தபூ ரணனே. (௧)

விச்சுவா திகனும் விசுவசே வியனும் விமலநீ யேயென மறைக, ணிச்சய மாக முழக்கவு மறியா நீசர்தாம் பிணங்குவ ரந்தோ, மச்சரத் தினக்கே திங்கிழைத் தவர்தம் வாழ்க்கையும் பயன்படா தாலத், தச்சர்சொற் கேட்டோர்க் கிறுதிலே தண்டஞ் சொற்றிடு நூலெலா மன்றே. (௨)

ஏழைய ரிருகாற் பசுக்கண்மற் றிவரா லியன்றிடத் தக்கதோ ன் றிலையே, வாழிய நலந்திங் கறிந்துயி ரியற்ற வல்லதோ யாங்கணும் விரவிச், சூழுநீ யெவ்வா றசைத்தனை யவ்வா றசைதலிற் சுதந்திர மிலதாற், பாழிமால் விடையா யவ்வுயி ரந்தோ பழித்திடுந் தகையதொன் றன்றே. (௩)

இதநான் மறையு ளோரொரு விதிவாக் கியங்களைப் பற்றிகல் வேள்வி, யாதிகண் முயலத் துணிபவ ரெல்லா வருமறை முழுவினு முழக்கு, மேதரு முனது தலைமையைத் துணியா தொழிவரோ விளங்கிழை யொருபா, ளுதனே யவர்தாம் பரவைத் தினையாட் நணுகில ராயிடின் மன்னே. (௪)

குணங்களைக் கடந்தோ யெனினுமா யையினைத் தோய்தலாற் குணமுடை யவன்போ, லணங்கொரு பாலுங் கறைமிடற் றழகு மம்பக மூன்றுமா முருக்கொண், டிணங்குறு நாமஞ் சிவன்பவ னெனமுதலா வியைந்தய னரியரன் முன்னு, முணங்கிடா வுலகை நடாத்துவோ னாகி யோங்கினை நீங்கரும் பொருளே. (௧௧)

(அதர்வசிகை.)

முளரியோன் முதலாஞ் சுரரெலாம் பூத முதலவற் றோடுதித் துள்ளோ, ரளவிடுந் தலைமை யாளரென் றவரை யகற்றிமால் விடையவ னினையே, வளமுறு மெல்லாத் தலைமையு முடையோன் வருமுதற் காரண னல்லோ, ருளமுறு தியானப் பொருளெனச் சிகைதேர்ந் துரைப்பவு மயங்குவர் சிலரே. (௧௨)

மறையகத் தெல்லாத் தலைமையோ ரொருபால் வகுத்திடுங் கேவல மதுதா, னிறைவனே யிவ்வா றம்புயன் முதலோ ரினும்பிரித் துத்தியால் விளக்கா, தறைதரு மிதனுன் மூடனுழி வேறோ ராற்றினுற் போக்கவற் றுமற், கறைமிடற் றடக்கி யேழைவா னவரைக் காத்தருள் கருணைமா கடலே. (௧௩)

கதித்தெழும் பொருளா லுனைவிளக் கிடுங்கா ரணபத மனுவதிப் பென்னுப், பொதுக்குணம் பொதுச்சொற் பற்றியே தொடக்கம் புகல்பொருண் மாயவன் றனே, யிதற்கெனத் துணியா விழுதியும் வலியா லிம்முறை யேற்றிமற் றொருவ, னதிர்ப்புற மருளின் மருளுக பிறரு மந்நெறிப் படருமா றெவனோ. (௧௪)

(சுவேதாச்சுவதரம்.)

தற்பரா வுலகுக் காதிகா ரணந்தான் றலைமையி லுயிருடன் சடத்தைச், சொற்றிடிற் பழுதாற் பிரமமா மெனவே துணிந்துபின் பிரமமா ரென்றாய், வுற்றிடு மான்றோ ருமையரு ளொக்கா லுணர்ந்தனர் நீயென வென்னு, வற்புறச் சுவேதாச் சுவதர மென்னு மறைமுடி வு[illegible]ரத்திடு மன்றே. (௧௫)

படைப்புறு முறைமை சொலற்கெழுஞ் சுருதிப் பாப்பெலாம் பிறிதொன்றன் பொருட்டாய்க், கிடைத்தலா லவற்றுட் காரண பதத்தைக் கிளத்தலாந் தன்பொருள் படாமை, விடைக்கொடி யாயீண் டீசனென் றரனென் றெடுத்து மெய்க் காரணந் துணிதற், கடுத்தெழு மொழியுந் தன்பொருள் படாதே லாவினித் துணிவென்ப தெங்கே. (௧௬)

இதனுளெப் போது தமமது பகலன் றென்னுமத் திரமுனை யுணர்த்தி, யிதமுறு மேனைக் காரணமொழிகள் யாவுநின் பாலுய ச் செலுத்தி, மதமுறு மருளோ ரவற்றினைப் பிறர்மேல் வகுப்ப தைப் பயன்படா தாக்கு, மதனுடல் பொடிப்ப நுதல்கிழித் தெழுந்த வாளெரி காட்டிய முதலே. (கஎ)

மனுவிதிற் சிவச்சொல் வேறுள சுருதி யாம்புரோ வாதத்திற் றெரிக்கும், புனிதமாம் பொருளே சாற்றிடு மெனிலெப் போதினு மாதிகா லத்தை, யனுவதித் தன்ற நுண்மையை விதியா தாயின் மற் றென்செயப் புகுந்த, இனியபே ரின்பத் தண்ணருள் கொழிக்கு மெய்பிரா னிந்தமந் திரமே. (கஅ)

பெரிதுமா னத்தா லுயர்ந்தவள் பிறரைப் பேசிடா வரன்சிவன் முதலா, மரியநின் றமைக் குருமணிக் கோவை யாலுடன் முழுதலங் கரித்தாள், கரியவற் கரியாய் நின்றெடொப் பவரே கருதினு மிலையெனத் துணிந்துன், திருவடிக் கேதன் கருத்தெலா மமைத்தாள் சீருப நிடதமா மிவளே. (கக)

புருடசூத் தத்தின் மந்திர மிதனுட் பொருந்தினு முனைக்குறித் திடும்பல், சுருதியா னியமித் ததனையெவ் வாறு தூரக்குமிம் மறைமுடி வதாஅன்று, திருவுருத் திரத்து மந்திரம் பலவுஞ் சிறப்பவின் டுமுதலா லறியாக், குருடர்தா மதனைற் றுணிவது தகுமோ கோமளக் குணப்பெருங் கடலே. (உ0)

உருத்திர மனுக்கண் முன்னரும் பின்னு முரைக்குமீண் டாதலா லிவைதாந், தெரித்துற விளக்கு நின்றிருப் பெயராற் சிறத்தலா லுருத்திர மோதல், கருத்தனை முனக்கே நிச்சயித் ததனைற் கதம்பயி லெழுழ்விடைப் பாகா, வருத்தியா லவற்றை யுரைத்ததே யீண்டைக் களந்தறிந் திடச்செயு மெமக்கே. (உக)

உரைக்குமீ சானச் சுருதியாற் றெரிக்கு முன்னிடத் தெய்துமென் பதுவே, பொருத்தமாம் புருட சூத்தத்தின் முடிவு புனைமலர்க் கருங்குழல் பாகா, விருப்புறு மேனோர் பூசனை விதியுள் விளம்பினு மவ்விதிக் கேற்பக், கருத்துறும் பொருட்டுப் பொருள்விரித் தறவோர் காட்டினு மிதுவழுப் படாதே. (உஉ)

(தைத்திரியம்)

பிரமமது சுருதி கூறுமுன் றகர வித்தையை வேறுள விசேடம், பகுதிக ளாலுந் தயித்திரி யத்தான் பகர்ந்திடும் வள்ளலே மாயோ, னாயுறு பொருளை முனைந்தியா னிப்பா னவன்றனை நடுவேன்ற இடமவ் வளையறி யாத பேதைகள் மயக்காள் மற்றொரு வாறு கொள் ளுவரே. (௨௯)

(விருகதாரணியாதி.)

மறைகளிற் றலைமை மெய்திய விருக தாரணி யகமுதன் மறைகள், பிறவுநல் விதயத் தூறுபொரு ளாமுன் பெருமையே பேசிடு மன்றே, யறவனே யிவற்றின் கருத்தெலா முன்பா லடைவதே நியமமென் றுரைப்பார், திறனறிக் குயர்ந்தோ ராதலாற் கயவர் திமொழி யாற்பய னென்னே. (௩௦)

(மாண்டூக்கியம்.)

தன்பொருள் விரிக்கும் பிறசுரு தியினுந் றன்கருத் தறிதருந் தகைத்தா, நின்புடை யெல்லா முதன்மையு முன்மை நிகழ்த்துமாண்டூக்கிய சுருதி, யுன்கழ றருசீ சானமா மனுவோ டுருத்திரோ படிடத மனுக்க, ளென்பவு மேனை மனுக்களு மநேக மிப்புறை விளங்கவோ திடுமே. (௩௧)

அறப்பெருங் கடலே யளவிலா வணக்க மறைந்திடு மெண்ணிலா மனுக்கள், பிறர்க்குரித் தாகாச் சிறந்ததோர் பெருமை பேசிடும் வெளிப்படை யுனக்கே, கறைப்பெரு மிடற்றாய் ருத்திரர் முதலோர் காவினும் விழுந்திடு மூர்க்கர், குறித்துனை வணங்கக் கூசுவ ரந்தோ கொள்ளுவ ரோதெரித் தவரே. (௩௨)

மொழிந்திடு மெல்லா வணக்கமு மெல்லை மொழிகளு முன்னையே சாரு, மிழிந்திடாத் திருமா லாதிவின் றேரை யின்றவன் ருஜுவி யெனவே, பொழிந்தசீ ருனது தலைமையே யெடுத்துப் புகழ்ந்துநின் பெருங்கணத் தலைமை, விழைந்துளோர் தமது பெருமையுஞ் சால விளக்கிடுஞ் சுருதிகள் பலவே. (௩௩)

(புராணங்கள்.)

எண்ணிலாச் சாகைச் சுவால்களாற் றெரித்திடுஞ் செம்மேனோர் பாசுரத் தெளிய, நுண்ணிய நியாய வொழுங்குக ளானு நுவன்றறத் தேற்றுநின் பெருமை, பண்ணவா விளங்கப் புராணங்க ளெல்லாம் பன்முறை யுணர்த்திடு மன்றே, கண்ணிலாச் சிறுவர் தமக்குமுன் னங்கை செவ்வியங் கனியெனும் படியே. (௩௪)

(பாரதம்.)

இன்பதாம் புயத்தி னருச்சனை யாற்று நெறியினன் மாயவ னெ னவு, மன்புறு மீசன் மாலயன் றனக்கு மாதியங் கடவுளீ யெனவு, மின்புறக் கிளக்கும் பாரதந் தானு மெந்தைநின் றலைமையே விரிக்கும், புன்புலை யேற்குந் தண்ணருள் புரிந்த பூரணா னந்தமா கடலே. (௬௫)

(இராமாயணம்.)

அகந்தைநோ யறுக்கு மயனரி யரற்கு மாதியாம் பகவனீ யெனவு, மகஞ்செய விரும்பு மிராமனுன் னிடத்து வைத்திடுங் குறிப்புரை யதனாற், றிகழ்ந்தவச் சுவமே தத்தினால் வழுத்துந் தெய்வநீ யென்னவும் விளக்கி, யுகந்தவான் மீகி செய்தகாப் பியமு முன்புக ழேவிரித் திடுமே. (௬௬)

(மிருதியோகநூல்கள்.)

பெரும்பெயர் மனுயோ கீச்சுரன் முதலாம் பெரியருஞ் சாத்திரந் தெரித்த, விரும்பதஞ் சலியார் முதலியோர் தாமு மேனையோர்க் குரியபல் பேதம், விரும்புபல் வழியுங் காட்டியா வர்க்கு மேற்பட நினைப்புகழ்ந் துரைப்பார், கரும்பனைக் காய்ந்த கடவுளே யிதனைக் கண்டுமேந் தோமயங் குவரே. (௬௭)

(வேதாந்தசூத்திரம்.)

பிறநய மாகும் புருடனங் குட்டப் பிரமிதி தனைவிரும் பாமறைவனே யுனதீ சானநற் சுருதி யாற்பர மென்றுநிச் சயித்தோர் செறியும்வே தாந்தப் பொருளினைத் தெரிக்குஞ் சூத்திரஞ் செய்தவன் கருத்து, மிறைவநின் பெருமை கண்டதே யாரு மென்பரா லாயவல் லவரே. (௬௮)

(கீதைகள்.)

பெருவழக் காகக் கீதைக ளகத்துப் பேசுமோந் தத்துசத் தென்னு, முறைதரு பதமும் பிரமமென் பதமு முணர்த்திடும் பொருளுநீ யென்றே, தெரிதரக் காட்டுஞ் சாத்திரங் களினும் வெளிப்படத் தெரிந்தன மையா, விரிதரு நீயே யுலகினுக் கெல்லா மேற்படுந் தெய்வமென் பதுவே. (௬௯)

உனையலா லெல்லா விறைமையு முடையோ னென்றுமற் றெவன்றனை யுரைப்பே, முனிவிலீ சான முதலிய சுருதி மொழிப்பொருளானுநீ யன்றே, யனையனு மிவைதாஞ் சமாக்கியை சுருதி யலவெனு மயங்கிருட் குகையுள், வனைபுகழ் வேதத் தாயநூற் றேர்ந்த மதியினோர் மதியகப் படாதே. (௭௰)

பலபல விடத்துஞ் சுருதியி லுனையே பகர்ந்திடும் புராணமு மிவ்வா, றிலகுறத் தெரிக்கும் விச்சுவா திகனென் றிப்பெயர் சிற்ப ரா வெல்லா, வுலகினுக் கதிக னீயெனப் பகுத்து வெளிப்படத் தெ ளியவற் புறுத்திக், கலகஞ்செய் பொல்லாக் கயவர்தஞ் செவிக்குங் கடுங்கனற் சலாகையா மன்றே. (௩௨)

இறைமையிவ் வாறு பகுத்திடத் தகாதே லுனையொழிந் தியா ண்டுமுற் றுறுமோ, முறைபெரு மண்டந் தொறுமய னரன் மான் மூவரும் வேறுவே றாகிப், பிறமுறுங் கற்பந் தொறுநவ நவமாய்ப் பிறந்துநின் றனையி னடங்கி, யுறைவரே யாதி யந்தமு மின்றி யொழிவற நிறைந்தவான் பொருளே. (௩௨)

வைப்பெனப் பெறுமுன் பெருமையே முழக்கு மறைகளும் ப லபல மறைதே, ரப்பொருள் விரிக்கும் புராணமு மவ்வா றாகுமிவ் வளவினுற் றனே, செப்பிடத் தகுமா னின்பெருந் தகைமை தேரு நர்க் கிதுவன்றி வேறு, மெய்ப்படு மளவை வேண்டுமோ வேண்டா விளங்கிழைக் கிடங்கொடுத் தவனே. (௩௩)

பிறர்க்குரித் தல்லாப் பெயர்களான் மறைகள் பிஞ்ஞகா நார ணன் மேன்மை, குறித்துரைத் திடுமா லேனைவிண் ணவர்க்குக் கூ றிடா திம்முறை யிதனுன், மறைப்பொரு ளுண்மை தெரியலா மெ ன்று மந்திரோ பநிடத முதலாந், திறப்படு மறைக ளோதிடாக் க யவர் செப்பிடு முரைபயன் படாதே. (௩௪)

தாணுமா லயற்குத் தம்முளே யுயர்ச்சி தாழ்ச்சிகூ றிடும்புரா ணங்கட், கேனுறுங் கற்பப் பிரிவினுற் போக்கென் றியம்பிடு மச்ச புராண, மாணலா ரிதனைச் சிவபுரா ணத்திற் கப்பிர மாணமோ துவதா, ரணிலா துரைத்துத் தமதறி யாமை நாட்டுவர் நாடரும் பொருளே. (௩௫)

உன்னிறை மையினை முகுந்தனை யிடத்து முவனவ தாரங்க ளி டத்துந், தன்னுடைக் கூறு மொற்றுமை யதனுற் சாற்றிடு மார ண மொழிக, ளின்னதிவ் வளவே யவற்றினுள் ளுறையென் றியம் புவா ருந்தவ முனிவர், மன்னனே யிதனைத் தேறிட மாட்டார் மட் க்கமாங் கடலழுந் துவரே. (௩

மாயவ னின்பா லேகனாய் முன்னர் வந்துதித் தனன்பின்னரா வன்றான், பாயுல கொடுக்கும் புருடனை யயனைப் படைத்தனன் முந்துகா லத்தென், றேயுறு மகோப நிடதமோ திடுவ தியாதநு தின்னிடத் துருதா, லோய்விலா துருகி யுள்ளவல் லவாக ருள்ளாகத் துறைமணி விளக்கே. (௪௭)

அறுக்குமோர் கற்பத் தயனொரு கற்பத் தரியொரு கற்பத்திலரன்முன், பிறப்பனுன் பான்மற் றிருவரை முன்னோன் பெற்றளித் திடுவன்மற் றிதனு, லுறப்பெறு முயர்ச்சி தாழ்ச்சிக ளொருவர்க் குள்ளதோ வில்லையென் றிவ்வா, றிறப்புரு மறைகள் முழுவதுமுணர்ந்தோ ரியம்புவ ரெம்பெரு மானே. (௪௮)

ஆங்கொரு சாரா ரயனரி யிருவர்க் குருத்திர னதிகனு மெனவு, மீங்கிவர் தம்பா லவன்பிறந் தானென் பதுமவன் கூற்றினுக் கெனவு, மோங்குமால் விடையா யுன்னுரு நாம மொப்புமை செய்கைமற் றெல்லா, நீங்கிடா துடையோ னுதலான் மேலாய் நிற்பவ னெனவுமோ துவரே. (௪௯)

தேவர்மூ வருக்குந் தலைமையொப் புமைதான் செப்புக வன்றிமற் றிவருண், மேவரு மேலோ னுருத்திர னெனத்தான் விளம்புக வெந்தவா றேனுங், காவல நீயே யாவர்க்கு மேலாய் கடவுளென் பதுபெரு வழக்கே, யோவுரு துலகெ லாம்பணி செய்யு மொருவனீ யாகிநின் றனையே. (௫௰)

உலகெலாம் பணிசெய் திடத்தகுந் தலைமை யொருவனீ யேயதுவறியாக், கலதிகள் வறிதே போக்குவர் வாணுள் கடையரேற் கருள்பசு பதியே, சுலவுதே வருக்கு மானுடர் போலச் சுராசுரர் மானுடர் முதலாம், பலவுயிர் களுமுன் பணிவழி நிற்றற் பாலன பசுக்கள்போ லன்றே. (௫௧)

மானிடர் தருமப் பெருமைதேர்ந் துரைக்கு மாதவர் நின்னிடத் தன்பு, மானிடந் தரித்தோய் தருமமார்க் கத்துட் சிறந்ததென் றெண்ணிய வாற்றான், மானிடப் பிறப்பைப் பெற்றுஞ்செய் வினையா வயத்தராய் நினக்கன்பு செய்யா, மானிடப் பதர்கட் கெந்தவா றேனும் வருங்கதி கண்டிலன் யானே. (௫௨)

இருபிறப் பாளர் நியதியாய் வழுத்தற் கெடுத்தல்கா யத்திரிய ன்றே, வருமதற் குயர்ந்த தெய்வநீ யென்றே வழுத்திடு மிதுபெரு வழக்கே, மருவரும் பொருளே யாதலி னுன்றுள் வழிபடா விருபி றப் பாளர், புரியுநல் வினைக ளியாவையும் புனையுந் தூசிலா வணி யெனப் படுமே. (௩௧)

விப்பிரர்க் கெல்லா மங்கியிற் றெய்வ மேவுமென் றுந்தழற் கடவுட், கொப்பிலா நீயே யந்தரி யாமி யென்னவு முயர்மறை பி ருதி, செப்பிடும் வசன மிவ்விரு வகையுந் திரண்டுநீ யடியனே னை ரதிற், குப்புறு தருள்வோய் விப்பிரர் தமக்குக் குலதெய்வ மென விளக் கிடுமே. (௩௪)

வேதியர் குலத்திற் பிறந்தவர் தமக்கு விசேடமா யிக்கலி யுக த்தில், வேதநீ தெய்வ மெனப்புரா ணங்கள் விளம்பவு மன்பிரு னுன்றன், பாததா மரையை வழிபடா தேனைப் பண்ணவர் தமை வழி படுவோர், பாதகமறையோர் மூடர்க ளவர்க்குப் பயன்றரா பர தெய்வங் களுமே. (௩௫)

எங்கைநீ பொறுமை யுடையவன் கருத்துக் கெளியவ னுன்ன ருள் கையில், வந்தது போலுன் னடியர்க்கு விரைவின் வாய்த்திடு மவர்பெறும் பேறுஞ், சிந்தைவேட் டதற்கு மேற்பட்ப் பெறுவர் தேர்ந்திடின் முழுதுமுன் னுடைமை, யிந்தவாய் மையினுற் பயன் குறித் தவர்க்கு மிண்டுநீ சரணெனத் தருமே. (௩௬)

இம்மையிற் போக முனைவழி படுவோர்க் கெண்ணரும் பெரு மைய தென்ப, ரம்மையி லேனை யுள்ளன நிற்க வண்ணலே யுன் னறு சரர்க, டம்முடைப் பதமு மரியயன் முதலோர் தம்பதங் க ளுக்குமே லாகச், செம்மைதேர்ந் துரைப்ப ராகமத் துறையிற் றினை த்துமெய் யுணர்ந்தமா தவரே. (௩௭)

நிகழ்பிர விருதி கடந்தமெய் வாழ்வா நிரதிச யானந்த மதுவு ந், இகழுநின் னருளாற் பெறுவதாம் பிறவித் தீயகோ யறுக்குநன் மருந்தே, புகலிதற் கேது மெய்ப்பொரு ளுண்மை போதிக்கு ஞான மா மதுவு, மகலிடத் துனது திருவருள் இடைத்தா லல்லது இட் டுரு தன்றே. (௩௮)

வருந்திடா வகைவேட் டதனின்மேம் பட்ட பயன்பெறவுந
விடவற்றுந், திருந்துநின் வழிபா டொருதலை யாகச் செய்யவே
ண் டிடுந்தகைத் தாயும், பிரிந்துனை நீத்து வேறொரு தெய்வம் வ
ழிபட நாடுவர் பேயோ, ரருந்தவப் பொருளே வெய்யவூழ்க்கொடு
மை விலக்குத லரிதரி தந்தோ. (௬௭)

மருளினு லவிச்சை யாலவாத் தன்னுன் மதாபிமா னங்களா
ல் வறிதே, யொருவுக வாணு ஞனைத்தொழா மூர்க்க ரொருவனே
யாங்களெல் லோமுந், திருமகன் மனைவி முதலியோ ரொடுஞ் சே
ரநின் னடியராய்த் தொழுதேம், பெரிதுமிம் மதியே பெயர்ந்திடா
திருக்கும் பேறளித் தருள்கமற் றெமக்கே. (௬௮)

வேறு.

இவ்வா றுமுப்பா னிரட்டிப் படுசெய் யுளாலுன்
செவ்வா னடியிற் சிவதோத் திரமாலை சேர்த்தே
னவ்வாய் மையினித் தமொர்கா லிதனைப் படிப்போ
ருய்வா னுனதின் னருள்கூ டுகவும் பரானே.

வேறு.

விண்ணோர் தமக்குந் தெரிவருநின் மேன்மை யெங்கே யானெ
ங்கே, தண்ணார் துதியென் றிதுவு மொரு குற்றந் தானுய்ச் சமை
ந்ததா, லண்ணு வன்புக் கெளியாயா னவாவாற் செய்தே னுதனி
னு, லெண்ணு தெல்லாம் பொறுத்தருள்வா யென்று மிதுவென்
னுணிபாமே.

வேறு.

யானே யறிவே னிவனை யெனத்தன் றனுவா
லானு வரியே புகன்ரு னெனிலந் தநின்சீர்
தேனு ரமுதே யினிமற் றெவர்தே றவல்லார்
கோனு யுயிர்தோ றுறையும் பலக்கூத் துளானே.

ஆ செய்யுள் - எ௦.

---

சிவதத்துவவிவேக மூலமுடிந்தது.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---




உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

குளத்தூர்ச்சோமேசர்

# முதுமொழிவெண்பா.

## காப்பு.

மதுமலரும் பூஞ்சடில மல்குசோ மேசர்
முதுமொழிவெண் பாவை மொழியப்—பொதுவுரு
மடம்பிடுங்கி யன்பர்க்கு வான்வீ டளிக்குங்
கடம்பொழி முக்கட் களிறு காப்பு.

## நூல்.

### கடவுள் வாழ்த்து.

சீர்கொளிறையொன் றுண்டத் தெய்வமென் றொப்பாற்
சோர்விலவையாற்றெளிந்தோஞ்சோமேசா—வோரில்
அகரமுதல வெழுத்தெல்லாமாதி
பகவன் முதற்றேயுலகு. (௧)

### வான்சிறப்பு.

மேயபுகழ்த்துணையார் நீராட்டுங்கைதளர்ந்தன்
றூயமுடிமேல்வீழ்ந்தார்சோமேசா—வாயுங்கால்
தானந்தவமிரண்டுந் தங்காவியனுலகம்
வானம்வழங்காதெனின். (௨)

## நீத்தார்பெருமை.

அத்திரவாக்காற்புத்தன் சென்னியறுத்தார்சண்டைபச்
சுத்தனார்தம்மன்பர்சோமேசா—நித்த
நிறைமொழிமாந்தர் பெருமைநிலத்து
மறைமொழிகாட்டிவிடும். (௩)

## அறன்வலியுறுத்தல்.

தக்கனார்வேள்வித் தவத்தைமேற்கொண்டிருந்துந்
தொக்கவறமாயிற்றே சோமேசா—மிக்க
அழுக்காறவாவெகுளி யின்னாச்சொன்னான்கு
மிழுக்காவியன்றதறம். (௪)

## இல்வாழ்க்கை.

இல்வாழ்தரும னியற்சந்திரசேனன்
றொல்வார்த்தைக்கீழ்ப்படுத்தான்சோமேசா—நல்ல
இயல்பினானில்வாழ்க்கை வாழ்பவனென்பான்
முயல்வாருளெல்லாந்தலை. (௫)

## வாழ்க்கைத்துணைநலம்.

மூவர்தடுப்பவுங்கொண் மூவைப்பணிகொண்டா
[illegible]வன்சூயைசோமேசா—மேவுபிறந்
தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை. (௬)

## புதல்வரைப்பெறுதல்.

பாடினர்மூவாண்டினிற்சம் பந்தனையாவோருஞ்
சூடுமகிழ்ச்சிமெய்யேசோமேசா—நாடியிடில்
தம்மிற்றம்மக்க ளறிவுடைமைமாநிலத்து
மன்னுயிர்க்கெல்லாமினிது. (௭)

## அன்புடைமை.

தோன்றுவகைகரந்துந் தோன்றலைக்கண்டுண்ணெகிழ்ந்தா
தோன்றநின்றன்முன்புளளன்சோமேசா—தோன்றுமின்ற
அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழார்வலர்
புன்கணீர்பூசறரும். (௮)

## விருந்தோம்பல்.

பொன்னனையாளன்பருக்கே போனகமீந்துன்னருளாற்
சொன்னமிகப்பெற்றாளே சோமேசா—பன்னில்
வருவிருந்துவைகலு மோம்புவான்வாழ்க்கை
பருவந்துபாழ்படுதலின்று. (௯)

## இனியவைகூறல்.

இன்சொலிராம னியம்பவிரோணுகைசேய்
அன்பமொழியேபுகன்றான்சோமேசா—வன்புடைய
இன்சொலினிதீன்றல் காண்பானெவன்கொலோ
வன்சொல்வழங்குவது. (க0)

## செய்ந்நன்றியறிதல்.

பன்னுமசதிநன்றி பாராட்டிக்கோவைநூல்
சொன்னாளேயெளவைமுன்புசோமேசா—மன்னுந்
தினைத்துணைநன்றி செயினும்பனைத்துணையாக்
கொள்வர்பயன்றெரிவார். (கக)

## நடுவுநிலைமை.

வேதியனுளாமோவென் றெள்ளாதுவெண்ணெய்நல்லூர்ச்
சோதிவழக்கேபுகழ்ந்தார்சோமேசா—வோதிற்
சமன்செய்துசீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற்
கோடாமைசான்றோர்க்கணி. (கஉ)

## அடக்கமுடைமை.

எல்லாமுணர்ந்தும் வியாதனியம்பியவச்
சொல்லாலோவயர்ந்தான்சோமேசா—வல்லமையால்
யாகாவாராயினு நாகாக்ககாவாக்காற்
சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு. (கங)

## ஒழுக்கமுடைமை.

தீயனவேசொல்லுஞ் சிசுபாலன்முன்புகண்ணன்
றூயதலாச்சொல்லுமாயான்சோமேசா—வாயின்
ஒழுக்கமுடையவர்க் கொல்லாவேதீய
வழுக்கியும்வாயாற்சொலல். (கச)

## பிறனில்விழையாமை.

ஆன்றவெழிற்சீதையைவேட் டைநான்குதிண்கரத்தான்
றோன்றுபழிமாறிலனேசோமேசா—வேன்ற
பகைபாவமச்சம் பழியெனநான்கு
மிகவாவாமில்லிறப்பான்கண். (கரு)

## பொறையுடைமை.

ஒட்டலன்செய்தீமைக் கொறுநாமமொன்றுரைத்தார்
சுட்டியசீர்மெய்ப்பொருளார்சோமேசா—முட்ட
ஒறுத்தார்க்கொருநாளை யின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும்புகழ். (கசு)

## அழுக்காறாமை.

அன்பரைக்கண்டழுக்கா றுஞ்சமணர்தம்வாயாற்
றுன்பழுற்றார்வெங்கழுவிற்சோமேசா—வன்பாம்
அழுக்காறுடையார்க் கதுசாலுமொன்னார்
வழுக்கியுங்கேடீன்பது. (௧௭)

## வெஃகாமை.

தின்னபிட்டைப்பழத்தை நீண்மறையோர்க்கீந்தயிலை
துன்னுகுடியோடழிந்தான்சோமேசா—பன்னில்
நடுவின்றிநன்பொருள் வெஃகிற்குடிபொன்றிக்
குற்றமுமாங்கேதரும். (௧௮)

## புறங்கூறாமை.

கூனியிராமன்பிரிந்து போமாறேகூறினளே
தூநறும்பூங்கொன்றையணிசோமேசா—தானே
பகச்சொல்லிக்கேளிர்ப் பிரிப்பர்நகச்சொல்லி
நட்பாடேற்றாதவர். (௧௯)

## பயனிலசொல்லாமை.

சேக்கிழார்சிந்தா மணிப்பயிற்சிதீதெனவே
தூக்கியுபதேசித்தார்சோமேசா—நோக்கிற்
பயனில்சொற்பாராட்டு வானைமகனெனல்
மக்கட்பதடியெனல். (௨௦)

## தீவினையச்சம்.

குற்றொருவர்க்கூறைகொண்டு கொன்றதிம்மையேகூடச்
சொற்றதுகைகண்டோமேசோமேசா—வற்றான்
மறந்தும்பிறன்கேடு சூழற்கசூழி
னறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு. (௨௧)

## ஒப்புரவறிதல்.

பண்டைத்தினைவெண்ணிநொந்தார் பாகஞ்செய்மாறாரம்
தொண்டர்மனைவியார்சோமேசா—கண்டோ
நயனுடையானல்கூர்ந்தா றுதல்செயுநீர
செய்யாதமைகலாவாறு. (௨௨)

## ஈகை.

மீளொன்றுரைப்பளவு மிக்குவகைபெற்றிலர்வன்
றோளரியற்பகையார்சோமேசா—நீளுலகில்
இன்னாதிரக்கப் படுதலிரந்தவ
ரின்முகங்காணுமளவு. (௨௩)

### புகழ்.

போசன் கவிஞருக்கே போதப்பரிந்தளித்துத்
தூசிலாக்கீர்த்திகொண்டான் சோமேசா—வாசையுடன்
ஈதலிசைபட வாழ்தலதுவல்ல
தூதியமில்லையுயிர்க்கு. (௨௪)

### அருளுடைமை.

மூர்த்திபால்வன்கண்மை பூண்டவடுகரசன்
சூர்த்திறந்தானுய்ந்தானோ சோமேசா—கூர்த்த
பொருளற்றார்பூப்ப ரொருகாலருளற்றா
ரற்றார்மற்றாதலரிது. (௨௫)

### புலான்மறுத்தல்.

அச்சஞ்சுமந்துய்ப்ப வானோர்ப்பணிகொண்டான்
முச்சகஞ்சூரபன்மன் சோமேசா—நிச்சயமே
தன்னூன்பெருக்கற்குத் தான்பிறிதூனுண்பா
னெங்ஙனமாளுமருள். (௨௬)

### தவம்.

நீர்மனோநல்லூர்ச்சுடருள் யாருமணுகச்சிலர்தாம்
ஆரநெறியின்றயர்ந்தார் சோமேசா—வோரில்
தவமுந்தவமுடையார்க் காகுமவமதனை
யஃதிலார்மேற்கொள்வது. (௨௭)

### கூடாவொழுக்கம்.

மாயன்வேடங்கொண்டே வன்சலந்தரன்கிழத்தி
தூயநலங்கவர்ந்தான் சோமேசா—வாயின்
வலியினிலைமையான் வல்லுருவம்பெற்றம்
புலியின்றோல்போர்த்துமேய்ந்தற்று. (௨௮)

### கள்ளாமை.

காய்வாற்களவினான் ஞாலமிகழப்பட்டான்
தூயனுங்காதிமகன் சோமேசா—வாயதனால்
எள்ளாமைவேண்டுவா னென்பானெனைத்தொன்றுங்
கள்ளாமைகாக்கதன்னெஞ்சு. (௨௯)

### வாய்மை.

பிள்ளையுடனுண்ணப் பேசியழைத்தாரன்பு
துள்ளுசிறுத்தொண்டர் சோமேசா—வுள்ளுங்காற்
பொய்ம்மையும்வாய்மை யிடத்தபுரைதீர்ந்த
நன்மைபயக்குமெனின். (௩௦)

## வெகுளாமை.

பல்லவர்கோன்வந்து பணியக்கருணைசெய்தார்
தொல்லைநெறிவாகீசர்சோமேசா—கொல்ல
இணரெரிதோய்வன்ன வின்னாசெயினும்
புணரின்வெகுளாமைநன்று. (௩௧)

## இன்னாசெய்யாமை.

பிள்ளையார்வைப்பினிற்றீப் பெய்வித்தமீனவன்றீத்
துன்னுவெப்புநோயுழந்தான்சோமேசா—வெள்ளிப்
பிறர்க்கின்னாமுற்பகற் செய்யிற்றமக்கின்னா
பிற்பகற்றாமேவரும். (௩௨)

## கொல்லாமை.

வேந்துமகனைத்தேர்க்கால் வீட்டலஞ்சிமந்திரிதான்
சோர்ந்துதனதாவிவிட்டான்சோமேசா—வாய்ந்துணர்ந்தோர்
தன்னுயிர்நீப்பினுஞ் செய்யற்கதான்பிறி
தின்னுயிர்நீக்கும்வினை. (௩௩)

## நிலையாமை.

ஆக்கையுமாயிரத்தெட் டண்டங்களுநிலையாத்
தூக்கியழிந்தான்சூரன்சோமேசா—நோக்கியிடல்
நில்லாதவற்றை நிலையினவென்றுணரும்
புல்லறிவாண்மைகடை. (௩௪)

## துறவு.

கோவணமொன்றிச்சிப்பக் கூடினவேபந்தமெல்லாந்
தூவணஞ்சேர்மேனியாய்சோமேசா—மேயில்
இயல்பாகுநோன்பிற்கொன் றின்மையுடைமை
மயலாகுமற்றும்பெயர்த்து. (௩௫)

## மெய்யுணர்தல்.

காரிகையாளைப்பொன்னைக் காட்டவுங்காமாதிமும்மைச்
சோர்விழந்துய்ந்தாரரசர்சோமேசா—வோருங்காற்
காமம்வெகுளி மயக்கமிவைமூன்ற
னாமங்கெடக்கெடுநோய். (௩௬)

## அவாவறுத்தல்.

தாய்கருவில்வாழ்குழவி தாமெல்லாம்வேண்டுவது
தூயபிறவாமையொன்றேசோமேசா—வாயதனால்
வேண்டுங்கால்வேண்டும் பிறவாமைமற்றது
வேண்டாமைவேண்டவரும். (௩௭)

## ஊழ்.

முன்னரமண்மதத்து மூண்டரசர்பின்சைவந்
துன்னியதுமென்வியப்போசோமேசா—வுன்னுங்காற்
பேதைப்படுக்கு மிழவூழறிவகற்று
மாகலூழுற்றக் கடை. (௩௮)

## இறைமாட்சி.

பார்சீதைசீலம் பழித்துரைத்துங்காகுத்தன்
சோர்வுறுமுன்சீறிலனேசோமேசா—தேரிற்
செவிகைப்பச்சொற்பொறுக்கும் பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த்தங்குமுலகு. (௩௯)

## கல்வி.

சம்பந்தர்நாவரசர் பாற்கண்டோஞ்சார்ந்துவப்ப
தம்பிரிவினுள்ளுருவதுஞ்சோமேசா—நம்பி
உவப்பத்தலைக்கூடி யுள்ளப்பிரித
லனைத்தேபுலவர்தொழில். (௪௦)

## கல்லாமை.

மெய்த்ததிருவள்ளுவனார் வென்றுயர்ந்தார்கல்விநலந்
துய்த்தசங்கத்தார்தாழ்ந்தார்சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தாராயினுங் கல்லாதார்கீழ்ப்பிறந்துங்
கற்றாரனைத்திலர்பாடு. (௪௧)

## கேள்வி.

ஊனுக்கொன்று முனைகண்டுவந்தனரோ
ஞானச்சீர்க்கண்ணப்பர்சோமேசா—வானதனும்
கற்றிலனாயினுங் கேட்கவஃதொருவற்
கொற்கத்தினூற்றாந்துணை. (௪௨)

## அறிவுடைமை.

அன்றமணர்தீவைப்ப வஞ்சியதென்னென்னின்
றுன்றியசீர்ச்சம்பந்தர்சோமேசா—நன்றேயாம்
அஞ்சுவதஞ்சாமை பேதைமையஞ்சுவ
தஞ்சலறிவார்தொழில். (௪௩)

## குற்றங்கடிதல்.

நொந்தலையா னுறுதியபின்னைகழுற்றுச்
சூரன்றொலைந்தானேசோமேசா—வோரின்
வருமுன்னர்க்காவாதான் வாழ்க்கையெரிமுன்னர்
வைத்தூறுபோலக்கெடும். (௪௪)

## பெரியாரைத்துணைக்கோடல்.

எந்திறமுமேயர்கோ னட்பாமற்றெண்ணினரே
சுத்தநெறியாரூரர்சோமேசா—வைத்த
அரியவற்றுளெல்லா மரிதேபெரியாரைப்
பேணித்தமராக்கொளல். (௪௫)

## சிற்றினஞ்சேராமை.

அற்காவமண்மொழிகேட் டல்லலுற்றான்மாறனில்லார்
சொற்கேட்டுநோய்தீர்ந்தான்சோமேசா—தற்காக்கும்
நல்லினத்தி னூங்குந் துணையில்லைதீயினத்தி
னல்லற்படுப்பதூஉமில். (௪௬)

## தெரிந்துசெயல்வகை.

சானகியையிச்சித்துத் தன்னுயிரும்போக்கினனே
தானீரிலங்கையர்கோன்சோமேசா—வானதனால்
ஆக்கங்கருதி முதலிழக்குஞ்செய்வினை
யூக்காரறிவுடையார். (௪௭)

## வலியறிதல்.

சக்கரத்தையேற்பன் சலந்தரனென்றெடுத்துந்
துக்கமுற்றுவீடினனேசோமேசா—வொக்கும்
உடைத்தம்வலியறியா ரூக்கத்தினூக்கி
யிடைக்கண்முரிந்தார்பலர். (௪௮)

## காலமறிதல்.

வீமனவைமுன்மனையை வேட்டானைக்கண்டுமொரு
தூமொழியேனும்புகலான்சோமேசா—வாமென்றே
ஊக்கமுடையா னொடுக்கம்பொருதகர்
தாக்கற்குப்பேருந்தகைத்து. (௪௯)

## இடனறிதல்.

காட்டுமுயலுங் கதக்கரியைக்கொல்லுமாற்
றேட்டலர்நீர்க்கச்சியினுட்சோமேசா—நாட்டியிடன்
ஆற்றாருமாற்றி யடுபவிடனறிந்து
போற்றார்கட்போற்றிச்செயின். (௫௰)

## தெரிந்துதெளிதல்.

தேருமானந்தனைமுன் றேறிப்பழிபூண்டான்
சூரியருன்மாவென்பான்சோமேசா—தாரணிமேல்
தேரான்பிறனைத் தெளிந்தான்வழிமுறை
தீராவிடும்பைதரும். (௫௧)

## தெரிந்துவினையாடல்.

தேசிகனுக்கொண்ட சூரிறைக்குத்தீங்கிழைத்தான்
றூசார்துவட்டாச்செய்சோமேசா—பேசில்
வினைவகையாற்றேறியக் கண்ணும்வினைவகையான்
வேறாகுமாந்தர்பலர். (௫௨)

## சுற்றந்தழால்.

ஆர்வீடணனோ டளவளாவாதரக்கன்
சோர்விலாவாழ்விழந்தான்சோமேசா—நேரே
அளவளாவில்லாதான் வாழ்க்கைகுளவளாக்
கோடின்றிநீர்நிறைந்தற்று. (௫௩)

## பொச்சாவாமை.

முப்புரத்தோர்வேவ வுடனிருந்தமூவரோ
துப்பினாற்கண்டறிந்தார்சோமேசா—வெப்பால்
இகழ்ச்சியிற்கெட்டாரை யுள்ளுகதாந்தம்
மகிழ்ச்சியின்மைந்துறும்போழ்து. (௫௪)

## செங்கோன்மை.

மைந்தனெனுமஞ்சமஞ்ச ன்றுகவெறுத்தான்
சுந்தரச்செங்கோற்சகரன்சோமேசா—முந்துங்
குடிபுறங்காத்தோம்பிக் குற்றங்கடிதல்
வடுவன்றுவேந்தன்றொழில். (௫௫)

## கொடுங்கோன்மை.

ஐவரில்லாளுண்ணீந்த வன்றேகண்டேக்குற்றார்
துய்யகங்கைசேய்முதலோர்சோமேசா—மெய்யேயாம்
அல்லற்பட்டாற்றா தழுதகண்ணீரன்றே
செல்வத்தைத்தேய்க்கும்படை. (௫௬)

## வெருவந்தசெய்யாமை.

வெய்துரையாலக்கணமே வீந்தான்சிசுபாலன்
றெய்யிறையிலையுமையாற்சோமேசா—வெய்யாக்
கடுஞ்சொல்லன்கண்ணில னாயினெடுஞ்செல்வ
நீடின்றியாங்கேகெடும். (௫௭)

## கண்ணோட்டம்.

பாலன்முதலிழந்த வானவர்தீங்கும்பொறுத்துத்
தோலாவிடமுண்டாய்சோமேசா—சால
ஒறுத்தாற்றும்பண்பினர் கண்ணுங்கண்ணோடிப்
பொறுத்தாற்றும்பண்பேதலை. (௫௮)

## ஒற்றாடல்.

வேதனில்லாள்வீந்ததற மீனவற்குநீதெரிந்தாய்
சோதிபழியஞ்சுஞ்சோமேசா—பூதலத்தின்
எல்லார்க்குமெல்லா நிகழ்பவையெஞ்ஞான்றும்
வல்லறிதல்வேந்தன்றொழில் (௫௯)

## ஊக்கமுடைமை.

வெங்கரியைப்பாகனைமுன்வீட்டிநீறோகராய்த்
துங்கவெறிபத்தர்சோமேசா—வங்கம்
பரியதுகூர்ங்கோட்ட தாயினும்யானை
வெரூஉம்புலிதாக்குறின். (௬0)

## மடியின்மை.

பொன்மலையின்வேங்கை பொறித்துமீண்டான்சென்னி
தொன்மைவலியாண்மையினற்சோமேசா—பன்னின்
மடியிலாமன்னவ னெய்துமடியளந்தான்
றாஅயதெல்லாமொருங்கு. (௬௧)

## ஆள்வினையுடைமை.

கூற்றுவர்மூவேந்தர் நிலமுங்கைக்கொண்டாரே
தோற்றுந்தாளாண்மையினற்சோமேசா—சாற்று
முயற்சிதிருவினை யாக்குமுயற்றின்மை
யின்மைபுகுத்திவிடும். (௬௨)

## இடுக்கணழியாமை.

என்றுமொருமீனவன் றின்மைமிகவுந்தளரார்
துன்றேரதிபத்தர்சோமேசா—மன்ற
அடுக்கிவரினு மழிவிலானுற்ற
விடுக்கணிடுக்கட்படும். (௬௩)

## அமைச்சு.

கால்சேய்கதிர்சேயைக் காத்தரசனட்புதவித்
தாலமுடிசூட்டுவித்தான் சோமேசா—சாலப்
பிரித்தலும்பேணிக் கொளலும்பிரிந்தார்ப்
பொருத்தலும்வல்லதமைச்சு. (௬௪)

## சொல்வன்மை.

நித்தியத்துவங்கேட்பா னித்திரையென்றேமயக்கந்
துய்த்தனனுங்கும்பகன்னன் சோமேசா—வெத்திறத்தும்
ஆக்கமுங்கேடு மதனால்வருதலாற்
காத்தோம்பல்சொல்லின்கட்சோர்வு. (௬௫)

## வினைத்தூய்மை.

தக்கனுனையெள்ளிமகஞ் சாடும்போதெண்ணியெண்ணித்
துக்கமுற்றுழவதென்னே சோமேசா—வெக்காலும்
எற்றென் றிரங்குவ செய்யற்கசெய்வானேன்
மற்றன்னசெய்யாமைநன்று. (சுசு)

## வினைத்திட்பம்.

செவ்வேளைப்பாலனென வெள்ளித்திறலழிந்தான்
றுவ்வாதவெஞ்சூரன்சோமேசா—வவ்வா
றுருவுகண்டெள்ளாமை வேண்டுமுருள்பெருந்தேர்க்
கச்சாணியன்னாருடைத்து. (சுஎ)

## வினைசெயல்வகை.

வெள்ளிவெற்பையெண்ணா தெடுப்பனெனவீறெய்தித்
துள்ளியழிந்தானரக்கன்சோமேசா—மெள்ள
முடிவுமிடையூறு முற்றியாங்கெய்தும்
படுபயனும்பார்த்துச்செயல். (சுஅ)

## தூது.

தன்றுயர்நோக்கான் றனைவிடுத்தோர்க்கேயுறுதி
ஆன்றமொழிந்தானங்கதன் சோமேசா—வென்றும்
இறுதிபயப்பினு மெஞ்சாதிறைவற்
குறுதிபயப்பதாந்தூது. (சுகூ)

## மன்னரைச்சேர்ந்தொழுகல்.

மாமனென்னா மதத்தாலுனையிகழ்ந்து
தோமுற்றார்தக்கனார்சோமேசா—வாமே
பழையமெனக்கருதிப் பண்பல்லசெய்யுங்
கெழுதகைமைகேடுதரும். (எ0)

## குறிப்பறிதல்.

அப்பூதியார்மறைத்தும் வாகீசரக்கரவைத்
தப்பானறிந்தனரோசோமேசா—விப்புவியில்
ஐயப்படாஅ தகத்ததுணர்வானைத்
தெய்வத்தோடொப்பக்கொளல். (எக)

## அவையறிதல்

ஓர்சங்கத்தார்கல்வி யூமைச்சேய்க்குக்காட்டிச்
சோர்வுநலந்தேர்ந்தனரோசோமேசா—வோருங்காற்
கற்றறிந்தார்கல்வி விளங்குங்கசடறச்
சொற்றெரிதல்வல்லாரகத்து. (எஉ)

## நட்பாராய்தல்.

போற்றுஞ்சுசீலன் புயபெலனைநீத்தகன்றான்
றோற்றிறைவிதும்மிடவுஞ்சோமேசா—வேற்றதே
ஊதியமென்ப தொருவற்குப்பேதையார்
கேண்மையொரீஇவிடல். (அ0)

## பழைமை.

இல்லானைப்பற்றிமூழ் கென்றிடவுமன்புகுன்றார்
தொல்லைநெறிநிலகண்டர்சோமேசா—வொல்லா
தழிவந்தசெய்யினு மன்பறாரன்பின்
வழிவந்தகேண்மையவர் (அக)

## தீநட்பு.

ஆங்காரியந்தடுத்த வங்கனைசொற்கேட்டிறந்தான்
றூங்காத்தசரதன்றான்சோமேசா—வீங்கிதனல்
ஒல்லுங்கரும முடற்றுபவர்கேண்மை
சொல்லாடார்சோரவிடல் (அஉ)

## கூடாநட்பு.

தாய்நீண்டத்தூழித்துச் சாறொனுஞ்சொற்றீதென்றா
டுயசுயோதனற்குச்சோமேசா—வாயதனல்
லட்டார்போனல்லவை சொல்லினுமொட்டார்சொ
லொல்லையுணரப்படும். (அங)

## பேதைமை.

வஞ்சமணர்தம்பிரிவால் வாகீசர்க்கின்பமன்றித்
துன்பமென்பதில்லையேசோமேசா—நன்காம்
பெரிதினிதுபேதையார் கேண்மைபிரிவின்கட்
பீழைதருவதொன்றில். (அச)

## புல்லறிவாண்மை.

இல்லாண்மறுப்பவுஞ்சென் றேகிச்சலந்தரன்றான்
றொல்வலிபோய்மாண்டனனேசோமேசா—வல்லமையால்
ஏவவுஞ்செய்கலான் றான்றேறானவ்வுயிர்
போஒமளவுமோர்நோய். (அரு)

## இகல்.

எத்திறத்துங்கெட்டா னிகலாற்சுயோதனன்சீர்
துய்த்தனனட்பாற்றருமன்சோமேசா—மொய்த்த
இகலானுமின்னாத வெல்லாநகலானு
நன்னயமென்னுஞ்செருக்கு. (அசு)

வருந்திடா வகைவேட் டதனின்மேம் பட்ட பயன்பெற வுந விடவற்றுந், திருந்துநின் வழிபா டொருதலை யாகச் செய்யவே வண் டிடுந்தகைத் தாயும், பிரிந்துனை நீத்து வேறொரு தெய்வம் வ ழிபட நாடுவர் பேயோ, ரருந்தவப் பொருளே வெய்யவூழ்க்கொடு மை விலக்குத லரிதரி தந்தோ. (௬௮)

மருளினு லவிச்சை யாலவாத் தன்னுன் மதாமிமா னங்களா ல் வறிதே, யொருவுக வாணு ளுனைத்தொழா மூர்க்க ரொருவனே யாங்களெல் லோமுந், திருமகன் மனைவி முதலியோ ரோடுஞ் சே ரநின் னடியராய்த் தொழுதேம், பெரிதுமிம் மதியே பெயர்ந்திடா திருக்கும் பேறளித் தருள்கமற் றெமக்கே. (௬௯)

வேறு.

இவ்வா றுமுப்பா னிரட்டிப் படுசெய் யுளாலுன்
செவ்வா னடியிற் சிவதோத் திரமாலை சேர்த்தே
னவ்வாய் மையினித் தமொர்கா லிதனைப் படிப்போ
ருய்வா னுனதின் னருள்கூ டுகவும் பரானே.

வேறு.

விண்ணோர் தமக்குந் தெரிவருநின் மேன்மை யெங்கே யானெ ங்கே, தண்ணுர் துதியென் றிதுவு மொரு குற்றந் தானுய்ச் சமை ந்ததா, லண்ணு வன்புக் கெளியாயா னவாவாற் செய்தே னுதலி ணு, லெண்ணு தெல்லாம் பொறுத்தருள்வா யென்னு மிதுவென் றுணிபாமே.

வேறு.

யானே யறிவே னிவனை யெனத்தன் றனுவா
லானு வரியே புகன்று னெனிலந் தநின்சீர்
தேனு ரமுதே யினிமற் றெவர்தே றவல்லார்
கோனு யுயிர்தோ றுறையம் பலக்கூத் தனானே.

ஆ செய்யுள் - ௭0.

---

சிவதத்துவவிவேக மூலமுடிந்தது.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

குளத்தூர்ச்சோமேசர்

# முதுமொழிவெண்பா.

---

## காப்பு.

மதுவளரும் பூஞ்சடில மல்குசோ மேசர்
முதுமொழிவெண் பாவை மொழியப்—பொதுநு
நடம்பிடுங்கி யன்பர்க்கு வான்வீ டளிக்குங்
கடம்பொழி முக்கட் களிறே காப்பு.

---

## நூல்.

---

### கடவுள் வாழ்த்து.

சீர்கொளிறையொன் றுண்டத் தெய்வமென் றோப்பாற்
சோர்விலடையாற் றெளிந்தோஞ்சோமேசா—வோரில்
அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றேயுலகு. (க)

### வான்சிறப்பு.

நேயபுகழ்த்துணையார் நீராட்டிங்கைதளர்ந்தன்
றாயமுடிமேல்வீழ்ந்தார்சோமேசா—வாயுங்கால்
தானந்தவமிரண்டுந் தங்காவியனுலகம்
வானம்வழங்காதெனின். (உ)

## நீத்தார்பெருமை.

அத்திரவாக்காற்புத்தன் சென்னியறுத்தார்சண்டைச்
சுத்தனார்தம்மன்பர்சோமேசா—நித்த
நிறைமொழிமாந்தர் பெருமைநிலத்து
மறைமொழிகாட்டிவிடும். (௩)

## அறன்வலியுறுத்தல்.

தக்கனார்வேள்வித் தவத்தைமேற்கொண்டிருந்துந்
தொக்கவறமாயிற்றே சோமேசா—மிக்க
அழுக்காறவாவெகுளி யின்னாச்சொன்னான்கு
மிழுக்காவியன்றதறம். (௪)

## இல்வாழ்க்கை.

இல்வாழ்தரும மியற்சந்திரசேனன்
றொல்வார்த்தைக்கீழ்ப்படுத்தான்சோமேசா—நல்ல
இயல்பினானில்வாழ்க்கை வாழ்பவனென்பான்
முயல்வாருளெல்லாந்தலை. (௫)

## வாழ்க்கைத்துணைநலம்.

மூவர்தடுப்பவுங்கொண் மூவைப்படணிகொண்டா
ளேவர்சூயைசோமேசா—மேவுபிறந்
தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை. (௬)

## புதல்வரைப்பெறுதல்.

பாடினர்மூவாண்டினிற்சம் பந்தரெனயாவோருஞ்
சூடுமெகிழ்ச்சிமெய்யேசோமேசா—நாடியிடில்
தம்மிற்றம்மக்க ளறிவுடைமைமாநிலத்து
மன்னுயிர்க்கெல்லாமினிது. (௭)

## அன்புடைமை.

தோன்றுவகைகரந்துந் தோன்றலைக்கண்டுண்ணெகிழ்ந்து
தோன்றநின்றுன்முன்புநளன்சோமேசா—தோன்றுகின்ற
அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழார்வலர்
புன்கணீர்பூசறரும். (௮)

## விருந்தோம்பல்.

பொன்னனையாளன்பருக்கே போனகமீந்துன்னருளாற்
சொன்னமிகப்பெற்றாளே சோமேசா—பன்னில்
வருவிருந்துவைகலு மோம்புவான்வாழ்க்கை
பருவந்துபாழ்படுதலின்று. (௯)

## இனியவைகூறல்.

இன்சொலிராம னியம்பவிரோ ணுகைசேய்
அன்பமொழியேபுகன்றான் சோமேசா—வன்புடைய
இன்சொலினிதீன்றல் காண்பானெவன்கொலோ
வன்சொல்வழங்குவது. (௧௦)

## செய்ந்நன்றியறிதல்.

பன்னுமசதிநன்றி பாராட்டிக்கோவைநூல்
சொன்னாளேயௌவைமுன்புசோமேசா—மன்னாத்
தினைத்துணைநன்றி செயினும்பனைத்துணையாக்
கொள்வர்பயன்றெரிவார். (௧௧)

## நடுவுநிலைமை.

வேதியனுளாமோவென் றெள்ளாதுவெண்ணெய்நல்லூர்ச்
சோதிவழக்கேபுகழ்ந்தார்சோமேசா—வோதிற்
சமன்செய்துசீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற்
கோடாமைசான்றோர்க்கணி. (௧௨)

## அடக்கமுடைமை.

எல்லாமுணர்ந்தும் வியாதனியம்பியவச்
சொல்லாலேநாவயர்ந்தான் சோமேசா—வல்லமையால்
யாகாவாராயினு நாகாக்ககாவாக்காற்
சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு. (௧௩)

## ஒழுக்கமுடைமை.

தீயனவேசொல்லுஞ் சிசுபாலன்முன்புகண்ணன்
றூயதலாச்சொல்லுரையான்சோமேசா—வாயின்
ஒழுக்கமுடையவர்க் கொல்லாவேதீய
வழுக்கியும்வாயாற்சொலல். (௧௪)

## பிறனில்விழையாமை.

ஆன்றவெழிற்சீதையைவேட் டைநான்குதிண்கரத்தான்
றோன்றுபழிமாறிலனேசோமேசா—வேன்ற
பகைபாவமச்சம் பழியெனநான்கு
மிகவாவாமில்லிறப்பான்கண். (௧௫)

## பொறையுடைமை.

ஒட்டலன்செய்தீமைக் கொருதுநமனொன்றுரைத்தார்
சுட்டியசீர்மெய்ப்பொருளார்சோமேசா—முட்ட
ஒறுத்தார்க்கொருநாளை யின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும்புகழ். (௧௬)

## அழுக்காறாமை.

அன்பரைக்கண்டழுக்கா றுஞ்சமணர்தம்வாயாற்
றுன்பமுற்றார்வெங்கழுவிற்சோமேசா—வன்பாம்
அழுக்காறுடையார்க் கதுசாலுமொன்னார்
வழுக்கியுங்கேடீன்பது. (கஎ)

## வெஃகாமை.

தின்னபிட்டைப்பழத்தை நீண்மறையோர்க்கீந்துவிலை
துன்னுகுடியோடழிந்தான்சோமேசா—பன்னில்
நடுவின்றிநன்பொருள் வெஃகிற்குடிபொன்றிக்
குற்றமுமாங்கேதரும். (கஅ)

## புறங்கூறாமை.

கூனியிராமன்பிரிந்து போமாறேகூறினளே
தூநறும்பூங்கொன்றையணிசோமேசா—தானே
பகச்சொல்லிக்கேளிர்ப் பிரிப்பர்நகச்சொல்லி
நட்பாடறேற்றாதவர். (ககூ)

## பயனிலசொல்லாமை.

சேக்கிழார்சிந்தா மணிப்பயிற்சிதீதெனவே
நூக்கியுபதேசித்தார்சோமேசா—நோக்கிற்
பயனில்சொற்பாராட்டு வானைமகனெனல்
மக்கட்பதடியெனல். (உ0)

## தீவினையச்சம்.

குற்றொருவர்க்கூறைகொண்டு கொன்றதிம்மையேகூடச்
சொற்றதுகைகண்டோமேசோமேசா—வற்றான்
மறந்தும்பிறன்கேடு சூழற்கசூழி
னறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு. (உக)

## ஒப்புரவறிதல்.

பண்டைவினைவெண்ணிநொந்தார் பாகஞ்செய்மாறனார்
தொண்டர்மனைவியார்சோமேசா—கண்டோ
நயனுடையானல்கூர்ந்தா னுதல்செயுநீர
செய்யாதமைகலாவாறு. (உஉ)

## ஈகை.

பூவொன்றுரைப்பளவு மிக்குவகைபெற்றிலர்யன்
றோளரியற்பகையார்சோமேசா—நீளுலகில்
இன்னாதிரக்கப் படுதலிரந்தவ
ரின்முகங்காணுமளவு. (உங)

### புகழ்.

போசன்கவிஞருக்கே போதப்பரிந்தளித்துத்
ஆசிலாக்கீர்த்திகொண்டான்சோமேசா—வாசையுடன்
ஈதலிசைபட வாழ்தலதுவல்ல
ஊதியமில்லையுயிர்க்கு. (௨௪)

### அருளுடைமை.

மூர்த்திபால்வன்கண்மை பூண்டவடுகரசன்
சூர்த்திறந்தானுய்ந்தானோசோமேசா—கூர்த்த
பொருளற்றார்பூப்ப ரொருகாலருளற்றா
ரற்றார்மற்றாதலரிது. (௨௫)

### புலான்மறுத்தல்.

நச்சஞ்சுமந்துய்ப்ப வானோர்ப்பணிகொண்டான்
அச்சனுஞ்சூரபன்மன்சோமேசா—நிச்சயமே
தன்னூன்பெருக்கற்குத் தான்பிறிதூனுண்பா
னெங்ஙனமாளுமருள். (௨௬)

### தவம்.

வர்மனால்ஊர்ச்சுடருள் யாருமணுகச்சிலர்தாந்
தூரநெறிநின்றயர்ந்தார்சோமேசா—வோரில்
தவமுந்தவமுடையார்க் காகுமவமதனை
யஃதிலார்மேற்கொள்வது. (௨௭)

### கூடாவொழுக்கம்.

மாயன்வேடங்கொண்டே வன்சலந்தரன்கிழத்தி
தூயநலங்கவர்ந்தான்சோமேசா—வாயின்
வலியினிலைமையான் வல்லுருவம்பெற்றம்
புலியின்றோல்போர்த்துமேய்ந்தற்று. (௨௮)

### கள்ளாமை.

காய்வாற்களவினான் ஞாலமிகழப்பட்டான்
ஆயனுங்காதிமகன்சோமேசா—வாயதனால்
எள்ளாமைவேண்டுவா னென்பானெனைத்தொன்றுங்
கள்ளாமைகாக்கதன்னெஞ்சு. (௨௯)

### வாய்மை.

பிள்ளையுடனுண்ணப் பேசியழைத்தான்பு
துன்றநிறுத்தித்தொண்டர்சோமேசா—வுள்ளுங்காற்
பொய்ம்மையும்வாய்மை யிடத்தபுரைதீர்ந்த
நன்மைபயக்குமெனின். (௩௦)

## வெகுளாமை.

பல்லவர்கோன்வந்து பணியக்கருணைசெய்தார்
தொல்லைநெறிவாகீசர்சோமேசா—கொல்ல
இணரெரிதோய்வன்ன வின்னாசெயினும்
புணரின்வெகுளாமைநன்று. (௬௧)

## இன்னாசெய்யாமை.

பிள்ளையார்வைப்பினிற்றீப் பெய்வித்தமீனவன்றீத்
துள்ளுவெப்புநோயுழந்தான்சோமேசா—வெள்ளிப்
பிறர்க்கின்னாமுற்பகற் செய்யிற்றமக்கின்னா
பிற்பகற்றாமேவரும். (௬௨)

## கொல்லாமை.

வேந்துமகனைத்தேர்க்கால் வீட்டஞ்சிமந்திரிதான்
சோர்ந்துதனதாவிவிட்டான்சோமேசா—வாய்ந்துணர்ந்தோர்
தன்னுயிர்நீப்பினுஞ் செய்யற்கதான்பிறி
தின்னுயிர்நீக்கும்வினை. (௬௩)

## நிலையாமை.

ஆக்கையுமாயிரத்தெட் டண்டங்களுநிலையாத்
தூக்கியழிந்தான்சூரன்சோமேசா—நோக்கியிடில்
நில்லாதவற்றை நிலையினவென்றுணரும்
புல்லறிவாண்மைகடை. (௬௪)

## துறவு.

கோவணமொன்றிச்சிப்பக் கூடினவேபந்தமெல்லாந்
தூவணஞ்சேர்மேனியாய்சோமேசா—மேவில்
இயல்பாகுநோன்பிற்கொன் றின்மையுடைமை
மயலாகுமற்றும்பெயர்த்து. (௬௫)

## மெய்யுணர்தல்.

காரிகையாளைப்பொன்னைக் காட்டவுங்காமாதிமும்மைச்
சோர்விழந்துய்ந்தாரரசர்சோமேசா—வோருங்காற்
காமம்வெகுளி மயக்கமிவைமூன்ற
னாமங்கெடக்கெடுநோய். (௬௬)

## அவாவறுத்தல்.

தாய்கருவில்வாழ்குழவி தாமெல்லாம்வேண்டுவது
தூயபிறவாமையொன்றேசோமேசா—வாயதனால்
வேண்டுங்கால்வேண்டும் பிறவாமைமற்றது
வேண்டாமைவேண்டவரும். (௬௭)

### ஊழ்.

முன்னாரமண்மதத்து மூண்டரசர்பின்சைவர்
துன்னியதுமென்வியப்போசோமேசா—வுன்னுங்காற்
பேதைப்படுக்கு மிழவூழறிவகற்று
மாகலூழுற்றக்கடை. (௧௮)

### இறைமாட்சி.

பார்சீதைசீலம் பழித்துரைத்துங்காகுத்தன்
சோர்வுறமுன்சீறிலனேசோமேசா—தேரிற்
செவிகைப்பச்சொற்பொறுக்கும் பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த்தங்குமுலகு. (௧௯)

### கல்வி.

சம்புந்தர்நாவரசர் பாற்கண்டோஞ்சார்ந்துவப்ப
தும்பிரியினுள்ளுவதுஞ்சோமேசா—நம்பி
உவப்பத்தலைக்கூடி யுள்ளப்பிரித
லனைத்தேபுலவர்தொழில். (௨௦)

### கல்லாமை.

மெய்த்ததிருவள்ளுவனார் வென்றுயர்ந்தார்கல்விநலர்
துய்த்தசங்கத்தார்தாழ்ந்தார்சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தாராயினுங் கல்லாதார்கீழ்ப்பிறந்துங்
கற்றாரனைத்திலர்பாடு. (௨௧)

### கேள்வி.

ஊனுக்கடனென்னு முனைகண்டுவந்தனரோ
ஞாநற்சீர்க்கண்ணப்பர்சோமேசா—வானதனுற்
கற்றிலனாயினுங் கேட்கவஃதொருவற்
கொற்கத்தினூற்றாந்துணை. (௨௨)

### அறிவுடைமை.

அன்றமணர்தீவைப்ப வஞ்சியதென்னென்மின்
றுன்றியசீர்ச்சம்பந்தர்சோமேசா—நன்றேயாம்
அஞ்சுவதஞ்சாமை பேதைமையஞ்சுவ
தஞ்சலறிவார்தொழில். (௨௩)

### குற்றங்கடிதல்.

ஈலாந்தலையா னனுகியபின்னேகலுற்றுச்
சூரந்தொலைந்தானேசோமேசா—வோரின்
வருமுன்னர்க்காவாதான் வாழ்க்கையெரிமுன்னர்
வைத்தூறுபோலக்கெடும். (௨௪)

## பெரியாரைத்துணைக்கோடல்.

எத்திறமுமேயர்கோ னட்பாம்றெண்ணினரோ
சுத்தநெறியாரூரர்சோமேசா—வைத்த
அரியவற்றுளெல்லா மரிதேபெரியாரைப்
பேணித்தமராக்கொளல். (௪௫)

## சிற்றினஞ்சேராமை.

அற்காவமண்மொழிகேட் டல்லலுற்றான்மாறனில்லாய்
சொற்கேட்டுநோய்தீர்ந்தான்சோமேசா—தற்காக்கும்
நல்லினத்தி னூங்குந் துணையில்லைதீயினத்தி
னல்லற்படுப்பதூஉமில். (௪௬)

## தெரிந்துசெயல்வகை.

சானகியையிச்சித்துத் தன்னுயிரும்போக்கினனே
தூநீரிலங்கையர்கோன்சோமேசா—வானதனால்
ஆக்கங்கருதி முதலிழக்குஞ்செய்வினை
யூக்காரறிவுடையார். (௪௭)

## வலியறிதல்.

சக்கரத்தையேற்பன் சலந்தரனென்றெடுத்துந்
துக்கமுற்றுவீடினனேசோமேசா—வொக்கும்
உடைத்தம்வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண்முரிந்தார்பலர். (௪௮)

## காலமறிதல்.

வீமனவைமுன்மனையை வேட்டானைக்கண்டுமொரு
தூமொழியேனும்புகலான்சோமேசா—வாமென்றே
ஊக்கமுடையா னொடுக்கம்பொருதகர்
தாக்கற்குப்பேருந்தகைத்து. (௪௯)

## இடனறிதல்.

காட்டுமுயலுங் கதக்கரியைக்கொல்லுமாற்
றேட்டலர்நீர்க்கச்சியினாட்சோமேசா—நாட்டிடின்
ஆற்றருமாற்றி யடுபவிடனறிந்து
போற்றார்கட்போற்றிச்செயின். (௫௦)

## தெரிந்துதெளிதல்.

தேரருமானந்தனைமுன் றேறிப்பழிபூண்டான்
சூரியருண்மாவென்பான்சோமேசா—தாரணிமேல்
தேரான்பிறனைத் தெளிந்தான்வழிமுறை
தீராவிடும்பைதரும். (௫௧)

## தெரிந்துவினையாடல்.

தேசிகனைக்கொண்ட சுரரிறைக்குத்தீங்கிழைத்தான்
ஆசாரிதுவட்டாச்சேய்சோமேசா—பேசில்
வினைவகையாற்றேறியக் கண்ணும்வினைவகையான்
வேறாகுமாந்தர்பலர். (௫௨)

## சுற்றந்தழால்.

ஆர்வீடணனோ டளவளாவாதரக்கன்
சோர்விலாவாழ்விழந்தான்சோமேசா—நேரே
அளவளாவில்லாதான் வாழ்க்கைகுளவளாக்
கோடின்றிநீர்நிறைந்தற்று. (௫௩)

## பொச்சாவாமை.

முப்புரத்தோர்வேவ வுடனிருந்தமூவரோ
தப்பிறைற்கண்டறிந்தார்சோமேசா—வெப்பால்
இகழ்ச்சியிற்கெட்டாரை யுள்ளுகதாந்தம்
மகிழ்ச்சியின்மைந்துறும்போழ்து. (௫௪)

## செங்கோன்மை.

மைந்தனையசமஞ்சனென்றனைவெறுத்தான்
சுந்தரச்செங்கோற்சகரன்சோமேசா—முந்துங்
குடிபுறங்காத்தோம்பிக் குற்றங்கடிதல்
வடுவன்றுவேந்தன்றொழில். (௫௫)

## கொடுங்கோன்மை.

ஐவரில்லாறுண்ணீந்த வன்றேகண்டேக்குற்றார்
துய்யகங்கைசேய்முதலோர்சோமேசா—மெய்யேயாம்
அல்லற்பட்டாற்று தழுதகண்ணீரன்றே
செல்வத்தைத்தேய்க்கும்படை. (௫௬)

## வெருவந்தசெய்யாமை.

வெய்துறாயாலக்கணமே வீந்தான்சிசுபாலன்
றொய்யிழையுமையாற்சோமேசா—வுய்யாக்
கடுஞ்சொல்லன்கண்ணில னாயினெடுஞ்செல்வ
நீடின்றியாங்கேகெடும். (௫௭)

## கண்ணோட்டம்.

பாலன்முதலிழந்த வானவர்க்கிங்கும்பொறுத்துத்
தோலாவிடமுண்டாய்சோமேசா—சால
ஒறுத்தாற்றும்பண்பினார் கண்ணுங்கண்ணோடிப்
பொறுத்தாற்றும்பண்பேதலை. (௫௮)

### ஒற்றாடல்.

வேதனில்லாள்வீந்ததிற மீனவற்குத்தெரிந்தாய்
சோதிபழியஞ்சுஞ்சோமேசா—பூதலத்தின்
எல்லார்க்குமெல்லா நிகழ்பவையெஞ்ஞான்றும்
வல்லறிதல்வேந்தன்றொழில் (ருசு)

### ஊக்கமுடைமை.

வெங்கரியைப்பாகனைமுன்வீட்டினரோகராய்த்
துங்கவெறிபத்தர்சோமேசா—வங்கம்
பரியதுகூர்ங்கோட்ட தாயினும்யானை
வெரூஉம்புலிதாக்குறின். (சு0)

### மடியின்மை.

பொன்மலையின்வேங்கை பொறித்துமீண்டான்சென்னி
தொன்மைவலியாண்மையினற்சோமேசா—பன்னின்
மடியிலாமன்னவ னெய்துமடியளந்தான்
றாஅயதெல்லாமொருங்கு. (சுக)

### ஆள்வினையுடைமை.

கூற்றுவர்மூவேந்தர் நிலமுங்கைக்கொண்டாரே
தோற்றுந்தாளாண்மையினற்சோமேசா—சாற்று
முயற்சிதிருவினை யாக்குமுயற்றின்மை
யின்மைபுகுத்திவிடும். (சுஉ)

### இடுக்கணழியாமை.

என்றுமொருமீனேவந் தின்மைமிகவுந்தளரார்
துன்றேரதிபத்தர்சோமேசா—மன்ற
அடுக்கிவரினு மழிவிலானுற்ற
விடுக்கணிடுக்கட்படும். (சுங)

### அமைச்சு.

கால்சேய்கதிர்சேயைக் காத்தரசனட்புதவித்
தாலமுடிசூட்டுவித்தான்சோமேசா—சாலப்
பிரித்தலும்பேணிக் கொளலும்பிரிந்தார்ப்
பொருத்தலும்வல்லதமைச்சு. (சுச)

### சொல்வன்மை.

நித்தியத்துவங்கேட்பா னித்திரையென்றேமயக்கக்
துய்த்தனனுங்கும்பகன்னன்சோமேசா—வெத்திறத்தும்
ஆக்கமுங்கேடு மதனால்வருதலாற்
காத்தோம்பல்சொல்லின்கட்சோர்வு. (சுரு)

## வினைத்தூய்மை.

தக்கனுமீனயெள்ளிமகஞ் சாடும்போதெண்ணியெண்ணித்
தக்கமுற்ருனவதென்னேசோமேசா—வெக்காலும்
எற்றென் றிரங்குவ செய்யற்கசெய்வானேல்
மற்றன்னசெய்யாமைநன்று. (சுசு)

## வினைத்திட்பம்.

செவ்வேளைப்பாலனென வெள்ளித்திறலழிந்தான்
றவ்வாதவெஞ்சூரன்சோமேசா—வவ்வா
முருவுகண்டெள்ளாமை வேண்டுமுருள்பெருந்தேர்க்
கச்சாணியன்னாருடைத்து. (சுஎ)

## வினைசெயல்வகை.

வெள்ளிவெற்பையெண்ணா தெடுப்பனெனவீறெய்தித்
துள்ளியழிந்தானரக்கன்சோமேசா—மெள்ள
முடிவுமிடையூறு முற்றியாங்செய்தும்
படுபயனும்பார்த்துச்செயல். (சுஅ)

## தூது.

தன்றுயர்நோக்கான் றனைவிடுத்தோர்க்கேயுறுதி
துன்றமொழிந்தானிடதன் சோமேசா—வென்றும்
இறுதிபயப்பினு மெஞ்சாதிறைவற்
குறுதிபயப்பதாந்தூது. (சுகூ)

## மன்னரைச்சேர்ந்தொழுகல்.

மாமனெனன்னு மதந்தாலுனையிகழ்ந்து
தோமுற்ருர்தக்கனர்சோமேசா—வாமே
பழையமெனக்கருதிப் பண்பல்லசெய்யுங்
கெழுதகைமைகேடுதரும். (எ0)

## குறிப்பறிதல்.

அப்பூதியார்மறைத்தும் வாகீசரக்கரவைத்
துப்பானறிந்தனரோசோமேசா—விப்புவியில்
ஐயப்படாஅ தகத்ததுணர்வானைத்
தெய்வத்தோடொப்பக்கொளல். (எக)

## அவையறிதல்

ஓர்சங்கத்தார்கல்வி யூமைச்சேய்க்குக்காட்டிச்
சோர்வுறலர்தேர்ந்தனரோசோமேசா—வோருங்காற்
கற்றறிந்தார்கல்வி விளங்குங்கசடறச்
சொற்றெரிதல்வல்லாரகத்து. (எஉ)

## அவையஞ்சாமை.

வாழ்வாதலூரர் வளவனவைமுன்னெதிர்த்துச்
சூழ்தேரரைவென்றார்சோமேசா—தாழ்வகல
ஆற்றினளவறிந்து கற்கவவையஞ்சா
மாற்றங்கொடுத்தற்பொருட்டு. (௭௨)

## நாடு.

மேல்வளமெல்லாமமைந்தும் வீரமகேந்திரந்தான்
சோல்வியுற்றமாய்ந்ததேசோமேசா—ஞாலமிசை
ஆங்கமைவெய்தியக் கண்ணும்பயமின்றே
வேந்தமைவில்லாதநாடு. (௭௩)

## அரண்.

வல்லதிகன்றன்னரணம் வாள்வளவன்சேனைமேலத்
தொல்லைவலிமாண்டதேசோமேசா—நல்ல
எனைமாட்சித்தாகியக் கண்ணும்வினைமாட்சி
யில்லார்கணில்லதரண். (௭௪)

## பொருள்செயல்வகை.

உக்கிரனூர்மேருவைவென் றெண்ணிறியம்பெற்றமையாற்
றொக்ககுடிகாத்தனர்காண்சோமேசா—மிக்குயர்ந்த
குன்றேறியானைப்போர் கண்டற்றாற்றன்கைத்தொன்
றுண்டாகச்செய்வான்வினை. (௭௫)

## படைமாட்சி.

நேகைப்பமுப்புரமு நீறாகிமாய்ந்ததே
தூநகையாள்பாலமருஞ்சோமேசா—வானின்
ஒலித்தக்காலென்னா முவரியெலிப்பகை
நாகமுயிர்ப்பக்கெடும். (௭௬)

## படைச்செருக்கு.

மன்மதனின்னேடெதிர்த்து வீறழிந்துமாண்டானும்
துன்னுபுகழேபெற்றான்சோமேசா—புன்மைசேருங்
கானமுயலெய்த வம்பினில்யானை
பிழைத்தவேலேந்தலினிது. (௭௭)

## நட்பு.

வாக்கரசர்பிள்ளா யெனவலித்துமாற்றலுற்றார்
தூக்குபிள்ளையார்செலவைச்சோமேசா—நோக்கி
நகுதற்பொருட்டன்று நட்டன்மிகுதிக்கண்
மேற்சென்றிடித்தற்பொருட்டு. (௭௮)

## நட்பாராய்தல்.

போற்றுஞ்சுசீலன் புயபெலனை நீத்தகன்றான்
றேற்றிறைவிதும்மிடவுஞ்சோமேசா—வேற்றதே
ஊதியமென்ப தொருவற்குப்பேதையார்
கேண்மையொரீஇவிடல். (அ0)

## பழைமை.

இல்லாளைப்பற்றிமூழ் கென்றிடவுமன்புகுன்றார்
தொல்லைநெறிநீலகண்டர்சோமேசா—வொல்லா
தழிவந்தசெய்யினு மன்பறாரன்பின்
வழிவந்தகேண்மையவர் (அக)

## தீநட்பு.

ஆங்காரியந்தடுத்த வங்கனைசொற்கேட்டிறந்தான்
றூங்காத்தசரதன்றன் சோமேசா—வீங்கிதனால்
ஒல்லுங்கரும முடற்றுபவர்கேண்மை
சொல்லாடார்சோரவிடல் (அஉ)

## கூடாநட்பு.

தாயிண்டத்தாடித்துச் சானொனுஞ்சொற்றீதென்று
டேயசுயோதனற்குச்சோமேசா—வாயதனால்
பட்டார்போனல்லவை சொல்லினுமொட்டார்சொ
லொல்லையுணரப்படும். (அஙு)

## பேதைமை.

வஞ்சமணர்தம்பிரிவால் வாகீசர்க்கின்பமன்றித்
துன்பமென்பதில்லையேசோமேசா—நன்காம்
பெரிதினிதுபேதையார் கேண்மைபிரிவின்கட்
பீழைதருவதொன்றில். (அச)

## புல்லறிவாண்மை.

இல்லான்மறுப்பவுஞ்சென் றேகிச்சலந்தரன்றான்
றொல்வலிபோய்மாண்டனனே சோமேசா—வல்லமையால்
ஏவவுஞ்செய்கலான் றான்றேறானவ்வுயிர்
போஒமளவுமோர்நோய். (அரு)

## இகல்.

எத்திறத்துங்கெட்டா னிகலாற்சுயோதனன்சீர்
துய்த்தனனட்டாற்றருமன் சோமேசா—மொய்த்த
இகலானாமின்னாத வெல்லாநகலானா
நன்னயமென்னுஞ்செருக்கு. (அசு)

## பகைமாட்சி.

ஏனையர்பால்வெற்றிகொண்டா னின்றோடெதிர்த்திறந்தான்
றாநறும்பூவாளியான்சோமேசா—மான
வலியார்க்குமாறேற்ற லோம்புகவோம்பா
மெலியார்மேன்மேகபகை. (அஎ)

## பகைத்திறந்தெரிதல்.

நந்திகலம்பகத்தான் மாண்டகதைநாடறியுஞ்
சுந்தரஞ்சேர்தென்குளத்தூர்ச்சோமேசா—சந்ததமும்
வில்லேருழவர் பகைகொளினுங்கொள்ளற்க
சொல்லேருழவர்பகை. (அஅ)

## உட்பகை.

மாற்றார்முடியும் வளமையுங்கொண்டேகநலந்
தோற்றான்வழுதிமகன்சோமேசா—வாற்றலிலா
எட்பகவன்ன சிறுமைத்தேயாயினு
முட்பகையுள்ளதாங்கேடு. (அகூ)

## பெரியாரைப்பிழையாமை.

கொன்படைகணீறாகக் கோசிகனார்சாபத்தாற்
றுன்பமுற்றார்நால்வேந்தர்சோமேசா—வின்புதவும்
ஏந்தியகொள்கையார் சீறினிடைமுரிந்து
வேந்தனும்வேந்துகெடும். (கூ0)

## பெண்வழிச்சேறல்.

கற்பின்மையில்லாள்பாற் கண்டுமயலுற்றழிந்தான்
சொற்புண்டரீகாக்கன்சோமேசா—பொற்பெண்ணி
இல்லாள்கட்டாழ்ந்தவியல்பின்மையெஞ்ஞான்று
நல்லாருணாணுத்தரும் (கூக)

## வரைவின்மகளிர்.

வேண்டுமுருப்பசியைப் பார்த்தன்வெறுத்தனனே
தூண்டுமறைப்பரியாய்சோமேசா—யாண்டும்
பொதுநலத்தார்புன்னலந் தோயார்மதிநலத்தின்
மாண்டவறிவினவர். (கூஉ)

## கள்ளுண்ணாமை.

தக்கன்பான்ஞானத் ததீசியுபதேசமெல்லாந்
தொக்கதனாலானதென்னே சோமேசா—மிக்குக்
களித்தானைக்காரணங் காட்டுதல்கீழ்நீர்க்
குளித்தானைத்தீத்துரீஇயற்று. (கூ௩)

### சூது.

முற்பணயத்தாற்பின்னு மூண்டிழந்தார்சூதரொடு
சொற்படுஞ்சூதாடினோர்சோமேசா—வற்பமாம்
ஒன்றெய்திநூறிழக்குஞ் சூதர்க்குமுண்டாங்கொ
னன்றெய்திவாழ்வதோராறு. (கூச)

### மருந்து.

நல்லதிலகவதி யார்மொழியைநம்பிவெந்நோய்
சொல்லரசர்தீர்ந்துய்ந்தார்சோமேசா—புல்லியதன்
நோய்நாடிநோய்முத னாடியதுதணிக்கும்
வாய்நாடிவாய்ப்பச்செயல். (கூரு)

### குடிமை.

மங்கலியம்விற்றும் வழாதுபணிசெய்துவந்தார்
துங்கமறைதேர்கலயர்சோமேசா—வங்கண்
வழங்குவதுள்வீழ்ந்தக் கண்ணும்பழங்குடி
பண்பிற்றலைப்பிரிதலின்று. (கூசா)

### மானம்.

அச்சுவத்தாமாப்பட்டா னென்னவமர்துறந்தான்
றுச்சிறுரோணனென்பான்சோமேசா—நச்சு
மயிர்நீப்பின்வாழாக் கவரிமாவன்ன
ருயிர்நீப்பர்மானம்வரின். (கூஎ)

### பெருமை.

தண்டியடிகளிரு தாளிணைபேணாதழிந்தார்
தொண்டராம்பேய்ச்சமணர்சோமேசா—மிண்டுஞ்
சிறியாருணர்ச்சியு ளில்லைப்பெரியாரைப்
பேணிக்கொள்வேமென்னுநோக்கு. (கூஅ)

### சான்றாண்மை.

வன்மைச்சுயோதனற்கும் வானோர்சிறைமீட்டான்
றன்மைநெறித்தருமன்சோமேசா—பன்முறையும்
இன்னாசெய்தார்க்கு மினியவேசெய்யாக்கா
லென்னபயத்ததோசால்பு. (கூகூ)

### பண்புடைமை.

உன்பணிக்கென்றோநிலகாச் செல்வமுநதியுறத்
துன்பமுற்றார்நால்வணிகர்சோமேசா—வன்புமிகும்
பண்பிலான்பெற்ற பெருஞ்செல்வநன்பால்
கலந்தீமையாற்றிரிந்தற்று. (க00)

## நன்றியில்செல்வம்.

எல்லாமறையவர்க்கீந் தேவறியன்போலானை
சொல்லாருங்கீர்த்திருக்குச்சோமேசா—நல்ல
சீருடைச்செல்வர் சிறுதுனிமாரி
வறங்கூர்ந்தனையதுடைத்து. (௪0௪)

## நாணுடைமை.

புண்ணோடுயிர்வாழ நாணியுயிர்போக்கினான்
றுண்ணெனவேவாலிமுன்னஞ்சோமேசா—வெண்ணியிடில்
நாணாலுயிரைத் துறப்பருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார்நாணாள்பவர். (௪0௫)

## குடிசெயல்வகை.

மற்றிருதராட்டிரன்சந் தானமெலாமாய்ந்ததே
சுற்றுநீர்த்தென்குளத்தூர்ச்சோமேசா—பற்றும்
இடுக்கண்கால்கொன்றிட வீழுமடுத்தூன்று
நல்லாளிலாதகுடி.* (௪0௬)

## உழவு.

வேள்வித்தொழிற்கு முழுதொழின்முன் வேண்டுமால்
சூழிசூழ்தென்குளத்தூர்ச்சோமேசா—வாழும்
உழவினார்கைம்மடங்கி னில்லைவிழைவதூஉம்
விட்டேமென்பார்க்குநிலை. (௪0௭)

## நல்குரவு.

நற்றருமன்வெற்றியினை நாடிவிராடனெதிர்
சொற்றமொழிசோர்ந்ததேசோமேசா—கற்றறிவால்
நற்பொருணன்குணர்ந்து சொல்லினுநல்கூர்ந்தார்
சொற்பொருள்சோர்வுபடும். (௪0௮)

## இரவு.

கஞ்சாறர்சோபனப்பெண் கூந்தல்கடிதளிக்குந்
துஞ்சுமகிழ்ச்சிகொண்டாய்சோமேசா—நெஞ்சின்
இகழ்ந்தெள்ளாதீவாரைக் காணின்மகிழ்ந்துள்ள
முள்ளுளுவப்பதுடைத்து. (௪0௯)

## இரவச்சம்.

எண்ணெயிரப்பஞ்சியுட லேவருத்தித்தீபமிட்டார்
துண்ணென்கணம்புல்லர்சோமேசா—கண்ணியிடில்
ஆவிற்குநீரென்றிரப்பினுநாவிற்
கிரவினிளிவந்ததில். (௪0௰)

## கயமை.

ஏற்றதுரோணனையன் றெள்ளித் துருபதன்பின்
றோற்றுவிசயற்களித்தான் சோமேசா—போற்றிடினும்
ஈர்ங்கைவிதிரார் கயவர்கொடிறுடைக்குங்
கூன்கையரல்லாதவர்க்கு. (௧0அ)

## தகையணங்குறுத்தல்.

வாய்ந்ததமயந்தியுரு மாணலங்கண்டின் புற்றான்
றோய்ந்தபுகழாருநளன் சோமேசா—வாய்ந்துணாக்கின்
உண்டார்கணல்ல தடுநறாக்காமம்போற்
கண்டார்மகிழ்செய்தலின்று. (௧0௯)

## குறிப்பறிதல்.

காங்கேயன் வேண்ட வெறுத்துரைத்தாள் காணவர்பின்
றாங்காவலாக்குளத்தூர்ச் சோமேசா—வாங்கண்
உறாஅதவர்போற் சொலினுஞ்செறாஅர்சொ
லொல்லையுணரப்படும். (௧௧0)

## புணர்ச்சிமகிழ்தல்.

மெய்த்தவத்தைக்காசிபனும் விட்டொழிந்துமாயைபாற்
சந்தமனம்வைத்தானே சோமேசா—வித்தலத்தில்
தாம்வீழ்வார்மென்றோட் டுயிலினினிதுகொ
றாமரைக்கண்ணானுலகு. (௧௧௧)

## நலம்புனைந்துரைத்தல்.

ஈன்றுன் றிலோத்தமையை யிச்சிக்கிலாங்கவண்மெய்
தோன்றுமெழிலென்சொல்வேன் சோமேசா—வான்ற
முறிமேனிமுத்த முறுவல்வெறிநாற்றம்
வேலுண்கண்வேய்த்தோளவட்கு. (௧௧௨)

## காதற்சிறப்புரைத்தல்.

சானடந்துஞ்சீதைதலைப் பாற்களித்தான்பின்னயர்ந்தான்
றாசீரயோத்தியர்கோன் சோமேசா—வானதுறல்
வாழ்தலுயிர்க்கன்ன ளாயிழைசாத
லதற்கன்னணீங்குமிடத்து. (௧௧௩)

## நாணுத்துறவுரைத்தல்.

சாமபிகவுழந்துந் தூதைக்கடிந்துவிட்டாள்
சோமனுதற்பாவைசோமேசா—வாமே
கடலன்னகாம முழந்துமடலேறாப்
பெண்ணிற்பெருந்தக்கதில். (௧௧௪)

### அலரறிவுறுத்தல்.

ஓர்நாளகலியையை வேட்டின்றமும்பரிறை
சோராப்பழிபூண்டான்சோமேசா—வாராயிற்
கண்டதுமன்று மொருநாளலர்மன்னுந்
திங்களைப்பாம்புகொண்டற்று. (கசரு)

### பிரிவாற்றாமை.

வாழ்விழந்தவின்னலினும் வாசவர்கோன்மிக்குறொர்நான்
சூழ்சசியைமுன்பிரிந்துசோமேசா—வீழ்வார்கட்
கின்றுதினனில்லூர் வாழ்தலதனினு
மின்றுதினியார்ப்பிரிவு. (கசசு)

### படர்மெலிந்திரங்கல்.

இன்பமுற்றான்மாயைதோ டோய்ந்துபின்னெண்மடங்கு
துன்பமுற்றான்காசிபன்றான்சோமேசா—வன்புடையார்க்
கின்பங்கடன்மற்றுக் காமமஃதடுங்காற்
றுன்பமதனிற்பெரிது. (கசஎ)

### கண்விதுப்பழிதல்.

நாதையன்றித்தானேதுச் சந்தனைச்சேர்ந்தின்னலுற்றாள்
குதில்சகுந்தலைதான்சோமேசா—வோதிற்
கதுமெனத்தாநோக்கித் தாமேகலுழு
மிதுநகத்தக்கதுடைத்து. (கசஅ)

### பசப்புறுபருவரல்.

கேழ்வரைச்சேடியர்சொல் கீழ்மைக்கியற்படுஞ்சொற்
சூழ்பமின்னார்துன்பத்துஞ்சோமேசா—தாழ்வில்
பசப்பெனப்பேர்பெறுத னன்றேநயப்பித்தார்
நல்காமைதூற்றாரெனின் (கசகூ)

### தனிப்படர்மிகுதி.

பன்முனிவர்பன்னியர்கள் பண்டுன்னைக்காமுறவுந்
துன்னியருள்செய்திலையேசோமேசா—வன்னதே
நாங்காதல்கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல்கொள்ளாக்கடை (கரு0)

### நினைந்தவர்புலம்பல்.

தன்னையேயுன்னுந் தமயந்திமாதைநளன்
றுன்னார்போனீத்திருந்தான்சோமேசா—வன்னதே
தந்நெஞ்சத்தெம்மைக் கடிகொண்டார்நாணார்கொ
லெந்நெஞ்சத்தோவாவரல். (கருக)

## கனவுநிலையுரைத்தல்.

அல்லமனை மாயை கனவிலணைந்ததனாற்
சொல்லரியவின் பமுற்றாள்சோமேசா—நல்ல
நனவிற்கண்டதூஉ மாங்கேகனவுந்தான்
கண்டபொழுதேயினிது. (கஉஉ)

## பொழுதுகண்டிரங்கல்.

வானவர்கோன்காமநோய் மாலைவரமிக்கதே
தூநீர்ப்புளினத்திற்சோமேசா—வானதே
காலையரும்பிப் பகலெல்லாம்போதாகி
மாலைமலருமிந்நோய். (கஉங)

## உறுப்புநலனழிதல்.

ஓதாநாளோதுகலை யொத்திளைத்தாள்சீதையென்றன்
சூதாராவான்மீகிசோமேசா—கோதில்
பணைநீங்கிப்பைந்தொடி சோருந்துணைநீங்கித்
தொல்கவின்வாடியதோள். (கஉச)

## நெஞ்சொடுகிளத்தல்.

அன்பன்றுறப்பவு நாளாஇனிதேடித்
துன்பந்தலைக்கொண்டாள்சோமேசா—முன்பே
இருந்துள்ளியென்பரித னெஞ்சேபரிந்துள்ளல்
பைதனோய்செய்தார்கணில். (கஉரு)

## நிறையழிதல்.

கோற்றொடிவிற்பாய்போன்று கூடல்வணிகமின்னார்
தோற்றுநிறையழிந்தாய்சோமேசா—சாற்றுங்காற்
பன்மாயக்கள்வன் பணிமொழியன்றோநம்
பெண்மையுடைக்கும்படை. (கஉசா)

## அவர்வயின்விதும்பல்.

சந்திரசேனன்வரவு நோக்கியுயிர்தாங்கினளாற்
சுந்தரச்சீமந்தினிதான்சோமேசா—முந்தும்
உரனசைஇயுள்ளந் துணையாகச்சென்றார்
வரனசைஇயின்னுமுளேன். (கஉஎ)

## குறிப்பறிவுறுத்தல்.

சங்கிலிபாலாரூர ரூழிகணந்தானாகத்
துங்கமிகுமன்புவைத்தார்சோமேசா—பொங்கப்
பெரிதாற்றிப்பெட்பக் கலத்தலரிதாற்றி
யன்பின்மைசூழ்வதுடைத்து. (கஉஅ)

# ௨௰ குளத்தூர்ச்சோமேசர்முதுமொழிவெண்பா.

## புணர்ச்சிவிதும்பல்.

யோசனைகந்தியினைக் காண்டலும்பேரோகைகொண்டான்
றாசனையாச்சந்தனுத்தான்சோமேசா—நேசமுடன்
உள்ளக்களித்தலுங் காணமகிழ்தலுங்
கள்ளுக்கில்காமத்திற்குண்டு. (௮௰௯)

## நெஞ்சொடுபுலத்தல்.

விக்கிரமன்மற்றொருத்தி வேட்கையுற்றுந்தேடினொர்தா
டொக்கவுருட்பசிமின்சோமேசா—வொக்கும்
அவர்நெஞ்சவர்க்காதல் கண்டுமெவனெஞ்சே
நீயெமக்காகாதது. (௯௰)

## புலவி.

கொண்டபரவை கொடும்புலவியெல்லாம்வன்
றொண்டர்க்குப்பேரழகேசோமேசா—தண்டா
நலத்தகைநல்லவர்க் கேளர்புலத்தகை
பூவன்ன கண்ணாரகத்து. (௯௰௧)

## புலவிநுணுக்கம்.

சீவகன்மஞ்சரியைத் தாழ்த்துவைப்பச்சீறினளே
தூவாய்க்குணமாலைசோமேசா—வாவலையே
தன்னையுணர்த்தினுங் காயும்பிறர்க்குநீ
ரிந்நீரராகுதிரொன்று. (௯௰௨)

## ஊடலுவகை.

காயும்புலவியில்வன் றொண்டர்கடைப்பட்டுத்
தோயுமின்பின்மேலானார்சோமேசா—வாயுங்கால்
ஊடலிற்றோற்றவர் வென்றாரதுமன்னுங்
கூடலிற்காணப்படும். (௯௰௩)

குளத்தூர்ச் சோமேசர்

முதுமொழிவெண்பாமுற்றியது.

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.



# குளத்தூர்ப்

# பதிற்றுப்பத்தந்தாதி.



## காப்பு.

பாமாலைக்குறுமணமாம்புகழ்க்குளந்தாபுரிப்பதிற்றுப்பத்தந்தாதித்
தேமாலையெம்பெருமான்றிருவடியிற்புனையவருள்செழித்துநல்கு
மாமாயைத்தொடராறுத்துப்பசுபோதக்கவளமுண்டுமதமேல்கொண்டு
காமாதித்தறிபிடுங்கிவினைக்கடலையுழக்கிவருகளபந்தானே.

## நூல்.

சீருங்கல்வியுஞ்செல்வமுஞானமும்
பாரும்விண்ணும்பரிக்குமிறைமையுஞ்
சாருந்தென்குளந்தாபுரிமேவிய
காருண்கண்டனைக்கைதொழுவார்கட்கே. (க)

கட்டறுத்துக்கரிசறுமானந்த
நிட்டையீதெனக்காட்டிமுன்னிற்குமாற்
சிட்டர்சூழுந்திருக்குளத்தூரினு
ளட்டமூர்த்தியுமாகியவண்ணலே. (உ)

அண்ணலைக்குளத்தூரினமுதினைக்
கண்ணினுண்மணியைக்கனிதேறலை
யெண்ணியெண்ணியிராப்பகலேத்தநான்
பண்ணுமெய்த்தவமென்கொலிப்பாரிலே. (ங)

பாரும்விண்ணும்பவனனுமங்கியு
நீரும்வேரறநீக்கிப்பரத்தினி
லாருமன்பர்க்ககவிளக்காயினன்
யாருமேத்துங்குளந்தையிலீசனே. (ச)

ஈசனேகுளத்தூருமென்னெஞ்சமும்
வாசமாகமகிழ்ந்தருள்சோதியே
நீசனேனுக்கும்வேண்டுநிரந்தரம்
பாசமுன்றன்பதாம்புயத்தாகவே. (௫)

ஆகமங்களருமறையாவையு
மேகமாய்த்துதித்தேத்துமறிவரும்
யோகமூர்த்தியென்பார்குளத்தூரினு
ளைகரேத்தநடிக்கும்பிரானையே. (௬)

பிரானென்றுன்னிப்பெருங்குளத்தூருறை
புராணன்றன்னடிபோற்றவறிகிலார்
தராதலத்துடல்பெற்றதவப்பயன்
விராவலின்றிவிளிதருமூமரே. (௭)

மருவுமைம்புலவஞ்சகர்தங்களாற்
றெருமருஞ்சிறியேனையஞ்சேலெனு
வருளும்வார்த்தைக்கலந்தனனையனே
யொருகுளந்தையுறையுமெய்ச்சோதியே. (௮)

சோமசேகரன்றொல்குளத்தூருறை
சோமநாதனெவர்க்குந்தொடர்வருஞ்
சோமலோகன்றுணையடிபோற்றினச்
சோமனுதுதூரக்குந்திருக்கையே. (௯)

திருக்குளந்தைவருஞ்செயலார்கடைத்
திருக்குளந்தையலையிடஞ்சேர்த்தக
திருக்குளந்தைவிழியவன்சேர்விடந்
திருக்குளந்தைதெரிசித்தயாங்களே. (௧௦)

வேறு.

யாதுமறிவொன்றில்லாதவெனையும்பொருளாத்தடுத்தாண்ட
மாதுபாகன்றிருக்குளத்தூர்வரதன்கருணைப்பெருக்கத்தை
யோதியோதியுன்னுதொறுமுள்ளமுருகுமயிர்சிலிர்க்குங்
காதல்பெருகும்புளகிக்குங்கண்ணீர்ததும்புங்கடியேற்கே. (௧௧)

கடியாரிதழிச்சடைமுடியுங்கண்கண்மூன்றுங்குறாகையும்
வடியார்சூலத்தனிப்படையும்வரைநேர்புயங்களொருநான்கும்
பொடியார்நுதலுந்திருமுகத்தின்பொலிவுங்காட்டியுளம்புகுந்தா
னடியார்வழுத்தத்திருக்குளத்தூரமருங்கருணைப்பெருமானே. (௧௨)

மானேர்நோக்கின்மடநல்லார்மாயவாழ்வின்மதிமயங்கி
யானுவிடும்மைக்கடலழுந்துமடியேன்றனக்கோர்புணையாகு
மூனேயுயிரேயுணர்வேயென்றெருக்கக்கலந்துசிவானந்தத்
தேனேயான திருக்குளத்தூரிறைவன்கமலச்சேவடியே. (௧௩)

சேவார்பெருமான்றிருக்குளத்தூர்சேரப்பெற்றேன்றிருப்புகழை
நாவால்வாழ்த்தக்கைகுவிக்கமனத்தானினைக்கநறுந்தேனூர்
பூவானீரால்னுதினமும்போற்றப்பெற்றேனுங்கவனு
மாவாவெனவந்தாண்டருளப்பெற்றேன்பிறவியற்றேனே. (௧௪)

அற்றூர்க்கற்றபரம்பொருளையமலானந்தப்பெருவாழ்வைச்
செற்றூர்புரங்கடமூளச்செய்தகுளத்தூர்ப்பெம்மானைச்
சற்றுகிலுநீநினைந்தறியாய்சழங்கன்மனனேயமன்றூதர்
பற்றுநிற்கவரின்வறிதுபரிவாயேதுபுரிவாயே. (௧௫)

வாய்மையொழுக்கந்தவஞ்சீலம்வணக்கம்பொறுமையறிவடக்கந்
தூய்மைதவருமெய்யடியார்தொழும்புக்கிரங்கியேனோர்க்குச்
சேய்மையவனாய்த்திருக்குளத்தூர்வளைப்பின்வைகுஞ்சிவபெருமா
னாய்மேற்றவிசிட்டாங்கெனையுநயந்துவந்தாட்கொண்டானே. (௧௬)

கொண்டான்பிரமன்முடைத்தலையைக்குடங்கைத்தலத்துக்குறுமூரல்
விண்டானவுணர்புரமூன்றுமொருங்குவேவநுதல்விழியாற்
கண்டான்காமனுடல்பொடியாக்கடிபூம்பொழில்சூழ்குளத்தூரிற்
றண்டாதுறையும்பெருங்கருணைத்தகைசேர்ஞானப்பெருவாழ்வே. ()

வேலையலைபோற்பிறந்திறந்துமெலியாவண்ணஞ்சிவஞான
நூலையுணர்ந்துமனோலயமாய்நுவலற்கரியபரானந்தப்
பாலைநுகர்ந்துவாதனையுங்கழன்றுவாழப்பணிப்பதென்றோ
சோலைபுடைசூழ்திருக்குளத்தூர்ச்சோதிப்பொருளாந்தொல்லோனே.

தொல்லைநாளேநமைவணங்காத்துட்டனிவனென்றுன்னூது
வல்லையணைந்தாட்கொள்ளாயேன்மற்றோர்துணைவேறெனக்குளதோ
வல்லைநிகருங்கருஞ்சுரிமென்கூந்தல்முதவல்லியெனு
முல்லைநகைவாணுதல்பாகாமுறைதேர்குளத்தூருறைவோனே. (௧௯)

உறையுளாகத்திருக்குளத்தூருறையும்பெருமான்பதாம்புயத்தை
யிறையும்வழுவாதகங்குழையவேத்திப்பரசுமடியவர்க்கு
முறையேதொண்டுசெய்திருக்குமுடியாப்பேறுதனைப்பெற்றுக்
குறையாவின்பப்பெருங்கடலிற்குளித்தேனென்றுங்களித்தேனே ()

## வேறு.

களிறனைவைந்தும்வயமாவடக்கியொருபாலிருந்துதனிவாய்
வளியூடெழுப்பியிடைபிங்கலைக்கண்மருவாதவண்ணமொருவித்
தெளிவானகுண்டலிநிசத்தியோடுசெறியிந்துவட்டமதுவுண்
டொளியாயுறங்கவருளுங்குளந்தையுடையான்கடைக்கணருளே. ( )

அருமேனிகொண்டுமுருமேனிகொண்டுமருள்கூரிரண்டுமருவுந்
திருமேனிகொண்டுமலநோய்துரந்துசிறியேங்களுய்யுமுறையாற்
கருமேனிநீத்தகருணைப்பெருக்கையளவிட்டியாவரறிவார்
செருமேனிமிர்ந்தமதனற்கடந்ததிருவார்குளந்தைமுதலே. (௨௨)

முதிரும்பல்கோடிசமயப்பிணக்கர்முறைகெட்டுழன்றுமயலா
யதுதெய்வமென்றுமிதுதெய்வமென்றுமமைவுற்றிடாமலலைவார்
மதநம்பியானுமருளாமலுண்மைவழிகாட்டியாண்டுகொளுவாய்
கதமொன்றியானையுரிபோர்த்துகந்தகமலாகரத்துநிறைவே. (௨௩)

நிறைவாகியெங்குமசைவின்றியன்பர்நினைவூடெழுந்தமுதலே
மறைநான்குமின்னுமுறையிட்டுழன்றுமறியப்படாதவரதா
சிறைநீருடுத்தமதில்சூழ்குளந்தைநகர்வாழவந்தசிவமே
யிறைவாவரங்கடருசோமநாதவெனவேத்தெடுப்பதெனதே. (௨௪)

எனதல்லதொன்றையெனதென்றுகொண்டுமருளான்மயங்குமெளியே
னுனதன்பர்தங்கள்பணிசெய்துமெய்ம்மையுணருந்திறத்தையருள்வாய்
கனமொன்றுசோலைபுடைசுற்றுகின்றகவினார்குளந்தைநகராய்
மனமொன்றுபட்டுநினைவோர்தமக்குவெளிநின்றஞானவடிவே. (௨௫)

வேலிற்றிகழ்ந்துகயலிற்பிறழ்ந்துவிடமொப்பவெப்பமருவிப்
பாலிற்றெளிந்துபிணையைத்துரத்தியரிசூழ்பரந்துபடைவேள்
கோலிற்பயின்றுகுமிழின்மறிந்துகுழையூடுசெல்லும்விழியார்
மாலிற்படாதுன்னடியேவழுத்தவருளாய்குளந்தையரனே. (௨௬)

அருமந்ததேவர்பலர்கூடிவேலையமுதங்கடைந்தபொழுதின்
வெருவந்துவீயவதன்மேலெழுந்தவிடமுண்டுகந்தவிமலன்
பருவங்கள்கண்டுகுருமேனிகொண்டுகதியுய்க்குமாதிபகவன்
மருவுங்குளந்தைநகரம்வணங்கவெதுபோலுமுன்செய்தவமே. (௨௭)

தவமேதுமின்றிமுழுமூடனாகிமயலாலுழன்றுதனாமே
லவமேபுரிந்துகலரோடிணங்கியுடலோம்பிமாளுமடியா
னிவனாகுமென்றுபழியாதிரங்கியெனையாண்டுகோடல்கடனே
நவமார்குளந்தைநகராயரங்கினடமாடுமுக்கண்மணியே. (௨௮)

மணிகண்டனென்றுமுமைபங்கனென்றுமறையோதியென்றுமழுமா
னணிகொண்டசெங்கையிதழாளனென்றுமடியார்க்குநல்லனெனவும்
பணிகொண்டவேணிமுடியான்குளந்தைபதியாம்விருப்பனெனவுந்
தணிவொன்றுசிந்தையொடுபோடுமென்பர்சரணென்றலைக்குமலரே. (௨௯)

மலர்மங்கைகேள்வன்மலராசனத்தன்மருவும்பரோலமிடவு
மலரங்கையேந்திமுனிவோர்களெங்குமலமந்துநாடியிடவுங்
கலகங்கள்கொண்டுமறைநான்குநின்றுகதறித்திரிந்தலையவு
நிலமென்குளந்தைநகராளனெனக்குமெளிவந்தவாறிதெவனோ. (௩௰)

வேறு.

எவ்வநோய்களுமிடும்பையுமகந்தையுமிழிபு
மௌவியப்புலனெஞ்சமுமனைத்துநீங்கிடுமா
னவ்வியேந்தியநறுமலர்க்கையினான்கருணைப்
பௌவமானவன்குளந்தைமாநகர்பணிபவர்க்கே. (௩௧)

பவளக்காடுமொய்த்தனையசெவ்வேணியும்பதியுந்
தவளத்திங்களுங்கீற்றுமெண்புயங்களுந்தறுகட்
கவளத்தோலுரிவீரமுங்காட்டியெம்பெருமான்
குவளைப்பொய்கைசூழ்குளந்தையிற்குடியிருந்தனனே. (௩௨)

குடியிருப்பதென்னெஞ்சகம்பூண்பதுகொடும்பாம்
படிமிதித்துநின்றாடிடஞ்சுடுவனமணியும்
பொடியுடுப்பதுதோலெனிற்குளந்தைமாபுரிவா
ழடிகளைத்தொழுந்தெய்வமென்றார்மதிப்பவரே. (௩௩)

மதியிலார்சிலரிரண்டுகொற்பசுக்களின்மனிதர்
துதிசெயாதிகழ்கின்றதாற்சிறுமையோதுதியாற்
கதியைவேண்டிமாலயன்முதற்கடவுளர்வழுத்திப்
பதியுமன்பினாற்பணிசெயுங்குளந்தையெம்பரற்கே. (௩௪)

பரந்துவானமுந்திசைகளுங்கணத்தினிற்படர்ந்து
சுரந்துசெல்லுமென்னெஞ்சினைக்குவித்துநின்கழற்கீழ்
நிரந்தவன்பினாலிருத்திடநிறுத்துநாளுளதோ
விரந்தவன்பருக்கெளியனாங்குளந்தைவாழிறையே. (௩௫)

இறையுநீங்கிடாவானந்தவெள்ளமாமின்பத்
துறையிலேபடிந்தெனைமறந்ததீதமாந்தொன்மை
நிறைவுவேண்டினேனையனேநினைந்துவேண்டினர்க்குக்
குறைவிலாவரங்கொடுத்தருள்குளந்தைநாயகமே. (௩௬)

நாயினுக்குணவாகுமிவ்வுடம்பினைநானே
பேயெனச்சுமந்திதுவரையெய்த்தனன்பிரியா
நேயனேயினியாற்றிலன்குளந்தைவாழ்நிமலா
காய்களிற்றுரிப்போர்வையாயுனக்கடைக்கலமே. (௧௭)

அடைக்கலம்புகுந்தேனுனக்கடியனேன்றன்னைப்
புடைத்துவெந்நரகிடுவையோபுனிதரானவர்க்குக்
கிடைக்குநின்னடிக்கீழிருத்திடுவையோவறியேன்
மடைக்கணித்திலஞ்சொரிதிருக்குளந்தைவாழ்முதலே. (௧௮)

வாழ்வைமெய்யெனநம்பிநின்னடியிணைமறந்து
தாழ்வுசெய்திடுஞ்சிறியனேனாயினுந்தக்கோய்
சூழிசூழ்திருக்குளந்தைவாழ்சோமநாயகனே
யாழ்வுறாதெடுத்தாள்வதுன்னருளினுக்கழகே. (௧௯)

அழிதரும்புலையுடற்பொறைதாங்கிநின்றலைவீர்
கெழுவுநன்னெறியுமக்கியானுணர்த்துவன்கேண்மின்
றொழுமினெம்பிரானடியிணையேத்துமின்சூழ்மி
னெழுமின்றென்குளத்தூரினைச்சேருமினினிதே. (௨௰)

## வேறு.

இனியவனுலகுக்கெல்லாமெம்மனோர்பிறவித்துன்பத்
துனிதவிர்த்தருளவேண்டித்தோளொருநான்குஞ்செவ்வாய்க்
கனிமொழியிடமுங்காளகண்டமுங்கண்கண்மூன்றுங்
குனிமதிக்கீற்றுங்காட்டிக்குளந்தையிற்குடிகொண்டானே. (௨௧)

கொண்டதுவிடாதுபற்றிக்குருமொழிதவாதுநின்று
தொண்டுசெய்யடியார்ஞானச்சுடரினைத்தீண்டுமுள்ளப்
புண்டரீகங்கள்கோயிலென்பராற்புடைசூழ்செல்வத்
தண்டலைக்குளந்தைவைப்பிற்றண்ணருளாளனார்க்கே. (௨௨)

ஆளரியேறேபோலவைம்புலக்கரிக்குழாத்தைக்
கோளறமுருக்கிஞானக்குளைகடல்படிந்துசெய்ய
தாளதாமரைக்கீழ்வைகத்தண்ணளிசுரந்தெனுள்ளே
வாளொளிமயமாய்நின்றான்குளந்தையின்மருவுந்தேவே. (௨௩)

மருமலர்மாலைசூட்டேன்வாயினாற்றுதிக்கமாட்டே
னிருவினைப்பிணக்கைவீட்டேனிதயத்திலறிவைநாட்டேன்
பெருகுமெய்த்தவங்களீட்டேன்பேயனேனுய்யும்வண்ண
மருளுமாறெவனோசொல்லாயணிபொழிற்குளந்தையானே. (௨௪)

யாவனங்கங்கேயெள்ளுக் கெண்ணெய்போனிறைந்துநின்றான்
யாவன்முக்குணங்கடம்மின் மூவனாயீன்றபெம்மான்
யாவன்முத்தொழிலுமூவ ரியற்றிடப்பணித்தானந்தத்
தேவனேயெமையாட்கொள்ளக்குளந்தையிற்சிறந்துளானே. (சரு)

சிறந்ததோர்தெய்வமாவான்றிருக்குளத்தூரின்மன்னு
மறந்திகழ்விடையோனுதலாயவும்வேண்டுங்கொல்லோ
மறங்கிளர்புரமூன்றட்டஞான்றுமான்முதலாந்தேவர்
புறங்கிளர்கருவியாகிப்போந்தவாறறிந்துளார்க்கே. (சசு)

அறிவறியாமைநீத்தவறிவினையறிந்துவஞ்சம்
பிறிவுறத்துரியாதீதப்பேரின்பநிலையினென்றாய்ச்
செறிவுறும்வாழ்க்கையந்தோதிருக்குளத்தூரின்மன்னு
மிறைவனையிறையென்றன்னேரெப்படியெய்துவாரே. (சஎ)

வாரறத்தெழுந்துவீங்கிமதர்த்தடிகனத்துவெற்பைப்
போரினில்வென்றுமெள்ளப்புடைபரந்திறுமாந்தோங்கிச்
சீருறுகளபந்தோய்ந்தசெப்பிளங்கொங்கைபாகன்
சார்புகழ்குளந்தைவாணன்சரணமேசரணமாமே. (சஅ)

சரண்பிறிதில்லைநீயேதஞ்சமென்றடைந்தோர்தம்மை
முரண்படாவுண்மைகாட்டிமுத்திதந்தளிக்கவல்லோ
னரண்பயில்குளத்தூர்மன்னுமண்ணலேயன்றிநீர்சூழ்
திரண்டசீருலகந்தன்னிற்றேரினும்யாருளாரே. (சகூ)

உள்ளதுமிலதுமாகுமுருவமுமருவுமாகுங்
கள்ளமும்வெளியுமாகுங்கருணையுமறமுமாகும்
பள்ளமுமேலுமெங்கும்படரொளிப்பிழம்பாய்நிற்கும்
வள்ளலுந்தானேயாகுங்குளந்தையின்மருவுந்தேவே. (ருo)

வேறு.

மருவுமாணவக்குறும்பினைவேரறமாற்றியாநந்தத்தே [ற்றேன்
யொருமைபூண்டுநின்றிரண்டறக்கலந்துவாழுண்மையைப்பெறப்பெ
கருவிமேகமொத்திலங்கியகந்தரக்கடிபொழிற்குளந்தைக்கோன்
றிருவடித்துணைநெக்குநெக்கேத்திடுஞ்செய்தவப்பயனாலே. (ருக)

செய்தவப்பயனில்லவர்காண்பரோதிருக்குளத்தூர்மன்னு
மைதழைத்தகண்டப்பிராணியற்கையுமற்றவனடியார்க்கு
மெய்தழைப்பவந்தருள்புரிமுறைமையுவிளங்கிழையுமைகாணக்
கைதழைத்தவம்பலத்தினின்றாடிடும்பெருங்கருணையுந்தானே. (ருஉ)

தானலாதவிவ்வுடம்பினைத்தானெனத்தருக்கியிப்பிரபஞ்சத்
தீனவாழ்க்கையைவேட்டழிந்துழலுமிவ்வுயிருமற்றனைப்போல
வானபேரறிவுடைத்தெனக்கூறுவதறிந்தவர்க்கடாதன்றே
பேனவார்திரைத்தடங்கள்சூழ்குளந்தையிலமர்ந்தருள்பெருமானே. ()

மானமாயுடல்பொருளெனுமிவற்றொருமென்னுமாவியைக்கூட
ஞானதீக்கையினுனதெனக்கொடுப்பதுநயந்துணர்ந்திருந்தேயுந்
தேனலர்ந்தபூம்பொழிற்குளத்தூருறைசெல்வனேயிவ்வான்மா
வீனநீங்குதன்வயத்தனுந்தன்மையனென்பர்கள்சாலாரே. (௩௪)

சாலவும்பெரியவனுநீயல்லதுசாற்றின்வேறிலையென்றுஞ்
சாலவுஞ்சிறியதுமுயிரென்றும்வேதாகமமுதலெல்லாஞ்
சாலவோதுவதறிந்துமொப்புரைப்பவர்தன்மையையென்சொல்வேன்
சாலமேழையுஞ்சாய்த்தவன்றொழருவந்தனிக்குளத்தூரானே. (௩௫)

குளந்தைமாநகரமர்ந்தருள்கொழுந்திடுங்குழகனேயடியேனுக்
களந்தறிந்திடாப்பரமதப்பிணக்கினிலகப்படாதிருண்மாயை
பிளந்தநின்னடியாரடித்தொழும்பினிற்பிறழ்ந்திடாதொருஞான்றும்
வளந்தரும்புவிமீதினிற்பிறந்திடாவரங்கடந்தருள்வாயே. (௩௬)

அருள்பழுத்ததென்குளந்தைமாநகருறையண்ணலுக்கிடமாகுந்
திருவல்லந்திருவேகம்பமிடைச்சுரந்திருக்கச்சூர்திருமுல்லை
மருகல்காளத்தியொற்றியூர்வான்மியூர்மாகறல்வலிதாய
முருகன்பூண்டிபாசூர்திருக்கழுக்குன்றமுதுகுன்றம்வேற்காடே. (௩௭)

காளையாய்க்குளத்தூரமர்ந்தருளியகண்ணுதற்பெருமாற்குத்
தோள்களாயிரந்திருமுடியாயிரந்தொழில்களாயிரஞ்செய்ய
தாள்களாயிரம்விழிகளுமாயிரந்தானமாயிரம்பேரின்
கோள்களாயிரங்குணங்களாயிரமெனக்கூறுவருணர்ந்தோரே. (௩௮)

உணர்ந்துளோருளத்தகரபுண்டரீகமுந்துவாதசாந்தமுமும்பர்
வணங்குமாதித்தமண்டலநடுவுநான்மறைகளின்முடிவுஞ்சீ
ரிணங்குசோமலோகமுந்திருவம்பலத்திடமுந்தென்குளத்தூர்வாழ்
குணங்கடந்தவர்சிறப்பிடமாமெனக்கூறிடுமறைநூலே. (௩௯)

மறையவன்றலைமலர்ந்தகைத்தலத்தினுமாயவன்விழிப்போதை
யறைகழற்பதாம்புயத்தினுங்கண்டவருஞ்சிறைச்சுரும்பார்த்து
நறவுவாய்மடுத்துறங்குதாமரையினல்லோதிமம்விளையாடுஞ் [௪௦
சிறைசெய்நீர்க்குளத்தூர்ப்பிரான்றனக்குமேற்றெய்வமுண்டென்றே

## வேறு.

என்னேயடியேனிதுகாறுமெலிந்
தன்றேவெனைநோவதறிந்திலையோ
பொன்னேமணியேகுளந்தாபுரிவாழ்
மன்னேயெனையாளமதித்திலையோ. (௬௧)

மதித்துன்னடியேமனநெக்குருகத்
துதிக்குஞ்சிறியேன்றுயர்தீர்த்திலையே
யெதிர்த்துன்றனையேயிகழ்வார்குளத்தூர்ப்
பதிக்கன்புடையாய்பரமாநடரே. (௬௨)

பரமாநடர்நின்றுபழித்திடவே
தரமானபிறப்பையெடுத்தனனென்
வரனேகமலாகரமாநகர்வா
ழரனேயினியென்றருள்கூடுவதே. (௬௩)

கூடாரெதிரேசிறுமைக்குடியாய்
வாடாமலெனக்குவரந்தருவாய்
பீடார்புகழ்சேர்பெருந்தண்டகமா
நாடாள்கமலாகரநாயகனே. (௬௪)

கனலிற்படுபொந்தள்கடுத்திடநான்
றினமிப்படிநைவதுசித்தமதோ
வினியெத்திறமுன்னருளெய்துவனோ
புனிதக்கமலாகரபோதகனே. (௬௫)

தருமோபிறிதுன்சரணேசரணம்
புகுதுஞ்சிறியேன்புனல்சூழுலகோர்
நகுமாறுதிரிந்துநடுங்குவது
மிகுசீர்க்கமலாகரவிண்ணவனே. (௬௬)

விண்ணாடருமெண்ணரும்வித்தகனே
பெண்ணாணலியானபெரும்பொருளே
கண்ணார்கமலாகரநாயகனே
யண்ணாவெனையாளுவதுன்கடனே. (௬௭)

கடலார்விடமுண்டுகலங்கிமையோ
ரிடர்தீர்த்தவனென்றுனையேத்தினனே
னுடலால்வருதுன்பமொழித்தருள்வா
யடலார்கமலாகரவாண்டகையே. (௬௮)

கையுஞ்சிரமும்விழியுங்கழலு
மெய்யும்முனதாகவிதித்தருளாய்
செய்யுந்தடமுந்திருவும்புடைசூழ்ந்
துய்யுங்கமலாகரவுத்தமனே. (௬௯)

உத்திப்பணிபூண்டருளுத்தமனைப்
பத்திக்கெளிவந்தபரம்பொருளை
முத்திக்கமலாகரமுன்னவனை
யெத்திக்கினுமேத்தியிறைஞ்சுதுமே. (௭௰)

வேறு.

இறையவனேகுளத்தூரிலிருந்தருளும்பெம்மானே
முறைபிறழாவானந்தமுத்திநெறிதந்தருளி
நிறைவுடையமெய்யடியார்நீடுபெருந்திருக்கூட்டத்
துறையுளெனைச்சேர்த்தாயையென்சொல்லித்துதிப்பேனே. (௭௧)

துதிப்பதற்குவாயமைத்தாய்சூழ்வதற்குத்தாளமைத்தாய்
மதிப்பதற்குமனமமைத்தாய்வணங்குதற்குத்தலையமைத்தாய்
கதிப்பதற்குநூலமைத்தாய்கடிக்குளத்தூரமர்ந்தறிவி
னுதித்தவுனக்கடியேங்களுதவுவதென்கைம்மாறே. (௭௨)

மாறுபடாப்பெருங்கருணைவாரிதியாய்நிறைந்திருந்து
மாறுவகைச்சமயத்துமவ்வவர்கட்கவ்வவையா
நீறுபுனையடியார்க்குநின்மலப்பேரொளிமயமாந்
தேறுமவரகத்தினிற்குந்திருக்குளந்தைப்பதியானே. (௭௩)

பதிதொறுஞ்சென்றேத்திப்பரகதிக்குவழிதேடேன்
மதியுடையநின்னடியார்வழித்தொண்டின்முறைநில்லேன்
றுதிபெருகுந்தென்குளத்தூர்ச்சுடர்க்கொழுந்தேயடியேனை
யதிகமாந்தொழும்பேற்றியாட்கொள்வதெவ்வாறே. (௭௪)

எவ்வாற்றானுய்ந்தாய்ந்துபார்த்திடினுமெயின்மூன்றிற்
றெவ்வாற்றுந்தொழில்கடந்துதிருக்குளத்தூரமர்ந்தருளி
யவ்வாற்றைமுடிக்கணிந்தவற்புதனேயல்லாம
லிவ்வாற்றானிதுதெய்வமெனப்பிறிதுகாணேனே. (௭௫)

காண்கின்றகண்ணொளியுங்கதிரொளியுமெனக்கலந்து
பூண்கின்றவதீதநிலைபுலையேற்குங்கிட்டுவதோ
பாண்கொண்டமதுரமொழிப்பணையமுதவல்லியொடு
மாண்பொன்றுதிருக்குளத்தூர்மன்னியசீர்மறைப்பொருளே. (௭௬)

பொருப்பனையனருந்தவத்தாற்புவிதழைப்பவின்றெடுத்த
திருப்பனையினுடன்குளத்தூரமர்ந்தருளிச்செங்கரத்து
நெருப்பனையினக்குமணிநீள்சடைமேலறுகணியும்
விருப்பனையன்பால்வணங்கார்மெய்யுனையைவேண்டேனே. (எஎ)

வேண்டாதகொடுந்தக்கன்வேள்வியகத்துடனிருக்க
மூண்டார்கள்பட்டதெல்லாந்தெரிந்துணர்ந்துமூதறிவோ
ராண்டானைத்திருக்குளத்தூரமர்ந்தருளியிருவருக்கு
நீண்டானையிகழ்வாரைநெஞ்சாலுமணுகாரே. (எஅ)

கார்கொண்டமணிமிடறுங்கருணைபொழிவிழிமூன்று
நீர்கொண்டசடைமுடியுநிலவொழுகுங்குறுநகையுஞ்
சீர்கொண்டமுகப்பொலிவுந்திருக்குளந்தைநகராள
னேர்கொண்டபதாம்புயமுமென்னுளம்விட்டகலாவே. (எகூ)

அகலாதசீர்க்குளந்தையணிமறுகிற்சோமேச
ரிகலார்வெள்விடையேறியிசைமுழங்கவிரவெல்லாம்
பகலாகவெழுந்தருளுந்திருவிழாப்பரிசுதனைத்
தகவாரத்தரிசித்தோர்தனையிலினிப்பிறவாரே. (அ0)

வேறு.

பிறப்பதுமிருப்பதும்பெரிதுநோயினு
விறப்பதுமேதொழிலென்னிலென்செய்வேன்
சிறப்புறுவளம்பயிறிருக்குளந்தையி
னறப்பெருஞ்செல்வியோடமர்ந்தவீசனே. (அக)

ஈசனேகுளந்தைவாழிறைவனேகொடும்
பாசமுந்தண்டமும்பற்றியந்தகன்
காய்சினத்துடன்வருங்காலைநீயலாற்
பேசிடினருந்துணைபிறிதொன்றில்லையே. (அஉ)

இல்லமுமக்களுமெழிலுஞ்சுற்றமுஞ்
செல்வமுங்கூடவந்திடுவதில்லையே
நல்லருட்குளந்தையினாதனைத்தொழு
தல்லலையறுத்திடுமறிவிலீர்களே. (அங)

களிம்புதோய்செம்பெனக்கலந்தமாசினிற்
பளிங்கெனக்கிடந்தவிப்பாவியேனினித்
தெளிந்திடத்திருவருள்செய்திடாய்மணி
விளிம்பிழைத்துயர்மதிற்குளந்தைவேந்தனே. (அச)

வேந்தராயுலகெலாமாளவேண்டினுஞ்
சாந்தராய்முத்தியைச்சாரவேண்டினு
மாந்தர்காள்குளந்தையிலிறையைவாழ்த்துமி
னோர்ந்துளோர்க்கிதுவலாலுறுதியில்லையே. (௮௫)

இல்லையென்றிழிப்பினுமிரந்துபின்செலும்
புல்லறிவாளர்காள்குளந்தைப்புண்ணியன்
மல்குறவிம்மையுமறுமையுந்தருஞ்
செல்வமென்றறிந்துமென்சேவியாததே. (௮௬)

தேமலர்ச்சந்திரதீர்த்தமாடிநஞ்
சோமநாதனுக்கலர்தூய்க்குளந்தையின்
யாமமாயினும்வதிந்திருக்கப்பெற்றவர்
காமனைக்காலனைக்காயவல்லரே. (௮௭)

வல்லுறழ்தடமுலையமுதவல்லியா
மெல்லியற்றேவியுந்தானுமேன்மைசேர்
செல்வமாக்குளந்தைபோலெனதுசிந்தையு
நல்லெழிற்கோயில்கொண்டருளுநாதனே. (௮௮)

நாதனேபோற்றிதென்குளந்தைநண்ணிய
போதனேபோற்றிமால்போதனொடொணாப்
பாதனேபோற்றிவெம்பவந்தொலைத்தருள்
வேதனேபோற்றியென்விமலபோற்றியே. (௮௯)

போற்றினோர்மலத்தொகையிரியப்புந்தியின்
மாற்றருமானந்தவாரிநல்குமா
லேற்றவன்குளந்தையினிளம்பிறைச்சடை
நாற்றியபிரான்பெயர்நமச்சிவாயவே. (௯௰)

## வேறு.

வாயுரைமொழியார் பிறன்பொருள் விழைவார் வஞ்சகநெஞ்சகம் பொதிவார், தீயனமகிழ்வார்நல்லனவிகழ்வார் செருக்கினுற்றம்மையே மதிப்பார், பேயராமவர்பாலிரந்துசென்றுழலாப் பெருவரமொன்றெனக்கருள்வா, யாயனேகுளந்தைத்திருநகரமர்ந்தவருட்பெருங்கருணைமாமலையே. (௯௧)

மலைதொறுந் திரிந்தும் வெண்பொடி யணிந்து மந்திர மோதியுந் தீர்த்தத், தலைபுனல்குடைந்து மொழுக்கினிற்றவரு மற்புதத்தவம்பலபு

ரிந்துஞ், சிலைவளையாகவளைத்தருள் குளந்தைச் சிவபிரான் முடிதவழொற்றைக், கலையவனடியார்தமையிகழ்ந்துரைப்பார் கயவரிற்கயவராகுவரே. (௯௨)

ஆகுதிப்புகைபோயமரரைவிளிக்குமந்தணர்குழாம்பயில்குளத்தூ, ராகுவாகனனைக் குமரனைப்பயந்த வண்ணலா ரடியவர்க்கடியா, ராகுமெய்த்தவத்தோருழிபேர்ந்திடினுமசைவிலாநிலையராய்ப்பிறவி, யாகுலந்தீர்ப்பார்யாரவர்பெருமையறிந்தெடுத்தோதவல்லவரே. ()

வல்லையென்மனமேமாயமாமுடலவாழ்க்கையைக் கடந்துபேரின்ப, வெல்லையைத்தலைப்பட்டிருப்பதற்குறுதி யியம்புவன்றிருக்குளத்தூர்வாழ், கொல்லைமான்மறிசேர்கையவனடியார் குரைகழல்கொண்டுபூண்டுறைதி, முல்லைவாணகையார்மையலையறுக்கமுயலுதியிதுவுனக்குறுதியே. (௯௪)

அறிவிலாமாந்தர்நல்லவென்றுரைக்கவல்லவென்றுரைக்க மற்றவரால், செறிபயனுளதோ நெஞ்சமேகுளத்தூர்ச் சிவபிரானொருவனேயகத்துப், பிறிவிலாத்துணையாயுடனிருந்தறிந்து பெரும்பயனளிப்பவனவனே, நெறியினுறுதியவேண்டுமென்றிதனை நினைந்திடாய் நன்றுநின்னறிவே. (௯௫)

நின்னையும்பொருளாய் மதிப்பரோபெரியோர்நெஞ்சமேதிருக்குளத்தூர்வாழ், சென்னியாறமைத்த புராணனைமறந்துஞ்சிந்தனைசெய்யுமாறறியாய், மன்னியவழுக்குங்குருதியுமெலும்பு மச்சையுமிறைச்சியுமயிருந், துன்னியமுடைத்தோன்மலப்பொதியிதனைச்சுகமெனவிரும்பிமேவினையே. (௯௬)

வினையினுக்கமைந்தபயன்வருமல்லான்மிகைகுறையாகுமோவறிதே, யினைவதாற்பயனின்றெனப்பிறரெவர்க்குமெடுத்தெடுத்தோதுமாறறிவாய், இனையளவேனுநீதெளிந்திலையாற் றிண்ணியநெஞ்சமேசீசீ, யுனையுமோர்துணையாக் கொள்வரோகுளந்தை யுத்தமன்கருணைபெற்றவரே. (௯௭)

பெற்றவர்பிறந்தாருடன்பிறந்தவர்கள் பெயர்குலங்காணிசெல்வங்க, ளுற்றவொன்றுமயக்கிவையனைத்து முடம்பிதுகழிந்தபினுளவோ, பற்றிநின்றசிலநாள்வாழ்க்கையைநிலையாப்பரிந்தனை போலுநீநெஞ்சே. யெற்றையுந்துணையாயிருப்பதுகுளத்தூரெம்பிரான்றிருவடியன்றே. (௯௮)

அன்றுதொட்டி துநாளளவுமாணவத்தானறிவிழந்தழுங்கியநெஞ்
சே, யுன்றனக்குயிராயுடனிருந்துணர்த்துமுண்மையையின்னமுழு
ணரா, யென்றினித்தெளிவா யெதிர்ந்தவர்புரங்க ளெரியெழக்குறுந
கைமுகிழ்த்த, கொன்றைவார்சடையான் றிருக்குளத்தூரிற் குலாவி
னேன் றிருவருள்கொண்டே. (கூகூ)

கொண்டலுஞ்சமழ்ப்பக்கவிஞருக்குதவுங்கொள்கையோர்குழா
ம்பயில்கீர்த்திக், தண்டகநாடுங்குளந்தையும்வாழ்க சாரமுதாம்பிகை
வாழ்க. வண்டார்கோன்சோமநாயகன்வாழ்கவவன்றிருவடித்தொழிற்
குரிய, தொண்டர்பார்மிசைதெண்செல்வராய்வாழ்ந்துதுதியொடும்பெ
றுகமெய்ச்சீரே. (கOO)

ஆகச்செய்யுள் கOக.

---

# குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

முடிந்தது.

---

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

—:o:—

# இளைசைப்

# பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

பருத்துடையவளங்காட்டுமிளங்காட்டு நகர்ப்பதிற்றுப்பத்தந்தாதித், திருத்தொடையலெம்பெருமான் சேவடியிற்சூட்டவருள்செழித்துநல்கு, முருத்தெழுந்துமும்மலக்கந்தினைப்பிடுங்கியுயிர்ப்போதக்கவளமாந்திக், கருத்துடையசிவானந்தக்களிமிகுத்துத்திரியுமதகளபந்தானே.

## நூல்.

உலகமெங்குமொருவடிவாகிநின்
றிலகுபேரொளிபோலுமிலங்கெழி
லலகிலாவளமாரிளங்காட்டகங்
குலவுகோயில்குடிகொண்டவெந்தையே. (க)

கொண்டன்மேனிக்குழகனுநான்முகப்
புண்டரீகப்புலவனுநாடொணு
மண்டுதீப்பிழம்பாகிவயங்கிஞ
னண்டர்சூழிளங்காட்டுறையண்ணலே. (உ)

அண்ணிக்குங்கரும்பாகியமுதமாய்க்
கண்ணுக்குண்மணியாய்க்கனிதேறலாய்
வண்ணச்சீரிளங்காட்டுறைவான்பொரு
ளுண்ணப்புக்கவென்னெஞ்சையுருக்குமே. (ங)

உருகிமொண்டுகொண்டுண்டுகளித்துளம்
பெருகிவாழ்ந்திடப்பெற்றனன்பூம்பொழி
லருகுசூழிளங்காட்டிலளியராய்ப்
பருகுவார்க்கினிக்கும்பசுந்தேறலே. (ச)

தேறலேனைத்தெருட்டிச்சிவமனுக்
கூறியாளக்குருவுருக்கொண்டவ
னுறுபூம்பொழினல்லிளங்காட்டுறை
பாறுநச்சும்படைமழுவாளனே. (ரு)

நேயமாகிநினைதொறுநெஞ்சக
மாய்விலாவின்பவாரியின்மூழ்குமால்
வாய்மையாளர்வளரிளங்காட்டுறை
பாய்விடைப்பரமேட்டிபொற்பாதமே. (சா)

பாதலம்பகிரண்டப்பரப்பெலாஞ்
சோதிவண்ணச்சுடரொளியாமென
நீதியாலுணர்வாரகநீங்கலான்
காதலிப்பவர்வாழிளங்காடனே. (எ)

காடுகொண்டசடைமுடிக்கண்ணுத
லேறுகொண்டகடுக்கைத்தொடையலா
னேடுகொண்டபொழிலிளங்காட்டினன்
வீடுகொண்டனன்மீட்டெனதுள்ளமே. (அ)

உள்ளத்துள்ளமுதூறியுணர்தொறுந்
தெள்ளத்தேறித்தெளிந்தசிவானந்த
வெள்ளத்தேதுளைவார்க்குவிளங்குவான்
கள்ளத்தார்க்கரியானிளங்காடனே. (கூ)

இளமையுமனைவாழ்க்கையினின்பமும்
வளமையும்பொருளாகமனங்கொள்வீ
ரளியில்காலனணுகுமன்றென்செய்வீர்
களவிலாவிளங்காடனைவாழ்த்துமே. (க0)

வேறு.

வாழ்த்துகிலேன்றிருப்புகழைமனங்கொளேன்றிருவடியைத்
தாழ்த்துகிலேன்சென்னியினைத்தமியேனைக்கருக்குழியில்
வீழ்த்துவையோபேரறிவைவிளக்குவையோவறியகிலே
னூழ்த்தமலர்ப்பொழில்புடைசூழிளங்காட்டிலுறைவோனே. (கக)

உறைவானையெவ்விடத்துமுயிர்க்குயிராயங்கங்கே
நிறைவானையசைவின்றிநிற்பானையேனோர்க்கு
மறைவானையிளங்காட்டிலமர்ந்திருந்தவான்பொருளை
யிறையானையெம்மானையெப்பொழுதுமறவேனே. (கஉ)

மறவாதபெருங்கவலைமறிகடலிலகப்பட்டுத்
துறவாததுயர்த்திரையாற்றொடக்குண்டுமெலிகின்றேன்
பிறவாதவரமருளிப்பேறளிப்பதெந்நாளோ
வறவாணர்புகழ்ந்தேத்துமிளங்காட்டிலம்மானே. (௧௩)

அம்மானேயிளங்காட்டிலாண்டகையேயெனையாண்ட
பெம்மானேயருட்கருணைப்பெருமானேயிமையோர்க
டம்மானேயென்றுநாத்தழும்பேறவுளங்குழைய
விம்மாநெக்குருகுவாரெமையாளும்வித்தகரோ. (௧௪)

வித்தகமாநடக்கடலில்விடமெழலுநடுநடுங்கி
நத்தனயன்முதலானோரோட்டெடுப்பநலிவகற்றி
மத்தமிடற்றிளங்காட்டுவான்பொருளையன்றியுமோர்
கத்தனுளனென்பாரையாங்காணக்கடவோமே. (௧௫)

கடக்களிற்றினுரிபோர்த்தவிளங்காட்டுக்கண்ணுதலோன்
விடச்செருக்கும்புரச்செருக்குமிக்கசலந்தரன்செருக்கு
முடைத்தருளியருளானேலும்பர்களும்பூவலயத்
திடத்துறையுமாந்தர்களுமெவ்வண்ணமுய்வாரே. (௧௬)

உய்யலாநெறிகோடியுலவாதவிடும்பையினான்
மையலாம்பரசமயப்படுகுழியின்மாள்வேனைத்
தையலாளொடும்போந்துதண்டலைசூழிளங்காட்டி
லையர்தாம்வெளியேநின்றாடல்கொண்டதற்புதமே. (௧௭)

அற்புதமாமிளங்காட்டிலாண்டகையைமதியாமே
புற்புதம்போற்பிறந்திறக்கும்புல்லியரைத்துணைகொண்டே
வற்புதவஞ்சிறுவிதிசெய்மகச்சாலைச்சிறப்பெல்லாங்
கற்பொடிபோற்சிந்தியவாகாண்மினோநமரங்காள். (௧௮)

காலையராயுலகனைத்துங்கவிகைநிழற்கீழடக்கித்
தாலையொன்றார்முடிவருடத்தருக்கெய்தியிருந்தோரு
மீலையராயிம்மையேயிரந்துழலக்காண்கையினா
லாளுடையானிளங்காட்டைவிரைந்தடைவாரறிவினரோ. (௧௯)

அறிவுருவாயகண்டிதமாயானந்தமயமாகிக்
குறியிறந்தபரம்பொருளோர்குறியுருவங்கொண்டருளிச்
செறிபொழில்சூழிளங்காட்டிற்றிகழ்ந்திருந்துமுணரார்கள்
வறிதேபொற்கொழுக்கொண்டுவரகினுக்கேருழுவாரோ. (௨௦)

## வேறு.

வாரார்களபக்குவிமுலையார்மையற்கலவிநலம்வேட்டும்
பேராவிடராலிதுகாறும்பேதுற்றுழன்றேனெனையாள்வாய்
நீரார்கழனிபுடையுடுத்தநிகழ்சீரிளசைப்பதியுடையாய்
போரார்கணிச்சிப்படையேந்திப்பொதுவிற்குனிக்கும்பெருமானே.

பெருகிக்கிடந்தநிராலம்பப்பேரானந்தப்பெருங்கடலுட்
பருகித்துளைந்துதிளைத்தாடிப்பதைப்பற்றிருக்கவரமளித்தான்
கருவிப்புயல்சூழ்மணிமாடங்கவினுமிளசைக்கடிநகர்வா
யருவிப்பனைக்கைமதவேழத்துரிபோர்த்தாடுமெம்மானே. (௨௨

ஆடுங்கறங்கின்யோனிதொறுமலமந்தழுங்கிப்பிறந்திறந்து
வீடுஞ்சிறியேன்றனக்குனதுவிரைத்தாமரைத்தாளருள்வாயோ
தேடும்பிரமன்றிருமாலுந்தெருமந்தேங்கத்தழற்பிழம்பாய்
நீடும்பொருளேயிளசையில்வாழ்நிருத்தாபுரத்தையெரித்தோனே. ()

எரித்தானெனதுவல்வினையினிருள்சேர்பிறவிப்பெருங்காட்டைத்
தெரித்தான்மூன்றுபொருளுண்மைதெரித்துப்பாசமிரண்டினையு
மிரித்தானென்னைத்தன்னுள்ளேயிருத்தியென்பாற்சுகவடிவாய்த்
தரித்தானிளசைப்பதிவாழுந்தக்கோனெவர்க்குமிக்கோனே. (௨௪)

கோனேயென்னைவலிந்தடிமைகொண்டமுதலேபெருங்கருணைத்
தேனேயிளசைப்பதிவாழுஞ்சிவனேயடியார்தமக்கருளு
வானேதேவரான்கன்றுபோலத்திரியவரமளித்தா
யானேறுயர்த்தாயிதற்கெவனோவடியேனுதவுங்கைம்மாறே. (௨௫)

மாறுக்கருணைச்சிவானந்தவாழ்வையிந்தாவெனக்காட்டி
யேறுக்குழிநின்றெடுத்தேற்றியென்போலுருக்கொண்டெய்திடவுந்
தேறுப்புலையேனினியுன்றன்றிருத்தாள்சேர்வதெவ்வாறே
நீறுப்பொலிந்ததிருமேனிநித்தாவிளசைப்பதியானே. (௨௬)

பதிக்கப்பெற்றேனுளத்தையவன்பாதாம்புயத்திலெஞ்ஞான்றுந்
துதிக்கப்பெற்றேனஞ்செழுத்துஞ்சூழப்பெற்றேனிளசைநகர்
மதிக்கப்பெற்றேனவனன்றிமற்றோர்தெய்வமிலையென்றே
யுதிக்கப்பெற்றேன்சிவஞானமின்னும்பெறும்பேறுன்றுளதோ. ()

ஒன்றிக்கிடந்துபதைப்பறநின்றுணர்வார்தமக்கேயல்லாமற்
கொன்றைச்சடிலத்திருமவுலிக்குழகனிளசைக்கடிநகரான்
மன்றற்கமலச்சேவடிகள்வற்றிப்புற்றாய்மரமாகி
நின்றற்புதமாந்தவஞ்செயினுங்காண்பார்க்கெளிதோநெறிதேர்ந்தே.

தேராமூடரொடும்பழகித்தெளியும்பகுதியுணராமே
காரானுகைக்குமறக்கடவுள்கைத்துக்குணவாயிருந்தாய்நீ
வாராய்மனமேயினியேனுமன்றற்பொழில்சூழிளங்காட்டிற்
போராணேற்றுப்பெருந்தகைதன்பொற்றாளிறுகப்பற்றாயே. (உகூ)

பற்றிக்கிடந்தபசுபாசப்பரப்பைக்கடந்தபரவெளியின்
முற்றிக்கிடந்தசிவானந்தமுழுத்தேனுகர்வார்க்ககவிளங்காஞ்
சுற்றிக்கிடந்தமலர்ப்பொதும்பர்துளிக்குநறுந்தேன்வழிந்தொழுகி
வற்றிக்கிடந்தமடுநிறைக்குமிளசைப்பதியான்மலர்ப்பதமே. (௩0)

வேறு.

பதராகியபல்சமயக்குழிவீழ்ந்
ததராமெனநம்பியகந்தையினேன்
மதராதெனையாண்டருள்வாயிளசைப்
புதராலறியப்படுபுண்ணியனே. (௩க)

புண்ணாகியுலைந்துபுழுங்கிமன
மெண்ணாதனயாவையுமெண்ணியெணி
மண்ணாயழியாதுவரந்தருவா
யண்ணாவிளசைப்பதியாண்டகையே. (௩உ)

ஆண்டானவிபெண்ணெனவாயிளசை
யாண்டானெயின்மூன்றையுமட்டருளு
மாண்டானெனநின்றவனாதியருக்
காண்டானவையாவுமமைத்தவனே. (௩௩)

தவமேதுபுரிந்தனனோதமியே
னுவமானமிலாயுகளப்பதமு
நவமாரிளசைக்கடிமாநகர்வாழ்
புவனேசவெனுச்சிபொறித்திடவே. (௩௪)

பொறியாகியவைம்புலவேடர்களாற்
பிறியாவிடர்மூழ்குபுபேதுறுவேன்
சிறியேனுனசேவடிசேருவனோ
வறிவேயிளசைப்பதியற்புதனே. (௩௫)

நேர்ந்தார்புரநீற்றியநீறுடையான்
போர்ந்தார்தலைமாலைபிறங்கியிட
வார்ந்தாடுசடைப்பெருமானிடமாஞ்
சார்ந்தார்பிரியாவிளசைப்பதியே. (௩௬)

பதியாமிளசைப்பதியாள்பவனுக்
கதிகாபுரியம்பலமாலவன
மதுராபுரியேடகமாதைநணு
முதுகுன்றுதிருக்குடமூக்கிவையே. (கூஎ)

வையந்தொறுமோடிவருத்தமுறு
துய்யும்படிகண்டனனேருறுதி
கையொன்றிளசைக்கடிமாநகர்வாழ்
செய்யன்கழற்சேவடிசேர்வதுவே. (கூஅ)

சேரும்படியெப்படிதிட்பமுட
னுருந்தெளியாதவரும்பொருளை
யேரொன்றிளசைப்பதியெம்பெருமான்
பாருந்திசையும்பரவும்மனமே. (கூகூ)

மனமும்முரையும்மதியுஞ்செயலு
மெனதுந்தனதும்மிடருந்நலனுஞ்
சினமுங்கெடவோர்மொழிசெப்பியவா
கனமொன்றிளசைப்பதிகாவலனே. (சo)

வேறு.

வலந்தருகாமனைமாட்டியகண்ணு
லனந்தருசீரிளசைப்பதிநாத
னுலந்தவர்வெண்டலையொண்கயிலேந்தி
யிலந்தொறும்வெண்பலியேற்றமையென்னே. (சக)

என்னையெடுத்துவிழுங்கியெனக்கே
தன்னையளித்தருடத்துவநாதன்
மின்னிளசைப்[illegible]மேவியிடத்தே
கன்னியைவைத்தகருத்திதுவென்னே. (சஉ)

கருத்தையொருக்கிநினைப்பவர்கட்கே
தரித்துவெளிப்படுசாலிளசைக்கோன்
புரத்திடையன்றுபொருக்கெனவாங்கே
சிரித்தெரிவைத்தசெயற்கையிதென்னே. (சகூ)

செயற்கையனைத்துமறச்சிறியேனுக்
கியற்கையளித்தருள்சீரிளசைக்கோன்
வியத்தருகோசிகமாதிவெறுத்துக்
கயத்துரிபோர்த்தகணக்கிதுவென்னே. (சச)

கணக்குவழக்கொடுகெத்துமதத்தார்
பிணக்கையறுத்தபிரானிளசைக்கோ
னிணத்தொகைமல்கியநெட்டுடலென்பை
மணத்தொடையாகமலேந்தமையென்னே. (சரு)

தமைத்தெளிவுற்றதவத்தினர்தம்பா
லிமைப்புவிழிப்பறவாழிளசைக்கோ
னமைத்திடுமெச்சுதனுரணனேடக்
கமைக்கனலாய்நிமிர்காட்சியிதென்னே. (சசா)

என்னைமுழுக்கவிழுந்தவிடத்தே
தன்னைவிளக்கியசாலிளசைக்கோன்
மன்னமுதத்தினைவானவருண்ண
வுன்னுவிடத்தினையுண்டமையென்னே. (சஎ)

உண்டிலையென்றமுணர்ச்சிகழன்றோர்
கண்டுதொழுங்கவினுரிளசைக்கோன்
றண்பெறுகுங்குமசந்தம்வெறுத்து
வெண்பொடிபூசியவித்தகமென்னே. (சஅ)

வித்தகலோகமனைத்தினும்வேறு
யத்துவிதப்பொருளாமிளசைக்கோன்
மத்தமனச்சிறியேன்பிறவாமைச்
சித்தியளித்தசிறப்பிதுவென்னே. (சகூ)

என்னதியானெனுமிந்தமயக்கைத்
தன்னருளாலொழிக்குமிளசைக்கோன்
கன்னிகுயத்தொடுகைவளைகட்கே
கொன்னுறுமேனிகுழைந்தமையென்னே. (ருo)

வேறு.

என்னினிச்செய்யவல்லாரெறுழ்வலித்தடந்தோள்கொட்டிக்
கொன்னுறுபாசந்தண்டங்குடங்கையிலேந்திநக்குப்
பின்னுறுமிருள்போற்கூற்றங்குறுகுவான்பெட்டகாலைத்
தன்னைநேரிளசைக்கோமான்றுளிணையிறைஞ்சாதோரே. (ருக)

சாவொரீஇப்பன்னாளிந்தத்தரணியாண்டிடினுமாள
மேவொணுதிற்றைநுான்றேவினியினும்விளிகயாக்கை
காவொடுகழனிசூழுங்கடிநகரிளசைக்கோமான்
சேவடிவழுத்தப்பெற்றேமினிப்பெறுஞ்செல்வம்யாதோ. (ருஉ)

யாதுமோரறிவிலாதவெளியனேன்கருவில்வீழ்ந்து
பேதுறுதெளிவந்தாண்டகருணையின்பெருமையென்னே
தாதுறுநறவமாந்தித்தனைமறந்தறுகான்மூசும்
போதலர்சோலைவேலிப்பூம்புனலிளசையானே. (ருக)

யாம்பரம்பரமென்றுன்னியிருவரும்பொருதஞான்றின்
மேம்படக்கிளைத்தசெந்தீவெற்பெனவடிவங்காட்டிப்
பூம்பொழிலிளசைக்கோமான்பொள்ளெனத்தோன்றிலானே
னும்பிறரவரையன்றேதேவெனநம்புமாறே. (ருஉ)

மாறிலாக்கருணைகாட்டும்வளரொளிநயனமூன்றுஞ்
சீறுமாடரவம்பூணுந்திருமுகப்பொலிவும்வெள்ளை
நீறுபூத்தலர்ந்தமெய்யுநெறிகுழலிமயவல்லி
கூறுமாயிளசைக்கோமானென்னுளங்குடிகொண்டானே. (ருரு)

கொண்டதோலெலும்புமச்சைகுருதிநீர்நரம்புமூளை
மண்டியகுரம்பைவாழ்க்கைவாழ்வினிப்போதும்போதும்
வண்டமிழிளசைவேந்தேவறியனேனுலந்துபோனேன்
றண்டிரைப்பரமானந்தசலதியிலழுத்திடாயே. (ருசு)

அழுதழுதலறியேங்கியகங்குழைந்துருகிநெக்குத்
தொழுதெழுமடியாருள்ளந்தொறுந்தொறுங்கோயில்கொண்டான்
பழுதிரிளசைவைப்பிற்பகிரண்டங்குலுங்கநின்று
கழுதினந்துணங்கையாடநடித்திடுங்கருணைவாழ்வே. (ருஎ)

கருணையாலிளசைமேவுங்கடவுளேயடியனேனுக்
கிருவினைத்தொடக்கைநீக்கியிடையறாதுதவல்வேண்டு
முருவுயிருணர்வாயெங்குமொழிவறநிறைந்துமண்டிப்
பொருவில்பேரொளியாயோங்கும்பூரணானந்தவாழ்வே. (ருஅ)

ஆனந்தமயமாய்நின்றவரும்பெருஞ்சோதிதானே
ரானந்தவடிவங்காட்டியருளிஞலிளசைமேவி
யானந்தமடியேற்கீந்தவருளினைநினைக்குந்தோறு
மானந்தமேலிட்டென்னையங்கமேயாக்கற்பாற்றே. (ருகூ)

பாற்றிருநீறுபூத்தபவளவெற்பனையபச்சைக்
சோற்றொடிமணந்தமேனிக்குழகனேயிளசையானே
யூற்றமாமயராவன்பினுன்னடிநிழற்கீழ்த்துஞ்சும்
பேற்றினுக்கலந்துபோனேன்பிஞருகாவருள்செய்வாயே. (சுய)

வேறு.

வாய்த்தவினையொத்துழிமலப்பிணியவிழ்த்து
மூர்த்திகொடுவந்தருளிமுத்திநலநல்கு
மாத்தனிளசைப்பதியினைந்தொழினடிக்குங்
கூத்துடையன்யாவனவன்யாங்கடொழுகோவே. (௬௧)

தொழாதுதிரியும்புலையர்சூழலினுறுமே
வழாதநெறியீதெனவகுத்தருளியன்பர்
குழாமொடுமிணங்கிமகிழ்கூரவருள்செய்தாய்
விழாவணியுறுமறுகுசூழிளசைவேந்தே. (௬௨)

வேந்தனெனமண்முழுதும்வெண்குடையுளாக்கி
யேந்துரியணைத்தவிசிருந்தரசுசெய்யும்
வாய்ந்தவளமொன்றெனமதித்திடுவரோயோ
வாய்ந்தவிளசைப்பரமனுறுமடியாரோ. (௬௩)

அடித்தலமுடித்தலமரிக்குமயனுக்குங்
கிடைப்பரியசோதிவடிவாகியகிரீசன்
மடற்பொதியவிழ்ந்தபொழில்சூழிளசைவந்தெ
னிடர்க்கடலகற்றிடவுஞற்றுதவமென்னே. (௬௪)

தவங்களொருசற்றுமிலிபுல்லியர்தநட்பே
யுவந்துதிரிகின்றபுலையேனுமுலவாத
பவங்களைவதெப்படிபகர்ந்திடுதியையா
நவங்கொளிளசைப்பதியினுறுமகிழ்வோனே. (௬௫)

மகிழ்ச்சிமிகுமன்பினனல்சேர்மெழுகுமான
நெகிழ்ச்சியுறநெக்குருகிநெஞ்சுகரைவெய்தி
முகிழ்த்தமலர்கொண்டுநினைமுப்பொழுதுமேத்த
விகழ்ச்சியறுசீரிளசையெந்தைதவரநல்கே. (௬௬)

வரங்கள்பலவுஞ்சுரர்பதங்களுமயங்கா
வுரம்பெருகுசித்திகளும்வித்தைகளுமொக்கத்
திரண்டுவருமேயிளசைநாதனதிருத்தாள்
பரந்தமலரிட்டுவழிபட்டவர்கள்பாலே. (௬௭)

பார்ப்பதியணங்கொருபாற்பதியுமெம்மான்
சூற்புயறவழ்ந்துலவுசோலைபுடைசூழ
மேற்படுவளம்பலவுமேவுமிளசைக்கோ
னேற்புடையதாளிணையிருப்பிடமெனெஞ்சே. (௬௮)

நெஞ்சுமுளையுஞ்செயலுநேர்ந்தபொறிதாளே
ரஞ்சுமுனசேவடியிலாக்கியெனையாள்வாய்
நஞ்செதிர்வுகண்டுளநடுங்கிமுறையோவென்
றஞ்சிவருவோர்க்கருளுமாரிளசைவாழ்வே. (௬௯)

வாழுநெறியாவையுமறந்துபுலையாகித்
தாழுநெறிகொண்டுதிரிகின்றதமியேனைச்
சூழும்வினைவல்லிருடொலைந்திடுவதெந்நா
ளாழுமகழ்சூழிளசையாளுடையகோவே. (௭0)

வேறு.

உடையநாயகன்றிருவடித்தொழும்புசெய்தும்பரார்தமக்கெட்டாச்
சடிலவான்முடியிளசையானளித்திடுந்தத்துவநெறிதேர்ந்தே
யடையவுந்தமக்குள்ளுறத்தாமவற்றுள்ளுளுமானந்த
மிடையறுமலேகண்டுகொண்டிருப்பவொம்மையாளுடையாரே. ()

யாரும்யாவுமாஞ்சராசரத்தொகுதியிலிரண்டறக்கலந்தோங்கிப்
பாரும்விண்ணுமற்றனைத்துமாய்நிறைந்ததோர்படரொளிப்பரப்பூ
காருலாம்பொழிலிளசையுமெம்பிரான்கருதரும்பல்கோடி [டே
சூரியப்பிரகாசநேருருவமுந்தோன்றுமாகண்டேனே. (௭௨)

கண்டகண்டவெள்ளிடையெலாமிளசைவாழ்கருணையங்கடல்காள
முண்டகண்டமுநான்குதிண்டோளும்வேளுருவினையருவாக்க
விண்டகண்டழலுருவமுமுமையவண்மேவியவிடப்பாலுங்
கொண்டகண்டமாய்நின்றதோர்குறியன்றிப்பிறகுறிகாணேனே. ()

காணுமாறுமற்றரிதரிதாமெனக்கணிப்பிலாப்பலசாகைக்
கோணைமாமறையாவையுந்தனித்தனிகுழறுவதல்லாமன்
மாணுமாறிதுதானெனக்காட்டிடவல்லதேயிளங்காட்டிற்
பேணுநாயகனடியவர்க்கெளியவன்பெற்றியைமுறையோடே. ()

முறைபிறழ்ந்திடாவடியவர்குழுமியமுதுநகரிளங்காட்டிற்
கறைவிளங்கியகண்டர்தமருளினாற்காண்பவர்தமக்கல்லா
லறைகழற்றிருமாலயன்முதலியோர்க்காயினுமெளிதாமோ
விறையுநீங்கிடாதிரண்டறக்கலந்துவாழின்பநிட்டையின்சீரே. ()

நிட்டையாவதுநெட்டுயிர்ப்பறவுடனிமிர்த்துவார்விழிமூடிப்
பட்டவாயினீர்வறந்திடவடதிசைபார்த்துறைந்திடும்யோகோ
சட்டகத்தினைப்பிரித்துளப்பதைப்பற்றுச்சாக்கிராதீதத்தே
சுட்டிறந்துநின்றிளசைநாயகன்கழல்சூழ்ந்திடுஞ்செயலன்றே. (௭௬)

அன்றுதொட்டிதுகாறும்வல்வினையினாலலக்கழிந்துழல்பேயேன்
பொன்றிடாப்பரமானந்தவெள்ளமாய்ப்போக்கொடுவரவின்றி
யென்றுமோரியல்பாகியபராபரத்திரண்டறக்கலந்தொன்றாய்
நின்றுவாழ்ந்திடப்பெறுவனோவிளசைமாநெடுநகரமர்ந்தானே. (எஎ)

தானையாமெனக்குயவரியதளினைத்தரித்துமன்றிடையாடும்
வானுளோர்களுக்கறிவரும்பரம்பொருண்மண்ணிடையெளிவந்து
தேனுலாம்பொழிலிளசையிற்குடிகொண்டுசிறியனேன்பசுஞானக்
கூனைநீக்கிவந்தாண்டிடயான்முனங்குயிற்றியதவமென்னே. (எஅ)

என்னுடைப்பெருந்தன்மையும்யானுமிங்கெய்திடாவகையென்பாற்
றன்னுடைப்பெருந்தன்மையுந்தானுமாய்த்தணப்பறநடிக்கின்றான்
கொன்னுடைப்படைத்தண்டமொன்றெடுத்தெதிர்குறுகியசமன்வீர
முன்னுடைத்திடவுதைத்திடுமிளசைமாமுதுநகர்ப்பெருமானே. ()

பெருமதிக்கெலாம்புகழ்ந்திடுமிளசையம்பெரும்பதிதனின்மேய
திருமதிக்கொழுந்திலகியசடைமுடிச்சிற்பராவென்றொன்று
மொருமதிப்படநிலைபெறாதறுதினமுழிதருகறங்கேய்ப்பத்
திரியும்வன்மனக்குரங்கினைநிலைபெறத்திருத்துவதெவ்வாறே. (அ௦)

வேறு.

எவ்வமுமகந்தையுமிழிவுமானமு
மவ்வியநெஞ்சமுமனைத்துநீங்குமா
னவ்வியங்கரத்தவனிளசைநாயகன்
செவ்வியபொலங்கழல்சிந்தைசெய்யினே. (அக)

செய்யவன்கருகியதிருமிடற்றினன்
வையகமளந்தவன்வழுத்துதாளினன்
மெய்யடியவர்புகழிளசைமேவிய
வையனைமறக்கிலென்னுவியுய்யுமே. (அ௨)

உய்வகைநாடொறுநினைந்துறுதியோர்ந்திடிற்
சைவநேர்சமயமுஞ்சங்கரர்க்குநேர்
தெய்வமுமிளசையிற்சிறந்தபாக்கமு
மெவ்வுலகத்தினுமில்லையில்லையே. (அ௩)

இல்லெனிலுண்டெனவுளதென்னிலில்லையா
மல்லதங்குருவெனிலருவுமாகுமாற்
செவ்வியல்சோலைசூழிளசைச்செம்மலான்
பல்குசீர்யாவரோநவிற்றற்பாலரோ. (அச)

பாலனைக்கூற்றுவன்பற்றிக்கோடலே
மேல்கொடுவருதலுமுதையில்வீட்டினான்
சோலையின்மதிதவழிளசைத்தோன்றலா
னேலுமெய்யடியவர்க்கெளியனல்லனே. (அரு)

அல்விளக்காகியவாக்கைதன்னைநா
னெல்விளக்காயிடக்காண்பதெந்தநாள்
சொல்விளக்கியபுகழ்த்தொண்டைநாட்டுக்கோர்
நல்விளக்காகியவிளசைநாதனே. (அசு)

நாதனுமென்னுடைநட்புமொக்கலுந்
தாதையுந்தாயருமகவுந்தாரமும்
யாதுமாயிருந்தெனையெளிவந்தாண்டனன்
மேதகுவளம்பயிலிளசைவேந்தனே. (அஎ)

வேந்தராய்க்கவிஞராய்விச்சைகற்றுணர்
மாந்தராயறிஞராய்வாழவேண்டுவீர்
பூந்தராய்க்கவுணியன்போற்றுமெந்தையைச்
சாந்தராயிளசையிற்சார்ந்துகண்ணுமே. (அஅ)

கண்ணுதன்மதிமுடிக்கமலக்காலனைக்
கண்ணுதன்மதிமுடிக்கமலக்காலனை
யண்ணலாம்பொதுவிளங்காட்டினானையா
மண்ணலாம்பொதுவிளங்காட்டினானையே. (அகூ)

காட்டினானுலகெலாங்கனவுபோன்மென
வாட்டினான்பிறவிவேர்வாட்டிச்சென்னிமேற்
சூட்டினான்றிருவடிதொலைவிலானந்த
மூட்டினானிளசையிலுறையுமன்னனே. (கூ0)

வேறு.

மன்னுமோர்கணப்போதாயினுநிலையாமதித்திடற்கரியவிவ்வுடம்பை, யென்னதென்றெண்ணியிதற்கெனத்தொடங்கியினியிலாக்களவுபொய்காம, முன்னியமதமாற்சரியமாங்காரமுலப்பிலாவெகுளியுற்றந்தோ, பன்னெடுங்காலமழுங்குமாறெவனோபசும்பொழிலிளசைநாயகனே. (கூக)

நாயினுக்கிளையோநரியினுக்கிளையோநகுநடைக்குழிவிழிப்பிறழ்பற், பேயினுக்கிளையோகழுகினுக்கிளையோ பெரிதுநாறியபுழுக்குரம்பை, யீயினுக்கிளையோயாதினுக்கிளையோ யான்சுமந்துழன்றிடப்பணித்தாய், தாயினுக்கழகோகுழவியைவருத்தல்சாற்றிடாயிளசைவானவனே. (கூஉ)

வானறல்வளிநீமண்ணெனுமிவற்றால்வனைந்ததோற்குழிசியைக் குருதி, பூனொடுபிசைந்துவைத்தபாழ்ஞ்சுவரா யொன்பதுவாயினும லமே, தான்வழிந்தொழுகும்விடக்கினைத்துயரந் தனக்கொருகொள்க லந்தன்னை, யானிதைச்சுமந்துதிரிவதுமுறையோ விளசையம்பதிய மைந்தவனே. (கரு)

அமையுமிவ்வுடலேபொருளெனவோம்பி யடியவர்யாரையும்ப ணிகொண், டிமையளவேனுநன்னெறிதோராதிதற்குமேற்கதியிலையெ ன்றே, தமையுணர்ந்தவர்போனடைநடித்துத் தழற்படுநரகினுக்கிரை யாய்ச், சுமையெடுத்தலுந்தேனிளசைவாழ்முதலேதுடைத்திடாதிரு ப்பதெற்றினுக்கே. (கசா)

எத்தனையுடலமும்மையிலெடுத்தே மெத்தனையினியெடுப்பனவு, மத்தனையன்றோவிவ்வுடற்பயனென் றறிந்திடாதிதனையேபொருளா க், கத்தியுமிதற்கோருறுவந்துற்றாற் கலுழ்ந்துவெந்துயர்க்கடல்குளி த்தும், பித்தரின்மயங்கித்திரிவதென்னேயோ பேசிடாயகத்தியீச்சுர னே. (கரு)

அகத்தியீச்சுரனைக் காட்டிவீடளிக்கு மறிவினைத்தஞ்சமாமுட லென், றிகத்திலேய்யின்பந்துய்த்திடவறியா ரேவல்கொள்வோர்க்கு ந ற்கரணம்,புகப்பெறுநரிநாய்கழுகுக்குப்போகம் புழுவுக்குப்புவனமற் றதுபோற், சகத்திடைத்தமக்குத்தனுவெனுமிதனைத் தாமெனவிழை யுமாறென்னே. (கசு)

என்பினைநரம்பைமூளையைமயிரை யிறைச்சியைக்குருதிசுக்கில த்தைப், பின்புறுந்துவக்கைவேறுவேறாகப் பிரித்துப்பைமறியென நோக்கி, யன்புறுமறிவாற்பௌதிகமெனநீத் தாண்டமாவிளசைநாய கன்ற, னின்பவாரிதியிற்றுளைந்திடப்பெறாதார்க்கிறப்பதும்பிறப்பது மியல்பே. (கஎ)

இயலிசையுணர்ந்துமாசறத்தெளிந்தும் யாவரும்புகழ்ந்திடப்பெ ற்று,மயலறுபொன்போற்சுவைபெறப்பேசிமன்பதைப்பரப்பெலாம் வசித்துங், கயல்விழிமடவார்புணர்ச்சியைவெறுத்துங்காற்றினைச்சரு கினைநுகர்ந்தும், பயில்வுறும்பவவேரறுங்கொலோவிளசைப் பராபர னருள்பெறாதவர்க்கே. (கஅ)

தவறுமிக்கிழைத்தாற்கழுத்தினிவிறைவன் சாற்றுணைப்புழுத்த லைநாயை, யவமுறப்பிணித்தான்முகஞ்சுழிந்தழுங்கியருவருத்தளாய

னையிரந்து, நவில்பிணிப்பகற்றவிழைவரோயல்லா னன்கெனமதிப்ப
ரோவதுவே,யுவமையென்றுணர்ந்தோருடலையோம்புவரோவிளசை
வாழொருவனைமறந்தே. (கக)

மறந்தருநெடுவேன்மைந்தனைப்பயந்துமகிழ்பிரதானநாயகிபாற்,
சிறந்துவாழிளங்காட்டகத்தியீச்சுரன்றாள் சேர்ந்துநின்றொன்றுபட்
டதுவா, யுறங்கியெங்கெழிலென்ஞாயிறென்றிறுமாந்துறையுமெய்ய
டியவர்தமது, நிறைந்தபல்கீர்த்தியிடைவெளியின்றி நிரந்தனவுலக
மெங்கணுமே. (கoo)

ஆகச்செய்யுள் - கoக.



# இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி

முடிந்தது.



மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.



உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# கலைசைப்

# பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

பருமாலை நிரைவீதித் திருத்தொட்டிக் கலைப்பதிற்றுப் பத்தந் தாதித், திருமாலை யெமையாளுஞ் சிவபெருமான் றிருவடியிற் சேர்க்கநல்கும், பொருமாலைக் கயமுகனைக் குடர்குழம்பத் துகைத்துருட்டிப் புரட்டிநாயேன், கருமாலைத் துரந்தருள வெழுந்தருளுஞ் செங்கழுநீர்க் களபந்தானே.

## நூல்.

திருமால்பிரமன்றெளியாதழலா
யருமாலுறநீண்டருளங்கணனெம்
பெருமான்கலைசைப்பதிபேணியவா
விருமாமலமற்றெளியேனுயவே. (க)

உய்யும்படியொன்றுணரேனையுமான்
கையன்கதியன்கலைசைப்பதிவாழ்
மெய்யன்விமலன்விடையேறியவென்
னையன்வலித்தாண்டதுமற்புதமே. (உ)

புதியான்பழையான்புறத்தானகத்தான்
முதியானிளையான்முதலான்முடியான்
பதியாங்கலைசைப்பகவன்பெருமை
மதியாலெவர்தேறிடவல்லவரே. (ங)

வல்லாண்மைசெலுத்துமலத்துயராற்
பொல்லாநிலையிற்பொறிகெட்டுழல்வேன்
கல்லானிழலாய்கலைசைப்பதியா
யெல்லாமறவென்றுனையெய்துவதே. (ச)

தேறாய்கலைசைச்சிவனேயிறையென்
றேறாய்சிவலோகமிடும்பையெலாம்
பாறாய்பதமஞ்சும்விதிப்படியே
கூறாயருளேகுறியாய்மனமே. (ரு)

மனைமக்கள்கடும்புமடந்தையர்பொன்
னெனவிப்படியெய்திமயக்கியிடுந்
தனையொப்புறுமாயைவிலாசமெலாங்
கனவிற்கழியாய்கலைசைக்கிறையே. (சா)

இறையுந்தரியேனினியிவ்வுடலப்
பொறைதானுனையல்லதுபோக்கறியேன்
முறையோமுறையோவருளாய்முதல்வா
நிறைநீர்க்கலைசைப்பதிநின்மலனே. (எ)

மல்கும்புலவேடர்மயக்கமருண்
டொல்குஞ்சிறியேனையுமுன்னடிசேர்த்
தல்கும்படியென்றருள்வாய்வளமே
பல்குங்கலைசைப்பதிகாவலனே. (அ)

காவாய்சிவனேசரணங்கலைசைத்
தேவாசிவனேசரணஞ்சிறியே
னுவாசிவனேசரணமருளே
தாவாசிவனேசரணஞ்சரணம். (கூ)

சரணம்புகும்வானவர்தாங்களெலா
மரணம்புகுதாதருள்வைத்துவருங்
கரளந்தனையுண்டனைகாத்தருளா
யரணம்புடைசூழ்கலைசைக்கரசே. (க0)

வேறு.

அருவுருவங்கடந்துநிறைந்தானந்தப்பரவெளியாய்
மருவுபெருஞ்சிவபோகவாரிதியிற்றுளைந்தாடி
யிரவுபகலற்றிருக்குமிவ்வாழ்வையெனக்களித்தாய்க்
குருகிமனங்கரையகிலேன்றிருக்கலைசையுத்தமனே. (கக)

உத்தியராவகலல்குலொள்ளிழையார்முலைத்தடத்தே
பித்துமிகுந்திழிவேனைப்பிறழாமேதடுத்தாண்ட
வத்தனேயுனையிழந்துமாவிதரித்துய்வேனோ
கொத்தலர்பூம்பொழிற்கலைசைக்குலநகர்வாழ்கோமானே. (கஉ)

மான்போலும்விழிசாயன்மயில்போலுமடந்தையர்சொற்
றேன்போலுமெனப்பிதற்றித்திரிவேனையாட்கொண்டாய்
நான்போலுமடிமையுமற்றுன்போலுநாயனுந்தான்
மீன்போர்செய்வயற்கலைசைவித்தகனேகிடையாதே. (கரு)

கிடையாதபெருவாழ்வுகிடைத்திருந்துங்கைவிட்டு
முடையாணவுடலோம்பிமூர்க்கனுய்த்திரிந்துழலுங்
கடையேனைக்கடைபோகக்காப்பதுநின்கடனன்றோ
நடையாளுந்திருக்கலைசைநகர்மேவுபரம்பொருளே. (கசு)

பரந்தெழுமுன்றிருவருளேபார்த்துமனங்குழைந்துருகி
நிரந்தரமாயன்புசெயாநீசனேன்றனக்கந்தோ
புரந்தரன்மாலயன்முதலோர்புகலரும்பேறளித்தருளி
யரந்தைதவிர்த்தனையென்னேதிருக்கலைசையாண்டானே. (கஎ)

ஆண்டாய்நீயுனக்கடியேனானுனினியென்னை
வேண்டாதுவெறுத்திடவும்விதியுண்டோகீழ்மேலாய்
நீண்டானேதிருத்தொட்டிக்கலைமேவுநின்மலனே
தூண்டாதவிளக்கொளியாய்ச்சுடர்பரப்புந்தொல்லோனே. (கஅ)

தொல்லைவினைத்தொடக்குண்டுசுடுநெருப்பினரவேய்ப்ப
வல்லலுறும்புலையேனையாவாவென்றளித்தருளா
யெல்லையறுத்தூடுருவியெங்கணுமாய்நிறைந்தருளிச்
செல்வமலிகலைசையில்வாழ்சிவானந்தப்பழங்கடலே. (கஎ)

பழங்கணுறவெகுண்டெழுந்துபகடேறிப்படையெடுத்துத்
தழங்குபெருஞ்சேனையொடுந்தருக்கிவருங்கொடுங்காலன்
முழங்குமொலிகேளாமுன்மூரிவிடைமிசையேறி
யழுங்கேலென்றெதிர்ந்தருளாயருட்கலைசைப்பதியானே. (கஅ)

பதிதொறுஞ்சென்றேத்திப்பயின்மூவர்தமிழ்மாலைப்
பதிகமெலாமங்கங்கேபாடியுளங்களிகூரும்
பதிகரொடுமெனைக்கூடப்பணித்தருளாயிமையவர்தம்
பதிகளுக்கும்பதியாகிப்பதிக்கலைசைப்பதியானே. (கக)

யானென்றுமெனதென்றுமிச்செருக்கிலெழும்வினையா
லூனொன்றிப்பொறிவழிபோயுலவாதயோனிதொறுந்
தானென்றியிதுகாறுந்தளர்ந்தொழிந்தேனினியிரங்காய்
தேனொன்றுமலர்ச்சோலைத்திருக்கலைசையுடையானே. (உ0)

வேறு.

உடைந்துநைந்துநெக்குநெக்குளங்குழைந்துசின்மயத்
தடைந்துகண்ணசும்பிருந்துதாரைபாயவன்புநீர்
குடைந்துவாழுமன்பர்சிந்தைகோயில்கொண்டுவாழ்வரான்
மடந்தைபாகமாய்க்கலைசைவாழ்சிதம்பரேசரே. (உக)

சிதம்பரேசர்சோலைசூழ்ந்ததென்கலைசைநாயகர்
கதம்பராவுகாமனோடுகாலனைக்கடிந்தவர்
பதம்பராவியேத்துமன்பர்பாதபங்கயங்கள்சந்
ததம்பராவியேவலிற்சரிப்பரண்டவாணரே. (உஉ)

அண்டரண்டமூடறுத்தகம்புறம்புமேகமாய்
மண்டியெங்கணும்பரந்தவின்பவாரிதன்னுளே
துண்டலைக்கலைசைவாழ்சிதம்பரேசர்தம்முருக்
கண்டுகொண்டுபோற்றவல்லகாட்சியாளர்செல்வரே. (உங)

செல்வமென்னகீர்த்தியென்னசித்தியென்னகற்றிடுங்
கல்வியென்னவீங்கிவற்றிறுப்பயன்கள்காண்பரோ
நல்லதென்கலைசைமேயநாதனன்பர்நாமமே
சொல்லியேத்தியேவல்செய்தொழும்பர்காணவல்லரே. (உச)

வல்லவண்ணம்வாழ்கலைசைவானவர்க்கடித்தொழி
லல்லுமெல்லுமாற்றுமன்பர்வேண்டிலஞ்சபூதமு
மொல்லைமாற்றிவேறுசெய்யவல்லரும்பர்மாலயன்
றொல்லைவான்பதங்களுந்துரும்பெனக்கழிப்பரே. (உரு)

பரந்தெழுந்துமுப்பதிற்றிரண்டுபல்லையுந்திறந்
திரந்துபுல்லர்வாயிலூறுமின்றுகாறுமெவ்வமுற்
றரந்தையாலழிந்துளேனிதாற்றிலேனெனையனே
வரந்தராய்கலைசைவாழ்சிதம்பரேசவள்ளலே. (உசு)

வள்ளலென்றுபாரியென்றுமாரியென்றுவீணிலே
யெள்ளளவுமீகிலாரையேத்தியேத்தியாயுளைத்
தள்ளுவீர்கலைசைவாழ்சிதம்பரேசர்கீர்த்தியைத்
தெள்ளியோதுகிற்கிலீர்கணன்றுநுங்கள்செய்கையே. (உஎ)

கைகள்கொண்டுநொச்சியைக்கரந்தையைப்பறித்தணிந்
தையனேயிரங்கெனத்துதித்திறைஞ்சிலண்டரு
மெய்தரும்பதத்திலுய்க்குமெம்பிரான்கலைசைவாழ்
சைவனென்றறிந்திலார்சழக்குரைத்துமாய்வரே. (உஅ)

## வேறு.

உடைந்துநைந்துநெக்குநெக்குளங்குழைந்துசின்மயத்
தடைந்துகண்ணரும்பிருந்துதாரைபாயவன்புநீர்
குடைந்துவாழுமன்பர்சிந்தைகோயில்கொண்டுவாழ்வரான்
மடந்தைபாகமாய்க்கலைசைவாழ்சிதம்பரேசரே. (உக)

சிதம்பரேசர்சோலைசூழ்ந்ததென்கலைசைநாயகர்
கதம்பராவுகாமனோடுகாலனைக்கடிந்தவர்
பதம்பராவியேத்துமன்பர்பாதபங்கயங்கள்சந்
ததம்பராவியேவலிற்சரிப்பரண்டவாணரே. (உஉ)

அண்டரண்டமூடறுத்தகம்புறம்புமேகமாய்
மண்டியெங்கணும்பரந்தவின்பவாரிதன்னுளே
தண்டலைக்கலைசைவாழ்சிதம்பரேசர்தம்முருக்
கண்டுகொண்டுபோற்றவல்லகாட்சியாளர்செல்வரே. (உங)

செல்வமென்னகீர்த்தியென்னசித்தியென்னகற்றிடுங்
கல்வியென்னவீங்கிவற்றினாற்பயன்கள்காண்பரோ
நல்லதென்கலைசைமேயநாதனன்பர்நாமமே
சொல்லியேத்தியேவல்செய்தொழும்பர்காணவல்லரே. (உச)

வல்லவண்ணம்வாழ்கலைசைவானவர்க்கடித்தொழி
லல்லுமெல்லுமாற்றுமன்பர்வேண்டிலஞ்சுபூதமு
மொல்லைமாற்றிவேறுசெய்யவல்லரும்பர்மாலயன்
றொல்லைவான்பதங்களுந்துரும்பெனக்கழிப்பரே. (உரு)

பரந்தெழுந்துமுப்பதிற்றிரண்டுபல்லையுந்திறந்
திரந்துபுல்லர்வாயிலூறுமின்றுகாறுமெவ்வமுற்
றரந்தையாலழிந்துளேனிதாற்றிலேனெனையனே
வரந்தராய்கலைசைவாழ்சிதம்பரேசவள்ளலே. (உ௬)

வள்ளலென்றுபாரியென்றுமாரியென்றுவீணிலே
யெள்ளளவுமீகிலாரையேத்தியேத்தியாயுளைத்
தள்ளுவீர்கலைசைவாழ்சிதம்பரேசர்கீர்த்தியைத்
தெள்ளியோதுகிற்கிலீர்கணன்றுநுங்கள்செய்கையே. (உஎ)

கைகள்கொண்டுநொச்சியைக்கரந்தையைப்பறித்தணிந்
தையனேயிரங்கெனத்துதித்திறைஞ்சிலண்டரு
மெய்தரும்பதத்திலுய்க்குமெம்பிரான்கலைசைவாழ்
சைவனென்றறிந்திலார்சழக்குரைத்துமாய்வரே. (உஅ)

மாய்வதும்பிறப்பதும்வளர்ந்துமங்கைமார்முலை
தோய்வதும்புலன்வழிச்சுழல்வதும்பிணியினுற்
றேய்வதும்பவந்தொறுமெனக்கமைத்தசெல்வனே
யாய்கலைக்கலைசைமேவுமையவாழிவாழியே. (உகூ)

வாழ்வுமிக்கதென்கலைசைவாணநின்னையேசில
ராழியங்கைமாயனென்பரம்புயத்தனென்பர்தேன்
வீழ்கடுக்கையீசனென்பர்வெய்யவங்கியென்பர்மா
வேழ்பரித்ததேரினண்ணலென்பர்மாயையாலரோ. (கூ0)

வேறு.

மாயனையினை மறையவனுனை மன்னுயிர்த்தொகையனைத்தையு மொடுக்கும், பாயுமால்விடை யுருத்திரனுனைப் பன்னுமூவர்க்கு மூல மாய்நின்றாய், ஞேயமாயினை ஞாதிருவானாய் நிகழுஞானமுமாயினை யெந்தாய், வேயதோளுமை பங்குறைநீல மிடற்றனேதிருக் கலைசை யுத்தமனே. (கூக)

தமோகுணத்தினிற் றிருவுருத் தரித்துச் சத்துவத்தொழில் பூண் டநாரணற்குந், தமோகுணத்தொழி லழிப்பினைப்பூண்டு சத்துவத்து ருத்தரித்தசங்கரர்க்குந், தமோகுணத்துரு திராசதத்துருவந் தாங்கிய ங்குணத்தொழிலுறுமயற்குந், தமோமயத்தினிற் றமியனுங்கலைசைத் தாணுநீயிறையாயிருந்தனையே. (கூஉ)

ஆயிரஞ்சிர மாயிரமுடிக ளாயிரஞ்செவியாயிரம்விழிக, ளாயிரம் புய மாயிரஞ்சரண மாயிரங்குண மாயிரந்தொழில்க, ளாயிரம்பெய ருடையநின்பெருமை யையவென்மொழிக் கடங்குமோபத்தி, யாயி ரந்தவர்க்காயெனவுதவு மங்கணாதிருக் கலைசைமுக்கணனே. (கூங)

மூக்குணங்களின் மூவரைத்தோற்றி மூவருக்குமுத் தொழில்வ குத்தருளி, யக்குணங்களுக் கதீதமாய்நிறைவா யத்துவாக்களைக் கட ந்தமேலுலகிற், றக்கநற்கண நாதரேத்தெடுப்பச் சத்தியம்பிகையுட னருளுருவாய்த், தொக்ககோடிசூரிய ருதயம்போற் றோற்றிநின்ற னை கலைசைவிண்ணவனே. (கூச)

விண்ணவர்க்கெலா முன்னமுன்னிடத்தே வேதனைப்படைத்த ருளினையவனுக், கெண்ணுவேதசாத் திரபுராணங்க ளெவையுமோ துவித் தனையவன்றன்பாற், கண்ணகன்புவி காத்தழித்தருளுங் கட வுளோர்தமைத் தந்தனைகலைசை, யண்ணலேயெலா முன்றிருவிளை யாட் டாகுமாலுலகினுக்கொருமுதலே. (கூரு)

ஒருகற்பத்தினி லரனைமுன்படைப்பா யொருகற்பத்தினி லரி யையுமுன்படைப்பாய், வருகற்பத்தினி லயனைமுன்படைப்பாய் மறு கற்பத்தினின் மூவரையொருங்கே, தருவைமுற்படப் பிறந்தவர்பிற ரைத் தரவுஞ்செய்குவை நின்றிருவிளையாட், டருள்பழுத்ததென்கலை சைவாழ்முதலே யாரறிந்தெடுத்தோதவல்லவரே. (நசு)

வல்லவானவர் கடல்கடைபொழுதின் மறுகவந்தெழு மாலகால த்துக், கொல்கியாவரு மோட்டெடுத்தலறி யோலமிட்டெமக் குறு சரணுனையே, யல்லதில்லையென் றரற்றிடுமந்நா ளஞ்சலீரென வல் லைநீயல்லா, லில்லைவேறெனிற் கலைசைவானவநா னெவர்க்கடைக்க லம் புகன்றுபோற்றுவனே. (நஎ)

போற்றிசெங்கதிர் மண்டலத்துறைவோய் போற்றிசோமலோ கத்தமர்முதல்வா, போற்றியன்பர்தம் மனக்குகையுடையாய் போற் றியாரழற்சிகை நுனியமர்வோய், போற்றிநாரண னகத்தொளிர்வி ளக்கே போற்றிதில்லையம் பலத்துநின்றாடி, போற்றியென்றனைப் பதித்தசெஞ்சரணா போற்றிதென்திருக் கலைசைவானவனே. (நஅ)

வானுளோர்களு மறைகளுமின்னும் வருந்திநேடியும் வரம்புக ண்டறியா, தினமுற்றலைந் துழன்றிடிற்சிறியே னேதறிந்துனைப் பா டுவனெந்தாய், கானுலாமலர்க் குழலுமைபாகா கலைசைமாநகர் மே வியவமுதே, தேனுலாமலர்க் கொன்றையஞ்சடையா திரிபுரங்களைச் சிரித்தெரித்தவனே. (நகூ)

சிரித்தெரித்தனை புரங்களைவிழியைத் திறந்தெரித்தனை மாரனையு கிரா, லுரித்துடுத்தனை யுழுவையைச்சரணா லுதைத்துருட்டினை கா லனைவிரலா, னெரித்தழித்தனை யரக்கனையென்பார் நின்றயாவையு நீங்குநாளொருங்கே, பொரித்தெரித்திட வல்லதென்கலைசைப் புண் ணியாவுனக் கிவையுமோர்புகழோ. (சo)

வேறு.

புகழ்ந்தவருக்கருள்பூங்கலைசைக்கோ
னகழ்ந்துபறந்தவரண்ணலனென்பார்
மகிழ்ந்துயர்கூடலின்மண்கள்சுமந்தே
யிகழ்ந்தடிபட்டனனென்பதுமென்னே. (சக)

என்னையுமாளுமிருங்கலைசைக்கோன்
மன்னுலகுக்கொரு மன்னவனென்பார்
மின்னிடையார்மனையெங்கணுமேவி
யன்னமிரந்தனனாவதுமென்னே. (சஉ)

ஆவகையன்பரையாள்கலைசைக்கோன்
மூவருமேவல்செய்முன்னவனென்பார்
நாவலர்கோன்விடநள்ளிருளின்க
ணேவலினேகினனென்றதுமென்னே. (சங)

என்மனமேவுமிருங்கலைசைக்கோன்
பன்மறையும்மறியாப்பரனென்பார்
கொன்மிருகூளிகள்கண்டுகைகொட்ட
வன்னடமாடினனுமிதுவென்னே. (சச)

ஆமையிழையணியக்கலைசைக்கோன்
காமமறுத்தவர்கண்ணுளனென்பார்
தாமமலர்க்குழல்கொங்கைகடாக்கக்
கோமளமேனிகுழைந்தமையென்னே. (சரு)

குழைத்தெனையாண்டருள்கூர்கலைசைக்கோன்
வழுத்தபுகீர்த்தியின்மாமலையென்பா
ரிழித்தபுறச்சமயத்தவரெல்லாம்
பழித்திடநின்றருள்பான்மையிதென்னே. (சசா)

பான்மதிசூடுபரன்கலைசைக்கோன்
மான்முதலோர்தொழுமாமுதலென்பார்
மேன்மையில்வாணன்வியன்பதிவாயிற்
கான்மலைமாதொடுகாத்தமையென்னே. (சஎ)

தமைத்தெளிவோர்தெளிதண்கலைசைக்கோ
னமைப்பருமாகருணைகரனென்பா
ரிமைக்குமுனண்டமெவற்றையுமொக்கக்
குமைத்திடுமச்செயல்கொண்டிடலென்னே. (சஅ)

கொண்டலுரிஞ்செயில்கூர்கலைசைக்கோ
னண்டமெவற்றினுமப்புறனென்பார்
மண்டனில்விண்டனில்வான்றனில்யாருங்
கண்டிடநின்றுழல்காரணமென்னே. (சகூ)

காரணகாரணனுங்கலைசைக்கோன்
பேருணர்வோர்க்கருள்பிஞ்ஞகனென்பா
ரோருணர்வின்றியுயங்குமெனக்கு
மாரருள்செய்திடுமற்புதமென்னே, (ருo)

## வேறு.

அற்புதக்கலைசைமேவுமங்கணனளக்கொணாத
பற்பலவிளையாட்டெல்லாம்பரித்திடும்பான்மைநோக்கின்
முற்பவக்கடலின்மூழ்கிமுடிவின்றியுழலுமிந்தச்
சிற்றுயிர்களின்மேல்வைத்தகருணையாய்ச்சிறக்குமன்றே. (ருக)

அன்றுதொட்டின்றுகாறுமருமறைநான்குந்தேடி
நின்றலந்தோலமிட்டுங்காணொணாநிமலமூர்த்தி
யின்றமிழ்க்கலைசைவாணனியல்பினையிரண்டுநாளிற்
பொன்றிடுமெனிதர்தேறியெங்ஙனம்போற்றுவாரே. (ருஉ)

போற்றிலேன்பூதிமெய்யிற்பூணந்திலேனெழுத்தோரைந்துஞ்
சாற்றிலேனக்கமாலைதரிக்கிலேனடியாரேவ
லாற்றிலேன்கலைசைவாழுமண்ணலேதறுகண்வெள்ளை
யேற்றனேயெளியேனந்தோவெங்ஙனமுய்யுமாறே. (ருங)

மாறிலாக்கருணைமேருமலைபழுத்தனையமெய்யு
மாறணிசடையுங்காளகண்டமுமழகுபூத்த
நீறணிமார்புமுள்ளேநிலவியநகையுமம்மை
கூறுமாய்க்கலைசைவாணனெனதகங்குடிகொண்டானே. (ருச)

கொண்டனையென்னையுன்னைக்கொடுத்தனைமலநோய்நீங்கக்
கண்டனைவினைகளெல்லாங்கழித்தனையுடலின்பாரம்
விண்டனைபரமானந்தம்விளைத்தனைகலைசைவாழு
மண்டனேயுண்டுகொல்லோவடியனேன்செயுங்கைம்மாறே. (ருரு)

மாறினேன்சமயபேதவழிப்படும்புன்மையெல்லாந்
தேறினேன்வீடுசேர்க்குஞ்சைவசித்தாந்தமென்றே
யேறினேன்சிவலோகத்தேயிரண்டறக்கலந்தொன்றாகி
யாறினேன்வருத்தமெல்லாங்கலைசைக்கோவருளினாலே. (ருசா)

அருள்வழிநடந்துபாசமறுக்குமாறுணரமாட்டீர்
மருள்வழிநடந்துமேன்மேல்வல்வினையீட்டவல்லீர்
தெருள்வழிகேட்பீராகிற்சிவபிரான்கலைசைவாழ்வை
யொருமுறையிறைஞ்சீரென்றுமின்பத்தேனுண்ணலாமே. (ருஎ)

உண்ணிறையமுதேயென்றுமுயிரினுக்குயிரேயென்றும்
பண்ணினல்லிசையேயென்றும்பழத்திடைச்சுவையேயென்றுங்
கண்ணினுண்மணியேயென்றுங்கலைசைவாழ்சிவமேயென்று
மெண்ணிநெஞ்சுருகியேத்தப்பெற்றவாறெளியனேனே. (ருஅ)

எளியனேனறிவிலாதவேழையேன்மடவாராசைக்
களியனேனுடலேயோம்புங்கடையனேனுலகவாழ்விற்
குளியனேனெனையுமாவாகுலப்புகழ்க்கலைசைக்கோமா
னளியனேனுக்கைக்கொண்டாண்டவாறென்னேயென்னே. (௫௯)

என்னையுமுனையுங்காட்டாதென்னுளேயன்றுதொட்டுத்
துன்னியமலவீரத்தின்றொடக்கறுத்தறிவுகாட்டிப்
பன்னருந்துரியாதீதப்பராபரநிலையிற்சேர்த்தா
யந்நிலைபிறழாவண்ணமளித்தருள்கலைசைவாழ்வே. (௬௦)

## வேறு.

வேயொன்றுதோளிமலையான்மடந்தைவிரிநீருடுத்தவுலகந்
தாயென்றிறைஞ்சுசிவகாமியம்மையொருபான்மணந்ததலைவன் [ழ்
வாயொன்றுமன்பினடியார்கள்வாழ்த்து கலைசைப்பெரும்பதியில்வா
றியொன்றுகையனடியேயலாதுதெருளாதுசிந்தைபிறிதே. (௬௧)

பிறப்போடிறப்பிலிதுகாறுமைந்துபிறிதொன்றுசார்புகிடையா
துறுப்பான்மயங்கிமடவார்வலைக்குளுழிதந்தலைந்தசிறியேன்
புறச்சார்புமற்றையகச்சார்புநீத்துனருளைப்பொருந்தவருளா
யிறப்பார்களென்புதலைமாலைசூடிகலைசைப்பதிக்குளிறையே. (௬௨)

இறையென்றுநம்பிவழிபாடுசெய்யினிறவாதவின்பமருவக்
குறைவின்றிநின்றவடியார்குழாங்களொடுகூடிவாழவருளு
மறையொன்றுநாவன்முதலோர்கள்வாழ்வைமதியாதவீரமுதவும்
பொறைகொண்டசிந்தையவர்கோவிருந்தபுரமேவுமாதிமுதலே. ()

முதலென்பதின்றிநடுவென்பதின்றிமுடிவென்பதின்றிமுழுதா
யதுவென்பதின்றியவனென்பதின்றியவளென்பதின்றியவையா
யிதுவென்றெவர்க்குமறியப்படாதவியல்பாகியுள்ளபொருளா
மதிதங்குசோலைசெறிகோவிருந்தபுரமன்னுமெங்கள்சிவனே. (௬௪)

சிவந்தாருமாவர்கரியாருமாவர்வெளியாருமாவர்செழும்பொன்
னுவந்தாருமாவர்பசியாருமாவரொளிவண்ணராவர்தழலாய்
நிவந்தேவிரிஞ்சர்முகில்வண்ணர்தங்கணினைவிற்குமெட்டவரியா
ரவந்தானிலாதகலைசைப்பதிக்கணமர்ந்தாருமாவரவரே. (௬௫)

அவமேவிளைத்துமுழுமூடனாகியறிவென்பதின்றியழிவாய்ப்
பவமேவிளைக்குமுடலோம்பியென்றுநரகிற்படிந்துதுளைவேன்
சிவமேவிளைக்குமடியார்குழாங்களொடுசேருநாளுமுளதோ
தவமேவிளைக்குமுயர்கோவிருந்தபுரமன்னுசைவமுதலே. (௬௬)

சைவத்தில்வந்துசரியாதிமூன்றுதடையின்றிமுற்றுபருவ
மைவைத்ததீயமலபாகநோக்கிவினையொப்புறுத்திவழியான்
மெய்வைத்தஞானகுருவாகிவந்துகதியுய்க்கவல்லவிமலன்
செய்தற்றுடுத்தகலைசைக்குண்மேவுசிவனாகுமெய்ம்மையிதுவே. (சுஎ)

இதுவன்றிவேறுசமயத்தைநம்பிவிலைமுத்தியுண்மையெனவே
மதமாறுதோறுமதிமாறுகொண்டுபலவாதமோதிமருள்வே
னதுதீரவாய்மையிதுவென்றுகாட்டியருள்செய்தசெய்கையெளிதோ
பொதுவாட்டுகந்துவளர்கோவிருந்தபுரமன்னுஞானமணியே. (சுஅ)

மண்ணீர்விசும்புகனல்காலருக்கன்மதியாவியென்னுமுறையா
லெண்ணீர்மைகொண்டவிவையெட்டுமென்றியுலகென்பதில்லையிவை
யண்ணுவுனக்குவடிவாகுமென்னிலவைதோறுயிர்க்குயிரதாங் [யே
கண்ணுனதெய்வமெவர்வேறுளார்கள்கலைசைப்பதிக்கிறைவனே. ()

வனந்தோறலைந்துவிரதங்கள்பூண்டுசடைகட்டிவாடலுறினுந்
தனஞ்சேர்ந்துயர்ந்தகுலத்திற்பிறந்துசதுர்வேதமோதிவரினுந்
தினஞ்சாத்திரங்கள்பலகற்றுவாதுசெயவல்லரேனுமெவரு
மனந்தாதியானகலைசைச்சிவன்றனருளைப்பெறுதுவிடினே. (எ0)

வேறு.

விடரொடுதூர்த்தர்பேதையர்கயவர்வேழம்பரனையரோடுறவாய்
நடையெலாங்கெடுத்தேயிழிதொழில்விரும்பு நாயினேனுய்யுமாறுள
மடலவிழ்கமலவாவிகடோறுமாதரார்வளம்புனல்குடையுந் [தோ
தடநெடும்புரிசைக்கலைசைமாநகர்வாழ்தற்பராசிதம்பரேசுரனே. ()

சுரிகுழன்மடவாரிளமுலைப்பணைப்புந் துகிலிறைசோர்வதுநகை யும், வரிவிழித்தொழிலுஞ் சேயிதழ்த்துடிப்பு மனத்திடை யெழுதி வைத்தழிவேன், றெரிதமிழ்க்கலைசைச் சிவபிரான்வடிவுஞ் செய்கை யுந் தன்னடியார்க்குப், பரிவுகூரருளு மனத்தகத்தெழுதாப் பாவி யேற் கினிப்புகலென்னே. (எ2)

என்பினைநரம்பாற் கட்டிமேற்றோல்போர்த் திறைச்சியு மூளையு மடைத்த, வன்புழுக்குரம்பை நாற்றமென்னுது மஞ்சளு மாடையும ணியு, முன்புறநோக்கி மாதரென்றெண்ணி முயங்கிட முயலுதிநெ ஞ்சே, யன்புறுங்கலைசைச் சிதம்பரேசுரன்ற ளடைந்துளோர் மதிப் பரோவுனையே. (எங)

உன்னுமுன்கடலு மலையும்வானகமு மோடுவைமீளுவைவறிதே, பன்னிடுமெல்லாங் கிடைத்ததாய்மதித்துப் பாவனைசெய்து தேக்கிடு

வா, யென்னிதிற்பயனென் றோர்ந்திலாய்கலைசை யீசனைப்பணிந்திலா யெளியேன், றன்னையுமுடன்கொண் டிழுத்திழுத்தலைத்தாய் தக்கதோ மனக்கருங்குரங்கே. (எச)

மனக்கருங்குரங்கின்கைவசப்பட்டு மயங்கினேன்பதைபதைத்துருகேன், கனக்கறைமிடற்றாயென்றழைத்தலறேன்கலைசையைச்சேர்ந்திலேனடியா, ரினக்குழாத்தெய்திச்சிவநெறியொழுகேனென்செய்கேனேழையேனந்தோ, வுனக்கெவனடுத்ததாவவென்றருளா யுலந்துபோனேன்சிவமுதலே. (எரு)

சிவனெனுமொழியைக்கொடியசண்டாளன் செப்பிடினவனுடனுறைக, வவனொடுகலந்துபேசுகவவனோடருகிருந்துண்ணுகவென்னு, முவமையில்சுருதிப்பொருடனைநம்பாவுமரோடென்பயில்கொடியோ, னிவனெனக்கழித்தாலையனேகதிவேறெனக்கிலைகலைசையாண்டகையே. (எசா)

ஆண்டவன்றன்னை யடிமையென்றுரைப்பா ரடிமையையாண்டவனென்பார், மாண்டகுபதியைப் பசுவென்றும்பசுவைப் பதியென்றுமதித்துனையிகழ்ந்தே, தாண்டருநிரயக்கிடங்கினில்வீழுஞ்சழக்கரோடிணங்குறாவரமே, வேண்டினேனருளாய் கலைசைமாநகரின் மேவிவாழ்ந்தருள்பசுபதியே. (எஎ)

பதியுமோகத்தான்மானத்தான்மருளாற் பற்றியசார்பினாலுன்னைத், துதிசெயாதிகழ்வோரிகழுககலைசைச் சுந்தராசிதம்பரேசுரனே, மதிபொதிசடையா யாங்களெல்லோமும் வழிவழியுன்னடித்தொழும்பே, நிதியெனவுடையேமென்றுமிக்கருத்தேநிலைபெறச்செய்துகாத்தருளே. (எஅ)

அருண்மடைதிறந்தநோக்கமும்வரதாபயங்களுமம்புயக்கரமுந், திருமுகப்பொலிவுங்குறுநகையழகுஞ் செஞ்சுடர்மகுடமுமமையின், மருவுதோலுடையுஞ்சேவடித்துணையுமகிழ்சிவகாமநாயகிசே, ருருவுமாய்க்கலைசைச்சிதம்பரேசுரரென்னுள்ளகங்கோயில்கொண்டனரோ

கொண்டல்போன்முழங்கிக் கூற்றுவனெதிரேகுறுகிடநாடியுந் தளரக், கண்டவரிரங்கவைம்பொறிகலங்கக் கண்டமேலெழுந்துந்தி, மண்டிடவறிவுகலங்குமந்நாளுன் மலரடிவழுத்திடமாட்டே, னண்டர்சூழ்கலைசைப்பராபரவின்றே யடைக்கலங்கண்டுகொண்டருளே. (அ0)

### வேறு.

அருவினனுருவினனருவிலனுருவில
னிருளினனொளியினனிருளிலனொளியிலன்
மருவளர்கலைசையின்மகிழ்பவனிகபர
மிருமையுமெழுமையுமெனையுடையவனே. (அக)

அவனவளதுவெனுமவைதொறும்விரவினை
யிவனவனெனவுணர்வரியதொரியல்பினை
தவமலிகலைசையின்மருவியதகுதியை
சிவனெனுமொழியினையிவையுனசெயலே. (அஉ)

செயலெலவரறிபவர்திருவளர்கலைசையின்
மயிலியலுமையொடுமகிழுவைமதனுட
லியலறவெரிசெய்துமுனியெனவடநிழ
லயலினுமமர்குவையதிசயமரனே. (அங)

அரகரகரவெனவலறிடுபுலவரொ
டரியயன்வெருவுறவருவிடமமுதுசெய்
தரிலறுமமரரென்றொருபெயரமைவுற
வருள்பவர்கலைசையிலரனலதிலையே. (அச)

இலவிதழ்மடநடையுமையொடுமிரசத
மலைமிசையமர்பவர்மகிழ்தருமிடமா
நிலைபெறவளமையுநிதிகளுமளவறு
கலைகளுநிறைவுறுகலைசைநன்னகரே. (அரு)

நகவலர்திரிபுரநலிவுறவழலென
மிகவலரரியயன்வெருவுறவுளமது
புகவலர்மதனுடல்பொடிபடவிழியெரி
யுகவலர்கலைசையினுறையிறையவரே. (அசு)

இறையவனிறையினிலியமனையுதைசெய்து
நிறையவனிறையுறுகலைசையினிலவிய
மறையவன்மறைவறவளரடியவரக
வறையவனறைபுனலவிர்சடையவனே. (அஎ)

சடைமுடியரவணிதலைகலன்வனமிட
முடையுரிகழுதினமுணவதுபலியெனு
மடைவினர்கலைசையினடிகளையவனியி
னிடையிறையெனவழிபடுபவரெவரோ. (அஅ)

எவனுலகுயிர்தொறுமிசைவுறுமருவின
னெவனவரவர்தமைவினைவழியிருவின
னெவனெனையுடையவனிணையறுபரசிவ
னெவனவனுயர்கலைசையில்வருமிறையே. (அகூ)

இறவொடுபிறவியினிழிதருமெளிய
னிறைசுகவடிவினினிலைபெறவருளின
னறிவொடுவழிபடுமடியவர்குழுமிய
செறிவுறுகலைசையில்வருபரசிவனே. (கூ0)

வேறு.

சிவந்தமேனியாய் போற்றிநாயினேன் செய்திடும்பெரும் பிழைபொறுத்துவான், சிவந்தரும்பெருங்கருணைபோற்றிகற் சிலைவளைத்து முப்புரங்கணீறெழச், சிவந்தவாளியாய்போற்றிகாலனைச் சிதைத்துருட்டியன்றூலமென்னவஞ், சிவந்தபாலனைக்காத்தளித்திடுஞ்செல்வபோற்றி தென்கலைசைவாணனே. (கூக)

வாணனூர்மனச்செருக்குமாறிட மறுவில்கண்ணனையேவல்கொண்டுபின், ஞானுருதவர்க்குனதுகோயிலி னடனகாலையிற்குடமுழக்கிடக், கோணமால்வரங்கொடுத்தளித்திடுங்குழகபோற்றிதென்கலைசைமேவிவாழ், நீணிலாப்பிறைச்சடிலமாமுடிநிமலபோற்றிமற்றெங்கண்மன்னனே. (கூஉ)

எங்குநோக்கினு மங்கெலாமெனக் கிருண்டகண்டமு நான்குதோள்களுங், கங்கைவேணியுமுக்கணுஞ்சிவகாமிபாகமும்கமலபாதமுஞ், செங்கைமான்மழுப்படையுநீற்றொளிசிறந்தமார்பமுங்காணவெய்திநின், றங்கணச்சநீத் தருள்சுரந்திடுங் கலைசைவாணநின் னடிகள்போற்றியே. (கூங)

போற்றிபோற்றியென்றமரர்மாதவர் புவியுளோர்திரண்டிசைமுழக்கிட, நீற்றொளிச்சிவநேசர்வாழ்த்தவின் னியங்களார்ப்பெழத் தெரிவைமாரிளங், காற்றினொல்குபூங்கொடியினாடிடக் கலைசைவீதியிற்கௌரியோடுநீ, யேற்றின்மேல்வருஞ்சேவைதந்தெனை யாண்டுகொண்டவாபோற்றியெந்தையே. (கூச)

எந்தைநீயெமக் கன்னைநீயெமக் கிறைவனீயெமை யாண்டநாயனீ, சிந்தைநீசெய்யுஞ்செயலுநீபெறுஞ்செல்வநீதொழுந்தெய்வநீகற்கும், விந்தைநீயெய்ப்பில்வைப்புநீநசைவெறுப்புநீயலால்வேறுகண்டிலேங்,கந்தவார்பொழிற்கலைசைவாழ்சிவகாமியாகநின்கருணைபோற்றியே. (கூரு)

கருணையாளனேபோற்றிதென்பெருங்கலைசையாளனேபோற்றி நின்னலா, லுரிமைவேறிலேன்போற்றிபாசநோயொழியுமாறுசெய் போற்றியாட்கொளக், குருவுமாயிணுய்போற்றிவீட்டினைக் கூடவே ண்டினேன்போற்றிஞாலமேற், பருவராதருள்போற்றியிவ்வுடற்பார மாற்றிலேன்போற்றியையனே. (கசு)

ஐயனேயடிபோற்றிபேரருளாளனேயடி போற்றியன்பர்பான், மெய்யனேயடி போற்றிதில்லைவாழ் வித்தகாவடி போற்றிபொய்யர் தம், பொய்யனேயடிபோற்றியீறிலாப்புராணனேயடிபோற்றிமான் மழுக், கையனேயடிபோற்றிதென்பெருங்கலைசையாயடி போற்றி போற்றியே. (கள)

போற்றிபோற்றிபேரின்பஞானமாப் புணரியாய்நிறைந்தெங்கு மாயிணுய்,போற்றிபோற்றியோர்மறுவிலாப்பெரும்புகழ்படைத்தவா னந்தவெள்ளமே, போற்றிபோற்றிமெய்யன்பர்சிந்தையிற்பொங்கி யூறுதீஞ்சுவைக்கரும்பனே, போற்றிபோற்றிதென் கலைசைவைப்ப னேபொறுக்கிலேனினிமாயவாழ்க்கையே. (கஅ)

மாயனைக்கணையாகவேவினைமாயனைவிடையாகவூர்ந்தனை
மாயனைத்திருமனைவியாக்கிமுன்மணந்துசாத்தனைத்தந்தளித்தனை
மாயனுக்கொருபாகமீந்தனைமாயனுள்ளமேகோயில்கொண்டனை
மாயனேத்திரமலர்ந்ததாளிணுய்வரதபோற்றிதென்கலைசையீசனே.

ஈசனேதிருக்கலைசைமேவிவாழிறைவனேசிவகாமநாயகி
நேசனேயருட்சிதம்பரேசனேநித்தநித்தநெக்குருகியேத்துவோர்
பாசவேரறப்பறிக்குநின்னிருபாதபங்கயம்போற்றிபொய்யெலாம்
வீசிமேலைவீட்டின்பநல்குவாய்மெல்லமெல்லவந்தெனைத்திருத்தியே.

ஆகச்செய்யுள் - க0க.



கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி

முடிந்தது.



மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.



கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம்.

ஐந்தையாறினையடக்கியருந்தவம்புரியாரேனும்
வந்தையாவெனவெல்லோரும்வணங்கிடவாழலாமால்
முந்தையாறிரண்டுதென்மழுதல்விசெய்மூதூர்வாழும்
எந்தையானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (க)

குடங்களிற்பணைத்தணந்தகொங்கைமால்களிறுமல்குற்
படங்களுங்கொடுமின்னார்செய்பருவரல்பாற்றலாமால்
மடங்களைந்தறிவான்மிக்கமாதவர்மனம்போற்காஞ்சி
இடங்கொளானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௨)

வருந்தலாதெண்ணெண்கல்விவாய்க்குமெண்செல்வப்பேறு
பொருந்தவாயுகங்களூறும்புகழுடன்பொலியலாமால்
திருந்தவால்வளையுமுத்துஞ்செய்தொறுஞ்செறிதென்காஞ்சி
இருந்தவானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௩)

பொறைதவமறிவொழுக்கம்புத்திரமித்திராதி
குறைவறுசெல்வம்யாவுங்குலவஷிற்றிருக்கலாமால்
மறையொலிமுரசந்துஞ்சாவளநகர்க்காஞ்சிவாழும்
இறைவனானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௪)

ஆசைவேரகழ்ந்துவெண்ணீறஞ்செழுத்தக்கமாலை
பூசியுச்சரித்துப்பூண்டபுனிதரோடிணங்கலாமால்
யோசனைகமழுய்யானமுடுத்திடுங்காஞ்சியூர்வாழ்
ஈசனானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௫)

பானந்தங்கையிலேந்தும்பைந்துழாய்மார்பன்முன்னும்
வானந்தங்கமரர்யாரும்வணங்கவாழ்ந்திருக்கலாமால்
கானந்தண்பொழிலிலாறுகால்செயுங்கச்சிமூதூர்
ஆனந்தருத்திரேசனடித்துணையிறைஞ்சினோர்க்கே. (௬)

கங்கணன்குள்ளான்முன்னுங்கருமமூங்காரானூர்தி
செங்கையார்பாசந்தன்னாற்சிமிழ்த்தலுந்தீரலாமால்
அங்களானுயர்ந்தகாஞ்சியகநகரமர்ந்துவாழும்
எங்களானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௭)

விழிகளான்மாதர்நாளும்விளைத்திடும்வேட்கையாய
குழிகளாடுற்றுவீழுங்கொடுந்துயர்குமைக்கலாமால்
வழிகளார்சோலைசூழ்ந்தமாமதிற்கச்சிவாழும்
எழில்கொளானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௮)

இருக்கெலாமளவிட்டின்னுமினைத்தெனவறியவெட்டாத்
திருக்குலாவியபேரின்பச்செழுங்கடறிளைக்கலாமால்
மருக்கலாரங்கண்மொய்த்தவாவிசூழ்காஞ்சிவாழ்வுற்
றிருக்குமானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௯)

மாந்தளிரியலார்செம்பொன்மண்ணெனுமார்வவாரி
நீந்திமேலானமுத்திநீள்கரையேறலாமால்
காந்துபொன்மாடஞ்சூழ்ந்தகச்சியம்பதிவாழ்கங்கை
ஏந்துமானந்தருத்திரேசனையிறைஞ்சினோர்க்கே. (௧௦)

ஆனந்தமலைபோலோங்குமம்பலத்துமையாணங்கை
ஆனந்தமகிழ்ச்சிபூப்பவானந்தவமிழ்தமூறி
ஆனந்தநிருத்தஞ்செய்யுமங்கணன்கச்சிமூதூர்
ஆனந்தருத்திரேசனடியிணைக்கன்புசெய்வாம். (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## திருவேகம்பர்

# ஆனந்தக்களிப்பு.

ஆனந்தமானந்தந்தோழி - கம்பர்
ஆடுந்திருவிளையாட்டினைப்பார்க்கில்
ஆனந்தமானந்தந்தோழி.

ஒன்றுவிட்டொன்றுபற்றாமல் - என்றும்
ஒன்றுவிட்டொன்றினைப்பற்றவல்லாருக்
கொன்றுமிரண்டுமெல்லாமல் - நின்ற
ஒன்றினைவாசகமொன்றிலளிப்பார், ஆனந்தம்.

இரண்டுவினையால்விளைந்த - வகை
இரண்டையுங்காட்டியென்சென்னியின்மீதே
இரண்டுசரணமுஞ்சூட்டி - அஞ்சில்
இரண்டையிரண்டிலடக்கவல்லாராம், ஆனந்தம்.

மூன்றுலகும்படைப்பாராம் - அந்த
மூன்றுலகும்முடனேதுடைப்பாராம்
மூன்றுகடவுளாவாராம் - அந்த
மூன்றுகடவுளர்காணவொண்ணாராம், ஆனந்தம்.

நாலுவருணம்வைப்பாராம் - பின்னும்
நால்வகையாச்சிரமங்கள்வைப்பாராம்
நாலுபாதங்கள்வைப்பாராம் - அந்த
நாலுக்குநாலுபதமும்வைப்பாராம், ஆனந்தம்.

அஞ்சுமலமஞ்சவத்தை - பூதம்
அஞ்சுதன்மாத்திரையஞ்சிந்திரியம்
அஞ்சுதொழிலஞ்சுமாற்றி - எழுத்
தஞ்சுமஞ்சாகவமைக்கவல்லாராம், ஆனந்தம்.

ஆறுறுதத்துவக்கூட்டம் - உடன்
ஆறத்துவாக்களு மாதாரமாறும்
ஆங்குறுகுற்றகளுநீங்க - இரண்
டாறின்முடிவினடனஞ்செய்வாராம், ஆனந்தம்.

ஏழுபுவனப்பரப்புங் - கடல்
ஏழுஞ்சிகரிகளேழும்பெருந்தீ
ழும்பிறவிகளேழும் - இசை
ழும்படைத்தவிறைவரிவராம், ஆனந்தம்.

டிவடிவுமாவாராம் - அந்த
ட்டுவடிவுக்குமெட்டரியாராம்
டுக்குணமுடையாராம் - பத்தி
எட்டுமுடையோரிதயத்துளாராம், ஆனந்தம்.

ன்பதுமொன்பதுமொன்றும் - மற்றை
ஒன்பதுமுப்பதுமொன்பதுமொன்றும்
ஒன்பதுமொன்பதுமொன்றும் - பின்னும்
ஒன்பதுமானவைக்கப்புறத்தாராம், ஆனந்தம்.

பத்துத்திசையுடையாராம் - பத்துப்
பத்துப்பத்தாந்திருப்பேருடையாராம்
பத்துக்கரமுடையாராந் - தவம்
பத்தினிலொன்றுபத்தாகச்செய்வாராம், ஆனந்தம்.

ஞானமுஞேயப்பொருளும் - பற்றும்
ஞாதாவுமில்லையென்பார்க்கரியாராம்
ஞானமுஞேயப்பொருளும் - பற்றும்
ஞாதாவுமாய்ப்பகுப்பார்க்குமெட்டாராம், ஆனந்தம்.

மெய்யிலணிவதும்பாம்பு - மலை
வில்லினிறுணாய்விசிப்பதும்பாம்பு
கையிற்பிடிப்பதும்பாம்பு - அவர்
காட்டினநாடகங்காண்பதும்பாம்பு, ஆனந்தம்.

நாதத்துடியினடிப்பும் - மெல்ல
நடந்துநடந்துநடிக்குநடிப்பும்
வேதம்படிக்கும்படிப்பும் - நுதல்
மீதுவிளங்குகுறுவேர்ப்பொடிப்பும், ஆனந்தம்.

கையிற்கபாலத்தழகுங் - திருக்
காலினிற்பாதுகைசேர்த்தவழகும்
மெய்யணிநீற்றினழகும் - மையல்
மீறுங்குறுநகைமூரலழகும், ஆனந்தம்.

உடுப்பதுகாவியுடையாம் - மறை
ஓதிமங்தேடுஞ்சிரமேற்சடையாம்
எடுப்பதுபிச்சையமுதாம் - மார்பில்
ஏற்பதுகாமாட்சிகொங்கைச்சுவடாம், ஆனந்தம்.

ஆனந்தக்களிப்புமுடிந்தது.

---

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

கலைசைச்

# செங்கழுநீர் விநாயகர்

# பிள்ளைத்தமிழ்.

## சிறப்புப்பாயிரம்.

இலகுசக னீரெட்டு நூற்றுநாற் பத்தேழி
னிற்கரங் கும்ப மிருபத்
தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதிகை
யேர்க்கவுல வஞ்சுப் பிரம்
கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற்
கலைசைப் பதிக்குள் வாழ்செங்
கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க்
கவிபாடி வானோ ருண
அலைமலிக டற்கடைந் தமிழ்நாட்டு மாலென்ன
வவனியிற் புலவர் செவியால்
ஆர்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிக
னரங்கேற்றி னா தலால்
நலசுகுண மணிகுவளை யணிபுயன் வீரப்ப
னல்குமக ராச யோகன்
நங்கள்கே சவபூப னநுசர்சேய் சுற்றமு
நன்மைதரு வாழ்வு றுகவே.

இன்றிழக்கு மூக்கன்றே யீர்ந்துமா னங்கொடுத்தான்
என்றுசய வீரனையே யேத்துவாள்—மன்றவே
நற்கலைமான் றாயசிவ ஞானமுனி யோதுதமிழ்ச்
சொற்சுவையை நோக்குந் தொறும்.

இவ்விரண்டு செய்யுட்களும் நூலாசிரியர் காலத்தன.

## ஆசிரியர் கருத்து.

அகளவடி வானபர மானந்த னேனுமெய்
யடியவர்க டம்மை யாள
அருளுரு வெடுத்தலா லதனிளமை நோக்கிமு
னங்நலார் கூறு மொழியாத்
தகவுபெறு சிறுதேரை யீற்றிற் றழீஇநலந்
தாங்குகாப் பாதி பத்தும்
தண்டாத வாஞ்சையிற் கலைசையுற் பலயானை
தன்னையா னின்றேத் தினேன்
இகலுமொரு வேடம் பரித்துவரு மொருவனுழை
யெல்லோரு மொல்லைக் குழீஇ
இயல்பாக வவ்வுருவ முடையவரி னும்பெருமை
யெண்ணிப் பெருஞ்செல் வமும்
மிகவுதவு நீர்மையை மதித்தியல்ப தாத்துதி
விளம்புமத் தாதிய ரினும்
வினையினேன் றன்னிடத் தோவாத பேரருள்
விளைத்திடு மெனக்கு நித்தே.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

கலைசைச்

# செங்கழுநீர் விநாயகர்

# பிள்ளைத் தமிழ்.

## விநாயகக்கடவுள் வணக்கம்.

மணிபூத்த மருமத்து நெடுமான் முதற்புலவர்
வான்பதம் வேட்ட வர்க்கு
வழங்குவோ னுந்தனது பதமிரந் தோர்க்குதவு
வள்ளலுந் தானே யெனும்
தணிபூத்த தன்றந்தை போற்பிற குறித்ததூஉந்
தற்குறித் தேன்ற தொழிலும்
நானேக டைக்கூட்ட வல்லசெங் கழுநீர்த்
தடங்களிறை யஞ்ச லிப்பாம்

அணிபூத்த தொய்யிற் கரும்புசிலை யாகவிழி
யம்பினைப் பூட்டி மடவார்
அம்புயக் கிழவனைச் சிதரனை வென்றவர்க
ளறிவினைத் திறைகோ டலும்
பணிபூத்த மலர்மகளி ராங்கதனை மீட்டிடும்
படிவந்தி ருந்து செவ்வி
பார்க்குந் திருக்கலைசை மன்னிவாழ் தன்னையே
பாடுமென் கவித மையவே.

# காப்புப்பருவம்.

## திருமால்.

கார்கொண்ட கருநிறக் காளத்தை வெண்டிரைக்
கைகளி னெடுத்து நீட்டும்
கடும்பிழையை நோக்காது திருவினொடு சுவையமுது
கதிர்மணி தனக்கு தவிடும்
பேர்கொண்ட நன்றியே பாராட்டி வெண்கேழ்ப்
பெருங்கடற் பள்ளி கொண்டு
பிறங்குநீர்ப் புவிமிசைப் புருடோத் தமப்பெரும்
பெயர்நிறுவு மண்ணல் காக்க
ஏர்கொண்ட தன்னைத் தளைப்பவரு மூருநரு
மிலரென்ப துலகு தேறற்
கெடுத்தவெம் பாசமோ டங்குசந் தன்கரத்
தேந்திமத தாரை சிதறிப்
பார்கொண்ட வெண்டிசைத் தறுகட் களிற்றுடல்
பனிப்பச் செவிக்கா லெழீஇப்
பகிரண்ட முற்றும் புகுந்துலாய்க் கலைசையிற்
பதியுமோர் களிறு தனையே.

## சிதம்பரேசர்.

### வேறு.

மறமலிந்துல கேழினு முயிர்களஞ்ச வுலாவுபு
வதைசெயும்புர நீறுசெய் புன்சிரிப் பாற்கடி

மலர்துவன்றிய வார்குழ லுமையிளம்பிடி பூதர
மகளுளஞ்சுக வாழ்வில மிழ்ந்திடத் தேக்கியும்
மதுகரங்குண மாய்வளை சிலைகொணர்ந்தம ராடிய
மதனைவென்றருள் சீர்நய னந்தனிற் பார்குரு
மதியொடுங்கதிர் வானவ ளொளியிறந்தமை யாலயர்
மகிதலங்களி கூர்தர வின்பினைக் கூட்டியும்
வெறிகமழ்ந்தறு காலுண மதுவுமிழ்ந்தலர் தாமரை
மிசைவதிந்தவ னோர்முடி விண்டகைப் பூத்தனில்
விரிகருங்கட லூடெழு கொடியவெங்கடு வானனி
வெருவுமும்பர்மு னேயப யந்தனைக் காட்டியும்
விறல்பிறங்குக டாமிசை யெதிருமந்தக னார்தமை
மெலிவுகொண்டுயிர் வீடவு தைந்தபொற் றாட்டுணை
வினையினென்றலை மேலருள் செயவிரங்கியு மோர்மரு
வியசிதம்பர ரூபனை யன்புறப் போற்றுதும்
அறலொழுங்குத ஞாதிட முழுவதுஞ்செறி நீள்கணை
யகல்விசும்பென நீடுத ரங்கமிக் கார்த்தெறி
அவிர்செழுங்கதிர் மாமணி பரவியெங்கணு மேவுவ
ததனிலொன்றிய மீனவி னந்தனக் கேற்றிட
அயல்வழிந்திடு மாறுத னகநிரம்பிய வாலொளி
யணவுதண்புனல் வாவிகு ளிர்ந்திருட் கூட்டம
தழியமென்கதிர் வீசிய வெளியவம்புலி போலுற
வருகுவந்துத ணீராமு கந்தெடுத் தாற்றல்செய்
துறையுமங்கைய ராடவ ரதுவழங்கிடு மாரமு
துணுமரம்பையர் வானவர் தங்களிற் றேற்றவிண்
உலகெனும்புகழ் மீறிய கலைசையம்பதி யேதன
துறையுளென்றுநி லாவிவ ணங்கிநிற் போர்க்கருள்
உதவுமெம்பெரு மானையெவ் வுயிர்களுங்கொடு மாமல
மொருவியன்புரு வாகிய டங்கவைத் தாட்கொளும்
உகளபங்கய பாதனை யுலகமெங்கணு மாயனை
யுடையசெங்கழு நீர்மத தந்தியைக் காக்கவே. (உ)

## சிவகாமியம்மை.

### வேறு.

கரும்பு குழையச் சுரும்பொலிப்பக் கடிப்போதுகுத்த மதனையெம்மா
கண்டு மிகையா மெனக்கருதிக் கனலிக் கூட்டு மாற்றலும்பின் [ன்

கந்தமலி பங்கயத் திருமுக மசைத்தொறூஉங்
காக்குஞ்சி மீது கவினக்
கால்யாத்த வெண்மலர்த் தொங்கல்பின் றூன்றுலாய்க்
கன்னத் தளாவி வாசம்
தந்தமத நீரிற் படிந்துகரு நிறமாய்த்
தணந்துழிப் பற்று மந்நீர்
தனையுதறி முன்னைத் தனுநிற மெய்தித்
தரங்கந் துரங்க நிரையிற்
கொந்தலரு கும்புன்னை மீமிசைத் தாவிக்
குதிக்குமணி யாழி யகடு
குழியக் குறைத்துக் கறுத்துமழை தூஉய்வெண்மை
கொண்டுவளர் கொண்ட லேய்ப்பச்
சிந்துரமு கத்தசெங் கழுநீ ரிளங்களிறு
செங்கீரை யாடி யருளே
திருந்துமடி யார்க்கருள் புரிந்தகலை சைப்பிரான்
செங்கீரை யாடி யருளே. (உ)

வேறு.

கொங்கலர் நின்னடி சென்னியில் வைத்துக் கூப்பிய கையொடுநின்
குளிருளமகிழ்தரு தொழில்புரிதாதியர் கொள்கையினிரைநிரையாய்த்
தங்கிய பங்கய மங்கையர் முதலிய தபனிய வுலகுறையுந்
தையலர் மருமத் தொய்யில் பரித்த தனக்கரி யுலவைகளுள்
திங்களி னொளிர்தன துலவை நிகர்ப்பன தேர்தர வெதிர்நோக்கித்
திரிவது போலிரு புறமு மலர்ந்தவிர் திருமுக மினிதசைய
அங்குச மேந்திய செங்கழு நீர்க்களி றாடுக செங்கீரை
அணிகிளர் கலைசை நகர்க்கு ளிருந்தவ னாடுக செங்கீரை. (ங)

சுரும்புமு ரன்றலர் கொன்றை செறித்த துலங்கொளி வார்சடிலத்
தோன்றலை யெய்திய வேணைத்திடு காலைத் தோளொடு மருமமெலாம்
இரும்புணு றும்படி யுழுதரு தகைமை யிரண்டற் குஞ்சமமாய்
இயைவது நோக்கி மகிழ்ந்திவை தம்மு ளிணங்கச் செய்வதென
விரும்பிம யத்து மடப்பிடி கோட்டொடு வில்லுமிழ் தன்னுலவை
மேவிட வைத்துக் கொங்கைத் தீம்பய மென்மெல வுண்டுமணம்
அரும்பிய செவ்வாய்ச் செங்கழு நீர்க்களி றாடுக செங்கீரை
அணிகிளர் கலைசை நகர்க்கு ளிருந்தவ னாடுக செங்கீரை. (ச)

வேறு.

பொங்கொளி வீசுபொ லங்குழை காது புகுந்தேர் கொண்டாடப்
பொன்றிகழ் தோளணி தொங்கலி னோடுபு லம்பா நின்றாடத்
துங்கநி லாவுத டங்கையி னீர்சுல வுங்கார் வென்றாடத்
துன்றிய தேமலி குஞ்சியி னோடுதொ குந்தார் விண்டாடப்
பங்கய ளுதியர் வந்துத வாதப தந்தா வென்றாடப்
பண்பறு நேரலர் நெஞ்சழல் வாயுறு பஞ்சாய் நைந்தாடச்
செங்கழு நீர்மத தந்திவி நாயக செங்கோ செங்கீரை
தென்கலை சாபுரி தங்கிய நாயக செங்கோ செங்கீரை. (கூ)

செங்கீரைப்பருவமுடிந்தது.

# தாலப்பருவம்.

புதிய வாசந் தனைப்பரப்பிப் புறத்தே யெங்குந் திரிந்தயரும் [ம்பி
பொறிவண் டினங்க டமையழைத்தம் புயத்தே னூட்டிப் பகலோ
மூதிய நிசிவந் திடும்போது முகைவிண் டலர்ந்த நறுங்குமுத [பின்
மூரிச் செழுந்தேன் முகந்தூட்டி முழுதுங் காத்துக் கடல்வரைப்
வதியு மிரவோர் தமைக்கீர்த்தி மகளாந் தூநின் வரக்கூவி [யோர்
மகிழ்ந்தெப்போது மெவ்வாறும் வழங்கிக் காக்கும் பெருங்கொடை
கதிய தடஞ்சூழ் திருக்கலைசைக் களிறே தாலோ தாலேலோ
கருணை முதிர்ந்த செங்கழுநீர்க் கன்றே தாலோ தாலேலோ. (க)

தொடுக்குந் தெரியற் கருங்கூந்தற் றோகை யனையார் துடுமெனநீர்த்
துறையுட் பாய்ந்து விளையாடத் துண்ணென் றெழுந்து மேற்சென்
தடுக்கும் பசுங்கோட் டலர்கனிகாய் சாடித் தனது வயிறுருவத் [று
தாக்கு நெடுவா ளையுமதனைத் தன்னுட் பிணிக்குந் தேனடையும்
அடுக்கும் பரிதி நுழைந்துநின மலைக்கும் பகைமை மீக்கொண்டங்
கடர்த்துப் பறித்த வன்றிருத்தே ரச்சு மதுகோத் திடுமுருளும்
கடுக்கும் பொழில்சூழ் திருக்கலைசைக் களிறே தாலோ தாலேலோ
கருணை முதிர்ந்த செங்கழுநீர்க் கன்றே தாலோ தாலேலோ. (உ)

வேறு.

வேய்மரு டோளியர் குஞ்சி திருத்தி மிலைச்சிய செம்மணியின் [ய்தே
விற்பயில்கொண் டைவெய் யோனெனவாங்கி யுடைத்திருகூறுசெ

தேய்மதி கொண்டபி ரான்சடை மேலெழில் செய்கெனவோர்பிளவை
சேர்த்துப் பின்னொரு பிளவுமை யாண்முடி செருகிச் சமமாகத் [ச்
தூய்மதி யென்றிறை மார்பணி கொம்பைத் தொடையி லறுத்துடனந்
தோகை முடிக்கணி சைத்து மகிழ்ச்சி துளும்பித் தந்தையொடும்
தாய்மகிழ் கூர நடித்தருள் செல்வா தாலோ தாலேலோ
தகைபெறு செங்கழு நீர்மத வேழந் தாலோ தாலேலோ. (ரு)

வெண்டலை யேந்திய வேணிமு டிப்பரன் மெய்யினும் வெம்பனிசூழ்
வெற்பன் மடக்கொடி மெய்யினு மேறி மிதித்தா டுந்தோறும்
வண்டலை யுக்கடி வீசுக வுட்புறம் வாக்கும தப்புனலும்
வார்தரு தடவுக் கைத்துளை யுமிழு மதப்புன லுஞ்சிரமேற்
கொண்டலை நிகரக் கொட்டுவ திருமுது குரவர் தமக்குமணம்
குலவிய யமுனையு மந்தா கினியுங் கொடுவந் தாட்டல்பொரும்
தண்டலை சூழ்கலை சைச்சிறு களபந் தாலோ தாலேலோ
தகைபெறு செங்கழு நீர்மத வேழந் தாலோ தாலேலோ. (சு)

வேறு.

மலைம டந்தையருள் பாலா தாலோ தாலேலோ
மதமி குந்திழிக போலா தாலோ தாலேலோ
அலகி லன்பர்பணி காலா தாலோ தாலேலோ
அருள்சு ரந்திடும்வி சாலா தாலோ தாலேலோ
இலகு கின்றபணி மார்பா தாலோ தாலேலோ
இனிய மந்திரசொ ரூபா தாலோ தாலேலோ
பொலிபெருங் கருணை யாளா தாலோ தாலேலோ
புகழ்பெ றுங்கலைசை வாண தாலோ தாலேலோ. (எ)

தாலப்பருவமுடிந்தது.

# சப்பாணிப்பருவம்.

பக்குவமு திர்ந்துசிவ புண்ணியநி ரம்பிமல
பாகம்பி றந்து சத்தி
பதிந்துவினை யொப்புப் பழுத்தவர்கள் பந்தநோய்
பாற்றுமொரு செங்கை மலரும்
அக்கருணை யடியவர்க ளுயிருடன் பொருள்காய
மாமெவ் வகைப்பந் தமும்

அங்கீக ரிக்குமோர் கைமலரு மாறுபா
டாதரித் திடுசெய் கையான்
மிக்குறும் பகைமைமேன் மேலெய்தி யாங்கது
விலக்கத் தமக்கு யர்ந்தோர்
மேதினிக் கின்மையாற் போராட் டியற்கையின்
மெலியாம லொன்றை யொன்று
தக்கவகை தாக்குதல் கடுப்பக் கவின்செயவொர்
சப்பாணி கொட்டி யருளே
தங்குகலை சைப்பதிச் செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டி யருளே. (க)

வயங்குமுழு மதியத் திருஞ்சுவைப் புத்தமுது
வாய்மடுத் துண்ண வெண்ணி
வருகின்ற தகுவர்குல மொப்பக் கலித்தலை
மடிக்குந் திரைப்பு னற்பூம்
கயங்கிளர்செ ழுங்கமல வாண்முகத் தூற்றெழூஉங்
கலுழிக் கடாம டுப்பக்
கருதிவரு மெல்லிசைத் தும்பியும் வண்டுங்
கறங்குமி ஞிறுஞ்சு ரும்பும்
பயங்கதுவ மொய்த்தவை விரைந்தோட வோச்சுறூஉம்
பண்புபொர வேற்போர்க் குவான்
பரிசிலைய ளித்தளித் துச்சிவந் தாங்கொளி
பரப்பிமணி யாழி பூண்டு
தயங்குமிரு கைகளா லெழில்பூப்ப மதகளிறு
சப்பாணி கொட்டி யருளே
தங்குகலை சைப்பதிச் செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டி யருளே. (உ)

வேறு.

மும்மல மாமத முற்றுப் போத முழுத்தறி யறவீசி
முகிழ்த்தல ரன்பின் சங்கிலி யுதறி முதிர்ந்தவ ருட்கூடத்
திம்மென நீங்கி வெளிக்கொடு புவன மெனுங்கடு வனமோடி
எப்பா கர்க்கு மடங்கல வாகி யியங்கு முயிர்க்கரிகள்
தம்மைவி டாது தொடர்ந்து பிணிப்பத் தருமங் குசபாசம்
தாங்குதல் கண்டுந் தம்போ லெண்ணிச் சார்பவை தமைநகையாக்
கொம்மைம லர்க்கைகள் கொட்டுவ தேய்ப்பக் கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசைந கர்க்கிறை கொட்டுக சப்பாணி.

மட்டுமிழ் கொன்றை மிலைச்சுபொ லஞ்சடை வள்ளலு நள்ளிருள்கூர்
வண்டுளர் குழலுமை யாளுங் கைதொடும் வள்ளத் தறுசுவையும்
தொட்டுவ ளாவி யளைந்தவர் மிசைமுடி தொட்டடி மட்டுமுறத்
தூவிவி டுத்தணி வீதிபு குந்து தொடர்ந்து சிறார்குழுமி
இட்டுநி றைத்திடு புழுதிக் குவைகளை யெற்றி யுழக்கியநீ
இயைந்திடு மப்புழு தித்துகள் போம்படி யெண்ணிக் கைகளிணைக்
கொட்டுவ தெனவெழில் கொட்டிட வோர்முறை கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசைந கர்க்கிறை கொட்டுக சப்பாணி. (ச)

வேறு.

விரிதிரை பொங்கியு லாவும ளக்கர்ம ணிப்பாயன்
மிசைவிட முந்தும ராவணை யிற்றுயில் புத்தேளும்
மருமல ரம்புய மேவுமி ருக்கைம றைக்கோவும்
மதமழை சிந்துவெ ளானையெ ருத்தனு மற்றோரும்
அருடரு கென்றுப ராவிநி னைத்தது செப்பாமுன்
அவரவர் சிந்தையி னூர்வன முற்றும ளித்தோகை
கருதிடு செங்கழு நீரிறை கொட்டுக சப்பாணி
கலைசைபு ரந்தருள் காரண கொட்டுக சப்பாணி. (ரு)

சப்பாணிப்பருவமுடிந்தது.

# முத்தப்பருவம்.

அதிருந் தரங்க முரசறைய வளிபண் பாடத் துள்ளுவரால்
அனைத்தும் வெடிபோய்த் தாவிமறிந் தாடிக் குதிக்கச் சங்கினங்கள்
பிதிருந் தரளம் பரிசிலெனப் பேணிச் சொரியும் புனற்றடஞ்சூழ்
பெருநீர்க் கலைசைச் செங்கழுநீர்ப் பிள்ளா யல்குன் மணிப்பாம்பும்
கதிரும் பசும்பொற் றனக்கோடுங் காயத் துடையே நீயணியும்
கலனும் பணிக்குங் கோட்டினுக்குங் கடுத்து வெருவே மனுகவந்து
முதிருஞ் சிவப்பூர் செழுங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முழுது முணர்ந்த பரபோக முதல்வா முத்தந் தருகவே. (க)

கொாத்து நிரைத்த மலர்ச்சோலைக் குயில்கூஉங் கலைசைச் செங்கழுநீ
குழகா வம்மை யுனையீன்ற கோமான் றனக்குப் பணிநிலைக்க [ர்க்
வைத்து நிரைத்த பலவண்ட வகுப்பும் வெள்ளிற் கனியெனநீ
மதித்துக் கவளங் கொளக்கரத்தால் வளையே லெந்தாய் தளவமலர்

ஒத்து நிரைத்த நகையாடி யுன்றோ ரிமை பாராட்டும்
ஓகை மடவா ரெனயாழு முலவா வின்பக் கடன்மூழ்க
முத்து நிரைத்த கனிவாயான் முத்தந் தருக முத்தமே
முழுது முணர்ந்த பரபோக முதல்வா முத்தந் தருகவே. (உ)

வேறு.

துளிதூங்கு தேந்தொடை மிலைச்சிய கருங்கூந்தல்
சுவன்மிசைப் புரள நின்று
தொடித்தோள் பெயர்த்தர மடந்தையர்க ளிருபுறந்
தூமணிக் கவரி வீசத்
தெளிதூங்கு நவமணி குயிற்றியணி வாலுளைச்
சிங்கஞ் சுமந்த தவிசில்
செங்கோ னடாத்துமிறை வைப்புமுத லெங்கணுஞ்
செல்லப் பரந்து விரியும்
அளிதூங்கு மெமதுளப் பங்கயங் குவியவது
வல்காமை நிற்கு மளவும்
அவிரொளி பெருதவெம் முகமதியு மாவிப்ப
வமிழ்தம் பொழிந்தா லெனக்
களிதூங்கு நகைநிலவு சிறிதே யரும்புமின்
கனிவாயின் முத்த மருளே
கலைசைநகர் வந்தசெங் கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்த மருளே. (ரு)

திரைபூத் தொடங்குவ தெனப்படி யளிக்குலஞ்
சிறைபுடை பெயர்த்தொ டுக்கித்
தீஞ்சுவை மடுத்துண்டு களிதரப் பூங்கவு
டிறந்தூற் றிருந்து வட்டும்
விரைபூத்த கடமுங் கொலைத்தொழில் பழுத்தொழுகும்
வெய்யகூர்ங் கோடு மெங்கள்
மென்மலர் முகத்திற் பெறுங்கறையு மூறும்
விளைத்திடன் விளைக்க வெங்கண்
மறைபூத்த கண்ணிமைக் குள்ளெழுது மையும்
வயங்கு மூக்கணியு மையன்
வதனத் திருங்கறையு மூறுஞ் செயாவன்பு
வாய்ப்பப் பவக்க டற்கோர்

கரைபூத்த செம்மொழிப் பழமறை முளைத்தநின்
கனிவாயின் முத்த மருளே
கலைசைநகர் வந்தசெங் கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்த மருளே. (௯)

வேறு.

மறைநெறி யொழுகுநர் தங்களை யாள மதித்தம றைப்பொருளே
வளிவெளி சலநில மங்கி யெலாமுரு வத்துநி றுத்தவனே
நிறைவளை மகளிர் நலம்படர் வோர்த நினைப்பிலொ ளித்தவனே
நிருமல வறிவினர் சிந்தை நிலாவிய நிர்க்குண வற்புதமே
அறைகட லுலகொடு பங்கயன் மாலை யளித்துவ ளர்த்தவனே
அவரவர் பெறவுறு பந்தமும் வீடு மமைத்தவ றக்கடலே
முறைவளர் கலைசைகொள் செங்கழு நீரிறை முத்தம ளித்தருளே
முனிவர்க ளமரர்கள் வந்தடி தாழ்பவ முத்தம ளித்தருளே. (௰)

முத்தப்பருவமுடிந்தது.

# வருகைப்பருவம்.

சுத்தவொளி யாகியறி வாகிமல மாயைத்
தொடக்கிற் படாத நிறைவாய்த்
தொல்லுலக மெங்கணுங் கரைபுரண் டலைமோது
சுகாதீத வாரியி லெமை
வைத்தருள வெம்போ லெடுத்தநின் றிருமேனி
மழமையைக் கண்டி னமென
மதித்தளவ ளாவிவிளை யாடக் குறித்தோடி
வருமிள மகார்கள் குழுமி
மொய்த்தவழி நீதவழ்ந் தெதிர்வரவு காண்டலு
முழுக்களிறி தென்ன வெருவி
மொய்யொளிக் கண்களைக் கையாற் புதைத்தலறி
முன்விரைந் தோட முளரிக்
கைத்தலத் தங்குசம் பாசந் தரித்தசெங்
கழுநீர்ப் பிரான்வ ருகவே
கண்கதுவு மெழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசைநா யகன்வ ருகவே. (க)

அலங்கொளி ததும்பிக் கொழுந்துவிடு நித்தில
மலைத்துக் கொழிக்கு மலையால்
ஆற்றல்புரி தன்கரை கரைத்துத் தமக்குறுதி
யாக்குநர்த மூக்க மாய்க்கும்
விலங்கனைய புல்லியர் பொருஉம்புனற் பூந்தடம்
விலங்கா மலங்கு மீன்போல்
விழையுநின் முன்புறங் காண்டோறு மூற்றிய
விலாழிக் கடாங்கொள் களபக்
குலங்களை திர் கொண்டோகை கூர்ந்திடப் பின்புறக்
கோமளங் காணுந் தொறும்
குழமைச் சிறுருங் குழீஇத்தொடர்ந் துன்போற்
குலாவிவர வெம்மு ளத்துக்
கலங்குமரு ளீர்ந்திட் டிலங்குமருள் காட்டுசெங்
கழுநீர்ப் பிரான்வ ருகவே
கண்கதுவு மெழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசைநா யகன்வ ருகவே. (உ)

மண்டலத் துண்டுடுத் திளநகை மடந்தையர்
வடந்தழுவு கொங்கை தோயும்
மருளன்றி யருளிலாப் பூரியரு மாரியரும்
வாக்குமன மெட்டா தநீ
கொண்டநற் றிருமேனி யுண்மையைத் தத்தங்
குறிப்பினுக் கேற்ப மொழியும்
கொள்கைபோற் சேயிடையி னின்வரவு கண்டுசிலர்
கூடும்பொ துக்காட் சியால்
வெண்டாள நீள்கோட்டு வாவென்று ளங்கொள்ள
வேறுசில ருற்று நோக்கி
வேழமன் றீங்கிது தவழ்ந்துவிளை யாடுநம்
விநாயகன் கோல மென்னக்
கண்டனர் மொழிந்துளத் தள்ளூற வெங்கள்செங்
கழுநீர்ப் பிரான்வ ருகவே
கண்கதுவு மெழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசைநா யகன்வ ருகவே. (௩)

**வேறு.**

இருகை யூன்றித் தவழ்ந்துமழ வேற்றின் வருந்தோ ருங்காங்கே[வும்
எறும்வன் புழைக்கை நெட்டுயிர்ப்பா னிருமா நிலத்தைக் குழிப்பது

பெருகுங் கடைக்கால் செயுஞ்செவிவான் பிளப்ப தேய்ப்பப் பல்கா
பெயர்ந்து மடங்கி யசைந்தாடும் பீடுந் தத்தம் பொறிதமக்கு [லும்
மருவும் புலனை யவற்றிடமா மண்ணை யகழ்ந்தும் வெளிப்பரப்பை
வளைத்துங் கவவிக் கொடுத்துதவும் வண்மை காட்ட வசைந்தசைந் [து
முருகுவிரியுந் தொடைப்புயத்து முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர் முனியே வருக வருகவே. (சு)

உருகு மடியா ரள்ளூற வுள்ளே யூறுந் தேன்வருக [போய்த்
உண்ணத் தெவிட்டாச் சிவானந்த வொளியே வருக புலன்வழி
திருகு முளத்தார் நினைவினுக்குச் சேயாய் வருக வெமையாண்ட
செல்வா வருக வுமையீன்ற சிறுவா வருக விணைவிழியால்
பருகு மமுதே வருகவுயிர்ப் பைங்கூழ் தழைக்கக் கருணைமழை
பரப்பு முகிலே வருகநறும் பாகே வருக வரைகிழித்த
முருக வேட்கு முன்னுதித்த முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர் முனியே வருக வருகவே. (௯)

வருகைப்பருவமுடிந்தது.

## அம்புலிப்பருவம்.

தண்டரள மேந்தித் தயங்குநீள் கோட்டைத்
தழீஇச்சித் திரம்பெற் றவான்
தனியுவாத் தரவந்து மல்குநா கத்தார்க
டண்டாது சூழ்ந்து மகிழ்வு
கொண்டிட விலங்குதொட் டிக்கலையி னளியமிழ்து
கொட்டியெமை யாளு முக்கண்
குழகன் படைத்தபெரு வையஞ் சுமந்தாற்று
கொள்கையி னுருக்கொண் டெதிர்
கண்டவர் வியப்புறும் படியருண மணியுருக்
கவினுரு மொளிவீ சிடும்
காட்சியா னின்னையிவ னொத்துளா னீயுமிக்
கடவுளை நிகர்த்து ளாய்காண்
அண்டரும் பழமறையு மோலமிட நின்றவனொ
டம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ யாட வாவே. (க)

ஒளிவந்த நீயுடற் கூறுபடு வெம்பாந்த
ளொன்றனுக் கஞ்சி யஞ்சி
உழிதந்து திரிவையிவ னண்டபகி ரண்டமு
மொருங்கஞ்ச வெய்து யிர்க்கும்
துளிவந்த காரிபடு துளைவெள் ளெயிற்றுவாய்த்
துத்திப் படக்கோ ளராத்
தொகையெலா மெய்யினுங் கையினுங் கலனெனச்
சூழ்ந்துகொண் டான்வெண் மைகூர்ந்
திளிவந்து தேயுங் களங்கவுரு வுடையைநீ
யிவன்செம்மை வாய்ந்து தேயா
தென்றுமக ளங்கவுரு வுடையனு கலிநிவனை
யெவ்வாறு மொப்பா யலை
அளிவந்து நின்னையு மழைத்தனன் காண்விரைந்
தம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறு
டம்புலீ யாட வாவே. (உ)

கரும்பினை நெருக்கிநெரி செய்ததன் றேறலைக்
காற்றுநெட் டாலை யேய்க்கும்
கயமுகன் கையகப் பட்டுநல நீங்குசுரர்
களைகணுய்த் தோன்றி யவனைத்
துரும்புபட வென்றழித் தவ்வமர ரோடுநின்
றுயருந் தவிர்த்த ளித்த
சூழ்கருணை நீயறிவை யன்றியும் யாருந்
தொடங்குதொழி லினிது முற்ற
இரும்புவியி லூறுதீர்த் தருள்பவனு மிவனலா
லில்லையிவ னிசையை யின்னும்
இயம்பிடி னுலப்புறு தீங்குநீ வரினுன்பி
னெய்திடும் பாம்பு மணியும்
அரும்பணிக ளொடுவைத்து மீண்டுதொட ராதுசெயு
மம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறு
டம்புலீ யாட வாவே. (௩)

தெருளாத தக்கனுர் வேள்வியை யழித்தும்பர்
சென்னியை யுருட்டி நினையும்

தேய்த்தசய வீரனு மிவன்றம்பி யென்பதுந்
திருமார்ப னவம திப்ப
உருளாழி கைக்கொண்டு மற்றவ னிரந்தாங்
குளுற்றும்விக டக்கூத் தினுக்
குள்ளம் பெருங்கருணை பூத்தபின் னுங்கதனை
யுதவினு னிவனென் பதும்
வெருளாது சிறிய வரக்கனைப் பந்தாடி
விட்டதுங் கேட்டி லாய்போல்
வேண்டினா மேவலி னழைத்திடவு மதியாது
விண்ணூறு சேறி கண்டாய்
அருளா திவன்கடியில் வேறுபுக லேதுனக்
கம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ யாட வாவே. (ஃ)

வையகம் போற்றுமெம் மானிவனை நீயவ
மதித்துவெஞ் சாப மெய்தி
வசையிடைப் பட்டனைமு னின்றுமவ மதிசெய்து
வாராம லொழியி னங்கண்
எய்தியொரு தண்டமும் புரியவேண் டாதிவ
ணிருந்தாங் கிருந்து நீள்கை
எடுத்துவிண் ணூறநிமிர்த் தொருதுருவ னோர்பிணித்
திடுஞ்சூத் திரத்தி னின்றும்
ஒய்யென வறுத்துனைப் பற்றிப் படுப்பனிவ
னுடல்பூண்ட பாப்பி னத்துள்
ஒன்றறியி னண்ணூந்து தாவியுனை யுண்டுபின்
னுமிழாது விடினும் விடுமால்
ஐயமிலை யாகலான் மற்றிவன் வெகுளுமுன
மம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ யாட வாவே. (ங)

அம்புலிப்பருவமுடிந்தது.

# சிற்றிற்பருவம்.

கூன்பாய் வடிவச் சிலைநுதலுங் குவவுத் தனமும் வாய்த்தமலைக்
குமாரி யுளமும் விழியுமகிழ் கூரக் குறும்பு விளையாடி
வான்பாய் கருணை பூத்திங்கும் வந்தா யெந்தாய் சிறுவீடு
வகுக்குந் தொடக்கத் துனைப்போற்ற மறந்தேஞ் சிறியே மதனானீ
தான்பாய் வெகுளி மீக்கொண்டுன் றன்மை காட்ட லடாதுனக்கித்
தாழ்வு தீரச் சிறுசோறு தருவே முன்னர் வாவிதொறும்
தேன்பாய் கலைசைச் செங்கழுநீர்ச் சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ் செல்வா சிற்றில் சிதையேலே.

விருந்து விளிப்போ மெனக்கருதும் வேலை யடிகே ளிவணீயே
விரும்பி வந்தா யெனமகிழ்ச்சி மீக்கூர் தலினாற் செவ்வாயின்
முருந்து தோன்ற முறுவலித்தே மல்லா லொருநின் கரிமுகம்போன்
முகமும் பூதப் பெருவயிறு முடங்குங் குறட்டா ணகுநடையும்
இருந்த வாறு நோக்கிநகைத் திட்டே மல்லே மிடந்தோறும்
இருக்கு முழக்குந் தேவாரத் திசையுந் துவன்றி யோங்கவளம்
திருந்துங் கலைசைச் செங்கழுநீர்ச் சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ் செல்வா சிற்றில் சிதையேலே.

தவளம் பழுத்த கூனிளஞ் சசிநே ருனது கோட்டினொடு
தடந்தாழ் புழைக்கைக் கெதிராகத் தனத்தோ டுரோமா வலிதாங்கும்
பவளம் பழுத்த சேயிதழார் பயிலு மனைக ளன்றியொன்றும்
பற்றாச் சிறியேஞ் சிறுவீடுன் பதத்துக் கிலக்கோ பசுபோதக்
கவளந் தெவிட்டு மதகளிறே கண்ணின் மணியே நான்மறையும்
கதறித் திரிந்துங் கண்டறியாக் கதியே துறைக டொறுந்தாளம்
திவளுங் கலைசைச் செங்கழுநீர்ச் சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ் செல்வா சிற்றில் சிதையேலே.

நென்னற் பொழுது விருந்தாக நின்னை விளிப்பேங் கடக்கலுழி
நீத்தஞ் சிற்றி லழிக்குமெனா நினைவால் விடுத்தே நான்மறையும்
உன்னற் கரிய பரம்பொருளே யுண்மை யிதுவா மவமதியால்
உன்னை யழையா திருந்தேமென் றுள்ளங் கறுவிச் சிறியேமை
இன்னற் படுப்பக் குறும்புபல வியற்றா நின்றாய் நின்பெருமைக்
கேலா தடிகேள் பெருங்கருணைக் கெல்லா யெளியேந் தவப்பேறே
தென்னற் கலைசைச் செங்கழுநீர்ச் சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ் செல்வா சிற்றில் சிதையேலே.

பெருத்தவயிறு தயங்கமெல்லப் பெயர்ந்து நடந்து குடங்கைமிசைப்
பெரும்பண் ணியமு மேந்தியெம்பாற் பேணி வருநின் வரவினைக் [கண்
டருத்தி யொடுநீ யுண்டபரி கலசே டத்தை யடியேங்கட்
களிக்க வருவா யென்றுவகை யரும்பி வழிபார்த் திருந்தேமை
வருத்த வழகோ விக்கினஞ்செய் மன்னனெனும்பேர் பேதையரேம்
மாட்டுத் தெரிப்ப தொருபுகழோ மடவா ருடன் மவுணரென்றும்
திருத்துங் கலைசைச் செங்கழுநீர்ச் சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ் செல்வா சிற்றில் சிதையேலே.

சிற்றிற்பருவ முடிந்தது.

## சிறுபறைப்பருவம்.

குறுகுறுந டந்தெய்தி யெம்பிரான் றிருமேனி
குழையமே லேறி வேணிக்
கொத்தினைக் கோட்டினிற் கோத்தலைத் துதறிவான்
குளிர்புனல் புழைக்கை யெற்றிப்
பொறியரவு தலைமாலை வெள்ளென்பு கைம்மாப்
புலிச்சரும முதல ணியெலாம்
பொள்ளென வெடுத்தெடுத் தங்கைய னலிற்பெய்து
போக்கியிள மதியை யன்றி
எறுழுலவை யொன்றப் பொருத்தித் திருக்கைமா
னிடைவைத்து முற்று மதிசெய்
திருவிசும் புய்த்துவான் றருத்தரும் பேரணிகொ
டெங்கணு மலங்க ரித்துச்
சிறுமையிலை யினியென வசைக்குங் கரங்கொண்டு
சிறுபறை முழக்கி யருளே
தென்கோ விருந்தநக ருற்பலவி நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. (௧)

இருக்கோல மிட்டின்னு மறியாத நின்று
ளிறைஞ்சாது தபுமாந் தருக்
கிறுதியிற் கட்கடை நெருப்புகச் சீறிவரு
மியமன் றருக்கோ தையும்
உருக்கோல மேவச் சிரக்கவச மாகமை
யுண்டவிழி வாளி புருவம்
ஒருதனுவெ னக்கொண்ட சேனைக ணிரைத்தம
ருழக்குமதன் வெற்றி முரசும்

கருக்கோடி கோடியுற் றுழல்புறச் சமயக்
கருத்தினர் குரைக்கு மொலியும்
காதுறு வண்ணமமிழ் தஞ்சொரிவ தேய்ப்பக்
கறங்கவடி யார்க ளுள்ளத்
திருக்கோயின் மேவிவிளை யாடுமிள மதகளிறு
சிறுபறை முழக்கி யருளே
தென்கோ விருந்தநக ருற்பலவி நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. (உ)

வேறு.

சழக்குப் படுசில பேய்கண் மடிந்தவர் சரிகுடர் வலைதாங்கித்
தடவுத் தோற்பல கைத்தொகை யாவுந் தளைதரு தெப்பமெனப்
பழக்கித் திரையெறி குருதிச் செக்கர்ப் பரவைப் பூம்புனலுள்
படர்ந்து நெடுந்தசை மூளைவ ழும்புகள் பற்றிவ் ருந்தயர
உழக்கிக் கடல்படு படைகளை னைத்து முடைந்துபி திர்ந்தலற
ஒன்னலர் சென்னி யுருட்டிக் கயமுக னுரமிரு பிளவுசெய்து
முழக்குற் றிடுவிறன் மாமுர சாள முழக்குக சிறுபறையே
முற்படு கலைசையி லுற்பல வேழ முழக்குக சிறுபறையே. (ங)

குடங்கைகு வித்திமை யோர்தொழ நின்று குனிக்குந் தாதையிடம்
குறுகியு ரத்தொளிர் பன்றிக் கோடுங் குளிர்சடை யிளமதியும்
உடங்குப றித்துக் குனிவிற் கைக்கொண் டுயர்துடி கொட்டியவன்
உரித்தணி யும்பற் கோடுபி டுங்கிமு னேந்திய யத்தையெழீஇ
வடங்கிளர் கொங்கைத் துர்க்கைமி தித்திவர் மயிடத் துலவைபறீஇ
மாலவ னின்னிய மோதியெ வர்க்கு மகிழ்ச்சி தரக்களியான்
முடங்கலு ருதெதி ராட்டயர் களிறு முழக்குக சிறுபறையே
முற்படு கலைசையி லுற்பல வேழ முழக்குக சிறுபறையே. (ச)

வேறு.

மலைவற முப்பொரு ளியல்புதெ ளித்தரு ளொருமுதலே
மலமென முற்படு வினைகள றச்செயு மெமதுயிரே
அலையும னத்தையு நிலையினி றுத்திடு மருளுருவே
அமிழ்தினி னித்துட விடனுமு கிழ்த்தொளிர் சிவவிளைவே
உலைவறு கற்பக மெனவருள் கொட்டிய மழகளிறே
உலகம னைத்துநி னுடலில டக்கிய நிறைபொருளே
கலைசையி லுற்பல விறைவமு ழக்குக சிறுபறையே
கடலொலி பிற்பட வினிதுமு ழக்குக சிறுபறையே. (ரு)

சிறுபறைப்பருவமுடிந்தது.



# சிறுதேர்ப்பருவம்.

செக்கர்க் குரூஉமணிச் சுடிகைப் பொறிப்படச்
சேடன்சு மந்தாற் றிடும்
திண்புடவி முழுதுங் கிளைத்தறுத் தப்புறஞ்
சென்றுதன் பகைவாழ் விடம்
ஒக்கப் பெருந்துகள் படுத்திமோட் டாமையோ
டுடையநிண முண்டு பல்லின்
ஒண்குடரி னுதிகவ்வி யீர்த்துரீஇச் சிவபிரா
னுகளபத மன்று தேடப்
புக்குற்ற கேழல்பல் லூழிக ளிடந்தெய்த்த
புலமெலா மொருக ணத்தில்
போந்துகீ ழண்டச் சுவர்த்தலை துளைத்துப்
புறங்கோத்த நீர்சு வற்றித்
திக்கெட்டு முட்டியுல வாகுப் பரிப்பாக
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பலவி நாயகன்
சிறுதே ருருட்டி யருளே. (க)

நிறந்துளை கொடும்படை திறந்தபுண் வழிதோறு
நெருப்பெனக் குருதி பாய
நெடுங்கிரி யெனப்புரண் டார்த்துக் கடாக்கரியி
னிரையெலா மெங்கு மின்னுப்
புறந்தர விடித்தெழுங் கார்முகிற் கூட்டம்
பொரக்கிடந் தலற மள்ளர்
பொன்முடி கரங்கால் வழும்புகுடர் சோரிப்
புனன்மேன் மிதப்ப முற்றும்
பறந்தலைப் புக்குநரி கொடிகழுகு வெம்பேய்
பருநதொடு விருந்து செய்யப்
பகைத்தகுவர் சேனைக் கடற்கிடைத் தோணியிற்
பாயுங் கொடிஞ்சி கிடுகால்
சிறந்ததிண் டேர்பல வுருட்டும் பகட்டண்ணல்
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பலவி நாயகன்
சிறுதே ருருட்டி யருளே. (உ)

விண்ணத் தியங்கும் பசும்புரவி யேழ்பூண்ட
வில்லுமிழ் கொடிஞ்சி யந்தேர்

வீற்றிருந் தாருஞ் சுடர்ப்பரிதி வானவன்
வியந்துனைக் காணுந் தொறும்
பண்ணப் பணைத்தநந் தேரினும் விசைத்தேகு
பாழிமான் றேரு மிருளைப்
பருகிக்க திர்க்கற்றை காலுநம் மொளியின்மேம்
பட்டபே ரொளியும் வாய்ப்பத்
தண்ணற்க ருங்கட லுடுக்கைத் தலத்துச்
சரிக்குமொரு பரிதிப் பிரான்
தானுகு மென்றுள்ள மருளநின் றிருமேனி
தண்பவள வொளிவீ சிடத்
திண்ணப் பொலஞ்சகட் டவிர்மணிக் கூவிரச்
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பலவி நாயகன்
சிறுதே ருருட்டி யருளே. (௩)

அலைக்குமயில் வேல்விழிக் கன்னிமைப் பருவத்
தணங்கினர் முலைக்கு நிகராம்
அம்பொற் பொருப்பினைக் கோட்டினாற் கன்னிமை
யழிந்தபரு வத்து மடவார்
முலைக்குநி கராகச் செயும்பிரம சாரியே
மூதண்ட மூன்று மந்த
மூரிப் பொலஞ்சிகரி பேர்த்தெடுத் தங்கையான்
முனியென்ன வாங்கி மூற்றும்
தொலைக்குமடன் முப்புரிசை வென்றநாட் சிவபிரான்
றுண்ணென் றுகைத்த திண்டேர்த்
தொன்னிலை யழித்தக் கிரிக்குவான் பூதரச்
சொற்பெயரா நிலைபெ றுத்தும்
சிலைக்குநிக ரொற்றையங் கோட்டுத் தனிக்களிறு
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பலவி நாயகன்
சிறுதே ருருட்டி யருளே. (௪)

பெருங்கருணை சூற்கொண் டிருந்தசிவ காமிப்
பிராட்டியார் சிதம்ப ரேசப்
பெருமா னெனப்படுங் கீர்த்தியிரு முதுகுரவர்
பேணியுனை யேக காலத்
தொருங்குமார் பஃதுற வெடுத்தணைத் தொண்முத்த
முண்டுச்சி மோந்து கொள்ள
உன்னுதோ ரிருவர்களு மொற்றித்த வடிவுகொண்
டுறைபயன் பெற்று மகிழ

வருங்கரட மாமதச் சிந்தூரக் களபமே
மதிமுடிச் சடில மோலி
மாசுணப் பேரணியி னைங்கைக்கு றுத்தாண்
மதிவகிர்ந் தனைய வொற்றைச்
சிருங்கனே சச்சிதா னந்தபர போகமே
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பலவி நாயகன்
சிறுதே ருருட்டி யருளே. (௫)

வெண்டின முழக்கமுகை விண்டலர் பசுந்துழாய்
மாலையம் படலை மார்பின்
மாயோன் கிடக்கையை யுடுக்கையென் றுண்டமட
மங்கைக்கு மகுட மான
தொண்டைமண் டலம்வாழ மகுடம்ப தித்தபொற்
சுடர்மணி நிகர்த்த தொல்சீர்த்
தொட்டிக்க லைப்பதி தழைக்கவப் பதிமருவு
தூயசிவ பத்தர் வாழக்
கண்டிகையும் வெண்ணீறு மஞ்செழுத் தும்பொலிவு
காட்டவை திகமார்க் கமும்
கரிசற்ற சைவமும் வளர்ந்தோங்க வாங்குங்
கடற்புவி மகிழ்ச்சி தூங்கத்
திண்டிமந் தாக்குங் குறட்கணஞ் சூழநீ
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பலவி நாயகன்
சிறுதே ருருட்டி யருளே. (௬)

சிறுதேர்ப்பருவமுடிந்தது.

ஆக பருவம் பத்துக்குச் செய்யுள் (௫௩.)



## கலைசைப்பிள்ளைத்தமிழ் முடிந்தது.



மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



குளத்தூர்

# அமுதாம்பிகை

# பிள்ளைத்தமிழ்.



## ஆசிரியர் கருத்து.

மனம்வாக்கி லெட்டாத சிற்சத்தி யாயிடினு
மன்பதைக ளுய்ய வேண்டி
மலையரையன் முதலோ ரிடத்தவ தரித்தொரு
மடப்பிள்ளை யாய்வ ருதலால்

இனநாட்டி வாழ்த்திடுவர் பெரியோர்கள் வாழ்த்தற்
கெடுத்தவித் தார கவிதாம்
எண்ணிடிற் பலவா மவற்றிற்கு முதலாக
வேன்றபெண் பிள்ளைக் கவி

முனிவோட்டு காப்புநற் கீரைதால் சப்பாணி
முத்தம்வா ரானை மற்று
மொழியுமம் புலிப்பருவ மம்மானை நீரூசன்
முறையினை யிருப ருவமும்

நனிவாய்த்த வகவலின் விருத்தத்தி னாற்பாடி
நவிலுமுத் திங்கண் முதலா
நயந்தமூ வெழுதிங்க ளளவினிற் கேட்பிக்கு
நன்மைய தெனப் புகல்வரோ.



# அவையடக்கம்.



இளம்பருவ விளையாட்டை நோக்குழித் திருவுரு
விடத் தாசை மிகுதி யுண்டா
மென்பதால் வித்தார கவிக்கெலா முன்னுற
வியன்றபிள் ளைக்க வியிதைக்

குளந்தையிற் சோமேசர் மார்பினைக் கொங்கையாற்
குழைவித்த வமுத வல்லி
கோமளப் பருவத்தி லருகொன்று தாதியர்சொல்
கூற்றெனப் புகழ்த லுற்றேன்

வளம்பெருகு மிமையவரு மேத்தொணுப் பெருமாட்டி
மகிமையென் புன்மொ ழிகளால்
வாழ்த்தரிய தாமெனினு மாங்கவள் கிரிக்கிறைவன்
மகளாகி யதுவு மல்லால்

உளங்கொடியர் வாழ்வலைச் சேரியினு மவதரித்
தொளிர்பாசி சங்கு பூட்டி
உண்மகிழ்ந் தருளுதலி னென்மொழிக் கும்பெரி
துவந்தருள் சுரக்கு மெனவே.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# குளத்தூர்
# அமுதாம்பிகை
# பிள்ளைத்தமிழ்.

## விநாயகக்கடவுள் வணக்கம்.

மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாற்பெண்மை வடிவென்று மலைநின் மையோர் - மருங்குண்மை யாலாண்மை வடிவென்று மீதுகீழ் மாறிய திருக்காட் சியால், அணிகொண்ட வுயர்திணைய தென்றுமஃ றிணையென்றும் யார்க்குங் கிளக்க வரிதாம் - ஐங்கரச் சிந்துரத் தின்கழற் செஞ்சரண மஞ்சலித் துத்து திப்பாம், பணிகொண்ட துத்திப் படத்திற் கிளைத்தவிர் பருஉமணி விளக்கி ஞெருபாற்-பாயிருட் படலஞ் செறிந்தொளிர்வ தென்னவப் பாம்பணை கிடக்குமொருவன், திணிகொண்ட மல்லற் புயக்குவடு விம்மத் திளைக்குமகள் வாணி பிரியாத்-தென்குளந் தாபுரி யிருந்தவமு தாம்பிகை செழுந்தமிழ்க் கவித ழையவே.

## காப்புப் பருவம்.

### திருமால்.

சீர்கொண்ட கஞ்சக் கிழத்திதன் காந்தனைச் சிறைசெய்த வாறறிந்தாற்-செயிர்த்துநந் திருமணைவி மகன்மருகி தமையெலாஞ் சிறைசெய்யு மென்ற றிந்தும், ஏர்கொண்ட மைத்துனக் கேண்மையா லர்ச்சுனற் கிறுதிநாள் பயவா மையே - எண்ணிமுன் பரிதியைப் பரிதியாற் றடைசெய்த வேந்தற்பி ரான்புரக்க, பேர்கொண்ட மேனிலச் சோபான மிசையேறு பேதைமார் முகஞ்சேக் கிநம் - பேராசு கொள்ளவரு மதிபோலு மிதுவெனப் பெரிதுமேக் குற்ற வர்கடங், கார்கொண்ட பின்னற் கரும்பாந்தள் கண்டுளங் கவலாது களிகூர்ந் துதண்-கலைமதியம் வைகுபொழில் சூழ்குளத் தூர்வருங் கடவுட் பிராட்டி தனையே. (க)

## சிவபெருமான்.

### வேறு.

அளிசு ரந்தமரர் பசிகெ டும்படியி னமிழ்து தந்தகதிர் கொள்ச
டைக் காட்டிடை - அழல்வி டஞ்சொரியு மரவி னம்பசிய வறுகு
வெண்டலைகள் பல்குறச் சூட்டியும், அரிய யன்பரச வவரி டும்பை
தெறு மலர்செ ழுங்கமலம் வெல்கரத் தோட்டிடை - அணைவு றும்
பொருள்கள் கருக வெம்புசுட ரவிரு மங்கியினை வெய்தெனக் காட்
டியும், இளிவ ரும்பொன்மலை வளையு முன்பவுண ரெயிலொ ருங்கவி
ய வெள்ளுபொற் றோட்கிடை-இடுவ னங்களினி லுயிர்ம டிந்தவர்த
மிகழு மென்பினையு மைதெனப் பூட்டியும், எழுத ருஞ்சொன்மறை
முடிவு மன்பர்தம திதய மும்பரவ நல்குமெய்த் தாட்டுணை - எமது
புன்றலையு முறந யந்துமரு ளியப ரம்பரனை யுள்ளுறச் சேர்த்துதும்,
தளிர்து வன்றியிருள் படநி ழன்று குளிர் தழுவி வண்டுதுதை செய்
துணர்ப் பூத்திரள்-ததைவு கொண்டு நறு மணம ளைந்துமகி தலம சும்
புபட வெள்ளமட் டூற்றெழு-தரவ ளர்ந்துமுகி லகடு டைந்தழகு தப
வு தைந்துதிசை யெல்லையைக் காத்திடு - தறுக ணண்கரியை முடு
கு றுங்கருவி தகுமி தென்றெவரும் விள்ளமொய்த் தார்த்தவிர், ஒளி
யு மிழ்ந்துலவு பரிதி மண்டலமு முடுப மண்டலமு நில்லெனத் தா
ழ்த்திவிண்-ணுலகு சென்றுசுரர் தருவொ டும்பழகி யுறவு கொண்டு
மகிழ் பல்வளக் காக்களின் - உறைப சுங்கிளிகள் சுருதி சந்தையுட
னுரைசெய் கின்றதனை மல்குபுத் தேட்குலம்-ஒளியி ருந்துகவர் பதி
கு ளந்தைவரு முனைவி ளங்கமுத வல்லியைக் காக்கவே. (௨)

## விநாயகக்கடவுள்.

### வேறு.

ஒற்றைச் சுதைத்தனுக் கோட்டியெங் கனுமின்னி யோவாது
மும்மாரிபெய் - தொண்பூ தலத்துலவு செங்கொண்டல் போலுமெ
ன் றுன்னியச் சுற்றியாமிதற், கெற்றைக்கு மூர்தியா யுற்றிடக் கடவ
மென் றிருண்மேக மருகுவந்தாங் - கிலகுகரு மூடிகத் தாதிப் பிரா
ன்சரண மேத்தெடுப் பாமெம்பிரான், கற்றைப் பிறைக்கொழுந்
தொளிர்சடில வட்டமேற் கணமணிப் படம்விரித்துக் - கண்வளரு
மகிழீர்மை தலையுவா ஞான்றுசெங் கதிர்க்கிர கணங்கடுக்கும், பெற்
றித் திறந்தெரிந் தானந்த வெள்ளப் பெருங்கடல் குடைந்தாடுறா
உம் - பெண்ணணங் கரசியைத் தென்குளத் தூரெம் பிராட்டியைக்
காக்கவென்றே. (௩)

## முருகக்கடவுள்.

மாங்குயி நுரந்துசுவை யூற்றெழ மிழற்றுமொழி வானமீன் மாதராறுவர் - மருமத் தெழுந்தபொன் வள்ளத்தி னமிழ்துண்டு மருவிவாழ் தற்குரியதன், தேங்கமல வீட்டினைத் தனதெனக் கொண்டுவாழ் திசைமுகனை வெய்துயிர்த்துச் - சிரநான்கு மோதப் புடைத்துப் பிணித்துவன் சிறையிட்ட தேவை நினைவாம் ,ஓங்கலொரு வில்லாவளைத்தெயி னகைத்தனலை யூட்டியருள் சோமேசனுர் - ஒருமூ விழிக்கிடைந் தஞ்சிச் சரண்புகுந் தோலமிடு புண்டரீகம், பூங்குவளை மாரனுக் கருள்செய்து முகமெனப் போர்கொண்ட வாள்விழியெனப் - பொய்த்தநுண் ணிடையெனத் தாங்குங் குளந்தா புரிக்குளமுதைக்காக்கவே. (௪)

## பிரமதேவர்.

தவளக் குரூஉமணி குயிற்றியொளிர் தபனியத் தனதுமனைவாயினிறுவுந் - தண்ணிய விதழ்க்கதவடைத்துத் திறக்குந் தனித்தொழிலை வண்டு முரலும், பவளச் சரோருகத் தன்னைதன் ளேடுற் பவித்தபுலவற்கு மந்தப் - பண்ணவற் கெதிரான புலவற்கு மாகப் பணித்தவிறை வன்புரக்க, கவளக் கடாங்கவிழ் கவுட்டுணை நெடுங்கைக் களிற்றுப் பிடர்த்தலைவருங் - கண்ணு யிரங்கொண்ட விண்ணுடர் கோமகன் கற்பகச் சோலை விடபந், துவளக் குடங்கைத் தலத்தினிற் கோட்டித் துணைத்தமுலை மாதர் மலர்கொய் - தாமணித் தெற்றிகணெருங்கிய குளந்தைவரு சுந்தரப் பெண்ண முதையே. (௫)

## தேவேந்திரன்.

### வேறு.

அதிருந் தரங்கக் குண்டகழி யளறு படப்புக் குழக்கிமுழக் - கசனிக் கிகலிக் கலித்துமதத் தடுக்க லெடுத்துத் தெறித்துவெருண், டெதிருங் குழூஉக்கொள் படைகவல விடறுங் கறைத்தாட் பரூஉத்தடக்கை - இறைக்குங் கடவெண் களிற்றியானை யெருத்தத் திவரும் புருகூதன், முதிருஞ் சுவைத்தெள் ளமிழ்தொழுகு முழுவெண்ணிறத்து மதிக்குழவி - முருகு விரியுங் கடவுணதி முழுகித் திளைக்குஞ் சடைப்பெருமான், கதிரும் விழிக ளிருள்சீப்பக் கங்குற் பொழுதி னெருங்கிருந்துங் - கலவிக் குறிப்பிற் குளநாணுங் கமலா கரியைப் புரக்கவே. (௬)

## இலக்குமி.

கடிப்போ தலர்த்திக் கருஞ்சுரும்பர் களித்துத் துயில்கூர் கற்பகப்பூங் - கானம் பயிலுங் காமர்நகர்க் கவலை துரந்தின் னமிழ்தளித்

துப், படிப்பாற் பயிலு மகளிடத்துற் பவித்துப் புவன மூன்றனை யும் - பரிக்குந் திகிரிப் படைப்பாணிப் பகவன் மருமத் துறைமடந் தை, விடப்பாம் பிரவி வெம்மைமிசை மேவா வண்ணங் குடைக விப்ப - விரிக்குங் கதிர்ச்செம் பவளநிற வேணி யணையாப் புனிற்று மதி, முடிப்பா லரசு வீற்றிருக்கு முதல்வ னிடப்பா லிருந்துலக - முழுது முயிர்த்த குளந்தைநகர் மொய்பூங் குழலைப் புரக்கவே. (எ)

## சரசுவதி.

### வேறு.

அளிக்கா தரவுற்றுச் சுவைத்தகள் - அளித்தார் வனசத்துப் பொகுட்டயன், உளத்தா மறைநச்சத் திளைத்தவன் - உரைப்பா லரு ள்பெற்றுத் தரித்தவள், களத்தால மடக்கிச் சுரர்க்கிடர் - களைத்தேய வொறுத்துக் கடைக்கணி, குளத்தூர் நயனத்தற் கிடத்தமர் - குளத் தாரமுதத்தைப் புரக்கவே. (அ)

## காளி.

### வேறு.

துளிக்கும் பசுந்தே னுவட்டெடுத்துச் சொரியுஞ் செழுந்தாம ரைப்பொகுட்டுத் - தோன்றற் பெருமான் முதற்கடவுட் டொகுதிப் பைங்கூழ் களைக்கருக்கிக், களிக்கு மகிடா சுரக்களையைக் களைந்து சிரமேற் பாசடையிற் - கமல மெனத்தாள் பதித்திவர்ந்த கன்னி யெனுந்தெய் வதங்காக்க, பளிக்கு மணிமா டங்கடொறும் பதிந்த தமது சாயலினைப் - பாரா வினமென் றிளஞ்சேய்கள் பரிந்து பரி ந்து வருகவென, விளிக்குங் குளந்தைத் திருநகரின் வெளிய மதிய ந் தவழுமுடி - விளங்குங் கதிர்ச்செம் பவளமலை மீது படர்பைங் கொடியினையே. (கூ)

## சத்தமாதர்.

### வேறு.

இலகொளி யுமிழ்தரு சிறையோ திமத்தவள் - எழிலுறுதவளவ ல் விடையூர் திறத்தவள் - எறுழ்வலி மயில்கட வினள்வே றிரிப்பவள் - இருசிறை யொருகலு ழனையேறி நிற்பவள், உலகதிர் தரவரு மரி யே றுகைப்பவள் - உமிழ்கட மழைபொழி யயிரா வதத்தவள் - உழி தரு குழிவிழி யுடல்பேய் நடத்துநள் - உவரெழு மகளிர்த மொளி ர்தாள் பழிச்சுதும், அலகைகணடமிடு மழலார் களத்தினில் - அம ரர்க டபுமுடல் கழிபா னிறக்கலன் - அரவொடு திணிவரை நிகர் தோ ளிடைப்பொலி - அணியென வணிதரு பெருமா னிடத்தமர், நிலவிரி நகையவ ளிருமூ வகைப்படு - நெறிகளு நிறுவிய வொ

ருமா தவக்கொடி - நிலமிசை யுயரிய கமலாக ரத்துறை - திருமலி மலைமக டனையே புரக்கவே. (௧௦)

## முப்பத்துமுக்கோடிதேவர்.

வேறு.

சிறகரளி மொய்த்திதழ் கொழுதுமது வைப்பசி சிதையமடுத் துக் களித்தாடு தேமலர் - செருகுமள கக்கன மதர்நெடு விழிக்கடல் சிறிது குடித்துக் கறுத்தார மேவிய - திணிமுலை மலைச்சொரி நிதலை நிதி யத்திரள் செழுவிய பொற்புக் கடற்பாய வாரெழில் - செறிதரு மடித்திரை யிடையற லொழுக்கிய திறமைநிகர்த்தொத் தொழுக் கா முரோமமுங், குறைவற வளித்தருள் குவலய மடக்கொடி கு ளிர்கெட நச்சிக் கறைப்போர்வை யாலுடல் - கொழுவிய தெண த்திசை முழுவது மடக்கிய குமரி யிருட்டைப் படச்சாடு மாத வர் - குலவுகிர ணச்சுவை யுணவினை யுணத்தனி குறுகிய பொற்சக் கரச்சேவல் போலொளிர் - குருமணி குயிற்றிய புயமலை குழைக் கெதிர் குயமுடி யைச்சற் றெடுத்தேறு பார்வையும், வெறிகமழு முற்பல நறுமலர் மறைப்பினில் விழைத நலத்தைப் படித்தேக நீள்செவி - வியனில மிறுத்தமை யெணிமற மிகுத்தவை வெருவி விழச்செற் றுகைத்தோடி நீடிய - விரிமலர் தனக்கொரு மறைவிட மெனப்படும் விதியெ னெனப்புக்கு விற்காதி ஞேடமர் - வினை யிலி கரத்துழை சடைவன முறற்கெழ விரைவில் விளைத்துக் குதித்தாடு பார்வையும், இறைமையு மளப்பறு மழகொளிர நிற்பவ ளிமய மலைக்கட் கொடிப்போல மேவிய - இனியமட மைக்குயின் மரகத மயிற்பெடை யிரையுமி ருக்குக் குளத்தூரி ஞடியென் - னிரு மைவினை முற்றற வெனையுமடி மைக்கொளு மெழிலமிழ் தச்சத்தி வைப்பான காவலர் - எரிகதி ருருத்திரர் விறல்வசு மருத்துவ ரெ ணுமிவர் முப்பத்து முக்கோடி தேவரே. (௧௧)

காப்புப்பருவ முடிந்தது.



# செங்கீரைப்பருவம்.

பொருவரிய வண்டப் பரப்பைமுழு தாளும் புராதனர் முகத் து விழியாப் - போந்துலவு நங்கொழுநர் தம்மைத் தடுத்திடர் புரிந்த கைக் கமல நமையும், பருவர லுறுத்துமென் றஞ்சிமென் குமுதமும்

பங்கயமு மொன்றை யொன்று - பாதுகாப் பத்துயிலு மென்றாம டந்தையர் பரிந்துகொண் டாடு சீர்த்தி, இருகைமல ரும்புவி பதித் தொரு முழந்தா ளிருத்தியொரு தாண்மேனிமிர்த்-திந்த்ர திரு விற்கி டை தொடுத்தவெண் டரளநிரை யேய்ப்பநுதல் வேர்பொடிப்பத், திருமுக நிமிர்த்தொரு குளந்தையமு தாம்பிகை செங்கீரையாடி ய ருளே - சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே. (௧)

பொங்கரி பரந்தசிறை வண்டினம் விருந்துணப் பூங்கமல நாண் மு கையெலாம்-போதாக வெழுபரித் தேர்கடாய்க் கடன்முகடு பூப் பவரு பரிதிப் பிரான், சங்கின முயிர்த்தவெண் டரளவட மணியுமிழ்த் தாமரை முகிழ்த்து ணையும்யான்-றண்டாத மெல்லிதழ் முறுக்குடை த் தல்லாது தணவலென் றருகு போந்து, வெங்கதிர்க் கற்றைகள் பரப்பியுல வுதலேய்ப்ப மின்னும கரக்கு ழைகதிர்-வீங்கிள முலைத்த லை யுமிழ்ந்துதண் புயமீது விளையாடி நிற்ப வதனத், திங்கண்மிசை யாடக் குளந்தையமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே-சிற்சபை யி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே.()

கார்பூத்த மறுவுண்ட வெண்கதிர்க் கலைமதி கவின்றநின் கமலவ தனங்-காண்டோறு மறுவற்ற மதியீ தெனவுட் கவன்றுமுன் னிற்க வஞ்சிப், பார்பூத்த தென்குளத் தூர்ப்பொங்கர் காவணம் பரியமதி னூழை யூடு-பையென நுழைந்தொளித் தோடநிற் பணியவரு பங் கயச் செல்வி முதலோர், ஏர்பூத்த வங்கையர விந்தமலர் கூம்பவவ ரிணைவிழிக் குவளை யெல்லாம்-இரும்புனற் றேத்துளி பொடித்துமி ழ்ந் தலரவரு ளெனுமமிழ்த தாரை கான்று, சீர்பூத்த முகமதிய மா டவமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே-சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே. (௩)

மணிதுற்ற தவிசெனப் பருமணிப் பருமம் வயங்குமடி மீதிருத் தி-மதிக்கடவு டன்மனை யெனக்குலாய்த் தன்னமிழ்தம் வாக்குவ தெ னத்திம் பயம், பணிலத்தின் வாய்க்குமுத மூட்டிமற் றிதுமாசு பரியா து சாலாதெனப் - பாரிழைத் தொருபொட்டு நுதன்மதிக் கிட்டுப் ப சுங்கழையின் மஞ்ஞை நின்றுங், கணிபெற்ற புயமே லணைத்திரு ம தித்தேவ ரளவளாய்க் குழீஇய தேய்ப்ப - அழகிய முகத்துமுத் தாடி யெழின் மேனைசீ ராட்டமகிழ் கூர்ந்து கொடியேம், திணிவைத்த நெஞ்சங் கரைக்குமமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே - சிற்ச பையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே.

மூக்கனி செறித்தநறு நீர்ப்பந்தர் முல்லைவெண் முகையனைய மூர லறுகான் - மூசிய விளம்பொங்கர் தேசுறு மலர்ப்பொய்கை முத லான வறம்யா வையும், தொக்கமறை யாகம விதிப்படி யியற்றுநாட் டோலாத கருணை கூர்ந்து - துண்ணென வெழுந்தரு டிருச்சோம நாதனார் தூமேனி குழைவித் தவை, இக்கரமு மிக்கரமு மித்தனமு மித்தனமு மென்றுயிர்த் தோழியர் களாய் - எத்துமட மாதரார் தம் மைத் தெளித்திடுவ தேய்ப்பமுக மதிய மசையத், திக்கெட்டு மே த்துங் குளந்தையமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே, சிற்சபை யி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே. ()

## வேறு.

பொங்கெழி னின்முக மாடுதொ றுங்கமழ் போதரி நீள்விழிகள்
பொற்செவி யிற்பல காலுமெ திர்ந்து புகுந்து மறிந்துலவச்
செங்கதிர் நீள்குழை தம்மொடு தாமெதிர் சென்று மணிக்கலொடுஞ்
செயிரறு பொன்னி னரும்பு பிதிர்ந்து தெறித்திட மோதுதிறந்
தங்கிளை சார்ந்திடை யாவகை சாற்றமொய் தாம வயிற்படையாற்
றண்குரு தித்துளி வீழ்தர வீரர்க டம்மொடு தாமெதிரா
அங்கை கலந்தம ராடுத லாமென வாடுக செங்கீரை
அளந்தறி யாதகு ளந்தைநி லாவமு தாடுக செங்கீரை. (௬)

பல்லுயி ருங்களி கூர்கரு ணைக்கடல் பம்பிவ ளைந்தெனப் [டை
பாலொளி கான்ற நறும்புனல் சூழ்ந்து பரந்தொளிர் கம்பையி
வில்லுமிழ் மின்னுரு வச்சுடர் வேணிவி ண்ணேனைவ டந்தழுவி
வீங்கிள வெம்முலை மார்புழ வங்கையின் மேதகு தோள்குழையப்
புல்லிய ணைப்பது போல்வயி ரங்கள் பொதிந்தவிர் தொட்டிலினும்
பொன்னணி பாவையொ டாடிய ணைத்துப் பொழுதுக ழித்தரு
அல்விம லர்க்குழல் வல்லிப ராபரை யாடுக செங்கீரை [ளும்
அளந்தறி யாதகு ளந்தைநி லாவமு தாடுக செங்கீரை. (௭)

குலத்தில் வளர்த்திடு மன்னையர் செந்துகில் கூர்மடி மீதிமயக்
குன்றி னரக்கலர் வாழ்க்கை யெனக்களி கொண்டு குலாவியவர்
கலைப்பொலி முகமதி யுங்குழன் முகிலுங் கண்டென வாய்க்குமுதங்
கதிர்த்த நகைத்தள வலர வரும்பக் கைக்கம லங்குவியா
முலைக்கம லச்செழு முகையொ௶ நட்பு முயங்கிட வாடலுறும்
மூரிவ ளத்துத ரத்திரு வாலெழின் மொய்த்து மிகத்தழைய
அலக்க ணறச்சுவை யாரமிழ் துண்பவ ளாடுக செங்கீரை
அளந்தறி யாதகு ளந்தைநி லாவமு தாடுக செங்கீரை. (௮)

வேறு.

வானமெ ழுங்கரு மேகவி னங்கள்வ றந்தி ரம்போய்வன்
மால்வரை யெங்கணு மோடிட வென்றிமிர் வண்டு தும்போரு
நானமு யங்கிய வாசந றுங்குழ னந்தா வந்தீப
நாவிலெ ழுந்தொளிர் தூமவொ ழுங்கென நன்றூர் மென்சாயன்
மேனிநி றந்தரு மேனைய ணங்குவி ளைந்தார் வங்கூர
மீறிவ ளர்ந்தழ கானகு ளந்தைவி ளங்கா நின்றூறு
தேனிறை கொன்றையி னுனிட நின்றவள் செங்கோ செங்கீரை
தேவர்தொ ழுங்கலி யாண சௌந்தரி செங்கோ செங்கீரை. (௯)

கோலநெ டும்பனி மாலிம யம்பயில் கொம்பே செம்பாத
கோகன தந்தொழு வாருள நின்றகொ ழுந்தே பைந்தேனே
ஞாலம ளந்தவ னுடம ரும்பெற னங்காய் வெங்கோப
நாமவி டஞ்செறி காமரு கண்டர்த நண்பே தண்போதோ
டேலம ளைந்திருள் கூருந றுங்குழ லெந்தா யெம்பாசம்
ஈறுப டும்படி ஞானம ணங்கம ழின்பே யன்பாளர்
சீலமி குங்கம லாகரம் வந்தவள் செங்கோ செங்கீரை
தேவர்தொ ழுங்கலி யாண சௌந்தரி செங்கோ செங்கீரை. (௧0)

செங்கீரைப்பருவ முடிந்தது.

# தாலப்பருவம்.

மதுரங் கொழிக்குங் கொழுந்தேறன் மடுத்துச் சுரும்ப ரடைகி டக்கு - மலர்ப்பூந் தடத்தைக் காண்டலுஞ் செம் மணிகால் குடுமிப் பணியுலகம், இதுவு மரவந் தனக்கிடமா யிருக்குங் கொல்லா மென்ற ழுக்கா -றெய்தித் தன்கீழ்ப் படத்தாழ்த்து மியல்பை யறிந்தா லென க்கரைக்கட், பொதுளி யுறவு கொண்டநறும் பொதும்பர் நாக ருல கெனுமொப் - புமையாற் புலவோர் பதிதாழ்த்திப் பொற்று துதிர க்குந் திருக்குளந்தைப், பதியின் மகிழு நறியசுவைப் பாகே தாலோ தாலேலோ - பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தா லேலோ. (௧)

இருள்கால் சீத்துச் சோதிவெயி லெறிக்குஞ் செக்கர் மணித்தொ கையின் - இழைக்கும் பசும்பொற் றலத்துயர்த்த விருங்கே தனத் தின் மிசையுயிர்கட், கருள்கால் கலைவெண் முழுமதிய மமரும் பரிசு தழனுப்பண்-அமைத்த தூணத் தருந்தவஞ்செய் யறவோர்கடுக்கு மே னிலத்துச், சுருள்கான் மலர்ப்பூங் கூந்தலிளந் தோகை யனையார்க்

கெதிர்நடிக்குஞ் - சுரமா மகளிர் விழித்தொழிற்குத் தோற்றுச் சய
ழ்க்குந் திருக்குளந்தைப், பருகா வமிழ்தே பெருங்கருணைப் பரை
யே தாலோ தாலேலோ- பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தா
லோ தாலேலோ. (௨)

மணங்கேழ் வனச மூற்றெடுத்து மதுவார் பொருட்டுச் சுருச்சு
மந்து - வயிறு வருந்திக் கருவுயிர்க்க வயின்பார்த் துழலும் பெடை
ஞெண்டைக், கணங்கே ழயின்முட் டாட்படுத்துக் கவைத்தாளிடை
யற் றலைபூடு - கருவண் டினங்கள் புடைசூழக் கலந்து முரலத் துவக்
குண்டு, சுணங்கேர் முலைப்பெண் ணணங்குநினைச் சுமந்து மகளிர்
தாலெடுப்பத் - துயலு மணித்தொட் டிலைக்காட்டுந் தொடுநீர் வா
வித் திருக்குளந்தைப், பணங்கே ழரவப் பேரல்குற் பரையே தா
லோ தாலேலோ - பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ
தாலேலோ. (௩)

குந்தங் கமழு நறுங்களபக் கலவை யணிந்த முலைக்குவடாங் - கர
டக் களிற்றின் மருப்பினிடைக் கவின்ற வுரோமப் புழைக்கரத்தால்,
நொந்தங் கலமந் திறுங்கொடிபோ னுணுகித் துவளுஞ் சிற்றிடையா
ர் - நுவலுங் கிளவிக் கிடைந்தகுயி னுவலா தடங்கி யவ்விசையின்,
சந்தம் பலநா ளகம்பயிலத் தழுவிச் சிலநாள் வாய்விண்டு - சாற்றி
யொப்பு நோக்கியொவ்வாத் தவறுற் பின்பும் வாயடைக்கும், பைந்
தண் பொழில்சூழ் குளந்தைநகர்ப் பரையே தாலோ தாலேலோ -
பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தாலேலோ. (௪)

சுரும்பர் துளைக்க வுவட்டெடுத்துச் சொரியு மிரதச் செழுங்கரும்
பைச்- சுவைத்துக் கதலிக் குலைசாடித் தூங்குந் தெங்கம் பழஞ்சிதறி,
விரிந்த பசுநெட் டிலைக்கமுகின் மேவிக் ககனத் தருவையதன் - மீது
படர்பூங் கொடிவழிபோய் மிதித்துக் குனித்து விளையாடி, வரிந்த
கழையி னெடுங்கயிற்று வழிபோய் நடிக்கும் பொருநர்திற - மானக்
குரக்குக் குலங்குதிக்கும் வளஞ்சேர் பொதும்பர் சூழ்குளத்தூர்,பரி
ந்து தொழுவோர் மனத்துநறும் பாகே தாலோ தாலேலோ - பணில
முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தாலேலோ. (௫)

வேறு.

சுலவித் தரளப் பவளக் குவைகள் சுருட்டிக் கரைபுரளுந்
துவலைத் திரைமைக் கடனின் றெழுமிரு சுடர்கண்மு னச்சுடர்தஞ்
சிலையிற் கவினக் குயிலு முருப்புன றீயைப் புடைபெருகச்
சிந்திப் பனிகூர் பொழுதிற் புனலிற் சேர்ந்தற மாற்றுநரை
உலறத்தெறுவெப்புடைவேனிற்பொழுதொள்ளெரிவாய்த்தவநோன்
புழப்பவரைப்பொரு நொச்சிமதிற்குல மோங்கு குளந்தையெனுந்

தலனிற் பொலிவு பெறப்பயி லுங்கொடி தாலோ தாலேலோ
தகரக் குழலா யமுதப் பிடியே தாலோ தாலேலோ. (சு)

கொங்கு விரிந்த நறுங்க மலங்கள் கொழிக்கு மதுப்புனலாக்
குவிதர வூழ்த்துதிர் தண்ணிய தாது குவிக்கு மெருக்குவையாப்
பங்கிரந்த வயற்கண் விளைந்து பழுத்தெழு நெற்குலைபோய்ப்
பசும்புர வித்திரள் பூட்டிய தேரிற் பரிதிக் கடவுள்புடைப்
பொங்கொளி வெண்க வரித்தொகை வீசுவ போல வொசிந்தசையும்
பொற்பு மிகுங்கம லாகரமேவிய பூரணி மெய்யடியார்
தங்கள் பணிக்கென வெம்மை யளித்தவ டாலோ தாலேலோ
தகரக் குழலா யமுதப் பிடியே தாலோ தாலேலோ. (எ)

பவளக் கொடிபடர் வேலைமுகட்டிற் பாயொளி கான்றெழுசெம்
பரிதி நிகர்ப்பச் செம்மணிமாலை பரப்பிய மைக்குழன்மேற்
றிவளக் கதிர்விடு கொண்டை திருத்திச் செஞ்சுடர் வாண்மகரத்
திருவணி யக்கடன் மகர மெனத்தணி செருகிப் பகைஞருளந்
துவளச் சிலைபடு கணையென நுதலிற் சுட்டி தரித்தருகிற்
சுடர்பிர தாப மெனப்பொட் டெழுதித் துன்னிய கீர்த்தியெனத்
தவளப் பணிமூக் கிட்டொளிர் பாவாய் தாலோ தாலேலோ
தகரக் குழலா யமுதப் பிடியே தாலோ தாலேலோ. (அ)

வேறு.

பரந்த வெண்புணரி மீதோன் வேதா மாதேவர்
பணிந்து தொண்டுசெய வேலே சேலே போலாடுங்
கருங்க ணுந்துமளி யீவாய் பாவாய் தாவாது
கறங்கு வண்டளக மானேதேனே யேனோர்தம்
புரங்க டந்தநகை வாயார் தூயார் சேயார்பாற்
புணர்ந்தி டும்பசிய தோகாய் நீகா வாய்காவென்
றிரங்கு மன்பரக வாழ்வே தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய் தாலோ தாலேலோ. (கூ)

மலங்க டங்குமரு ளூராய் தாலோ தாலேலோ
மலங்க டங்குமரு ளூராய் தாலோ தாலேலோ
கலங்க லந்தவரை யேயாய் தாலோ தாலேலோ
கலங்க லந்தவரை யேயாய் தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய் தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய் தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய் தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய் தாலோ தாலேலோ. (கல)

தாலப்பருவ முடிந்தது.

# சப்பாணிப்பருவம்.



உருப்பொலி மணிப்புனை லுடுக்கைப் புலிக்கொடி யுரத்திற் குலா வுமாக்கள் - உருத்தொன்றை யாற்றினெதிர் பத்தாற்று வோமெனு முரைக்கிலக் கியமாகவொண், குருப்பொலி விரற்செறி செறித்துப் பொலந்தொடிகள் கொழுவித் தனைப் பரிவினுற் - கொண்டாடு நின் றிருத் தாதைகிளை யொன்றைக் குழைத்துப் பணித்தவிறைவன், திரு ப்பொலி கடுக்கைதழை தோட்குவடு பத்தையுஞ் செழுந்தழும் பாக் குழைத்துத் - திறல்கொண்ட நறுமலர்க் காந்தளங் கைத்தலஞ் சேந் தழகெறிப்ப விமையோர், தருப்பொலி மலர்த்தொடைக் கூந்தலமு தாம்பிகை சப்பாணி கொட்டியருளே, தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தாரம்மை சப்பாணி கொட்டியருளே. (க)

உள்ளொளி ததும்பிமேற் பொங்கிப் புறத்தினு முவட்டெடுத் துப்பரந்தாங் - கொழுகொளிய வெண்ணீறு மெய்ம்முழுது மட்டித் துயர்ந்தவடி யார்கள்குழுமி, வெள்ளொளியி னுஞ்சிவத்துதி முழ க்கானும் வேங்கைமக வுக்களித்த - விதிவச நினைந்தின்னும் வேண் டுவார்க் கருளாமை வேண்டுது மெனுங்கருத்தாற், றெள்ளுதீம் பாற் கடல் வளைந்தெனச் சூழ்போந்து சேர்ந்தனர் நெருங்குபொதியிற் - றெய்வத் திருக்கேள்வ ராட்டினுக் கேற்குந் திருத்தாள மென்னம லரைத், தள்ளியெழில் பூத்தநின் செங்கைத் தலங்கொண்டொர் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தாரம்மை சப்பாணி கொட்டியருளே. (உ)

ஐவகைச் சுத்தியு மமைத்துவான் கம்பைநதி யருகன்பு பூப்பம லரால் - அஞ்சலி நிறைத்துமே னேக்கிமுக மதியினெதி ரல்கிய தெனக்குவிந்து, மெய்வகைத் துவாதசாந் தத்தலத் தானந்த வெள் ளப் பெருஞ்சோதியை - விரிமலர்த் தவிசாகி யேற்றுமுன் போலெ ன்ன மீண்டுங் குவிந்திழிந்தாங், குய்வகைச் சிவலிங்க நாப்பணு வா கித்தவ் வும்பனய னச்சுடரெதிர் - உறக்குவிந் தலர்விரைவு மானமு த்திரைகொடுத் துலவாது பூசைமுற்றுஞ், சைவமுறை யாற்றுகைப் பங்கயஞ் சேப்பவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தாரம்மை சப்பாணி கொட்டியருளே. (ங)

கடவுட் பொலம்பூமி காண்டற் கெழுந்தெனக் கடையுகப் பெ ருவெள்ளநீர்-கடன்மிசை மிதந்திட்ட பூந்தராய் தழையவரு கௌ

ணியர்கள் குலமணிக்கு, மூடவுப் பிறைக்கண்ணி மோலிப் பிரான் சைவ முறைநெறிச் சோகாப்பவன் - மூடப் புறச்சமய முழுவதுஞ் சோகாப்ப மூண்டசிலை யோடுபுல்லும், அடவிக் களிக்குந் தமிழ்க்குரிசி னீறிட வமண்கைய ருண்ணீறிட - அருண்மடை திறந்தூற்று திருமுலைப் பால்கறந் தமிழ்தருா னங்குழைத்துத், தடவுப்பொன் வள்ளத்து வைத்தூட்டு செங்கைகொடு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை சப்பாணி கொட்டியருளே. (௫)

தீங்கனிக் கிளவியால் யான்றவக் கோட்டிய செழுங்கழையுமூகமூரனீள் - சேயரிக் கண்ணன் மெலித்தவர விந்தமுந் தேங்கமழு நறுமுல்லையும், பூங்குவளை மலருங் கதிர்த்தபொன் மேனியிற் போரிட் டொழித்ததளிர்கள் - பொங்கியொளிர் மாழையும் பிண்டியுஞ் சோகாந்து போதுவன வற்றையணையா, எங்குகட லுலகமுத லெல்லாம் பணித்திடு மிருஞ்சமர்த் திண்மையுதவி - யிடையாதவில்லென்று மம்பென்றும் வைத்ததென் னென்றுநீ யொன்றொடொன்றைத், தாங்கொளி ததும்பிடத் தாக்கியாங் கங்கைகொடு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை சப்பாணி கொட்டியருளே. (௬)

வேறு.

தவப்பய னைத்தொழு வார்க்கருள் செய்ய தடக்கையி னேற்றுபொ
  தடவுத் தொடியிற் செறியு மணிக்கட் டத்திப் பாய்ந்திடுகின் [லங்
சிவக்கு மரிக்க ணிழற்று நிழற்றுணை செவ்விய நவ்விமறிச்
  சீர்செய னோக்கி மகிழ்ந்துற வாடச் சேர்க்குது மென்றுமனம்
உவப்ப வுவப்ப மறிந்து மறிந்து முறக்க வவிக்கவவி
  உயிர்த்து வளர்த்தருள் கூர்திரு மேனை யுளங்குளி ரச்சுழலும்
குவைக்கவின் மொய்த்ததளிர்க்கையி னம்பிகை கொட்டுக சப்பாணி
  குளந்தை வயங்க வயங்கு மிளங் குயில் கொட்டுக சப்பாணி. (௬)

அரக்கெழில் கொண்டு கனிந்த செழுங்கனி யாகச் சேயொளியை
  அள்ளியி றைக்கு முருக்கலர் போலழ காரத ரத்தினையும்
சுரக்கு நறுஞ்சுவை வானமிழ் தேந்து சுடர்த்திரு வள்ளமெனத்
  தூயம ணித்தர ளத்தொடை பூண்டு துணைத்த தனத்தினையும்
பரக்கு நிறத்தளி ரென்று பசுங்கதிர் பம்பிய மேனியையும்
  பார்த்துத் துய்த்திட வாயூ றுஞ்சிறு பச்சை யிளங்கிளிதன்
குருச்சிறை தைவரு மங்கையி னம்பிகை கொட்டுக சப்பாணி
  குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில் கொட்டுக சப்பாணி. (எ)

முழங்கு மிசைச்சிறை வண்டு விருந்துணு முண்டக நாண்மலர்கள்
மூரிம ணித்தவி சாக வளர்ந்தருண் மூவிரு செவ்வுருவும்
தழங்கு குளங்கரை யெய்தி யெடுத்தெழி றங்கிடு மோருருவாத்
தழுவி முலைக்குவ டார வணைத்தெதிர் தாங்குத லாற்றகிலா
தழுங்கி விடுத்தொழி கங்கையுள் வெள்கி யழுங்கி விளர்ப்பமுலை
அமிழ்த மருத்தி வளர்த்தருள் கூர்ந்தரு மைச்செய லாற்றியநின்
கொழுங்கவின்மொய்த்த செழுங்கையினம்பிகைகொட்டுகசப்பாணி
குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில் கொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

மதுகர முலவிய துளப வுரத்தினன் மட்டாரும்
மரைமலர் நிலவிய மறைமுனி பொற்றவி சிற்றேவர்
முதுமணி முடிகுனி தரவர சிற்பொலி புத்தேளும்
முதலிய வனைவரு முளரிநி கர்த்தக ரத்தால்விண்
ணதிதரு புனலொடு தருமலர் நச்சியி ணைத்தாளின்
நவையறு விதிமுறை சொரிதர மிக்ககு ளத்தூர்வாழ்
இதமுறு பரசுக வடிவினள் கொட்டுக சப்பாணி
இமகிரி தரவரு முமையவள் கொட்டுக சப்பாணி. (கூ)

அருள்பெறு மடியவர் விழியளி சுற்றும ணத்தேனே
அவனியி னிடையற மெவையும்வ ளர்த்தசு வைப்பாகே
திருமல ரமரர்கள் சொரிதரு பதமப தத்தாயே
தெளிமறை நெறியின ருளமொளிர் வித்தசு கப்பேறே
முருகவிழ் மதுவழி நறுமலர் மொய்த்தகு ழற்கோதாய்
முனிவரர் மறையவ ரடியர்ப ழிச்சுகு ளத்தூரின்
இருமையு முதவிடு மடமயில் கொட்டுக சப்பாணி
இமகிரி தரவரு முமையவள் கொட்டுக சப்பாணி. (கo)

சப்பாணிப்பருவ முடிந்தது.

---

# முத்தப்பருவம்.

பகைத்த புரிசை மூன்றுமொரு பதத்தி னிறுத்துத் திருக்குளந்
தைப் - பதியிற் கருணை பூத்தலர்ந்த பரமா னந்தப் பெருவாழ்வை,
நிகர்ப்பச் சிறுவெண் மதிகிடந்த நெடுவா ணுதன்மேற் போந்துலவி -
நெறிக்கும் புருவச் சிலைகோட்டி நெய்த்துப் பழுத்த கொலைவேல்

போல், வகுத்த மதர்க்கட் சரந்தொடுத்து மணிமே கலைசூ ழல்குலந் தேர் - வாய்ப்ப வெளிக்கொண் டெமதுமும்மை மலச்சோ வழலைப் புன்மூரல், முகிழ்க்குந் தரளச் செங்கனிவாய் முத்தந் தருக முத் தமே - முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (க)

வளைத்த கருப்புச் சிலையெடுத்து வனசக் கணையு மாங்கணையும் - வாசங் கமழு நறுநீல மலர்ப்பூங் கணையு மசோகினிடைத், தளைத்த நனைதாழ் கொடுங்கணையுந் தழுவிக் கொணர்ந்தென் னெடுந்தொடுத் துச் - சகல புவனங் கரும்பணிக்குந் தண்ணங் குடையெங் குரிசி லைக்கண், டிளைத்த வெரியாற் படப்பொருத திருவார் குளந்தைச் சிவவாழ்வைச்-சிந்தைமருட்டிப் பணிப்பலெனத் திறல்கொண் டெ ழுந்த தளவம்போன், முளைத்த முறுவற் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே - முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (உ)

பிதிரும் பொறிப்பொற் சிறைவிரித்துப் பெருந்தேன் மடுத்துத் தாதளைந்து - பெடையோ டாடிக் களிபூத்துப் பிறழா வகையின் னிசைபாடி, அதிரும் பலவண் டினமுழக்க வலரும் பொகுட்டுத் தேங்கமல - வலர்க்குந் தனக்கும் பகைமையுற வமைத்துக் குளத்தூ ரமர்ந்தருளிக் - கதிரும் பெருமா னுளக்கமலந் தனையு மலர்த்தி வய மாக்கிக் - கலப்பா னெழுந்தா லெனவதனக் கலைவாண் மதியி னரு ம்புநிலா, முதிரும் பவளச் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே - முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (ஙா)

கொழுது வரிவண் டினமுரலாக் குளிர்பூந் தொடையன் முடி சாய்த்துக் - கும்பிட் டிறைஞ்சுங் கடவுளர்தங் குழாத்தைச் சிறிது மதியாத, பழுது நிலவாத் திருக்குளந்தைப் பதிவா ழிறையோன் விழிச்சுடரின் - பரிசு நோக்கி மணியிதழ்க்க பாடஞ் சிறிதே திறந் தருவம், எழுதும் வினைஞர் தொழிற் கடங்கா வெழிலார் தனதொ ள் ளொளிகாட்டி - எழுந்தச் சுடரை வயமாக்கி யேக்கற் றமையம் பார்த்திருப்ப, முழுது மடிமைக் கொளுநகைவாய் முத்தந் தருக முத்தமே - முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (ச)

இகந்த மனத்தாற் கடல்கடைந்த விமையோர் வெருவ வெழுங் காளம் - எடுத்துப் பருகுந் திருக்குளந்தை யிறைவன் பவளத் திரு வாய்க்கும், சகந்த னிலைமை தவாதோங்கத் தாவிக் குதிக்குஞ் சிறும றிமான் - தழங்கு மரும்பே ரொலிமுழுதுந் தாங்குஞ் செவிக்கு மரு ந்தாக, உகந்த வொளிதுன் றியவெயிற்றி னூறு மமிழ்தப் பெருக்கா

றும் - உரைப்பா ணமிழ்தப் பெருக்காறு மூட்டிக் களிகூர்ந் தெழிற் கடலை, முகந்த பவளச் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே - முரு கு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (ரு)

## வேறு.

அசும்புபட வாய்நீர் வழிந்தோட வோடிவந் தணையுமைங் கரக் களிற்றை - ஆகத் திடைக்கொண்ட ணைப்பட் டடித்தென வணைத்த லும் பணைத்து வளர்பொற், றசும்புதனை யெதிருமிரு களிறெனத் தன்மத் தகங்கொண்டு தாக்கி மயிரின் - றண்ணிய வொழுக்கினை யணைக்குமொரு கந்தெனத் தடவுக்கை யாற் சுழியவவ், விசும்புண் மறை பட்டெழுந் தெண்ணிலா வெணநகை விரித்தொல்லை மேலெ டுத்து - வெகுளிதீர்த் துளங்குழைய முத்தாடி வைத்தாடும் வியனக ர்க் குளந்தை வாழ்வே, பசும்பொனவிர் திருமேனி யழகொளிர நின்றுநின் பனிவாயின் முத்த மருளே - பங்கயச் செல்வி தொழு ம ங்கையர்க் கரசி நின் பனிவாயின் முத்த மருளே. (சு)

சேட்டின மணிச்சோதி நீட்டுமிலை ஞாங்கர்நுதி தீட்டுநின் ஞட் டத்திறற் - றெள்ளிய வருட்பார்வை வெள்ளமமிழ் தம்மைநீ தேக் கிடவு நீக்கி யளகக், காட்டினைக் காட்டிமயல் பூட்டிளம் பேட்ட னக் கவினடைக் கன்னியரிடைக் - கட்டுண்டு மட்டுண்டு தட்டுண்டு பட்டிறுங் காளையரின் மாளுநரென, மூட்டியபொன் மாடகத் தியா ழுக்கு மிசையூட்டு மொழியமிழ்த மூட்ட விட்டு - மோட்டிருங் கோ ட்டுக் குவட்டைநிகர் வட்டமுலை முத்தையமிழ் தென்றேக்கறாஉம், பாட்டிசைக் கிள்ளைக்கு மீட்டுமிசை யூட்டுநின் பனிவாயின் முத்த ம ருளே - பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின் பனிவாயின் முத்த மருளே. (எ)

மடல்கொண்ட பூந்துழாய்ப் படலைமணி மார்பினுன் மறைநக்கி ழவ னுதியண்ட - வாணரும் பதைபதைத் தோட்டெடுப் பக்கொடி ய வளைகடற் புனன்மீதெழும், விடமுண்ட சோமேச ரைக்கினிய வாயமிழ்த மெல்லெனப் பருகுவித்து - விளியாத வண்ணமென் கொங்கையஞ் சஞ்சீவி வெற்புங் கொடுத்து மற்றும், உடனென்றி மணிமிடற் றுலவா திருத்தலா னொருகணப் பொழுதுமகலா - துரு ப்பாதி யிற்கலந் தனுதினம் பாதுகாத் தொண்குளத் தூரின்மருவும், படமொன்று மரவல்கு லெழிலமுத வல்லிநின் பனிவாயின் முத்த மருளே - பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின் பனிவாயி ன் முத்தமருளே. (அ)

வேறு.

சுறவே றியகொடி முதலா கியபடை சுற்றிவ ரத்தனிபோய்ச்
சுவைநீள் சிலைகொடு மலரார் பகழிது ரக்கும தக்கொடுவேள்
இறவே நுதல்விழி வழியூ டழலெழு வித்தவி றற்பெருமான்
எரிபோ லொளிவிடு சடைமா முடியினி ருக்கும திக்கடவுள்
வெறியார் திலகம தணிவா ணுதலெழி லிற்குளம் வட்கிநரு
விரிபூ விதழியை நடுமே னியினிறு விப்பொரு வக்கருதும்
முறிபோ லுருவினள் கமலா கரமயின் முத்தம ளித்தருளே
முதுநான் மறையறி வறியா வடிவினண் முத்தம ளித்தருளே. (கூ)

பெருகா ரமிழ்தருளொளிசேர் மதியெழில் பெற்றநு தற்கொடியே
பிறவா வருணெறி தருவா யெனுமவர் பெட்பினு ளச்சுவையே
மருவார் தகரமு மளிவீழ் மலருமு ணத்தகு ழற்றிருவே
மதியா தவருள மருவா திருளென வைத்தம டப்பிடியே
உருகா நெறியெம துளமா சறவுமொ றுக்கும றக்கடலே
உருவா யளவரு மருவாய் நிறைபொரு ளுக்கொரு வைப்பிடமே
முருகார் பொழிலணி கமலா கரமயின் முத்தம ளித்தருளே
முதுநான் மறையறி வறியா வடிவினண் முத்தம ளித்தருளே. (கய)

முத்தப்பருவ முடிந்தது.

# வாரானைப்பருவம்.

வெள்ளித் தகட்டையரில் கொள்ளத் துறுத்தனைய வெள்ளிய சிறைப்பவளவாய் - வெள்ளோதி மத்திரள்கள் செஞ்சிலம் பொலியி னையு மென்மடப் பிடியினத்தை, எள்ளிக் கவின்கொண்ட திருநடைப் பொலிவினையு மெய்யாது கற்கவெண்ணி - இகபரப் பெருவாழ்வு வேட்டவர்க் கருளுநின் னிணையடிக் கமலமலரை, உள்ளித் தொடர் ந்துசூழ் மொய்த்திடுஞ் சூழலிடை யுற்றுநீ யச்சூழலி - னெடும்பெயர்ந் தவிர்மதிய மூர்ந்துவர லேய்ப்பவொளி மாமணிக ளிருகரையி னும், அள்ளிச் சொரிந்தலவு பாலிநா டாளவரு மமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தாற்று புன்மூர லழகொளிர வம்பொருயகி வருகவே. (க)

துளிபட்ட தேந்தொடைக் கூந்தலைக் காரொன்று தோகைமுன் னுடிவரமென் - றுணைமலர்ப் பாதநடை கற்கவன்னத்திர டொடர்ந்துபின் னோடிவரவுட், களிபட்ட நிங்கிளவி கற்குநின் செந்தளிர்க்

கைக்கிள்ளை பாடிவரவான் - கருணைபொழி கட்கடைப் பார்வையை வியந்துமான் கன்றினங் கூடிவரமெய், யொளிபட்ட வேதக் குழா ங்கதறி யோலிட் டுனைப்பெரிது நேடிவரவில் - லுமிழ்மணிக் கோவைக் குரூஉப்பரும மீமிசை யுடுத்தவிடை வாடிவரமை, அளிபட்ட பூஞ்சோலை சூழ்குளத் தூரில்வரு மமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர வம்பொனு யகிவருகவே.()

வில்லுமிழ் குரூஉமணிச் சுடிகைப் பணிக்குழாம் விரித்தபை நெரித்துருத்து - வீசுங் கலாபப் பசுந்தோகை யீட்டங்கண் மெல்லி யலு நடையும்வேட்டு, வல்லுறழ் மணிக்கோவை தாழ்ந்தமென் கொங்கைநின் மருங்குறச் சூழ்ந்து வரவவ் - வளரிளஞ் சாயலா னடையினுன் வேறறிய மாட்டாது மருளுமெம்மை, எல்லொளித் தண்ணிலா நகைகொண்டு தேற்றிமற் றிருக்காதி யானநான்கும் - இன்னங் கிடந்துமுறை யிட்டுமறி வரியநின் னியல்பினைக் காட்டியருளி, அல்லுமிழ் தடம்பொங்கர் சூழ்குளத் தூரில்வரு மமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர வம்பொனு யகிவருகவே. (ரு)

வயிரா வணந்தொறு மெழுங்குளத் தூர்வந்து வான்கோடி ரண்டாயிரம் - வாய்த்ததனை யாளும் பிரானைமரு மத்திரு மருப்பினு லாண்மையும், செயிரா வணங்கினைப் பல்லுயிரு மெய்தத் தெறூஉமலக் களிறைந்தையும் - திக்கெட்டு மண்டப் பரப்புங் கடந்திறச் செற்றிடும் விழிவீரமும், பயிரா வணஞ்சொரியு மேகத்தி னருள்கூர்ந்த பதநடையு நோக்கியஞ்சிப் - பனிமா லடுக்கலெனு நுந்தைநின் னுரிமையாற் பரிந்துபின் வருதலேய்ப்ப, அயிரா வணம்பின்பு தொடரத் தொடைக்கூந்த லமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர வம்பொனு யகிவருகவே. (சு)

விந்தையங் கிரிதனக் கிகலியுள் ளதுமுற்றும் வீந்தவீ றின்மையுந்தண் - வெள்ளிவே தண்டமொ ரரக்கன் பெயர்த்திட்ட மென்மையுங் ககனமீறும், மந்தர முதற்கிரி யிடைக்கட் பொலிந்தண்ட மார்க்கத் திரண்டுசுடரும் - வலமாய் வரப்புவிக் காதார மானதன் வன்மையையு நோக்கி நோக்கிச், சிந்தைகளி கூருமா மேருவைச் சிவபிரான் செங்கமல வங்கைபத்தும் - சேர்ந்துநித் தலுமுழக் கத்தளர்ந் தொசியாது செம்மாந்து விம்மியெள்ளும், அந்தனச் சிகரிமிசை யருவிரித் திலமிட்ட வமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர வம்பொனு யகிவருகவே. (கு)

அ

## வேறு.

தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித் திட்டா நிலைமைத் தெனவுலகிற்
றெரிக்குங் காழித் திருஞானச் செம்மற் குழவிக் கருண்ஞானம்
பெய்து குழைக்க வோமுலையாம் பெரியமலைவா யுறுத்துமென்றே
பெருமான் றனையுங் குழைத்தவலிப் பெற்றி யறிந்து தடுத்தோபூங்
கையி லிலகு நகக்குறிபற் கதுவ நோமென் றேநீம்பால்
கறந்து கொடுத்தா யெனச்சகிமார் கனிந்து பாட நகைமுகிழ்க்கும்
வையைத் தமைத்த மதர்வேற்கண் வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (சு)

குஞ்சி யசைய வசைந்துவருங் குமரப் பெருமான் றனையேந்துங்
குளிர்பூங் கரத்துத் தொடிகறங்கக் கொடிபோ லொசியுஞ் சிறுமருங்குல்
அஞ்சி நுடங்க வம்மருங்கு லணிந்த பருமங் கதிர்த்தேங்க [ங்குல்
அணங்கு மிடைகண் டிரங்குவபோ லவிரு மணிநூ புரமொலிப்பப்
பஞ்சி திருத்துஞ் சீறடிகள் பதிந்த சுவடு தொறுமிமையோர்
பனிகான் மோலி நிரைபுரளப் பதுமை முதலோர் களிதூங்க
மஞ்சி வரும்பூங் குழற்கற்றை மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (எ)

கடிகொண் டலரு நறுங்கடுக்கைக் கடவுண் மகிழப் பேரண்ட
கடாகப் பரப்பே சிற்றிலெனக் கருமப் பகுப்பே சிறுசோறும்
படிகொண் டுயிராம் பாவைகட்குப் பைதன் மலநோய்ப் பசியிரியப்
பல்கா லயிற்றி விளையாடிப் பரமா னந்தப் பெருவீட்டு வெமுதே
குடிகொண் டிருக்குந் தீங்கரும்பே கொள்ளத் தெவிட்டா சுவைய
குன்றம் பயந்த நறுங்கனியே கொழிக்குங் கருணைப் பெருக்காறே
மடிகொண் டயரா தெமைப்புரக்கும் வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (அ)

தீது விளைக்குங் களப்பணியுந் தேவர்குரவன் மனைச்செல்வி
திருக்கற் பளித்த களப்பணியுந் திளைத்துக் கலவி செயப்புகுங்காற்
கோது விளைக்கும் பேரச்சக் குணமு நாணுங் கொடுக்குமெனக்
குறியே னினது சாயலுமின் கொழிக்குங் காஞ்சி யல்குலுமே [கப்
போது விளக்குஞ் சடைக்காட்டிற் புகுந்து வெளிக்கொளாதொளிக்
பொலிவு தருமா லெனச்சகிமார் புகலச் சற்றே நகைத்தளிகள்
வாது விளைக்கு முடிசாய்க்கு மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (கூ)

அயில்கண் டனையஞ் சலித்தேத்து மன்னை வருக பெருங்கருணை
யாழி வருக தீவினையே மாவித் துணையே வருகவிடங் [ளஞ்
துயில்கண் டனையம் பலத்தாட்டுஞ் சுடர்பொற் கொடியே வருகவி
சுகமே வருக நறுங்குதலை தோற்றுங் கிளவி யெனுமதுரம்
பயில்கண் டனையர் செவிக்கூட்டும் பசுங்கோ கிலமே வருகவென்றும்
பருகத் தெவிட்டாச் சுவையமுதப் பாவாய் வருக பசுந்தோகை
மயில்கண் டனைய விளஞ்சாயன் மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (கo)

வாரானைப்பருவமுடிந்தது.

# அம்புலிப்பருவம்.

பொன்பூத் தலர்ந்தவன் மரவங்கண் மாலரி பொருங்களிற் றின மளாவிப் - பொங்குமலை வாய்வருங் காரணத் தாற்செய்ய பொன்னஞ் சிலம்படியினின், மின்பூத்து நாளும் புலம்புறச் சூழ்தலான் மிடையுமங் கமலமயர-மிக்குறுங் குவலய மடங்கலுங் களிதூங்க விரியொளிக் கதிர்வீசலாற், கொன்பூத்த பெருமானை யணைதலால் வேவெனுங் குழகற்கு மகிழ்செய்தலாற்-கோமளப் பெண்செய்கை நின்செய்கை போலுமாற் கூர்ந்துணரி னிவளையன்றி, அன்பூற் றெடுப்பவிளை யாடுதுணை வேறில்லை யம்புலீ யாடவாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (க)

மண்டலம் புகழாத வன்படுஞ் செவ்வியின் மாண்டவரையுச்சி மீது - வயங்கிய கரஞ்சேர்த்தி யாணவ விருட்குழா மாற்றிநற் பசுமென்பயிர், கண்டக மகிழ்ந்துநெடு வானுற விளைந்தொளி கலந்தமணி கான்ற கதிர்நீள் - கடிநாறு தன்னடி வணங்கவெளி வந்துதெண் கடலுலக முற்றுமேத்த, விண்டல நெருங்குமீன் கணமாதர் புடைசூழ மேவியுல கந்தனதியல் - வீறுபெற நோக்கிறு லீரெண் கலைப்பொலிவு மெய்ம்மையிற் காட்டு முறையால், அண்டர்தொழு மெம்மையா ளம்மையை நிகர்ப்பைநீ யம்புலீ யாடவாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (உ)

கங்கையும் பாந்தளுந் தும்பையுஞ் செம்பொற் கடுக்கைச் செழுந்தொடையலுங் - கபாலமுங் கொக்கிறகு மூற்றிருந் தொழுகுதேங் கமழ்ந்தபூ மத்தமுநறுங், கொங்குதவ ழாத்தியும் வன்னியு மெருக்குங் குளிர்ந்தவறு கம்புல்லுமேற்-கோமளப் புலவோ ரிறைக்குமந் தாரமு

ங் கொய்துதவர் தூற்றுமலருந், தங்கிய பிரான்சடைக் காட்டினி லு
னக்குரிமை சற்றலால் வேறுமுண்டோ-தாவிலெண் ணூன்கவய வத்
தினுஞ்செம்பாதி தனதெனக் கொண்டுவாழும், அங்கவ ணினக்கதிக
மென்பதற்கையமிலை யம்புலீ யாடவாவே - அழகுவள ருங்குளத் தூ
ரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (௩)

உருநிறை யுவாத்தோறும் வாக்குநின் னமிழ்துண்ட வும்பர்த்
தலத்தி னிமையோர் - உவாக்கட லுயிர்த்தவிட முன்னிற்ற லாற்றற்
கு மொல்கினர்கள் சாவாதிரார், குருநிறை மணிக்கச் சணிந்தவிவள்
பவளவாய்க் கொழியமுதம் வாய்மடுத்த - கோமளச் சோமேசர் விட
மயின் முற்றலுங் கொண்டன ரிறத்தலிலர்மற், றிருணிறை யிராவி
னை விளைத்தியிவ ளுண்ணிறையு மிருளிரா வினைமுழுவதும் - இரித்
திடுவ ளாதலா லிவளொடும் பொன்னே டிரும்பனையை மன்றவரி
பாய், அருணிறை கடைக்கண் வைத் தெம்மையா ளம்மையுட னம்
புலீ யாடவாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ
யாடவாவே. (௪)

தெளிக்குமெய் யன்பினால் வழிபட்ட நாளுணது செல்லனேய்
தவிர்த்தளித்த - திருச்சோம நாதனு ருண்டருளு நஞ்சுஞ் சினந்தயிர்
ந் துள்ளொடுங்கத், துளிக்குமெழி லங்கைத் தலத்திற் றடுத்திட்ட
சுவையமிழ் திருப்பவமிழ்தந் - துணைக்கரத் தேந்திப் பசிப்பிணி தெற
த்தினந் துயருழந் துழல்வோரெனக், களிக்குமுறை தேற்றுது வா
ளரா வுண்டுண்டு கக்கத்திகைத்து வெருவிக் - ககனவெளி யோடியு
ம் வடகுவடுசுற்றியுங் கவலுநின் செய்கைநன்றே, அளிக்குல மிரை
க்குங் கடிக்குழற் கன்னியுட னம்புலீ யாடவாவே - அழகுவள ருங்கு
ளத்தூ ரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (௫)

வணங்குமுறை யாற்றனது திருவுளப் படிநிற்கு மாந்தர்க்கு
மலதிரோத - மாயேய காமிய மருட்பிணி யவிழ்த்துநான் மறைமு
டிவு மெட்டாததோர், குணங்குறி கடந்தபே ரானந்த வெள்ளக்
கொழுங்கட றிளைத்தாடிடக் - கொடுத்தருளும் வள்ளன்மை நிற்கமற்
றுலகினுங் குளிர்தூங்க வெண்ணூன்கறம், இணங்குவே தாகம வழி
த்துறை வழாவகை யியற்றியது காணுயலை - ஈங்குநீ வரினினது க
றைபோக்கி வேண்டியது மீந்தருள் கொழித்தருளுவாள், அணங்கு
கொண் டந்தரத் தலையாதெ மம்மையுட னம்புலீ யாடவாவே - அழ
குவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (௬)

குடங்கைமல ராற்செம்பொன் மேருவைத் தனுவெனக் கோட்
டிய மலைக்குமருகன் - கோமளச் சிலைமார்பு மைந்தனை யிரட்டித்த

குவவுப் புயக்கு வடுமேல், வடங்கதவு மோட்டிளங் கோங்கினும்
வண்டினு மலங்கக் குழைத்தவணிளை - வருகென் றழைத்திடவு
மதியா திருத்தியிவள் வன்கதக் கனலிதோய்த்த, தடங்கட் கொடும்
படைச் செய்யசுடர் வேல்கொண்டு தாக்கினுயிர் பொன்றிவிடுதல் -
சரதமற் றெங்கெங் கொளிப்புறினு மிவளிலாத் தானமொன் றில்
லைகண்டாய்,"அடங்கிய தடங்கமல நெஞ்சா தனத்திருவொ டம்புலீ
யாடவாவே-அழகுவளருங்குளத் தாரமுத வல்லியுட னம்புலீ யாட
வாவே. (௭)

துடிபட்ட கைத்தலத் தெம்பிரான் மகிழ்தருஞ் சுந்தரப் பெண்
ணமிழ்தெனத் - தோன்றும் பிராட்டியையமு னெண்ணாத தக்கனூர்
துயர்கூர்ந்து பட்டபாட்டை, முடிபட்ட வானவர் குழாத்தோடு
முடனின்று முழுவதும் பட்டறிதியிம் - மொய்குழற் செல்விதனை
யவமதித் தின்றுநீ முன்னுரு தகன்மொழிவையேற், கடிபட்ட வித
ழ்நின்று கறுவினு ணின்னிலைமை கடிபட்டு மாழ்குவையலாற் - கலை
முழு மதித்தே வெனும்பழைய பெயரொடுங் கலைமதி யிலாததே
வென், றடிபட்ட பாவிற் புதுப்பெயரு மாளுவா யம்புலீ யாடவா
வே-அழகுவளருங்குளத் தாரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே.()

சங்கையா னங்கையிவ ளெம்பிரான் புலவியிற் றடங்கருங் கட்
கடைநுதி - சற்றே கறுப்புழித் தாமரைச் சீறடிக டாக்குங் கடுந்
தொழிலினாற், கங்கையா டித்துடித் திவள்கருணை யாற்றினைக் கை
கூப்பு மிறையேந்துமான் - கதறிவிழி மானைத் தொழுந் தொடைய
ல் வண்டெலாங் கருங்குழற் றுவுமரவம், மங்கையா டாதபைப் பா
ந்தளைக் காவென்று வாவுமற் றுங்குநீயும் - வானுதன் மதிக்கிறைஞ்
சிடுவையன் றேயதனை மதியாத தென்னைகொலெமக், கங்கையா
மலகமென வன்புகூ ரம்மையுட னம்புலீ யாடவாவே- அழகுவள ரு
ங்குளத் தாரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (௯)

கைப்போது நீட்டிமுன் விரித்துனை யழைப்பவுங் காணுதி போ
ல்வந்திலாக் - காரணத் தாலம்மை சீறுதலு மங்கையைக் கரும்பா
ந்த ளென்றஞ்சினுன், இப்போது தாழ்க்கலான் வருவனென் றிது
காறு மிவ்வாறு தப்புவித்தோம் - இன்னுநீ வாராது மத்தரிற் றிரிதி
யே லினியுனக் கேதுபுகலோ, செப்போது கொங்கைப் பிராட்டி
யிவள் சோமேசர் செங்கண் புதைத்தஞான்று - தினகரச் செல்வ
ஞெ டழுங்கித் திகைத்தநின் றிறமறந் தனைபோலுமால், அப்போ
து பட்டதை நினைந்துமற் றிவளுட னம்புலீ யாடவாவே - அழகுவள
ருங்குளத் தாரமுத வல்லியுட னம்புலீ யாடவாவே. (௧௦)

அம்புலிப்பருவமுடிந்தது.

# அம்மானைப்பருவம்.

வம்பிய ரொடைக்கூந்தன் மீமிசைக் கதிர்வீச வாள்பட்ட கோற் றொடிக்கை - மலரிணைக் கண்டுசில வண்டத்து மதியங்கள் வனசமி தெனுங்கருத்தாற், பம்பியட ரிருள்கண்டு முகிழாமை யாற்றமைப் பரிசித்தல் வேட்டதாகப் - பாவித் துறுந்தொறுந் தன்றுணைமை யன் மையாற் பங்கயம் விதிர்த்துவெருளா, வெம்பியகல் வானந் தெழுந் தோ டிடத்தள்ளி விடலெனச் செங்கைகளால் - வேலிணை யிகந் தொருவி வார்தரு கொடும்புருவ வில்லொடு கிடந்து மிளிரும், அம் பிய றடங்கணொளி கொண்டுலவு நித்திலத் தம்மானை யாடியருளே ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே. (க)

இருள்பூத்த நெறிசுரி கருங்குழ லரம்பையர்க ளெண்ணிலார் கவரிவீச - எறிசுடர் மணித்தவிசு வீற்றிருந் தரசுபுரி யேந்தல்குல வரைகளோடுந், தெருள்பூத்த நுந்தைசிற கீர்ந்தமை குறித்துச் செயிர்த்தவனை யண்டமுகடுந் - தெறிபடக் கைக்கொண் டெறிந்தோச்சி மீளத் திகைத்துவீழ் தோறுமுன்றன், மருள்பூத்த வெருளிதணி யாமையாற் பின்னரும் வன்கண்மை கொண்டோச்சல் போன் - மருங் குசூழ் தோழியர்த மிணைவிழியி னீழலை மரீஇச்சுலவி யோடியாட அருள்பூத்த கைகளா லொளிபூத்த மரகதத் தம்மானை யாடியருளே- ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே. (உ)

ஒழுங்குபடு மண்டகோ டிகடொறு நிலாவுறூஉ மொண்கமல மாநிதிகளும் - ஒலிகொண்ட வெண்சங்க நிதிகளுஞ் சார்ந்தவர்க் குதவுநின் கரநோக்கிவான், செழுங்கதியு முய்த்தளித் திடுநிதிய மீதெனத் தேர்ந்துவந் தளவளாவித் - திருவாய்ந்து விடைகொண்டு தம்பதி குறித்துமேற் சேண்வழி நடத்தலேய்ப்பக், கொழுங்கதிர் பரப்பிக் கவின்றசெம் மணியாற் குயிற்றுமம் மனைகள் பலவுங்-குளி ர்நிலாக் கான்றுவெள் ளொளிவீசு முத்தங் கொழிக்குமம் மனைகள் பலவும், அழுங்குமணி மேகலைச் சிற்றிடை யெடுத்தெடுத் தம்மானை யாடியருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே. (௩)

தேங்கலுழி யூற்றெடுத் தோடும் போருகச் செல்வமட வாரிரு வருந் - திங்களைக் கண்டினி யிருக்கினெமை நந்தவிசு சிறைசெயு மெனக்கவன்று, பூங்கமலம் விட்டொரீஇத் தங்கொழுநர் பதியுறப் போமிடைத் திரும்பிநோக்கிப் - புகழ்ந்திவை மதிக்குமுன முகிழா

மை தேர்ந்துளம் பூரித்து வருவதேய்ப்பத், தோங்கனியு மும்மலத் துகளீர்க்கு நின்முகஞ் சுடர்பூப்ப வங்கையேந்தித் - துரிசற்ற பவளத் திழைத்தனவு நித்திலத் தொகையிற் குயிற்றியனவும், ஆங்கமணி வால்வளை தழங்கிட வெடுத்தெடுத் தம்மானை யாடியருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே. (௪)

புத்தமிழ் துகுத்துமணி மோலியங் கடவுளர் புரைப்பசிப் பிணி தவிர்த்துப் - பூதல மருங்கினும் பைங்கூழ்த் தொகுப்பெலாம் பூரிப்ப மாந்தர்முகனுஞ், சித்தமு மலர்ந்துகளி கூரச்செழுங்கலைத் திங்கதிர் பரப்பியுலவுந் - திங்கட் பிரான்செந் துவர்க்கொடி படர்ந்தவெண் டிரைமுகட் டெழுங்காலையுந், தத்தலை விரிக்குங் குடாதுகட லுட்புகுஞ் சமயத்தி னுஞ்சேத்தல்போற் - றடங்கையி லெடுத்தெறியு மேல்வையினு மற்றது தடங்கையிற் புகும்போழ்தினும், அத்தமுமிழ் சேயொளி கவர்ந்தொளிரு நித்திலத் தம்மானை யாடியருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே. (௫)

மருள்கான்ற நெஞ்சச் சழக்கைத் தடிந்தின்ப வான்கதி கொடுக்குநின்கை - வயங்குபொற் கடகத் திருங்கவின் முகந்துமலர் வள்ளை நிகர்த்துவிழியின், இருள்கான்ற நீலங் கவர்ந்தராப் பாயலிடையேந்தலை நிகர்த்துநுதலின் - இட்டசிந் துரவெழில் கவர்ந்துநின் கொண்கரை யிணைந்துமேற் போந்துலாவித், தெருள்கான் றெவற்றினுந் தோய்வற்று நின்றவச் சிற்பரம் பொருளையொத்துச் - சேணுடர் கொண்டாட வாடச்செழுங்கருணை தேக்கிநிறை சோமேசனுர், அருள்கான்ற கண்களி பயப்பமணி நித்திலத் தம்மானை யாடியருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே.

வேறு.

முத்த மிழைத்தன வும்பவ ளத்திரண் மொய்த்தன வுங்கலைகண்
முற்று நிறைந்த பசுங்கிர ணச்செழு முழுமதி யாமெனவும்
எத்திசை யுங்கதிர் கான்றிருள் சீத்தெழு மென்றூழா மெனவும்
எண்ணி யுணற்கெழு மூன்று ளராவு மிருஞ்சிறை நேமியுநின்
னுத்தி முலைக்கு மியற்கு மிடைந்தய லோடவும் வெம்பசியால்
உயங்கு சகோர மயங்கி யுடன்றிரி வுற்று வருந்தவுமென்
னத்த னுளத்தி னடிக்கு மடப்பிடி யாடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (எ)

வடங்கெழு கொங்கை நிகர்ப்ப வளர்ந்த வடாது பொருப்பினைநின்
மகிணர் கரத்தினி லின்னும் வளைத்திடு மாறெரு சூழ்ச்சிநினைந்
துடங்கழி மூன்று புரங்களை மீண்டு முலாவ வெழுப்பிவரம் [மோர்
உதவி வெளிக்கண் விடுத்தல் கடுத்திட வொள்ளொளி முத்தினு
முடங்க லுருதொளிர் நீல மயத்தினு மொய்த்த பசும்பொனினும்
முற்ற வமைத்து விடுத்தரு ளம்மனை மூன்றும்விண் மீதுலவ
அடங்கிய வன்ப ருளங்குடி கொண்டவ ளாடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (அ)

உய்ய வரந்தரு நித்தன் முகத்தி லுயங்க முனைந்தகையும்
ஒண்கர மின்னு மொறுத்த லுறுதுற வாடி நயப்பமெனு
வெய்ய நெருப்பெழு செங்கதி ருங்குளிர் வீசு பனிக்கதிரும் [ற்
மேவியகங்கையி னேடுறு கேண்மை விளைத்துவிண் ணேகுதல்போ
செய்ய மணிப்பவ ளத்தி னிழைத்த செழுந்திர ளம்மனையுந்
தெள்ளிய முத்தி னிழைத்த கதிர்க்குவை சிந்திய வம்மனையும்
ஐய நுசுப்பொசி யத்தளி ரங்கையி னுடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (கூ)

கதிருமிழ் நீல மணித்திரண் மொய்த்த கருஞ்சுட ரம்மனைநின்
கட்படை யாலடி யார்மல மோடல் கடுப்ப வெழுந்துலவ
முதிரொளி துற்ற செழும்பவ ளத்திரண் முற்றிய வம்மனையம்
மும்மலம் வென்ற திறற்பிர தாப முளைத்தெழ லொத்தெழவெண்
மதிநிகர் முத்த நிரைத்து வனைந்தவம் மானைய தன்பிறகே
வயங்கிய கீர்த்தி திரண்டெழு கின்றது மான வெழுந்துலவ
அதிர்வளை யங்கையி னலமுதாம்பிகை யாடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (கὁ)

அம்மானைப்பருவமுடிந்தது.

---

# நீராடற்பருவம்.

---

தேங்கிய செழுங்கலைத் திங்களுக் கருள்செய்த செல்வர்முடி மீதுதானுந் - திளைத்தாடு முரிமையாற் றிளைத்தாடு வோர்க்கெலாந் தீப்பிணிப் பவந்தெறுதலால், ஓங்கிய கலித்திரைக் கங்கையொன் றேநம்மை யொத்ததா மென்றதனுடும் - உறவாடல் வேட்டெழுந் தாலென்ன விண்ணத் துயர்ந்துநீக் கூட்டமலைமேற், றுங்கிய கிளைக்

குலங் கான்றமணி யைத்தனது சாதியென வோகைகூரத் - தண்கதிர்க் கடவுளொடு செங்கதிரை யண்டத் தடஞ்சுவர்ப் பிடரினேற்றி, வீங்கிய வொலிக்கூட்ட மீன்றுவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (க)

இருகவு ளுடைந்தூற்று பூங்கடாங் கமழ்முகத் தெறுழ்வலிக் குழுஉக்களிறெலாம் - எழிலிக் குழாத்திற் பெயர்ந்துழி தருஞ்சிகரி யிடமாதி நான்குமாற்றத், தருவள னடங்கத் தழீஇக்கொண்டு பின்னவை தளர்ந்துகலி கூராவகை - சாலவெதி ரொன்றுக் கனந்தமாப் பெருவளன் றண்டா தளித்து வரிசூழ், அருநில னிடத்தொருவர் தினையளவை யாற்றிடினு மருளினிலை பெறுவாழ்க்கையோ-டழியாத திருவுமெதி ராங்கவர்க் குதவுநின் னடியவரை யொத்து மாக்கள், வெருவியய லோடத் தழங்கிவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே-வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே.()

வளைத்தமுப் புரிசைத் தலத்தினின் றயில்கொண்ட வாளிக்குழாமெழுதல்போல் - வயங்கிய பசும்பொற் றிரட்குவட் டினையும்வலவாளரித் திரளையுநெடுந், துளைத்தகை முகக்கடாக் குஞ்சரத் தினையுஞ் சுழிக்குமச் சுழிமூன்றினுந் - துண்ணென வெழுந்தெட் டடல்வாளை தெய்வத் துறைப்புனற் கங்கைநதியிற், றிளைத்ததிற நோக்குவார்க் கிப்புனல் படிந்தாடு செய்தவப் பயனையிந்தத் - திண்பூத பரிணம தேகத்தி னுதவுமா நீர்த்தமிது வெனவியப்பு, விளைத்துவிண் ணுடும் பழிச்சவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே-வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (ரு)

திரைத்தொலி பரப்பியலை வீசும் பெருங்கடற் றீம்பயம் பருகியார்த்துச்-செல்லின மெழுந்துநெடு வான்படர்த லுந்தனது நீர்த்தம் படிந்தாடுநர், புரைத்தொகை விளக்குமல மாயைகன் மக்குழாம் பொள்ளென விரிந்தோடலும் - புரையக் கருங்குழற் காட்டுமலர் கூரும் பொலஞ்சிறைத் தும்பிமுழுதும், இரைத்துமணி வானத் தெழுந்தோட நீராடு மேந்திளங் கொங்கைமடவார் - எறிட்ட மணியணிகள் சிந்திய கரைக்கணின் னிணையடி வருந்தாவகை, விரைத்துணர் நிரம்பப் பரப்பிவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே.(சு)

கொழுந்தாம மாடவது சுற்றுங் குழற்கற்றை கூட்டுவிட் டாடவதனிற் - குடிகொண்ட மாதர்ச் சுரும்பின முகேரெனக் குரல்விளைத் தாடவதுசூழ், செழுந்தா துகுங்கஞ்ச வெள்ளனந் திரையூடு சேர்

ந்தாட வதனருகுகின் - திருமேனி கண்டின மெனப்பிணி முகக்குல
ஞ் சிறைவிரித் தாடவதுபோல், எழுந்தாடு தெய்வப் பிணக்குழாங்
கண்டுகண் டின்பநீ ராடவவர்தோள் - இணங்கும் பெரும்புலவர்
கைகொட்டி யாடவெள் ளீர்ம்புனற் கங்கைபுவிமேல், விழுந்தாங்
கொழுங்குகொண் டாடிவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே-வெறி
நறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே.(ரு)

வேறு.

ஏந்து பிறைவெண் மருப்புரற்கா லெழில்கூர் மலைவாரணத்தி
ன்கள் - எய்திப் பரவை கலக்குமலை யெய்ப்பத் துளைந்து விளையாடி,
நீந்தி யணைந்து கரையேறி நிறையுங் களிப்பு மீக்கொண்டு - நிலா
வெண் டரளக் குவைபெயர்த்து நீள்வா ரிதியின் கரைக்கணலை, மா
ந்து முகிலா லியைச்சொரிந்தான் மானச் சிதறும் பரப்பினிடை -
வான்மீ னடுவட் பமைதியம் வதிந்தா னிகர்ப்பச் சங்கினங்கள், போ
ந்து துயிலும் பாலிநதிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் குள
ந்தை யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே. (சு)

வழியுஞ் செழுந்தேங் கமலமலர் மடவா ரமிழ்ந்தே புனலகத்து -
மறைந்தால் யாங்க ணினைப்பிடிக்க வல்லே மெனவஞ் சினங்கூறச்,
சுழியும் புனனீ யவ்வாறு துண்ணென் றொளிப்ப மற்றவர்தாந் - தூ
ருவிக் காணு தெங்கொழுநர் சோதிப் பிரானன்று டலையென்ன, மொ
ழியு முறுப்போ ரிரண்டையுமே முன்னிக் காணார் யாமிவளை - முழு
துங்காணே மெனநாணி முடிசாய்த் தொதுங்கி நிற்பவருள், பொழி
யும் பசியமுகில்பாலிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் குளந்
தை யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே. (எ)

திரையுந் தனது நறும்புனலிற் றிளைத்து முழுகு மடவார்தஞ் -
செழுந்தேந் தொடையற் சுருப்பினங்கள் சேட்சென் றகலும் படிவிலக்
க்கி, உரையுந் தொழிலு முள்ளமுந்தன் னுழைச்சேர்த் தழுந்து வோா
ர்மலநோய் - ஒருவுந் தொழிலைத் தெரித்திதழி யுறழப் பொன்னும்
வெண்டலைபோல், நுரையுஞ் சடைபோற் றுவர்க்கொடியு நுணுகு
ம்திபோற் கரிக்கோடும் - நுடங்க நடித்து வெளுத்துமறை நுவலற்
கரிய பரம்பொருளைப், புரையுஞ் செல்வப் பெரும்பாலிப் புதுநீ ரா
டி யருளுகவே - பொற்பார் குளந்தை யமுதவல்லி புதுநீராடி யரு
ளுகவே. (அ)

### வேறு.

முகமல ரிணையொளி யுமதி யாமென முண்டக நொந்தயர
முன்கையி லேற்றிய சங்கொடு சங்க முழங்கிக் கரைபுரள
மகர விருங்குழை யெதிரிய கெண்டை மலங்கு கயற்குலம்வார்
வாளை கலங்கி யெழுந்து குதிப்ப வயங்கு சுணங்கிலமென்
றகநெகு புற்புத முலையி னுடைந்திற வறல்குழல் போற்றகரம்
அணிந்தில மெனநின தடியிற் றன்கவி னழியத் திருமருவிப்
புகழ்நிறை யுங்கம லாகரி பாலிப் புதுநீ ராடுகவே
பூரண ஞான புராதனி பாலிப் புதுநீ ராடுகவே. (கூ)

விற்புரு வங்குழை யக்கரு நீல விழித்துணை செங்குவளை
வெல்லநின் மேனி தழைப்ப முகேனா வீங்கிய நீர்குடையா
நிற்புகழ்தெய்வ மடந்தையர் மீதினி னீள்சிவி றித்துளையான்
நிரைத்த குறுந்துளி தம்முட லெங்கு நிரத்தலும் வானவர்தங்
கற்புரை தோள்கள் புதைத்தன ராடக் கடவுள் சடாமகுடக்
கங்கை யவன்றலை யைந்தொடு மாடக் காசினி கொண்டாடப்
பொற்பு மிருங்கம லாகரி பாலிப் புதுநீ ராடுகவே
பூரண ஞான புராதனி பாலிப் புதுநீ ராடுகவே. (கo)

நீராடற்பருவமுடிந்தது.

---

## ஊசற்பருவம்.



ஒழுகொளி பரப்பிக் கதிர்த்தெழும் பரிதியை யொழுக்கித் திர ட்டி யதுபோல் - உரகமுமிழ் செம்மணித் தூணிறுவி யதனும்ப ரொ ளிநிலாக் கான்றகலைகள், முழுதுநிறை திங்களை யுருட்டி நீட் டியதே ய்ப்ப முதிர்வயிர விட்டமிட்டம் - முழுமதியி னின்றிழியு மமிழ்ததா ரைகளென்ன முத்தணி வடங்கடுக்கிப், பழுதகலு நவமணிப் பலகை யிடை மூட்டியப் பலகைமேன் மதியமிழ்துணைப் - பச்சிளங் கிள்ளை யொன் றேறினு லென்னப் பரிந்திருந் தருளி முலைமேற், புழுகொழு கவுயிர்களுக் கருளொழுகு மமுதம்மை பொன்னூச லாடியருளே-பூ ரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (க)

செயலையந் தாருவை யுதைந்தாடு தொறுமச் செழுந்தருப் பூக் கள் சொரியுஞ் - செயலுதைக் காற்குது தணைநீங்க வெண்ணிநந் தே வைத் தணந்துவிளையாட், டியலைமேல் கொண்டநின் மீதலர்ப் பூம்ப கழி யிளையாது சொரிவ தெனவும் - இதுகண் டதற்குநேர் விழிச்சு

ரும் பீந்தருளி யிளநிலா நகைமுகிழ்ப்ப, அயலுறூஉங் கொடிமுல்லை யூழ்த்தலர் சொரிந்திட லருந்துணைமை பூண்டுதோறும் - அலர்வாளி பெய்திடுந் திறனெனவு மேர்காட்ட வைம்படை பொறுத்தபச்சைப், புயலொடு பிறந்தருட் கடலொடு வளர்ந்தமின் பொன்னூச லாடிய ருளே-பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே.

நிலம்பொலி யுயிர்ப்பயிர் மலக்கொடுந் தழல்வெம்மை நீத்துமெய்ஞ் ஞானமலரா - நின்மலா னந்தச் செழுங்கனி கனிந்தோங்க நிறையருட் சூல் கொண்டுபொற், கலம்பொலியு முருவெலாம் பச்செ ன்று தோற்றிக் கருங்குழற் கற்றை நாப்பட் - கதிர்த்தசிறு கீற்றி னென் மின்னிலொளி கூர்நுதற் கார்முகங் கவினவாங்கிச்,சிலம்பொ லிசெய் கிங்கிணிப் பருமத்தி னற்பெருந் தீங்குர லெடுத் திடையறாத்-திருவருட் டாரைபொழி செய்கைக்கு வாய்ப்பவான் சேர்ந்துலாய் நிற்ற லுறழப், புலம்பொலியு மடியார்கள் சிந்தைகுடி கொண்டவள் பொன்னூச லாடியருளே-பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௩)

மனக்குல மிடைந்துபின் காட்டவிசை கொண்டாடும் வன்மையா னினதுருவெலாம் - மணித்திர ணிழைத்தெனச் சிறுவெயர்பொடித்தலும் வழிநின்று பணிகேட்டுவின், னனக்கவி னடைத்திறங் கற்கவரும் வெள்யானை யஞ்சிச் செவிக் காலெறிந் - தந்தரக்கங்கையை மடுத்துத் துளித்துவெய ராற்றுமத் திவலை பரவா, நினக்கடிமை பூண்டுமுன் போற்றுமிமை யோர்முத னெடுந்தருப் புல்லி றுதியின் - நிரத்தலா லனைத்துநின் மயமெனுஞ் செஞ்சொல்லை நிலையுறுத் திடுவதேய்ப்பப், புனக்கிளி நிகர்த்தமென் றீங்கிளவி யமுதம்மை பொன்னூச லாடியருளே-பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௪)

திங்களொளி காட்டுமுக மீதுலவு நாட்டச் செழுங்கய லுதைந் தூக்கலாற்-செம்பொனி னிழைத்தமக ரக்குழைக ளுஞ் செவிச் செங்கனக வூசலாடப், பங்கய விருக்கைமட மாதரது நோக்கியிரு பானுமிரு வேமாட் டவும் - பாயுங் கயற்குல மசைக்குமவ் வூசலிற் பாய்ந்திலதிவ் வூச லெனநீள், அங்கையின் வலித்துநனி யாட்டுதொறு நின்வா யரும்புநகை நில வெழிலினுக் - காங்கவர் முகத்திங்கள் சாயப்புராணமறை யாகம மளந் தறிவரும், புங்கவன் மருங்குகுடி கொண்டவமு தாம்பிகை பொன்னூசலாடி யருளே-பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடி யருளே. (௫)

திண்ணிய பொலஞ்சிகரி வாங்கிய பிரான்சென்னி தெரிகலா ம றையோதிமஞ் - செப்புபழி மொழிமாறு மாறுனக் கூர்தியாய்ச் சே ர்ந்துநின் ருள்சுமந்து, தண்ணிய நிறுதுகண் ணருள்கிடைத் துன்னுழி ச் சார்ந்திறைவ னூடறீரத் - தாள்பணிபு மேல்வைமுடி கண்டுகொ ண் டுயர்கீர்த்தி தாங்குவா னெண்ணிவரலும், கண்ணியவவ் வஞ்சனை யறிந்ததனை யலமரக் காண்டுமென வுன்னியேறிக் - ககனத்து முன பின்ன தாகக் கடாவுதல் கடுப்பவெண் டரளமொய்த்துப், புண்ணிய மலர்ந்தனைய வொண்பலகை யேறிநீ பொன்னூச லாடியருளே - பூ ரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (சு)

அரவுமுமிழ் செம்மணித் திரள்சுற் றிழைத்திடை யலங்கொளிய நிலத்தால் - அமைத்தத னடுச்செழுஞ் செம்பட் டலங்கரித் தவிர்பல கை மீதிருத்தல்,இரவகல வெங்கதி ருகும்பரிதி மண்டல மிளம்பனிக் கதிர்மண்டலம் - எரிக்கடவுண் மண்டலங் கீழ்தொட்டு முறைமூன்று மேய்ந்தபூந் தவிசிலடியார், பரவநீ நின்றநிலை யொப்பவா னந்தமெய் ப்பண்ணவன் விழிச்சுடர்கணின்-பாலனுரு காட்சியப் பரிசறிந் தெ ம்மையும் பரூஉமணித் தவிசெனக்கொள், புரவுபூண் டருளென்று வேண்டுதல் கடுப்பவுயர் பொன்னூச லாடியருளே-பூரண மதிக்கரு ள்புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (எ)

சுத்தமு மசுத்தமு மெனப்படுங் கொடுமாயை அணுக விருளாண வங் - தொடுத்தநெடு விட்டமாக் கருமப் பெரும்பகுதி தூக்கிய வட ங்களாக, வைத்தமா யேயமே பலவகையா முடிவிலா வான்புவன கோடிதுற்றும் - மகிழ்ந்தாடு வெளியாக வாருயிர்க் குழவிகளை மரணம் பிறப்பென்னுநோய், மொய்த்தமணி பூசல்வைத் தாட்டிக் கடைத் தலை முடங்கா தெடுத்தணைத்து - முதுக்குறை வளித்துமேற் பரமுத் தி வீடுய்த்து மூவாத வானந்தமாம், புத்தமிழ் தருத்திமெய்த் தா யாய் வளர்ப்பவள் பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (அ)

நாந்தகப் பொருபடை விதிர்த்தனைய விமையாத நாட்டத் தரம் பைமாரும் - நளினக் கரங்கூப்பி யெதிர்நிற்கு முகில்வண்ண நாய கன் முதற்றேவரும், மேய்ந்தசெம் பொற்பெரும் பூண்களி னிழைத் தபல வேறுகுல மணிகளொடுறமவ் - விரிகதிர்ப் பேதத்தி னுக்கேற்ப நின்னூசன் மின்னிழல் பரப்புதோற்றம், வாய்ந்தமெய்த் தொண்டு செய மன்பர்க ளூனந்தொறும் வயங்குபரி பாகபேத - மார்க்கத்தி னு

க்கிசைய மன்னிநீ விளையாடும் வாய்மையைக் காட்டவளிவீழ், பூந்த கரவார்கருங் கூந்தலமு தாம்பிகை பொன்னூச லாடியருளே - பூர ண மதிக்கருள் புரிந்தமக லாகரீ பொன்னூச லாடியருளே. (௯)

அண்டப் பரப்பெங்கு மண்டிப் படர்ந்தபே ரானந்தவெள்ளம் வாழ - அருட்சரியை கிரியைசிவ யோகமொடு ஞானமெனு மதிகசிவ தருமம்வாழக், கண்டவர்க் கினியநஞ் சோமேசர் வாழநின் கட்கடைக் கருணைவாழக் - காசினி யொருங்குசிவ பத்திகுரு பத்திசங் கமபத்தி செய்துவாழ, வேண்டிருப் பூதியுய ரக்கமணி வாழமெய் விளக்குமஞ் செழுத்துவாழ - வேதநெறி சைவநெறி வாழக் குளந்தைநகர் மேன் மேற் செழித்துவாழப், புண்டர றுதற்றொண்டர் தங்குழாம் வாழநீ பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொ ன்னூச லாடியருளே. (௧௦)

ஊசற்பருவமுடிந்தது.

ஆகப்பருவம் பத்துக்குச் செய்யுள் - ௧௦௯.

குளத்தூர்ப்பிள்ளைத்தமிழ்முடிந்தது.

---

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# செப்பறைப்பதி

# அகிலாண்டேசுவரிபதிகம்.

பண்டைவினை யாலும்வரு பழவினையி னாலுமு
பாழ்த்தகன் மத்தி னாலும்
பாழான மாயைப் புணர்ச்சியா லுந்தொலைவில்
பலபல தருக்க மேங்கிக்
கொண்டுசுழல் பாவியேன் செய்கின்ற பிழையெலாங்
குணமெனக் கருதி யெளிதாக்
கோலங்கள் காட்டியெனை யிவ்வள வெடுத்தாண்ட
குணமேரு வேயி றைந்து
மண்டுமா னந்தவெள் ளத்தையுண் டின்புறவும்
வைப்பதென் றேவ திகிலேன்
வானாகி மண்ணாகி மற்றுள்ளவெ லாமாகி
மறைநான்கு மறியா மலே
அண்டபகி ரண்டப் பரப்புமா யப்புறமு
மளவற்று நின்று லாவும்
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (க)

கல்லொத்த நெஞ்சராய் வாழ்வர்சிலர் புவியிற்
கறங்குசக டென்ன வோடிக்
காலோய்வர் சிலர்மரப் பேய்போல நாடொறுங்
கதறுவார் சிலர்கு விந்த

வில்லொத்த நுதலினர் போகத்தை நாடியே
மெலிவர்சிலர் பசையி லாத
வெற்றென்பி னைக்கடித் தலகுபுண் ணுய்க்குருதி
விழுமதைப் பருகு நாய்போல்
சொல்லற்ற வுலகிலுறு துன்பெலாஞ் சுகமாய்த்
துடிப்பர்சில ரவர்க ளோடு
துடியாத வண்ணமெனை யிவ்வள வெடுத்திருட்
டொகையெலா நீக்கி யல்லோ
டல்லொத்த பேரின்ப வெள்ளத் தழுத்தியே
யசைவற் றிருக்க வைத்த
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (உ)

தூலவுட லரவினது தோலென்ன நீங்கவே
சூக்குமத் தோடு யிரினைத்
துன்பமுறு யாதனு வுடலத் திருத்தியே
சுடருமெரி வாயி லிடுவார்
மேலதிற் கனலெனச் செம்பினை யுருக்கியே
விடுவர்விழி தன்னி லூசி
விம்முற விறக்குவார் நரகுதொறும் வெவ்வேறு
விதமாக வூழி யூழி
காலம தழுத்துவார் தலையெழும் பிடி லுச்சி
கவிழுற வடிப்ப ரந்தக்
கனலொத்த யமதூதர் கையிலடி யேன்றனைக்
காட்டிக் கொடுத்தி டாதே
ஆலமமு துண்டமரர் தமையாண்ட நீள்கருணை
யன்னமே யுனைநம் பினேன்
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (௩)

செம்புறு களிம்பென வநாதிமல மூழ்கியிருள்
சேருமலர் விழியென் னவே
தெளிவற்ற கேவலத் தசைவற் றிருந்துமல
சேட்டையாற் குழவி குருடர்
தம்பிணியி னுற்ற பால்கோலை நோக்கவவை
தமையளிப் பாரென் னநான்
சார்கன்ம மாயையை விரும்பநீ தந்திடச்
சகலனுய்ச் சுழல்க றங்கு
பம்பரம தென்னநீள் பிறவிச் சுழிக்குளே
பட்டுழல் பெரும் பாவியேன்
பாழான மலமற்று வினையற்று மாயையின்
பற்றுவிட் டெனைய றிந்துன்
அம்பொனடி நீழல்சேர்ந் தானந்த மூண்டுநா
னதுவா யிருப்ப தென்றோ
அருண்ஞானவாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (ச)

மூன்னைமல மென்னுமொரு பேய்பிடித் திருவினை
முதிர்ந்தவெறி யரவு சுற்றி
முடியாத பிறவிக் கடற்குள்வீழ்ந் தாசையெனு
மூண்டசுழி வந்த மிழ்த்த
மின்னனைய மாதரொனு மகரமீ னொருபுறம்
விழுங்கவைம் பொறிக ளான
விறல்சுறு வைந்தும்வந் தெங்கணு மிழுக்கநான்
வீணிலே நைவ தானேன்
பொன்னனைய நின்னடித் தாமரைத் தலமலாற்
புகலிடம் பிறிது காணேன்
பொய்யனே னுகிலுங் கைவிடா தாளுவாய்ப்
புவனங்க ளியாவு மீன்ற

அன்னையே பகிரண்ட முகடெலாங் கடைபுரண்
டப்புறமு மலைத தும்பும்
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (௫)

இசையொத்த பண்களுஞ் சொல்லோடு பொருள்களு
மிருளினொடு வெளியு நீண்ட
இன்பமொடு துன்பமு நரகொடு சுவர்க்கமு
மெண்ணுதற் கரிய வான
வசைபெற்ற யோகியே தங்களும் மவைதம்மின்
மருவுமுயிர் யாவு மோங்கு
மறைநாலு வர்க்கமு மற்றுமுள கலைகளு
மலைகட லெலாமு மலையும்
திசையெட்டு மிரவியொடு சோமனுஞ் சமயத்
திரட்சிகளு மொருவ ராலும்
தேடரிய புவனகோ டிகளுமதில் வாழ்கின்ற
தெய்வங்கள் பலவும் யாவும்
அசைவற்ற பரவெளிக் குள்ளே யிருக்குமென்
றறிவித் தெனைக்க லந்த
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (௬)

நீயுள்ள தென்றன்று நானுமுள னென்றுமுத
னீங்காம லென்னி டத்தின்
நேசம்வைத் தேநீ யிருக்கநான் மலமாகி
நின்றதே துடலெ னக்கங்
கேயுமுறை யெங்ஙனே வினைகட்கு மெனிலவைக
ளேறிடா தநுவி லாமல்
எட்டாத கேவல மிருப்பமே லவைகன்ம
மாகாவ விச்சை கண்டு

காயம தளிப்பதெனி லின்புதுன் புறமுன்பு
கன்மமே திதனை யருள்வாய்
ககனமுக டுங்கடந் தளவில் புவனங்களுங்
கரைபுரண் டெங்கு மோங்க
ஆயுமறை காணு தகண்டமாய் நின்றதிரு
வக்கினீ சுரர்ம ருவுநீள்
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (எ)

உடலத்தி லின்றெனக் கொழியாத விச்சைதா
னுற்றதே துன்ற னாலே
உற்றதே னீதநு வளித்திடும் போதெலா
முறவேண்டு மென்ற னியல்பேல்
கடலொத்த பிறவிதனி லெங்நாளு மவ்விச்சை
கட்டுற்று நிற்க வேண்டும்
கடியமல சத்திசற் றகலவரு மெனிலவை
கழித்ததார் நீக ழிக்கில்
கெடலுற்ற வெல்லா வுயிர்க்குநீக் குவையாங்
கெடுத்தாலு மம்ம லந்தான்
கெட்டாலு முனைவந்து கிட்டிவழி படுவதென்
கேடிலா விவைய ருளுவாய்
அடலுற்ற திரிபுர மடங்கலு மெரித்ததிரு
வக்கினீ சுரனை மருவும்
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (அ)

மங்கையர்க ளின்பமே முத்தியென் றுங்கந்த
மடிவதே முத்தி யென்றும்
வருமுக் குணங்கெடுதன் முத்திவினை மாய்வதே
வளர்முத்தி மூன்று மலமும்

பங்கமுற லேமுத்தி யென்றுநித் தியதேகம்
பற்றுவது முத்தி யென்றும்
பலவும் பகுத்தறிதன் முத்தியுயிர் கெடுவதே
படர்முத்தி சித்தி களெலாம்
தங்குவது முத்திபா டாணமொத் திடுவதே
தகுமுத்தி யென்று முயிர்கள்
தடுமாற மலமறுத் தகலாத திருவடித்
தாமரையென் முடியி லூன்றி
அங்கமுயிர் பொருளெலாங் கைக்கொண்டு நாயினேற்
கானந்த முத்தி தந்த
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (௯)

பூதமே யென்றும்வரு பொறியென்று மனமாதி
பொருளென்று நீள்க லாதி
பொருளென்று முயர்சுத்த மாயைபொரு ளென்றுமிப்
புவியிற் சிருட்டி செய்யும்
நாதர்பொரு ளென்றுமர வணையிற் றுயின்றவொரு
நாரணன் பொருள தென்றும்
நானுவி தங்குளறி னோர்குருடர் பலர்கூடி
நாடியொளி தேடு மாபோல்
பேதமுறு பிறவியிற் சுழல்வதல் லாலுண்மை
பெற்றிடுவ துண்டோசொ லாய்
பின்னுமுன் னும்பக்க மேல்கீழு மாயண்ட
பித்திக ளுடைத்து மண்டி
ஆதிநடு வந்தமு மிலாமலடி நாயேனை
யகலாம லாண்டு கொண்ட
அருண்ஞான வாரியே யாசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே. (௧0)

அகிலாண்டேசுவரிபதிகமுடிந்தது.

---

**மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.**

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவேகம்பரந்தாதி.

இஃது,

திருவாவடுதுறை ஆதீனத்துத்

திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய

**சிவஞானயோகிகள்**

அருளிச்செய்தது.



மதுராபுரிவாசியாகிய

இ-இராமசுவாமிப்பிள்ளைஎன்று

வழங்குகின்ற

**ஞானசம்பந்தப்பிள்ளை**

செய்தஉரையுடன்

இராமநாதபுரசமஸ்தானம்

ம-ள-ள-ஸ்ரீ,

பொன்னுச்சாமித்தேவரவர்களுடைய

புத்திரர் ம-ள-ள-ஸ்ரீ,

பாண்டித்துரைத்தேவரவர்கள்

விரும்பியவண்ணம்

சபாபதிநாவலரவர்களது

சித்தாந்தவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

சென்னை: ஏகவல்லியம்மன்கோயில் வீதி - எக.

விரோதி௵ வைகாசி௴.

மூன்றாம்பதிப்பு.

# சிறப்புப்பாயிரம்.

கங்கையு மலரின் மங்கையும் பரசுங்
காமநோக் கம்மைவண் டங்கை
கொங்கைகண் ணுழுங்கத் தழுவலு முழுதுங்
குழைந்தருள் கம்பரங் தாதி
சங்கையின் மும்மைத் தமிழ்ப்புல வோர்க
டமக்கொரு காட்டதா வமைத்தான்
செங்கைகள் கூப்பித் தவர்புகழ் துறைசைச்
சிவஞான முனிவரன் மாதோ.

இவ்வந்தாதியிலே காப்பும் முதலிறுதிகளில் ஆறுசெய்யுட்களும் இறந்துபோயின.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவேகம்பரந்தாதி.

## மூலமும் உரையும்.

கருமங்கையாரமருமத்தரேத்துசெங்காந்தளொகி
கருமங்கையாரமருமத்தர்வாழ்கச்சிபோலவெப்பாங்
கருமங்கையாரமருமத்தர்வாய்மைகதிர்ப்பச்சென்ற
கருமங்கையாரமருமத்தமுங்கடந்தெய்தலென்றே.

இதனது பதப்பொருள். கரு மங்கை ஆர் அ மருமத்தர் ஏத்து - பெருமையாகிய இலக்குமி தங்கிய அந்தமார்பினையுடைய விஷ்ணுமூர்த்தி துதிக்கின்ற,—செங்காந்தளொகிகரும் அங்கையார் அமரும் அத்தர் வாழ் கச்சி போல - செங்காந்தண்மலர் போலும் அகங்கையினையுடைய உமாதேவியார் பொருந்திய பாதித்திருமேனியையுடைய திருவேகம்பநாதர் வாழுங் காஞ்சிநகரம்போல,—எப்பாங்கரும் அம் கையார் அமரும் அத்தர் - எவ்விடத்துமுள்ள நல்லொழுக்கத்தினையுடையார் விரும்புந் தலைவர்—வாய்மை கதிர்ப்பச் சென்ற கருமம் கையார்-(இந்தநாள் வருவேமெனத்தாங்கூறிய) மெய்ம்மை விளங்கச் சென்ற கருமத்தின்கண் உவர்ப்புறார்;—அமரும் அத்தமும் கடந்து எய்தல் என்று - (ஆதலால் அந்தப்) போரையுங் காட்டையும் நீந்தி (இத்தேயத்தை) அணுகல் எந்நாளோ என்றவாறு. பாங்கியே யான் அறியேனென்பது எஞ்சி நின்றது. முதலடியில் அம்மருமத்தரென்பது அமருமத்தரென மகரவொற்றுத் தொக்கு நின்றது. செங்காந்தள் ஆகுபெயர். இரண்டாமடியில் அகங்கையென்பது அங்கையென நின்றது. நல்லொழுக்கமுடையராலே காஞ்சிநகரம்போல விரும்பப் படுந் தலைவரென்க. ஏ ஈற்றசை. [போர்வயிற் சென்ற தலைவனீடத் தலைவி வருந்தல்.]

(க)

என்பங்கம்பங்கம்படச்சூழெனிலெங்குஞ்செல்சரணுக்
கென்பங்கம்பங்கம்பதித்தபிரான்கச்சியெய்துவம்வா
வென்பங்கம்பங்கம்பிகையுறச்சேர்த்தவனெம்பெருமா
னென்பங்கம்பங்கம்பியாவண்ணமேத்துவமேழைநெஞ்சே.

(இ - ள்.) என் பங்கம் பங்கம் படச் சூழ் எனில் - எனது பாவம் பின்னமடையும்வண்ணம் பிரதக்ஷிணஞ் செய்யென்றால்,—எங்கும் செல் சரணுக்குப் பங்கு என் - எவ்விடத்தும் ஓடித் திரியும் பாதங்களுக்கு முடம் யாது!—அம்பு அம் கம் பதித்த பிரான் கச்சி எய்துவம் - ஆதலால் கங்கையை அழகிய முடியிலே தரித்த திருவேகம்பநாதருடைய காஞ்சீபுரத்தை (நாம்) அடைவேம்,—வா - (நீ) வருவாயாக,—என்பு அங்கம் பங்கு அம்பிகை உறச் சேர்த்தவன் - (அடைந்து) எலும்புகளையணிந்த திருமேனியிலே வாமபாகத்தில் உமாதேவியார் தங்கும்வண்ணம் வைத்தவரென்றும்,—எம்பெருமான் என்பம் - எமது பெருமானென்றும் ஓதி—கம்பம் கம்பியா வண்ணம் ஏத்துவம்—(அந்நகரத்துள்ள) திருவேகம்பமாகிய ஆலயத்திலே (புகுந்து) சலியாது துதிப்பேம்,—ஏழை நெஞ்சே. பேதைமனமே. எ-று. மனமே பிரதக்ஷிணஞ்செய்யென்றால் பாதங்களுக்கு முடம் யாது? ஆதலால் காஞ்சீபுரத்தை நாம் அடைவேம், அடைந்து வைத்தவரென்றும் பெருமானென்றும் துதிப்பேம், வருவாயாகவெனக்கூட்டுக. இறுதியடியில் என்பம் முற்றெச்சம். (உ)

சேகரந்தோயமுடித்தோயிருள்சிந்தையார்க்கப்படி
சேகரந்தோயமலாகச்சியேகம்பசேரலர்நஞ்
சேகரந்தோயனலாவென்றுசிந்தைசெய்யாதமலச்
சேகரந்தோயமனுள்வருங்காலையென்செய்குவமே.

(இ - ள்.) சேகரம் தோயம் முடித்தோய் - திருமுடிக்கண்ணே கங்கையைத் தரித்தவரே,—இருள் சிந்தையார்க்கு அப்படிசேகரந் தோய் - இருண்ட மனத்தை யுடையவர்களுக்கு அப்படியே ஒளித்தவரே,— அமலா - மலமுத்தரே,—கச்சி ஏகம்ப - காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும் திருவேகம்பநாதரே,—சேரலர் நஞ்சே - அடையாதவர்களுக்கு விஷமாயுள்ளவரே,—கரம் தோய் அனலா - கையிலே பொருந்திய அக்கினியையுடையவரே,—என்று சிந்தை செய்யாத மலச்சேகர் - என்று சிந்தியாத ஆணவவயிரமுடையவர்கள்—அந்

தோ"யமன் ஆள் வரும் காலே என் செய்குவர் - ஐயோ யமதூதர் வருங்காலத்து யாது செய்வார்கள். எ-று. (௬)

குவலேயமாமைவிழியார்மயக்கிற்கொட்கும்புலேயேன்
குவலேயமாமையுருவெனக்காலன்குறுகிலென்செய்
குவலேயமாமைதருங்கச்சியேகம்பகோளரவா
குவலேயமாமையிெேனாடணியாக்கொண்டகொள்கையனே.

(இ - ள்.) குவலேயம் ஆம் மை விழியார் மயக்கில் கொட்கும் புலேயேன் - கருங்குவளே மலர்போலும் மையணிந்த கண்களேயுடைய பெண்களது மையலிற்பட்டுழலும் புன்மையேன், —குவலேய மாமை உரு எனக் காலன் குறுகில் என்செய்குவல் - பூமி அலேயும்படி பெரிய மேகத்தின்வடிவம்போல இயமன் அணுகில் யாது செய்வேன்!—ஐய - ஐயரே,—மாமை தரும் கச்சி ஏகம்ப - அழகினேப் பொருந்திய காஞ்சீபுரத்தில் வாழுந் திருவேகம்பநாதரே.—கோள் அரவா கு வலேயம் ஆமையின் ஓடு அணியாக் கொண்டகொள்கையனே - வலிய பாம்பைத் தோளணியாகவும் ஆமையினேேட்டை மார்பணியாகவும் பூண்டருளிய கோட்பாட்டினேயுடையவரே. எ-று. மூன்றுமடியில் அராவென்பது அரவென நின்றது. (௭)

கைக்கடக்கும்பக்களிறுமைவாயிலுங்கைவசஞ்செய்
கைக்கடக்கும்பக்கமேகவொட்டாதெமர்காள்பொன்னுல
கைக்கடக்கும்பக்கபூஞ்சினேமாவுறைகம்பன்வெண்ண
கைக்கடக்கும்பக்கதிர்முலேபாகனேக்கண்ணுமினே.

(இ - ள்.) கைக் கடக் கும்பக் களிறு ஆம் ஐ வாயில் - துதிக்கையையும் மதத்தையும் மத்தகத்தையுமுடைய யானேகளாகிய ஐம்பொறிகளேயும்—உம் கைவசம் செய்கைக்கு - உங்கள் வசமாக்கற்பொருட்டு—பக்கம் ஏக ஒட்டாது அடக்கும் - பக்கத்திலே செல்லவொட்டாமல் (அவைகளே) அடக்குங்கள்;—எமர்காள் - நம்மவர்களே,—பொன் உலகைக்கடக்கும் பக்க பூம் சினே மா உறை கம்பன் - சுவர்க்கலோகத்தைக் கீழ்ப்படுத்து மேற்செல்லும் வகுப்பினவாய பொலிவுபெற்ற கவடுகளேயுடைய மாமரத்தடியில் எழுந்தருளியிருக்குந் திருவேகம்பநாதரும்—வெள் நகைக் கடக் கும்பக் கதிர் முலே பாகனேக் கண்ணுமின் - வெள்ளிய தந்தங்களேயும் குடமாகியகும்பம்போலும்

ஒளிபொருந்திய தனங்களையுமுடைய உமாதேவியாரை வாமபாகத்தே யுடையவருமாகிய சிவபிரானைத் தியானியுங்கள். எ-று. கதிர்முலை அன்மொழித்தொகை. கடக்கும்பக்கதிர்முலையென்பதற்கு யானை மத்தகத்தினையும் கும்பத்தினையும் ஒக்குங்கதிர்த்த முலையென்று பொருள்கூறினும்பொருந்தும். (௫)

மின்னலங்காரம்புபெய்யாதுறமிக்கிராசிகடம்
மின்னலங்காரகனிற்பினுமென் மின்னனூர்குமின்கு
மின்னலங்காரம்பெறநடஞ்செய்வியன் கச்சியைச்சேர்
மின்னலங்காரப்பணியான்கம்பந்தொழுவீரன்பரே.

(இ-ள்.) மின்னல் அம் கார் அம்பு பெய்யாது உற - மின்னலையுடைய அழகிய மேகம் ஜலத்தை வருஷியாவண்ணம்—இராசிகள் தம்மின் நல் அங்காரகன் மிக்கு நிற்பினும் என்ப- (கடக மகர மீனங்கள் அல்லாத நிர்ச்சல) ராசிகளில் நல்ல செவ்வாய் காலநீட்டித்து நின்றாலும் யாது (இடையூறு நிகழும்!)—மின் அனூர் குமின் குமின் அலங்காரம் பெற நடம் செய் வியன் கச்சியைச் சேர்மின் - மின்போலும் பெண்கள் குமின் குமினென்னும் ஒலிக்குறிப்போடு அழகு வாய்ப்ப நிருத்தஞ்செய்கின்ற பெருமை யாகிய காஞ்சீபுரத்தை யடையுங்கள்,—அன்பரே அலங்கு ஆரப் பணியான் கம்பம்தொழுவீர் - தொண்டர்களே அசைகின்ற சர்ப்பாபரணத்தையுடைய சிவபெருமானது திருவேகம்பத்தை வணங்குங்கள்.எ-று. இரண்டாமடியில் நல்லங்காரகனென்பது நலங்காரகனென லகரவொற்றுத் தொக்கது. அன்னூரென்பது அனூரென இடைக்குறைந்து நின்றது. ஏனையடிகளில் னகரவொற்றுக்கள் விரிந்து நின்றன.

அன்பரவைக்களஞ்செல்லேன்கம்பம்பணியாதபுலை
யன்பரவைக்களந்தீமழுவோயென்றரற்றித்துழா
யன்பரவைக்களந்தன்புசெய்யேன்மெய்யறிவுகுறி
யன்பரவைக்களங்கத்தேனெவ்வாறருள்கூடுவதே.

(இ-ள்.) அன்பர் அவைக்களம் செல்லேன் - (யான்) அடியார்களுடைய சபையிலே போகின்றிலேன்;—கம்பம் பணியாத புலையன் - திருவேகம்பத்தை வணங்காத புன்மையேன்;—பரவைக் களம் தீ மழுவோய் என்று அரற்றித் துழாயன் பரவு ஐக்கு அளந்து அன்பு செய்யேன் - கடலினின்றும் தோன்றிய விடம்நெருப்பாய்ச் சுடுகின்றது மழுப்படையை யுடையவரே என்று ஓலிட்டுத் துள

சிமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தி துதிக்கப்பெற்ற கடவுளாகிய திருவேகம்பநாதருக்கு அளவிட்டாதல் பத்திசெய்கின்றிலேன்,— மெய் அறிவு குறியன் - உண்மைஞானத்தைக் கருதுகின்றிலேன்,— பரவைக் களங்கத்தேன் - (இங்ஙனம்) பெருங்குற்றத்தையுடைய அடியேன்—எவ்வாறு அருள் கூடுவது - எவ்வண்ணம் திருவருள் பெறுவது. எ-று. (எ)

தேங்கடியாரரவார்சடையார்திருக்கம்பந்தொழூ
தேங்கடியாரரவந்திகழ்காஞ்சியிற்சென்றுசிவந்
தேங்கடியாரரவோசைசெவிமடுத்தேமினிமுந்
தேங்கடியாரரந்தைப்படுங்கும்பியிற்செல்வழிக்கே.

(இ-ள்.) தேம் கடி ஆர் அரவு ஆர் சடையார் திருக்கம்பம் தொழூதேம் - தேனையும் மணத்தையுமுடைய ஆத்திமாலையும்பாம்பும் பொருந்திய சடையையுடைய சிவபெருமானது திருவேகம்பத்தை வணங்கினேம்,—கடி ஆர் அரவம் திகழ் காஞ்சியில் சென்று-கலியாணத்தினது பேரொலி விளங்குங் காஞ்சீபுரத்திற் போய்,— சிவம் தேங்கு அடியார் அர ஓசை செவி மடுத்தேம் - சிவானந்த வெள்ளந்ததும்பும் உள்ளமுடைய அன்பர்களது அரகரவென்னும் முழக்கத்தை இரண்டு காதுகளாலும் உண்ணப்பெற்றேம்,—இனி முங்தேம் - (ஆதலால்) இனி யாங்கள் முற்படமாட்டேம்,—கடியார் அரந்தைப்படும் கும்பியில் செல் வழிக்கு - கொடிய பாவிகள் துன்பப்படும் நரகத்துக்குச் செல்லும் மார்க்கத்தில். எ-று. வழிக்கென்பது வேற்றுமைமயக்கம். மார்க்கத்தில் யாங்கள் முற்படமாட்டேமெனக் கூட்டுக. (அ)

கேதனக்கேதனமன்வரிலச்சங்கெடுத்தருள்சங்
கேதனக்கேதனவல்லார்மதிகெடக்கட்டியரைக்
கேதனக்கேதனமாமுமைபாற்கிளர்வோன்கச்சிநி
கேதனக்கேதனவானன்கம்பந்தொழக்கேடிலையே.

(இ - ள்.) கேதன் - ஒளியையுடையவரும்—அக்கேத நமன் வரில் அச்சம் கெடுத்தருள் சங்கேதன் - அத்துன்பத்தைச் செய்கின்ற இயமன் வரும்வழி (அடியாருக்குப்) பயத்தைப் போக்கியருளும் நியமத்தையுடையவரும்,—அக்குத் தன வல்லார் மதி கெட அரைக்குக்

கட்டி - சங்குமணியை முலைகளாகிய சூதாடுகருவியையுடைய பெண்கள் மனம் அழியும்படி அரையின்கண்ணே அணிந்தவரும்—தனக்கே தனம் ஆம் உமைபால் கிளர்வோன் - தமக்கேயுரிய பொருளாகிய உமாதேவியாரிடத்தே மனவெழுச்சியுடையவரும்—கச்சி நிகேதனக் கேதன ஆனன் - காஞ்சிநகரத்துத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இடபக்கொடியை யுடையவருமாகிய சிவபிரானது — கம்பம் தொழக் கேடு இலை - திருவேகம்பத்தை வணங்கத் தீங்கில்லையாம். எ-று. கேது - ஒளி. கட்டி என்பது பெயர். அரைக்கு வேற்றுமை மயக்கம். ஏ இரண்டும் அசைகள். (சு)

கேட்டையனுமயமாங்கம்பங்கிட்டவொட்டாதமதன்
கேட்டையனுமயன்மீறச்செய்தீங்கைக்கெடுத்தியெனக்
கேட்டையனுமயங்கேலெனவாண்டனன்கேழரியாங்
கேட்டையனுமயனுமறிவாரவன்கீர்த்திகளே.

(இ - ள்.) அனுமயம் ஆம் கம்பம் கிட்ட ஒட்டாத கேட்டை—நோயில்லாததாகிய திருவேகம்பத்தை அணுகவொட்டாத பொல்லாங்கையும்—மதன் தையல் கேள் நாம் மயல் மீறச் செய் தீங்கை - மன்மதன் பெண்களுறவால் (விளையும்) அச்சந்தரும் மயக்கத்தை விருத்திசெய்தலாலாகும் கேட்டையும்—கெடுத்தி எனக் கேட்டு- (நீர்) போக்கியருள் வீராக என்று அடியேன் விண்ணப்பஞ் செய்யத் திருச்செவிசாத்தி,—ஐயன் - திருவேகம்பநாதர்—ஆ மயங்கேல் என ஆண்டனன் - ஆ மயக்கமுறாதேயென்று சொல்லி அடிமைகொண்டருளினர்;—கேழ் அரியாம் கேட்டையனும் அயனும் அவன் கீர்த்திகள் அறிவார் - (கரிய) நிறத்தையுடைய விட்டுணுவாம் இந்திரனும் பிரமதேவனும் அப்பெருங்கருணைப் பெருமான் பெரும்புகழ்களை அறியவல்லவர். எ-று. ஆ அருளின்கட்குறிப்பு. (கஎ)

திகழுமலத்தகத்தாளாடொழக்கம்பஞ்சேர்ந்துறைசோ
திகழுமலத்தகப்பட்டுழல்குண்டரைச்சேர்த்திடுமூர்த்
திகழுமலத்தகத்தெங்கோன்றன்கோன்சிவஞானமளித்
திகழுமலத்தகட்டாள்வாயென்பார்க்கருள்செய்திடுமே.

(இ - ள்.) திகழும் அலத்தகத் தாளால் தொழக் கம்பம் சேர்ந்து உறை சோதி - விளங்குகின்ற செம்பஞ்சியூட்டிய பாதங்களையுடைய

உமாதேவியார் வணங்கத் திருவேகம்பத்திலே பொருந்தி எழுந்தருளியிருக்கின்ற சோதியாகியும்—கழு மலத்து அகப்பட்டு உழல் குண்டரைச் சேர்த்திடு மூர்த்தி - கழுமரத்திலே மும்மலங்களாற்பந்திக்கப்பட்டுச் சுழலுஞ்சமணரை ஏற்றுவித்த மூர்த்தியும்—கழுமலத்து அகத்து எங்கோன் தன்கோன் - சீர்காழியின்கண் (அவதரித்த) எங்கள் தலைவருமாகிய ஆளுடையபிள்ளையாருடைய இறைவராகியுமுள்ள சிவபெருமான் — அத்த சிவஞானம் அளித்தி கழுமல் கட்டு ஆள்வாய் என்பார்க்கு அருள் செய்திடும் - பிதாவே சிவஞானத்தைத் தந்தருளும் துன்பத்தைக் களைந்து அடிமைகொண்டருளும் என்று விண்ணப்பஞ் செய்பவர்களுக்கு (அங்ஙனமே) கருணைசெய்வர். எ-று. (கக)

செய்யவையம்புயம்வைத்தாளும்வேந்தர்திருவுங்கைப்பச்
செய்யவையம்புயமன்போலுநோக்கியர்தீமையறச்
செய்யவையம்புயமார்கச்சியேகம்பஞ்சென்றுபத்தி
செய்யவையம்புயனேர்களத்தாயெங்கள்சிற்பரனே.

(இ - ள்.) செய்ய வையம் புயம் வைத்து ஆளும் வேந்தர்திருவும் கைப்ப -செவ்விதாகிய உலகத்தைத் (தமது) புயத்திற்பொறுத்து ஆளுகின்ற அரசர்களுடைய செல்வமும்உவர்க்கவும்,—செய்ய வை அம்பு யமன்போலும் நோக்கியர் தீமை அற-சிவந்த கூர்மையாகிய பாணமும் இயமனும் போலும் கண்களையுடைய பெண்களாலாகிய தீங்கு கெடவும்,—செய் அவை அம்புயம் ஆர் கச்சி ஏகம்பம் சென்று பத்தி செய்ய - கழனிகடோறும் தொகுதி தொகுதியாகத் தாமரைகள் நிறைந்த காஞ்சிபுரத்துள்ள (உமது) திருவேகம்பத்திற்போய் அன்பு செய்யவும்,—வை - கருணைசெய்தருளும்,—அம் புயல் நேர் களத்தாய் - நீருண்ட மேகம் போலும் கரிய கண்டத்தையுடையவரே—எங்கள் சிற்பரனே - எமது ஞானரூபியாகிய பரம்பொருளே. எ-று. (கஉ)

பரவாதவந்தனையன்போல்வளர்த்துப்படித்துளறும்
பரவாதவந்தனையக்தோவிடேனினிப்பார்வெறுந்தா
பரவாதவந்தனைசெய்யடியார்தம்பணிசெயென்றம்
பரவாதவந்தனையீந்தனையேபழங்கம்பத்தனே.

(இ - ள்.) பரவாது அவம் தனையன்போல் வளர்த்துப் படித்து உளறும் பர வாத - (குருலிங்கசங்கமங்களை) வழிபாடுசெய்யாது பயன்படாத உலகவியல்களைப் புதல்வன்போலவிருத்திசெய்து (அவற்றி

ற்குரிய நூல்களைக்) கற்றுப் பிதற்றுகின்ற மிக்க தருக்கத்தையுடையாய்,—அந்தோ வந்தனை இனி விடேன் பார் வெறும் தாபா ஆத-ஐயோ வந்தகப்பட்டாய் இனி விடேம் காண்பாயாக பயனற்ற மரம் போலும் அறிவில்லாதவனே—வந்தனை செய் அடியார்தம் பணி செய் என்று - (நம்மை) வழிபடுந்தொண்டர்களது தொண்டைச் செய்வாயாக என்று சொல்லியருளி,—தவந்தனை ஈந்தனையே - சிவபுண்ணியத்தைக் கொடுத்தருளினீரன்றே,—அம்பரவா பழங் கம்பத்தனே—ஞானகாசமாயுள்ளவரே பழமையாகிய திருவேகம்பவாணரே.எ-று.

பத்திக்கணங்கணமாநின்றுபோற்றும்பழவடியார்
பத்திக்கணங்கணவேகம்பத்தாய்பத்துமுற்றுகருப்
பத்திக்கணங்கணங்கெய்தலென்றன்னைபண்பாகியென்று
பத்திக்கணங்கணபாதவிர்த்தாண்டருள்பாலிப்பையே.

(இ-ள்.) பத்திக் கணம் கணமா நின்று போற்றும் - வரிசையுற்றுக் கூட்டங் கூட்டமாக நின்று துதிக்கும்—பழ அடியார் பத்திக்கண் அங்கு அணவு ஏகம்பத்தாய் - பழைய அடியார்களுடைய அன்பினிடத்து அங்கே கலந்தருளும் திருவேகம்பநாதரே,—பத்தும் முற்று கருப்பத்திக்கு அணங்கு அணங்கு எய்தல் என்று அன்னை பண்பாகி - பத்துமாதமும் நிறையப்பெற்ற கருப்பவதிபொருட்டுப் பெண்ணே துன்பமடையாதேயெனச் சொல்லியருளித் தாயுமானவரே,—கணபா - கணங்களைக் காப்பவரே,—என் ஆபத்து இக்கணம் தவிர்த்து ஆண்டு அருள் பாலிப்பை - அடியேனது துக்கத்தை இப்போதே போக்கி அடிமைகொண்டு கருணைசெய்தருளும். எ-று. அன்னைபண்பாகியென்பதுபெயர். (ம ௯)

பாலிக்குமரிக்குந்தாணிழல்வெப்பம்பணிமொழியாற்
பாலிக்குமரிக்குமாறுசெய்வார்படிந்தாடிடத்தன்
பாலிக்குமரிக்குடிகைக்குமெய்தரும்பாக்கியங்கொள்
பாலிக்குமரிக்குவாழ்வானகச்சிப்பதிக்கம்பனே.

(இ - ள்.) தாள் நிழல் பாலிக்கும் வெப்பம் அரிக்கும் - (அடைந்தவர்களுக்குத்தமது) திருவடிநீழலைக் கொடுத்தருளுவர், பிறவி வெம்மையைக் கெடுத்தருளுவர்,—பணி மொழியால் பால் இக்கு மரிக்குமாறு செய்வார் தன்பால் படிந்து ஆடிட - மெல்லிய வசனத்தாற் பா

லின்சுவையும் கரும்பின்சுவையும் கெடும்வண்ணம் செய்யும் பெண்கள் தன்னிடத்தே அமைந்து மூழ்கும்பொருட்டு—இக் குமரிக் குடிஞைக்கும் எய்த அரும் பாக்கியம் கொள் - இந்தக்குமரியாற்றுக்கும் பெறுதற்கரிய செல்வம் பெற்ற—பாலிக் குமரிக்கு வாழ்வானகச்சிப் பதிக் கம்பனே - பாலிநதியாகிய கன்னிக்கு இடமாகிய காஞ்சிபுரத்து வீற்றிருக்கும் திருவேகம்பநாதரே எ-று. திருவேகம்பநாதரே திருவடிநீழலைக் கொடுத்தருளுவர், பிறவிவெம்மையைக் கெடுத்தருளுவரெனக் கூட்டுக. எய்த அருமென்பது எய்தருமென அகரந்தொக்கது ஏனையரி பிரமேந்திராதியரைப் பிரித்து நிற்றலால் இறுதி ஏகாரம் பிரிநிலை. (கரு)

பதிகம்பரம்பரர்க்காவதுகாஞ்சிபணிபணியென்
பதிகம்பரம்பரசாயுதமாம்பத்திசெய்பவரேற்
பதிகம்பரம்பரவுந்தொடைமூவர்பகர்ந்தருளும்
பதிகம்பரம்பரமானந்தமேயுருப்பார்ப்பவர்க்கே.

(இ - ள்.) கம்பர் அம்பரர்க்குப் பதி ஆவது காஞ்சி - திருவேகம்பரும் ஞானாகாசரூபியுமாகிய சிவபெருமானுக்கு நகரமாவது காஞ்சீபுரமாகும்,—பணி பணி என்ப - ஆபரணமாவது பாம்பாகும் என்று சொல்லுவர்,—அம்பரம் திக் - ஆடையாவது திக்காகும்,—ஆயுதம் பரசாம் - படைக்கலமாவது மழுவாகும்,—பத்தி செய்பவர் ஏற்பது இகம் பரம் - அன்புசெய்வோர் ஏற்றுக்கொள்வது இம்மை மறுமைப்பயனாகும்,—பரவும் தொடைமூவர் பகர்ந்தருளும் பதிகம் - துதிக்கப்படும் மாலையாவது (திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்திநாயனார் என்னும்) மூவர் முதலிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரப்பதிகமாகும்,—பார்ப்பவர்க்கு உருப் பரம் பரமானந்தமே - (பதிஞானத்தால்) நோக்குவோர்க்குத் திருமேனியாவது மேம்பட்ட பரமசுக வடிவமாகும். எ-று. (சகூ)

பவனனகன்றலைவன்காஞ்சிவாழ்பழங்கம்பமெனும்
பவனனகன்றலைஞாலமெலாந்தொழப்பட்டகடம்
பவனனகன்றலைவற்றநெஞ்சேசோர்வினைப்பஞ்சினுக்கின்
பவனனகன்றலைமாலையனென்றென்றுபாடுதுமே.

(இ - ள்.) பவன் - விசுவகாரணர்—அனகன் - மலரகிதர்—தலைவன் - (எப்பொருட்கும்) இறைவர்—காஞ்சி வாழ் பழம் கம்பம் எனும்

பவனன் - காஞ்சீபுரத்தில் இருக்கின்ற பழைய திருவேகம்பமென்று
ம் ஆலயத்தையுடையவர்—தலை அகல் ஞாலம் எல்லாம் தொழப்பட்
ட கடம்பவனன் - இடமகன்ற உலகமுழுதும் வழிபடப் பெற்ற கத
ம்பவனத்தில் வீற்றிருப்பவர்—அகன்று அலைவு அற்ற நெஞ்சோர் வி
னைப்பஞ்சினுக்கு அனல் நக இன்பன் - பிரிந்து (விடயங்களிற்) சுழ
லுதலில்லாத மனத்தையுடைய பரிபக்குவரது கன்மபாசமாகிய பஞ்
சிற்கு அக்கினிமலைபோன்றும் ஆனந்தவடிவாயுள்ளவர்—தலை மாலைய
ன் - சிரமாலைகளையுடையவர்—என்று என்று பாடுதும்-என்று பலமு
றை (சிவபிரானைப்) பாடுவாம். எ-று. (கஎ)

பாடலம்போதுநிறைசிவகங்கைபடிந்துநித்தம்
பாடலம்போதுதொறுமீசன்கம்பன்பரனெனும்வாய்
பாடலம்போதுகுழல்விழிநாலெண்பகுப்பும்வளர்ப்
பாட லம்போதுதுமென்னேமெவ்வாறருள்பற்றுதுமே.

(இ - ள்) பாடலம் போது நிறை சிவகங்கை நித்தம் படிந்து - பா
திரிமலர் நிறைந்த சிவகங்கையிலே நாடோறும் ஸ்நானஞ்செய்து—
போது தொறும் ஈசன் கம்பன் பரன் எனும் வாய்பாடு பாடலம் - கா
லந்தோறும் ஈசன் கம்பன் பரன் என்று (ஆன்றோர்) இருவாக்கின் ஆ
ட்சிப்பட்டு வரும் திருநாமங்களை உச்சரிக்கமாட்டேம்,—அல் அம்பு
ஒது குழல் விழி நால் எண் பகுப்பும் வளர்ப்பாள் தலம் போதுதும்
என்னேம் - இருளும் பாணமும் (முறையே) கூறுகின்ற கூந்தலும் க
ண்களுமாகப் பெற்று முப்பத்திரண்டு பிரிவினவாய தருமங்களை விரு
த்தி செய்கின்ற காமாக்ஷியம்மை யுடைய காஞ்சிநகரத்திற்குச் செல்
லுவேமென்று சொல்லமாட்டேம்,—எவ்வாறு அருள் பற்றுதும் - (இ
ங்ஙனமாயின்) எங்ஙனம் திருவருள் கூடுவாம். எ-று. சிவபுண்ணியங்க
ளைச் செய்வேமெனச் சிரத்தையோடு வாக்காற்சொல்லுதலும் செய்
தலோடொக்குமென்பார் தலம் போதுதுமென்னேமென்றார். (கஅ)

மேதகரக்கருந்தேவரும்யாவரும்வேட்கும்பரி
மேதகரக்கருமன்பருள்வாய்வெண்டாளம்பொன்கோ
மேதகரக்கருந்துன்றியகாஞ்சியின்மிக்ககம்ப
மேதகரக்கருங்கூந்தலுநீயும்விரும்பினையே.

(இ - ள்.) மேதகு அரக்கரும் தேவரும் யாவரும் வேட்கும் பரிமேத - மேன்மை பெற்ற அசுரரும் தேவரும் மானுடருமாகிய எல்லாரும் செய்கின்ற அசுவமேத வேள்விக்குத் தலைவரே,—கரக்க அரும் அன்பு அருள்வாய் - ஒளித்தலில்லாத மெய்யன்பை (அடியேனுக்குத்) தந்தருளும்,—வெண் தரளம் பொன் கோமேதக ரக்கரும் துன்றிய காஞ்சியின் - வெள்ளிய முத்தையும் பொன்னையும் கோமேதகரத்தினத்தையும் பேணும் வாணிகரும் (ஏனைச்செல்வரும்) நெருங்கிய காஞ்சி நகரத்தில்—மிக்க கம்பமே - மேம்பட்ட திருவேகம்பத்தின்கண்ணே,—தகரக் கருங் கூந்தலும் நீயும் விரும்பினை - மயிர்ச்சாந்தினை அணிந்த கரிய அளகத்தையுடைய உமாதேவியாரும் நீரும் காதலோடு வாழ்ந்திருக்கின்றீர். எ-று. இரண்டாமடியில் கரக்க அருமென்பது கரக்கருமென அகரந்தொக்கது. கருங்கூந்தல் அன்மொழித்தொகை.

விரும்பாவலருடம்பாய்மங்கைமார்கொங்கைமெல்லிதழ்க்க
விரும்பாவலருடங்கும்படிகேண்மனமேயச்சந்த
விரும்பாவலருடனார்த்தழைவேய்ந்தவமெய்யறிவ
விரும்பாவலருடங்கேத்துகம்பாவென்றுவேண்டுவையே.

(இ-ள்.) விரும்பா அலர் உடம்பு ஆய் - (ஒருவரும்) இச்சியாத பழிமொழிக்கே உடலாகி—மங்கைமார் கொங்கை மெல் இதழ்க் கவிரும் பாவல் - பெண்களுடைய தனங்களையும் மேன்மை பொருந்திய அதரமாகிய முருக்கம்பூவையும் விரும்பாதே,—மனமே அருள் தங்கும்படி கேள் - நெஞ்சமே திருவருள் பதியும்வண்ணம் (என்சொல்லைக்) கேட்பாயாக,—அச்சம் தவிரும் (சனன) பயம் கெடும்,—பா அலருடன் ஆர்த் தழை வேய்ந்தவ - அழகிய மலர்களோடு திருவாத்தித்தளிரும் சூடியவரே,—மெய் அறிவு அவிரும் பாவலர் உடங்கு ஏத்து கம்பா என்று வேண்டுவை - மெய்ஞ்ஞானம் விளங்குகின்ற கவிவாணர்கள் ஒருங்கு துதிக்குந் திருவேகம்பநாதரே என்று (துதித்து) வேண்டுவாயாக. எ-று. (௨௦)

வையம்பணிசிலைவேதற்குன்பாலினிவாழியென்றுண்
வையம்பணிசிலைதென்காஞ்சிகாற்றனன்மாலென்பறம்
வையம்பணிசிலைவாழிடபீர்க்குவட்காரைவெல்லும்
வையம்பணிசிலையேறுகக்கொண்டுவளர்கம்பனே.

(இ-ள்.) வேதற்கு உன்பால் இனிச் சில் பணியை வையம் வாழி என்றான் - பிரமதேவனுக்கு நின்பக்கல் இனிச் சிறிதும் தொழிலை இடமாட்டேம் (நீ பேரின்பப் பெருவாழ்வு பெற்று) வாழக்கட வாய் என்று சொல்லியருளினர்,—வையம் பணி சிலை தென் காஞ்சி காற்று அனல் மால் என்பு அறம் - பூமியையும் பாம்பையும் மகாமேருமலையையும் அழகிய திருக்கச்சிநகரத்தையும் வாயுதேவனையும் அக்கினிதேவனையும் விஷ்ணுமூர்த்தியையும் எலும்புகளையும் தருமதேவதையையும் (முறையே)—வையம் பணி சிலை வாழ் இடம் ஈர்க்கு வட்காரை வெல்லும் வை அம்பு அணி சிலை ஏருகக் கொண்டு வளர் கம்பன் - தேரும் ஆபரணமும் வில்லும் வீற்றிருக்குந் தலமும் (அம்பின்) இறகும் பகைவரைவெற்றி கொள்ளத்தக்க (அஸ்திர) நுதியும் பாணமும் மாலையும் முழக்கத்தையுடைய இடபமுமாகக் கொண்டு வாழாநின்ற திருவேகம்பநாதர் எ - று. திருவேகம்பநாதர் சொல்லியருளினரெனக் கூட்டுக. முதலடியில் சில் லென்பது சிறிதென்னும் பொருள் படவந்தது. இறுதியடியில் அணி - மாலை. (உக)

கம்பரந்தாதிநிலம்வலென் றாதிகளங்கண்முகங்
கம்பரந்தாதியைகஞ்சமன்னாள்பங்கனேமுத்தியே
கம்பரந்தாதிருப்பூங்கொன்றையோடென்புங்கட்டியென்சொற்
கம்பரந்தாதியுங்கைக்கொண்டவாகச்சிகாவலனே.

(இ-ள்.) கம் பரந்து ஆதி - ஆகாயத்திலே நிரந்தரமாதலையுடையவரே, நிலம் வல் என்று ஆதி - பிருதிவியிலே கடினமாதலையுடையவரே,—களம் கண் முகம் கம்பு அரம் தாது இயை கஞ்சம் அன்னாள் பங்கனே - கழுத்தும் கண்ணும் முகமும் (முறையே) சங்கையும் அரத்தையும் மகரந்தம் பொருந்திய தாமரை மலரையும் போலாகப்பெற்ற உமாதேவியாரை (வாம) பாகத்தில் வைத்தருளியவரே,—ஏகம் பரம் முத்தி தா - ஒன்றாகிய பரமுத்தியைத் தந்தருளும்,—திருப் பூம் கொன்றையோடு என்பும் கட்டி - அழகிய பொலிவுபெற்ற கொன்றைமாலையுடன் (இழிந்த) எலும்புமாலையையும் அணிந்தவரே,—என் சொல் கம்பர் அந்தாதியும் கைக்கொண்டவா - (ஆன்றோருடைய பாமாலையுடன்) எளியேனுடைய பாமாலையாகிய இத்திருவேகம்பரந்தாதியையும் அங்கீகரித்தருளியவரே,—கச்சி காவலனே - காஞ்சீபுரத்தைக்காப்பவரே. எ-று. பரமுத்தியைத் தந்தருளுமென்பதை இறுதியிற்கூறிக்கொள்க. (உஉ)

வலங்கொடியானத்தன்பாளர்கள்சூழ்செந்தின்மாநகர்ச்சே
வலங்கொடியானத்தனுங்காமக்கோட்டிமணுளனைநா
வலங்கொடியானத்தன்போலானென்றேத்தல்செய்வாமினிக்க
வலங்கொடியானத்தன்மன்வாதனையைமருவலமே.

(இ - ள்.) தியானத்து வலங்கொள் அன்பாளர்கள் சூழ் - (திருவடிச்) சிந்தனையோடு பிரதக்ஷிணஞ் செய்கின்ற மெய்யடியார் சூழ்கின்ற—மா செந்தில் நகர்ச் சேவல் அம் கொடியான் அத்தன் ஆம் காமக்கோட்டி மணுளனை - பெரிய திருச்செந்தூராகிய திருப்பதியில் வாழ்கின்ற சேவலை (வரைந்த) அழகிய கொடியையுடைய முருகக்கடவுளது பிதாவாகிய காமாக்ஷியம்மைக்குத் தலைவராகிய திருவேகம்பநாதரை,—நாவலம் கொடியான் நத்தன் போலான் என்று ஏத்தல் செய்வாம் - நாக்கின்கணுள்ள கொடிபோலும் சரசுவதியையுடைய பிரமதேவரும் சங்கையுடைய விஷ்ணுமூர்த்தியுமாய பசுக்கள்போலாத பரமபதியென்று துதிக்கப்பெறறேம்,—இனிக் கவலம் - இனி வருந்தேம் ,—கொடியான் அத் தன்மன் வாதனையை மருவலம் - குரூரனாகிய அவ்வியமன் செய்யுந் துன்பத்தை (மனமே யாம்) எய்தமாட்டேம். எ-று. மூன்றுமடியில் வலம் ஏழனுருபு. (உங)

வலமாயக்கண்டகரளவென்றேத்திடின்வல்விணைய
வலமாயக்கண்டகத்தேகுடிகொண்டுமநக்களைய
வலமாயக்கண்டகத்தான்பானுவாநின்றுவாழ்வித்திடும்
வலமாயக்கண்டகரூரெரித்தேகம்பம்வாழ்முதலே.

(இ - ள்.) வலமாய் அக் கரள கண்ட என்று ஏத்திடின் - (நாம்சிவாலயத்தைப்) பிரதக்ஷிணஞ்செய்து அநஞ்சையடக்கிய கழுத்தையுடையவரே என்று துதிக்கின்,—அவலம் வல் விணை மாயக் கண்டு மநக் களைய வலமா - துன்பத்தைத்தருகின்ற வலிய கன்மத்தைக் கெடச்செய்துமலதிரோதங்களை நீக்க வல்லேமாகும்படி—அகத்தே குடிகொண்டு - (எமது) நெஞ்சத்தில் வதிந்தருளி,—யக் கண் தகத்தான் பானுவா நின்று வாழ்வித்திடும் - ஆன்மாக் கண்போலாகத் தாம் ஆதித்தனாக நின்று (எம்மைத் தம் திருவடிக்கீழ்இருத்தி) வாழச்செய்வர்,—வலம் மாயக் கண்டகர் ஊர் எரித்து ஏகம்பம் வாழ் முதல் - வெற்றியையும் வஞ்சகத்தையுமுடைய அசுரரது முப்புரத்தையும் தகித்துத் திருவேகம்பத்தின் வீற்றிருக்கின்ற முதற்கடவுள். எ-று. (உச)

2

முதலையையாவிகரந்திபங்காத்தவன்மொய்மலர்த்தாள்
முதலையையாவிகவானஞ்சுமாடிமுழுமலர்விம்
முதலையையாவிகமழ்கஞ்சனாடவுமுற்படுமம்
முதலையையாவிகலனையென்றாண்டமுறைநகம்பனே.

(இ - ள்.) முதலையை ஆவி கரந்து இபம் காத்தவன் - முதலையை உயிர் கவர்ந்து யானையைக் காத்தவனாகிய விஷ்ணுமூர்த்தி,—மொய் மலர்த் தாள் முதலை (நாடவும்) - இதழ்கள் செறிந்த தாமரைமலர் போலும் பாதங்களாகிய அடியைத் தேடவும்,—ஆ ஆவிக ஆன் அஞ்சும் ஆடி முழு மலர் விம்மு தலையை - அழகிதாக (ஏய்) புவியிலுள்ள பசுக்களது பஞ்சகவ்வியத்திலும் மூழ்கிச்சிறைதயாத அலர்கள் நிறை யப்பெற்ற முடியை—ஆவி கமழ் கஞ்சன் நாடவும் - மணங்கமழ்கின்ற செந்தாமரைமலரிலிருக்கும் பிரமதேவர் தேடவும்,—முற்படும் அம் முதலை - கடந்து செல்லும் அந்தத்தலைமைப்பாட்டையுடையீர்,—(அங்ஙனமாகவும்)—ஐயா - ஐயரே,—கம்பனே - திருவேகம்பநாதரே,—விகலனை ஆண்டமுறை என் - அறிவுக்குறைபாடுடைய அடியேனை அடிமைகொண்ட நெறி யாது. எ - று. (உரு)

பண்ணந்தனவனமாக்கேகம்பன்பழையோனென்றும்போற்
பண்ணந்தனவனப்பிற்கழிவேம்பசுந்தாமரையின்
பண்ணந்தனவனம்போற்பற்றறேமெப்படிகொல்வெள்ளி
பண்ணந்தனவனம்போதனெய்தாப்பதஞ்சார்வதுமே.

(இ-ள்.) பல் நந்தன வனம் ஆக்கேகம் - பலவாகிய நந்தோட்டங்களை யுடையேம்,—கம்பன் பழையோன் என்றும் போற்றாம், திருவேகம்பநாதர் அநாதியேயுள்ளவர் என்றும் திருநாமங்களை உச்சரியேம்,—தன வனப்பிற்கு அழிவேம் - (பெண்களுடைய) முலை களின் அழகுக்கு அறிவு பறிபோவேம்,—பசும் தாமரையின் பண்ணம் நனை வனம்போல் பற்று அறேம் - பசிய தாமரையிலையிலே தங்கிய அற்பமாகிய ஜலம்போலப் பற்று ஒழியேம்,—வெள்ளி பன் நந்தன் அவ் அனம் போதன் எய்தாப் பதம் சார்வது - (இங்ஙனமாகிய நாம்) வெள்ளையானையையுடைய இந்திரனும் சங்கையுடைய விஷ்ணுமூர்த்தியும் அன்னவாகனத்தையுடைய பிரமதேவரும் அடையாத பரமுத்தியை அடைவது—எப்படிகொல் - என் வண்ணம்? எ-று. மூன்றாமடியில் தன்னென்பது தனமென இடைகுறைந்து நின்றது. கொல் அசை. (உசு)

சாறுவதீர்த்தநறுநீரிலேகம்பர்தாமுலவுஞ்
சாறுவதீர்த்தனென்றேத்திடுமேதியைத்தண்கருப்பஞ்
சாறுவதீர்த்தலைக்குங்காஞ்சிகாசிகமலைதண்கஞ்
சாறுவதீர்த்தவொப்பின்பெயர்நீங்கிடச்சார்மனமே.

(இ-ள்.) சாறுவதீர்த்த நறு நீரில் ஏகம்பர் தாம் உலவும் சாறு உவ - சுவைதீர்த்தத்தின் மணம் பொருந்திய சலத்திலே திருவேகம்பநாதர் பவனிவரும் தெப்போற்சவத்தை (த்தரிசித்து) மகிழ்வாயாக,—தீர்த்தன் என்று ஏத்திடு - சுத்தரென்று (அவரைத்) துதிப்பாயாக,— மேதியைத் தண் கருப்பம் சாறு அது ஈர்த்து அலைக்கும் - எருமைகளைக் குளிர்ந்த கருப்பஞ்சாறு இழுத்து அலைக்கின்ற —காஞ்சி காசி கமலை தண் கஞ்சாறு - காஞ்சீபுரம் வாராணசி திருவாரூர் தண்ணிய கஞ்சாறு (என்னுந்தலங்களை)—உவதீர்த்த ஒப்பின் பெயர் நீங்கிடச் சார் மனமே - உகார வகாரங்களாகிய இரண்டெழுத்துக்களை நீத்த உவமை என்னும் மையாகிய ஆணவமலங் கெடச் சார்ந்து வசிப்பாயாக நெஞ்சமே. எ-று. (உஎ)

மனவகங்கைக்கனத்தானனற்போற்றிமறுக்கவெய்யா
மனவகங்கைக்கனற்காரற்குமைக்குமகனைத்தொழ
மனவகங்கைக்கனக்கோனன்பர்தாடொழவைத்திகம்ப
மனவகங்கைக்கனத்தார்முத்தஞ்சேர்கச்சிவானவனே.

(இ - ள்.) மன அகம் கைக் கனத்து ஆனனற் போற்றி - மனத்தினிடத்தே கையாகிய பாரத்தையுடைய முகத்தினராகிய விநாயகக்கடவுளை வழிபட்டு, மறுக்க எய்யாமல் - மீட்டு இளையாமல்—நவ கங்கைக்கு அனற்கு ஆரற்கு உமைக்கு மகனைத் தொழ - புதுமையாகிய கங்காதேவிக்கும் அக்கினிதேவனுக்கும்கார்த்திகைப்பெண்கள் அறுவர்க்கும் உமாதேவியார்க்கும் குமாரராகிய முருகக்கடவுளை வணங்கவும்,—மனவ - சங்குமணியையுடையவரே,—கம் கைக் கனக் கோன் - தலைமாலையாலாகிய அலங்காரத்தையுடைய சீர்மை பொருந்திய இறைவரே,—அன்பர் தாள் தொழ - அடியார்களுடைய திருவடிகளை வணங்கவும்,—வைத்தி - (திருநோக்கஞ்) செய்தருளும்,—கம்ப மனவ - திருவேகம்பத்திற்குத் தலைவரே,—கங்கைக்கனத்து ஆர் முத்தம் சேர் கச்சி வானவனே - வரம்பை மேகத்திலே பொருந்திய முத்துக்கள் சேர்கின்ற காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்குங்கடவுளே. எ-று.

(உஅ)

வானங்கனை கடலாய்ப்பரந்தான்வன்கரிகரக்க
வானங்கனை கடவாநடஞ்செய்கச்சிவாணன்பொன்னேர்
வானங்கனை கடமாவுரியான்கம்பமாவடிவாழ்
வானங்கனை கடனீதெனக்காட்டிவந்தாண்டனனே.

(இ - ள்.) வானம் கனை கடலாய்ப் பரந்தான் - ஆகாயமாயும் ஒலிக்கின்ற சமுத்திரமாயும் வியாபித்தவரும்,—வன் கரிகரக் கவான் அங்கனைகள் தவா நடம் செய் கச்சிவாணன் - வலிய யானையினது துதிக்கைபோலும் தொடையையுடைய பெண்கள் நீங்காது நிருத்தம்புரிகின்ற காஞ்சீபுரத்துவாழ்கின்றவரும்—பொன் நேர்வான் - பொன்போல்பவரும்—அம் கல் நை கடம் மா உரியான் - அழகிய மலையும் நையத்தக்க மதம் பொருந்திய யானைத்தோலையுடையவரும்,—கம்ப மா அடி வாழ்வான் - திருவேகம்பமாகிய மாமரத்தடியில் வீற்றிருப்பவருமாகிய சிவபெருமான்—அங்கு அனை கடன் ஈது எனக் காட்டி வந்து ஆண்டனன் - அங்கே மாதாவின் முறைமை இஃதென்று அறிவித்து வந்து (அடியேனை) அடிமை கொண்டருளினர். எ-று. (உக)

ஆண்டவனாரணன்கம்பனென்றேத்தவயன்சுரர்பல்
லாண்டவனாரணனோடடியேனுமணைந்திடிற்பே
ராண்டவனாரணந்தீசன்கணங்களிவ்வாலயத்து
ளாண்டவனாரணவுற்றானென்றதுள்ளழைத்தருளே.

(இ - ள்.) ஆண் தவன் ஆரணன் கம்பன் என்று ஏத்த - ஆடவருள் நாயகரே வேதார்த்தமாயுள்ளவரே திருவேகம்பநாதரே என்று துதிக்கும்பொருட்டு—அயன் சுரர் பல்லாண்டவன் நாரணனோடு - பிரமனும் தேவர்களும் பல்லாண்டையுடைய விட்டுணுவுமாகிய இவர்களோடு—அடியேனும் அணைந்திடில் - அடியேனும் (உமது சந்நிதானத்தை) அடையப்பெற்றால்,—பேர் ஆண்டவன் நார் அணந்தீசன் கணங்கள் - கீர்த்திபெற்றவராகிய அன்பு செறிந்த திருநந்திதேவரும் (அவராணைவழி ஒழுகும்) சிவகணர்களும்,—இவ் ஆலயத்துள் ஆண்டு அவன் ஆர் அணவுற்றான் என்றது - இத்திருக்கோயிலின்கண்ணே அவ்விடத்தே அவன் யாவன் அணுகினானென்று சுட்டிப் புறக்கணித்துக் கூறாவண்ணம்—உள் அழைத்தருள் - அத்திருவேகம்பத்துள்ளே (அடியேனைக்) கூவியருளும். எ-று. (௩0)

உள்ளலைவாளைதலைப்படுமோடையுடுத்தகச்சி
யுள்ளலைவாளைநன்னீலஞ்செங்காசுமிழ்கம்பத்தனே
யுள்ளலைவாளையரிக்கண்ணிகாமனுகுக்குமம்புக்
குள்ளலைவாளையதார்க்கொன்றையீந்தவளுய்வண்ணமே.

(இ - ள்.) உள்ளலை வாளை தலைப்படும் ஓடை உடுத்த கச்சியுள்—உள்ளலாகிய மீன்களை வாளைமீன்கள் அகப்படுத்துகின்ற வாவிகள் சூழப்பெற்ற காஞ்சி நகரத்துள்ள—அலை வாளை நல் நீலம் செங்காசு உமிழ் கம்பத்தனே - இருளையும் ஒளியையும் நல்ல மரகதமணியும் செம்மணியும் உமிழப் பெற்ற திருவேகம்பவாணரே,—உள்ளலை - (நீர் திருவுளத்தே) கருதவில்லை,—வாள் ஐ அரிக் கண்ணி காமன் உகுக்கும் அம்புக்கு உள் அலைவாள் - வாள் போன்ற அழகிய வரி பரந்த கண்களையுடைய இப்பெண் மன்மதன் ஏவும் பஞ்சபாணத்தகப்பட்டுச் சுழல்வாள் (என்பதை அறிந்தும்)—ஐய - ஐயரே—கொன்றைத் தார் ஈந்து அவள் உய்வண்ணம் - கொன்றைமாலை தந்தருளி அப்பெண் பிழைக்கும் முறைமையை. எ-று. திருவேகம்பவாணரே ஐயரே அறிந்தும் பிழைக்குமுறைமையைக் கருதவில்லையெனக் கூட்டுக. [நற்றாயிரங்கல்.]

(௩௧)

வண்ணஞ்சிவந்தவரேகம்பர்க்கார்மொழிவார்மறையின்
வண்ணஞ்சிவந்தவமானார்பிரான்முடிவாழ்மதிக்க
வண்ணஞ்சிவந்தவமேயீரவாடிநன்மாமைகெடும்
வண்ணஞ்சிவந்தவநங்கனுக்கேங்கிவருந்துவதே.

(இ - ள்.) வண்ணம் சிவந்தவர் ஏகம்பர்க்கு ஆர் மொழிவார் - சிவந்த திருமேனியையுடையாராகிய (அத்) திருவேகம்பநாதருக்குயாவர் (சென்று) சொல்வார்!—மறையின் வண்ணம் தவம் சிவம் ஆனார் பிரான் முடி வாழ் மதிக்கு - வேதத்திற் (கூறப்படும்) திருவைந்தெழுத்தை (உச்சரித்தலாகிய) சிவபுண்ணிய முதிர்ச்சியினாலே(ஒருவாற்றாற்) சிவமான அடியார்களுடைய இறைவரது சென்னிக்கண்ணே வசிக்கும் பிறையின்பொருட்டு—அவண் அஞ்சி வந்து அவமே ஈர வாடி—அங்கே (கண்ணுற்றுப்) பயந்து போந்து வீணாக (மதி) பிளக்கப்பட்டு மெலிந்தும்,—நன் மாமை கெடும் வண்ணம் சிவந்த அநங்கனுக்கு ஏங்கி வருந்துவது-நல்ல அழகு அழியும்படி கோபங்கொண்ட மன்மதன்பொருட்டு அழுதும் என் புதல்வி துன்பம் அடைவதை. எ-று. துன்பம அடைவதை அத்திருவேகம்பநாதருக்கு யாவர் சொல்வாரெனக்கூட்டுக. இரண்டாமடியில் வண்ணம் அக்கரம். [நற்றாயிரங்கல்.]

வருந்தலைவாமனனேமதன்சாபம்வணக்கியெய்ய
வருந்தலைவாமனனேயயனேமற்றைவானவர்யா
வருந்தலைவாமனனேகம்பனென்னுமெம்மான்கரந்தை
வருந்தலைவாமனனேகனுதற்கணைவாழ்த்துதியே.

(இ - ள்.) மனனே வா வருந்தலை - நெஞ்சமே வருவாயாக வருத்தமுறாதே,—மதன் சாபம் வணக்கி எய்ய வரும் தலை - மன்மதன் வில்லை வளைத்து (ப் பாணங்களை) த்தொடுக்க வந்தவிடத்து—வாமனனே அயனே மற்றைவானவர் யாவரும் - விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் ஏனைத்தேவர்களுமாகிய எல்லோரும்—தலைவா மனனே கம்பன் என்னும் எம்மான் - இறைவரே நிலைபெற்றவரே திருவேகம்பநாதரே என்று துதிக்கப்பெற்ற எங்கள் பெருமானும்—கரம் தைவரும் தலை வாமன் - திருக்கரத்திற் பரிசிக்கப்பெற்ற (பிரமகபாலத்தையுடைய அழகரும்—அனேகன் - சர்வான்மாக்களுமானவருமாகிய சிவபிரானது—நுதற் கணை வாழ்த்துதி - நெற்றிக்கண்ணைத் துதிப்பாயாக எ-று. துதிக்கின் அம்மன்மதன் அகலுவனென்பது எஞ்சி நின்றது.காமம் அங்குரிக்கும் போழ்தே களைதல்வேண்டுமென்பது கருத்து. ()

துதிகானனந்தலையேகம்பவாழ்வையந்தோமிக்கிரந்
துதிகானனந்தலைமூன்றுளரைத்தொழுந்தேவெனவாழ்த்
துதிகானனந்தலைநீர்த்தடந்தீத்தண்மைசூளையருந்
துதிகானனந்தலையாம்பதியென்றெண்ணிச்சூழ்மனனே.

(இ-ள்.) நம் தலை ஏகம்ப வாழ்வை அந்தோ மிக்கு இரந்து கானம் துதி - நமது முதற்பொருளாகிய திருவேகம்பப் பெருவாழ்வை ஐயோ பெரிதும் யாஜித்துப் பண்ணுடனே துதிப்பாயாக,—திக் ஆனனம் மூன்று தலை ஆளரைத்தொழும் தேவு என வாழ்த்துதி - நான்கு முகங்களையும் மூன்றுசிரசுகளையுமுடைய பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியுமாகிய இருவரையும் வழிபடு கடவுளென்று (கருதிப்புகழ்கின்றாய் (அங்ஙனம் புகழ்தலை விட்டொழிந்து) [அடியாராக மதித்தல் வேண்டுமென்றபடி],—கானல் நந்து அலை நீர்த் தடம் - பேய்த்தேரைச் சங்குகள் அலைகின்ற ஜலத்தையுடைய வாவியென்றும்—தீத் தண்மை - அங்கியைக் குளிர்ந்த நீரென்றும்—சூளை அருந்துதி - வரைவின்மகளிரை (க்கடவுட்கற்பினையுடைய)அருந்ததியென்றும்—கான் நனந்தலை ஆம் பதி என்று - சுடலையை நாட்டினது) நடுவினுள்ளதாகிய நகரமென்றும்—எண்ணிச் சூழ் ம

னனே - (திரிபாகக்) கருதிச் சுழல்கின்ற நெஞ்சமே எ-று. நெஞ்சமே இருவரையும் புகழ்தலைவிட்டொழிந்து திருவேகம்பப்பெருவாழ்வை த்துதிப்பாயாகவெனக்கூட்டுக. (௯௪)

மனமாலையாற்றவலைகடல்வீரமடியநல
மனமாலையாற்றனலியத்தருமன்மதன்மதச
மனமாலையாற்றண்ணளிசுரந்தாள்கச்சிமாநகர்க்கு
மனமாலையாற்றவனேகம்பமேவியவான்பொருளே.

(இ-ள்.) மனம் மாலை ஆற்ற - நெஞ்சமானது மயக்கத்தைச் சகிக்கவும்,—அலை கடல் வீரம் மடிய - திரையையுடைய சமுத்திரத்தினது வலி குன்றவும்,—நலம் மன - நன்மையானது பொருந்தவும்,—மாலை ஆற்றல் நலிய - அந்திக்காலத்தினது வலிமை கெடவும்,—தருமன் மதன் மதசமனம் - இயமனும் மன்மதனும் கொண்ட சினம் சாந்தமுறவும்,— மாலையால் தண் அளி சுரந்து ஆள் - (உமது) மாலையினுல் குளிர்ந்த அருள் சுரந்து ஆண்டருளும்,—மா கச்சி நகர்க்கு மன - பெருமையாகிய காஞ்சீபுரத்திறகுத் தலைவரே,— மால் ஐயாற்றவனே - பெருமையாகிய திருவையாற்றையுடையவரே,—கம்பம் மேவிய வான் பொருளே - திருவேகம்பத்தில் வீற்றிருக்கும் பரம்பொருளே. எ-று (௯௫)

பொருந்தங்குமரிக்குறும்பற்றிருவர்புகழ்சிவந்தாய்
பொருந்தங்குமரிக்குமுள்ளேவினையென்றுபோய்க்கம்பமே
பொருந்தங்குமரிக்குங்காறுமமர்பொன்னிசானவிதண்
பொருந்தங்குமரிக்குமேலாங்கம்பைப்புனலாடுநெஞ்சே.

(இ-ள்.) பொரும் தம் குமரிக் குறும்பு அற்று இருவர் புகழ் சிவம் - (யான் பரம், யான் பரம் என்று) போர்புரிதற்குக் காரணமாகிய தமது அழிவில்லாத (மலத்தாலாகிய) பொல்லாங்கு நீங்கிப் (பிரம விஷ்ணுக்களாகிய) இருவரும் துதிக்கும் பரசிவமானது— தாய் பொரும் - மாதாவைப்போலும்,—உள்ளே தங்கும் - இருதயத்திலே வசித்தருளும்,—வினை அரிக்கும் - கன்மபாசத்தைக் கெடுத்தருளும்,—என்றுபோய் - என்று (சிந்தித்துச்) சென்று,—கம்பமே பொருந்து - (அப்பரம்பொருள் சிவலிங்கமூர்த்தங்கொண்டு வாழும்) திருவேகம்பத்தையே சார்வாயாக,—அங்கு மரிக்கும் காறும் அமர் - அங்கே நீ இறக்கும்வரையும் வசிப்பாயாக,—பொன்னி சானவி தண்

பொருந்தம் குமரிக்கு மேலாம் கம்பைப் புனல் ஆடு - காவேரி கங்கை குளிர்ச்சிபெற்ற தாமிரபர்ணிகன்னியாநதி (முதலிய) நதிகளுக்கு மேம்பட்டதாகிய கம்பாநதியினது தீர்த்தத்தின் மூழ்குவாயாக,—நெஞ்சே - மனமே. எ-று. மூர்த்தி தல தீர்த்தங்களாகிய மும்மைச் சிறப்புமுள்ள சைவதலங்களிற் சிறந்ததாகலின், இவ்வாறு கூறினார். (௩௬)

சேயரியம்பகமானேபொருள்வயிற்சென்றவர்தாஞ்
சேயரியம்பகவார்த்திடுங்கார்வரிற்செய்வதென்னாஞ்
சேயரியம்பகவற்கீங்கெனுச்சிறுத்தொண்டர்தஞ்
சேயரியம்பகம்பாவென்றென்றேத்துந்திறனல்லதே.

(இ - ள்.) சேய் அரி அம்பக மானே - சிவந்த வரி பொருந்திய கண்ணையுடைய பெண்ணே,—பொருள் வயின் சென்றவர் தாம் சேயர் —பொருண்மேற் சென்ற தலைவரானவர் தூரதேயத்தர்,—இயம் பக ஆர்த்திடும் கார் வரின் நாம்செய்வது என் - (ஆதலால்) வாச்சியங்கள் பிளவுபட முழங்குகின்ற கார்காலம் வந்தால் யாம்செய்வது யாது!— பகவற்குச் சேய் அரியம் ஈங்கு என்னாச் சிறுத்தொண்டர்தம் தஞ்சே —(வைரவவேடம் பூண்டெழுந்தருளிய) கடவுள்பொருட்டுப் புதல்வனை அறுக்கமாட்டேம் இவ்விடத்தென்று மறுத்துக் கூறாத சிறுத்தொண்டனாயனாரது பற்றுக்கோடாயுள்ளவரே,—அரி அம்ப - விஷ்ணுமூர்த்தியாகிய பாணத்தையுடையவரே,—கம்பா - திருவேகம்பநாதரே,—என்று என்று ஏத்தும் திறன் அல்லது - என்று பலமுறை துதிக்குந்தகுதியன்றி. எ-று. வேறு புகலின்றென்பது எஞ்சி நின்றது. [கார்காலக்குறி கண்டு தலைவி கவன்றுரைத்தது.] (௩௭)

அல்லாக்குமாரணங்குற்றுயிர்த்தேங்குமருள்பொறைதை
யல்லாக்குமாரனன்னாருளாரென்னுமம்பகலை
யல்லாக்குமாரமடர்கச்சிக்கம்பரருட்குரிய
னல்லாக்குமாரனையீன்பயனீதென்னுமாயிழையே.

(இ - ள்.) அல்லாக்கும் - துன்பமுறுவள்,—ஆர் அணங்கு உற்று உயிர்த்து ஏங்கும் - மிகவருத்தமெய்திப் பெருமூச்செறிந்து அழுவள்,—அருள் பொறை தையல் ஆ குமாரன் அன்னோர் அருளார் என்னும் —கருணையினும் க்ஷமையினும் அழகினும் பசுவும் பூதேவியும் மன்மதனும்போன்ற தலைவர் கருணைசெய்யாரென்று சொல்லுவள்,—அம்

பகலை அல் ஆக்கும் ஆரம் அடர் கச்சி - (அதற்குக் காரணம்) அழகிய பகலைச் (சந்திரகிரணம் வீசும்) இரவாகச் செய்கின்ற முத்துக்கள் நெருங்கிய காஞ்சீபுரத்தில் வாழும்—கம்பர் அருட்கு உரியன் அல்லாக் குமாரனை ஈன் பயன், ஈது என்னும் - திருவேகம்பநாதரது கருணைக்கு உரியவனாகாத புத்திரனைப் பெற்ற பேறாகிய இதுதானென்றும் சொல்லுவள்,—ஆய் இழை - ஆராய்ந்து செய்யப்பட்ட ஆபரணத்தையுடைய தலைவியானவள். எ-று. [புதல்வனொடு புலத்தல்.] (ங அ)

ஆயா திருக்கச்சியேகம்பநின்னடியார்க்கடியே
னாயாதிருக்கச்சிவமென்பதென்றதையாய்ந்துமற்றொன்
றாயாதிருக்கச்சிதானந்தமாயமர்வண்ணமளி
யாயாதிருக்கச்சிதுநீத்தறிவுருவாந்திருவே.

(இ - ள்.) ஆயா - (சர்வான்மாக்களுக்கும்) தாயாயுள்ளவரே,—திருக் கச்சி ஏகம்ப - அழகிய காஞ்சீபுரத்தில் வாழுந் திருவேகம்பநாதரே,—நின் அடியார்க்கு அடியேனாய் - (நாயினேன்) உமது தொண்டர்க்குத் தொண்டனேனாகி,—ஆ இருக்கு அச்சிவம் என்பது என்று அதை ஆய்ந்து - ஆன்மாவானது கண்ணும் அகரம்போன்ற சிவமானது சூரியனும் (எனச் சிவாகமங்களிற் கூறும்) அந்தஞானபாதப்பொருளை ஆராய்ச்சிசெய்து—மற்று ஒன்று ஆயாது இருக்க - வேறொன்றனை ஆராய்ச்சிசெய்யாதிருக்கும்வண்ணமும்,—சிதானந்தம் ஆய் அமர் வண்ணம் - ஞானானந்தவடிவமாய் (நிட்டைபொருந்தி) இருக்கும் வண்ணமும்,—அச்சுத் திருக்கு இது நீத்து - சரீரத்தை (யானெனப் பற்றச்செய்கின்ற மலக்) குற்றமாய இதனைப் போக்கி—அறிவு உருவாம் திரு - சிவஞானவடிவமாகிய செல்வத்தை—அளியாயா - தந்தருளமாட்டீரா. எ-று. (ங க)

திருக்காமக்கோட்ட முதல்விபங்காண்டருள்செல்வன்வினை
திருக்காமக்கோட்டமமாற்றிடுங்கம்பன்றிருந்தெழின்மு
திருக்காமக்கோட்டமளித்தானென்றேத்திநந்தீவினைப்பி
திருக்காமக்கோட்ட முறும்பாம்பரைக்கசைதேவனையே.

(இ - ள்.) திருக் காமக் கோட்ட முதல்வி பங்கு ஆண்டருள் செல்வன் - அழகிய காமக்கோட்டத்தில் வாழுங் காமாட்சியம்மையைப் பாதித்திருமேனியில்) வைத்தருளிய செல்வரென்றும்—வினை திருக்கு ஆ மக் கோள் தமம் மாற்றிடும் கம்பன் - கன்மபாசத்தையும் மா

யாபாசத்தையும் ஆன்மாவைப் பந்தித்த மலமாகிய வலிய இருளையும் (தமதடியாருக்குப்) போக்கியருளும் திருவேகம்பநாதரென்றும்,— திருந்து எழில் முதிருக்கு ஆம் அக்கோட்டம் அளித்தான் என்று ஏத்தி - திருந்திய அழகின் முதிர்ச்சிப்பொருட்டு (க் காஞ்சிநகரத்திற்கு) நீரையுடைய அந்தத்தடாகங்களைக் கொடுத்தருளினாரென்றும் துதித்து,— நம் தீவினைப் பிதிர் உக்காம் - (மனமே) நமது தீவினையாகிய பொடியை உதிர்த்தொழித்தேம்,— அக்கு ஓட்டம் உறும் பாம்பு அரைக்கு அசை தேவனை - சங்குமணியையும் ஓடுந்தொழில் பொருந்திய சர்ப்பத்தையும் அரையின்கண்ணே அணிந்தருளிய கடவுளை. எ-று. மனமே கடவுளைச் செல்வரென்றும் திருவேகம்பநாதரென்றும் கொடுத்தருளினாரென்றும் துதித்து உதிர்த்தொழித்தேமெனக் கூட்டுக. இரண்டாமடியில் திருக்கு மாயாபாசத்தின்மேற்று. அரைக்கு வேற்றுமைமயக்கம். (௬௦)

வசனத்தவன்புரவாளனவன்மதியம்பசிய
வனசத்தவன்புரவிப்பகலோனவன்மன்னுசத்த
வனசத்தவன்புரம்வென்றோனவனவனேநலஞ்சு
வனசத்தவன்புரவோர்வாழ்கலிக்கச்சிவாழ்கம்பனே.

(இ - ள்.) வனசத்தவன் (அவன்) - தாமரையாசனராகிய பிரமதேவரும் அவர்,— புரவாளன் அவன் - காத்தற்றொழில் புரியும் விஷ்ணுவும் அவர்,— மதியம் (அவன்) - சந்திரனும் அவர்,— பசிய வனசத்த வன் புரவிப்பகலோன் அவன் - பச்சைநிறமுள்ள சப்தாவென்னும் வலிய குதிரையையுடைய சூரியனும் அவர்,— மன்னு சத்து அவன் - நிலைபெற்ற சத்துப்பொருளும் அவர்,— அசத்து அவன் - அசத்துப்பொருளும் அவர்,— புரம் வென்றோன் அவன் - முப்புரத்தையும் வெற்றி கொண்டவரும் அவர்,— அவனே நல் அஞ்சு வனசத்த அன்பு உரவோர் வாழ் கலிக் கச்சி வாழ் கம்பன் - அவரே நல்ல ஸ்ரீபஞ்சாக்கரோச்சாரணத்தையுடைய பத்திபொருந்திய அறிஞர்கள் வசிக்கும் முழக்கம் பொருந்திய காஞ்சீபுரத்தில் வாழ்கின்ற திருவேகம்பநாதர். எ-று. (௬௧)

கங்கணம்பன்னகஞ்சாந்தமுநீறுகருதொருபா
கங்கணம்பன்னகருங்குழன்மேனிகமழ்துகழ
கங்கணம்பன்னகமேகம்பமன்பரகங்கள்சிராங்
கங்கணம்பன்னகவில்லானுக்கோதக்கடவனவே.

(இ - ள்.) கங்கணம் பன்னகம் - அஸ்தகடகம் சர்ப்பமும்,—நீறு சாந்தமும் - விபூதி சந்தனமும்,—கருது ஒரு பாகம் அம்பு அன்ன கண் கருங்குழல் மேனி - (அன்பர்கள்) சிந்திக்கும் ஒருபாகம் பாணம் போலும் கண்களையும் கரிய கூந்தலையுமுடைய உமாதேவியாரது திருமேனியும்,—கழகம் கணம் கழுது - நிருத்தம்புரியுமிடத்துள்ள கூட்டம் பேய்களும்,—பன் அகம் ஏகம்பம் அன்பர் அகங்கள் சிரம் - சொல்லப்படும் வீடு திருவேகம்பமும் திருத்தொண்டர்களுடைய இருதயங்களும் வேதசிரசாகிய உபநிடதங்களுமாக,—கம் கணம் பன் நக வில்லானுக்கு ஓதக்கடவன - ஆகாயத்துள்ள நக்ஷத்திரங்கள் நெருங்கிய மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானுக்குச் சொல்லத்தக்கனவாம். எ-று. (௯உ)

கடவாதவன்பருவராதவன்பரகந்தொறுஞ்சங்
கடவாதவன்பருவராவினையிருட்கார்க்குவன்றேர்
கடவாதவன்பருவராலுகள்கம்பைக்கம்பனலங்
கடவாதவன்பருவராதளித்தெனைக்காத்தனனே.

(இ - ள்.) கடவாத அன்பர் உவராத அன்பர் அகம் தொறும்—(வேதசிவாகமங்களின் விதியினின்றும) விலகாத மென்றொண்டரும் (ஒருபோதும் திருவடியை) வெறுக்காது விதி கடந்தொழுகும் வன்றொண்டருமாகிய திருவடியார்கள் நெஞ்சந்தோறும்—சங்கட வாத வன்பு அருவரா வினை இருள் கார்க்கு வன்தேர் கடவு ஆதவன் - வருத்தமாகிய தருக்கத்தின் வலிமைக்குக் கருவியாகிய மாயாமலமும்(அபரிபக்குவர்) உவர்ப்புறுத கன்மமலமும் ஆணவமலமுமாகிய அந்தகாரத்தைப் புலரச்செய்யும்வண்ணம் வலிய வைதிகரதத்தை நடத்தும் ஞானசூரியனும்,—பரு வரால் உகள் கம்பைக் கம்பன் - பரிய வரான்மச்சங்கள் பாய்கின்ற கம்பாநதியினாலே சூழப்பட்ட திருவேகம்பத்தில் வாழ்பவரும்—நலங்கள் தவாதவன் - (எல்லா) நன்மைகளும் நீங்காதுடையவருமாகிய சிவபெருமான்—பருவராது அளித்து எனைக் காத்தனன் - (பிறவியில் அகப்பட்டுத்) துன்பமுறாவண்ணம் (இன்பவீட்டைத்) தந்து அடியேனைக் காத்தருளினர். எ-று. இரண்டாமடியில் வன்பு ஆகுபெயர். (௯௩)

தனம்பொடியாதுமுளையாதெயிறிந்தத்தையல்கம்பத்
தனம்பொடியாதும்வளராப்பிறைமுடித்தானுக்கென்பா
தனம்பொடியாதுதைசாந்நமெனுங்கொன்றைதந்திடின்ம
தனம்பொடியாதுதையாதென்னுமென்கட்டனித்துவந்தே.

(இ - ள்.) தனம் பொடியாது - முலை அரும்பாது,—எயிறு முளையாது - தந்தம் முளையாது;—இந்தத்தையல் - இந்தப்பெண்—கம்பத்தன் அம்பொடு யாறும் வளராப் பிறை முடித்தானுக்கு - திருவேகம்பநாதரும் கங்கையுடன் சிறிதும் விருத்தியில்லாத பிறைமதியைச் சூடியவருமாகிய சிவபிரானுக்கு—என்பா தனம் பொடியா துதை சாந்தம் எனும் - அஸ்திகளோ திரவியம் திருநீறே செறிந்த சந்தனமென்று சொல்லுவள்,—கொன்றை தந்திடின் மதன் அம்பு ஒடியாது தையாது என்னும் - (அஃதன்றிக்) கொன்றைமாலையைத் தந்தருளினால் மன்மதனுடைய பாணங்கள் சிதைந்து தாக்குமென்றும் சொல்லுவள்,—என்கண் தனித்து வந்து - என்னிடத்தே தனித்து வந்து. எ-று. இந்தப்பெண் என்னிடத்தே வந்து சொல்லுவளெனக் கூட்டுக. சிதைந்து தாக்குமென்பதற்கு அவமாய்ப் போமென்பது கருத்து. [தோழி செவிலிக்கறத்தொடுநிற்றல்.] (௫௪)

வந்தனையாவதுஞ்செய்தறியாமனமேமறலி
வந்தனையாவதுபார்நரகென்னுமுன்வாய்த்திடுது
வந்தனையாவதுசெய்தார்க்கருண்மயிலூரருட்ப
வந்தனையாவதுலாகம்பனேயென்றுவாழ்த்துவையே.

(இ-ள்.) வந்தனை யாவதும் செய்து அறியா மனமே - வழிபாடு சிறிதாயினும் புரிந்தறியாத நெஞ்சமே,—மறலி வந்தனையா அது நரகு பார் என்னும் முன் - இயமன் வந்தாயா அந்நரகத்தைப் பார்ப்பாயாக என்று சொல்லுமுன்பே,—வாய்த்திடு தவம் துணை ஆவது செய்தார்க்கு அருள் - சிறந்த தவத்தை (ப்பயன்) உண்டாகும்வண்ணம் செய்தவர்கட்குக் கருணைசெய்கின்ற—மயில் ஊரர் அருள் பவம் தன் ஐயா - மயிலை நடாத்துகின்ற அருளவதாரத்தையுடைய முருகக்கடவுளுக்குப் பிதாவே—அதுலா - ஒப்பில்லாதவரே—கம்பனே என்று வாழ்த்துவையே - திருவேகம்பநாதரேயென்று துதிப்பாயாக. எ-று. (௫௫)

வைகாத்திருப்பதிநாள்கோள்வழங்குங்கதிகளென்ற
வைகாத்திருப்பதிகைப்பதிகாசிதன்மார்பமன்றி
வைகாத்திருப்பதிமாற்பேறுமுன்வரைப்பாயினுஞ்செய்
வைகாத்திருப்பதியான்கச்சியேகம்பமாவடியே.

(இ-ள்.) திரு வைகாப் பதி - திருவைகாவென்னுந்தலமும்—நாள் கோள் வழங்கும் கதிகள் என்றவை காத் திருப்பு அதிகைப்பதி - நக்ஷத்திரங்களும் கிரகங்களும் செல்கின்ற வேகங்களென்பவைகளைச் சோலைகள் (தகைந்து) மீட்கின்ற திருவதிகையென்னுந் தலமும்,—காசி - வாராணசி யென்னுந்தலமும்,—தன்மார்பம் அன்றி வைகாத் திருப் பதி மாற்பேறும் - தனது நெஞ்சமன்றி வசியாத இலக்குமி தங்கிய திருமாற்பேறென்னுந் தலமும்,—உன் வரைப்பு ஆயினும் - (திருவேகம்பநாதரே) உம்முடைய க்ஷேத்திரங்களாயிருப்பினும்,—யான் காத்திருப்பது கச்சி ஏகம்பம் மா அடியே-அடியேன் இடையறாது வசிப்பது காஞ்சிபுரத்தில் திருவேகம்பமாகிய மாமரத்தடியே,—செய்வை - (ஆதலால்) கருணை புரிந்தருளும். எ-று.

(சசு)

மாவடிவாயவதாரஞ்செயேகம்பவாணர்கெடு
மாவடிவாயவம்பிஞ்சியிலேவியமன்னர்புள்ளு
மாவடிவாயவர்காணுதஞானவரோதயர்த
மாவடிவாயவந்தீர்சிந்தையாரெம்மையாள்பவரே.

(இ-ள்.) மா அடி வாய் அவதாரம் செய் ஏகம்பவாணர் - மாமரத்தடியிலே சிவலிங்கமூர்த்தங்கொண்டருளிய திருவேகம்பவாணரும்—கெடுமா வடி வாய அம்பு இஞ்சியில் ஏவிய மன்னர் - (அசுரர்கள்) அழியும்வண்ணம் கூரிய நுதியையுடைய பாணத்தை மும்மதிலிலே பிரயோகித்த தலைவரும்—புள்ளு மா வடிவு ஆயவர் காணுத வர ஞான உதயர் தம்-அன்னப்பட்சியும் பன்றிமிருகமுமான பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் அறியாத பரவுணர்வின்கண்ணே விளங்குகின்றவருமாகிய சிவபிரானுடைய—மா அடி வாய் அவம் தீர் சிந்தையார் - பெரிய திருவடி பொருந்திய பயனின்மை நீங்கிய உள்ளத்தையுடைய அடியார்களே—எம்மை ஆள்பவர் - எம்மை அடிமை கொள்பவர்கள். எ-று.

(சஎ)

ஆனந்தவெள்ளம்புயத்தாள்பணிகம்பவாணவத்தீ
யானந்தவெள்ளமலவுடற்பாரமறிவுமிகை
யானந்தவெள்ளவதியேனுங்கன்மமடாதுருப்பட்
டானந்தவெள்ளந்துளைந்தாடவைத்தியருமணியே.

(இ-ள்.) ஆன் அந்த - இடபவாகனத்தையுடைய அழகரே,—வெள் அம்புயத்தாள் பணி கம்ப - வெண்டாமரைமலரிலிருக்கின்ற சரசுவதி வணங்குந் திருவேகம்பநாதரே,—ஆணவத் தீ யானந்த - ஆணவமலமாகிய அக்கினியும் யானென்னும் போதமாகிய தூமமும் கெடவும்,—மல உடற் பாரம் எள்ள - மலநிறைந்த சரீரச்சுமையை இகழ்ந்து கைவிடவும்,—அறிவு மிகையான் அந்தக்கன்மமம் எள் அவதி எனும் அடாது - ஞானமிகுதியினாலே அக்கன்மமலம் எட்டுணையாயினும் பொருந்தாமலும்,—உருப்பட்டு - (சுத்த)ரூபமுடையேனாகி,—ஆனந்த வெள்ளம் துளைந்து ஆட வைத்தி - இன்பவெள்ளத்தின் மூழ்கியாடும்வண்ணம் திருநோக்கம் வைத்தருளும்—அரு மணியே - அரிய மாணிக்கம்போல்பவரே. எ-று. ஆணவம் தீயாகக் கூறப்பட்டமைக்கேற்ப, போதம் தூமமாக உரைக்கப்பட்டது, தற்போதநிகழ்ச்சிக்கு மலம் காரணமென்பது சிவாகமநூற்றுணிபு. (௫௫)

மணிகண்டவாதிரை நாளானரன்கம்பவாணனென்கண்
மணிகண்டவாதினிதாள்வோன்றனைப்புத்தர்வாமிகளம
மணிகண்டவாதியைவென்றுண்மைதேர்மன்வியாகரணை
மணிகண்டவாதிவிபுதர்களுநாடொறும்வாழ்த்துமினே.

(இ - ள்.) மணி கண்ட ஆதிரை நாளான் - கரிய கண்டத்தையுடைய திருவாதிரைநக்ஷத்திரத்தினரும்—அரன் - பாசத்தை அரிப்பவரும்—கம்பவாணன் - திருவேகம்பத்தில் வாழ்பவரும்—என் கண் மணி - அடியேன் கண்மணியாயுள்ளவரும்,—கண் தவாது இனிது ஆள்வோன் தனை - அறிவுகெடாமல் இனிமையாக அடிமைகொள்பவருமாகிய சிவபிரானை,—புத்தர் வாமிகள் அமண் நிகண்டவாதியை வென்று - பௌத்தரும் சாக்தேயரும் சமணரும் நிகண்டவாதியருமாகிய சமயிகளை ஜயித்து—உண்மை தேர் மன் வியாகரணை மணி கண்ட ஆதி விபுதர்கள் - தத்துவப் பொருளை ஆராய்தற்குக் கருவியாகிய நிலைபெற்ற இலக்கணமாகிய இரத்தினத்தைக் கைக்கொண்ட தலைமையுள்ள அறிஞர்களே,—நாள்தொறும் வாழ்த்துமின் - நாடோறும் துதியுங்கள். எ-று. (௫௬)

வாராரிடைமருமான்றெழுமேகம்பமன்னிவளர்
வாராரிடைமருதூரார்தமதன்பர்மாருங்கொல்
வாராரிடைமருவிப்புகல்வேனிவ்வருத்தமந்தோ
வாராரிடைமருளப்பணைபூண்முலைமாதரசே.

(இ-ள்.) வாரார் - (விரைந்து) வரார்,—இடை மருமான் தொழ ஏகம்பம் மன்னி வளர்வார் - இடையர்குலத்திற் பிறந்த கண்ணன் வழிபடும்வண்ணம் திருவேகம்பத்திலே நிலைபெற்று ஓங்குபவரும்—ஆர் இடை மருதூரார் தமது அன்பர் - ஆத்திமாலையையணிந்த மத்தியார்ச்சுனருமாகிய சிவபிரானுடைய அடியாராகிய தலைவர்;—மாரரும் கொல்வார் - (ஆதலால்) மன்மதனும் கொல்வார்;—அந்தோ இவ்வருத்தம் ஆர் இடைமருவிப் புகல்வேன் - ஐயோ இத்துன்பத்தை யாவரிடத்தே சென்று சொல்வேன்!—இடை மருளப் பணை வார் ஆர் பூண் முலை மாதரசே - இடை தளரும் வண்ணம் பருத்த கச்சுப் பொருந்திய ஆபரணத்தினை அணிந்த தனங்களையுடைய மங்கையர்க்கரசே. எ-று. மங்கையர்க்கரசே தலைவர் விரைந்து வரார் ஆதலால் மன்மதனும் கொல்வார் யாவரிடத்தே சொல்வேனெனக் கூட்டுக. [தலைவனீடத் தலைவி வருந்தல்.] (ருo)

மாதேவனீசர்மொழியாற்சிறுதெய்வம்வந்தித்துவிம்
மாதேவனீசதுர்வேதங்கடாமன்னுதற்புருடன்
மாதேவனீசனெனவுரியானவனன்பர்கட
மாதேவனீசலியாதுசெய்யேகம்பவைப்பிற்சென்றே.

(இ-ள்.) மாதே - பெண்ணே,—நீசர் வல் மொழியால் சிறுதெய்வம் வந்தித்து விம்மாது - (புறச்சமயிகளாகிய) கீழ்மக்கள் வலிந்து கூறும் வசனத்தால் சிறிய தெய்வங்களை வணங்கி ஏங்காது,—ஏவன் நீ - யாவர் நீரென்றாராய்ச்சி செய்து—சதுர் வேதங்கள் தாம் - நான்கு வேதங்களும்—மன்னு தற்புருடன் மாதேவன் ஈசன் என உரியான் - நிலைபெற்ற தற்புருடரும் மகாதேவரும் ஈச்சுரருமென்று சொல்லுதற்குரியவராகிய—அவன் அன்பர்கள் தமாது ஏவல் - அச்சிவபிரானுடைய அடியார்களது ஏவற்றொண்டை—ஏகம்ப வைப்பில் சென்று நீ சலியாது செய் - திருவேகம்பமென்னும் எல்லையிற்போய் நீ சலனமின்றிப் புரிவாய். எ-று. ஈண்டுப் பெண்ணென்றது ஆன்மசிற்சத்தியை. (ருக)

வைப்பதுமத்தமுடிமீதுநாடகவர்க்கமெண்சு
வைப்பதுமத்தகமேலதுநாட்டமருவுகம்பம்
வைப்பதுமத்தமறுப்பதுபார்வையப்பாகன்வெண்பா
வைப்பதுமத்தனென்றுலென்னையோநங்கைமால்கொள்வதே.

(இ-ள்.) முடிமீது வைப்பது மத்தம் - சென்னியின்மேலே தரிப்பது ஊமத்தமலரே,—எண் சுவைப்பது நாடகவர்க்கம் - அஷ்டவித ரசமுள்ளதுநிருத்தத்தின் முறைமையே,—மத்தகம் மேலது நாட்டம்-நெற்றியின்மீதுள்ளது கண்ணே,—வைப்பது மருவு கம்பம் - வீற்றிருக்குந்தானமாயுள்ளது பொருந்திய திருவேகம்பமே,—மத்தம் அறுப்பது பார்வை - (தமதடியாருடைய) செருக்கைக் கெடுத்தருள்வது திருநோக்கமே,—அப்பாகன் வெண்பாவைப் பதுமத்தன் என்றால்- அந்தவைதிகரத சாரதி கலைமகள் கணவராகிய பிரமதேவரேயென்றால்—நங்கை மால் கொள்வது என்னையோ - இப்பெண் (அப்பெற்றியுள்ள திருவேகம்பநாதர்மீது) ஆசைகொண்டு மயங்குவது யாது காரணமோ. எ-று. [பாங்கி தலைவி குறிப்பறிதல்.] (ருஉ)

மாலையடியடிகேண்முனந்தேடவைத்தாய்சமனு
மாலையடியடியென்னுமற்காத்துவளந்தருபா
மாலையடியடிதோறுஞ்சுவைபெறப்பாடமையின்
மாலையடியடியோங்கட்கருள்கச்சிவாழ்கம்பனே.

(இ-ள்.) அடிகேள் - சுவாமிகாள்,—ஐ அடி முனம் மால் தேட வைத்தாய் - அழகிய பாதங்களை முற்காலத்தில் விஷ்ணுமூர்த்தி தேடும்வண்ணம் செய்தவரே,—சமன் நாம் ஆலை அடி அடி என்னுமல் காத்து - இயமன் அச்சம் பொருந்திய கரும்பாலையிலிட்டு அடி அடி யென்னுமற்றடுத்து—வளம் தரு பா மாலை அடி அடி தோறும் சுவை பெறப் பாட - மாட்சிமை பெற்ற பாமாலைகள் அடிகள்தோறும் சுவை பொருந்தும்படிப் பாடும்பொருட்டு—மை இல் மாலை அடி அடியோங்கட்கு அருள் - குற்றமில்லாத தன்மையை வழிவழியடியோங்கட்குத் தந்தருளும்,—கச்சி வாழ் கம்பனே - காஞ்சிநகரத்தில் வாழுந் திருவேகம்பநாதரே. எ-று. (ருங)

வாதங்கமண்டலநீரழலாய்க்கம்பமன்னிநின்ற
வாதங்கமண்டலம்பாயுறிபோய்வன்கழுப்பொருந்த
வாதங்கமண்டலத்தார்செய்யவென்றவர்வாழ்த்துமத்தா
வாதங்கமண்டலமூன்றுங்கடந்தென்மனத்தகத்தே.

(இ-ள்.) மண் தலம் நீர் அழல் வாதம் கம் ஆய்க் கம்பம் மன்னி நின்றவா - பிருதிவி அப்புத்தேயு வாயு ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்களுமாகித் திருவேகம்பத்தில் நிலைபெற்று வாழ்பவரே,—தம் கமண்ட

லம் பாய் உறி போய் வன்கழுப் பொருந்த - தங்களுடைய கரகமும் பாயும் தூக்கும் நீங்கி வலிய கழுமரத்திலே தூங்கும்வண்ணம்—அங்கு அமண் தலத்தார் வாது செய்ய வென்றவர் வாழ்த்தும் அத்தா— அம்மதுரைத்தலத்தே ஆருகதசமயக்கூட்டத்தினர் தருக்கம் புரிய (அவர்களை) வென்ற திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் துதிக்கும் பிதாவே,—மண்டலம் மூன்றும் கடந்து-(அங்கி பானு மதியாகிய) மண்டலங்கள் மூன்றனையும் பேதித்து—என் மனத்தகத்துத் தங்க வா— அடியேனது நெஞ்சத்தின்கண் இருக்கும்வண்ணம் வந்தருளும். எ-று. தூங்கும்வண்ணம் வென்றவென்க. (ருச)

அகத்தியனாரதன்பூவிற்குநாசியரிந்திடுசெய்
யகத்தியனாரதவத்தியென்றுதறுத்தான்முதலோ
ரகத்தியனாரதனாற்றொழுங்கம்பரறிவிற்செம்போ
தகத்தியனாரதமர்க்கொளித்தேமன்றிலாடுவரே.

(இ-ள்.) அகத்தியன் - அகத்தியமுனிவரும்—நாரதன் - நாரதமுனிவரும்,—பூவிற்கு நாசி அரிந்திடு செய்ய கத்தியன் -பூவின்பொருட்டு (க்கழற்சிங்கநாயனாரது தேவியாருடைய) மூக்கை அரிந்த செவ்விய கத்தியையுடைய செருத்துணைநாயனார்—அவ் அத்தி ஆரது என்று அறுத்தான் முதலோர் - (சிவகாமியாண்டாரது திருப்பூங்கூடையைப் பறித்து மலர்களைச் சிதறிய அந்தயானை யாவருடையதென்றாராயாது சேதித்த எறிபத்தநாயனார் முதலாகிய நாயன்மாரும் —அகத்து இயல் நார் அதனால் தொழும் கம்பர் - (தமது) உள்ளத்தமைந்த அன்பினால் வழிபடுந் திருவேகம்பநாதர்—அறிவில் அகத்திச் செம்போது அனார் அதமர்க்கு ஒளித்து மன்றில் ஆடுவர் - (பரிபக்குவருடைய) அறிவிலே செவ்வகத்தியின் சிவந்த மலர்போல விளங்குவாராகி அபரிபக்குவருக்கு மறைந்து கனகசபையிலே திருநிருத்தஞ்செய்தருளுவர். எ-று. (ருரு)

ஆடானையம்பலமேயானைக்கம்பனையன்பிலர்பா
லாடானையம்பலநீவானைக்கண்டனளாகிமங்கை
யாடானையம்பலகொண்டுசென்றாளங்ஙனேநெகிழ்ந்த
தாடானையம்பலந்தோவெங்குமாயதலர்த்திருவே.

(இ-ள்) ஆடானை அம்பலம் மேயானை - திருவாடானையிலும் சிதம்பரத்திலும் இருப்பவரும்—அன்பிலர்பால் ஆடானை - பத்தியில்லாரிடத்தே பொருந்ாதவரும்—அம் பலம் ஈவானை - அழகிய (முத்திப்) பயனைத் தந்தருள்பவருமாகிய—கம்பனை - திருவேகம்பநாதரை—கண்டனளாகி மங்கையாள் தான் பல ஐயம் கொண்டு சென்றாள்—(பவனிவருங்காலத்தே) தரிசித்தவளாகி இப்பேதையானவள் (அவ்விறைவர் கருணைசெய்வரோ செய்யாரோ என்று) நாறுவிதசந்தேகமெய்திப் போயினள்,—அங்ஙனே ஆள் தானை நெகிழ்ந்தது - அவ்விடத்தே கட்டிய ஆடையானது அவிழ்ந்தது,- அம்பல் அங்கோ எங்கும் ஆயது - (அப்பொழுதே) பழிமொழியும் ஐயோ எங்கும் பரந்தது,—அலர்த் திருவே - செந்தாமரைமலரிலிருக்கும் இலக்குமிபோல்பவளே. எ-று. [அலரறிவுறுத்தல்] (௫௬)

திருமேற்றளிவளர்கம்பன்பனியுந்திண்கோடையுங்கூ
திருமேற்றளியுடன்செய்தவத்தோர்க்கிறைசீரெழின்மு
திருமேற்றளிமுரல்கொன்றையன்றாள்சிந்தியார்சமன
திருமேற்றளிவிடவேறேதுறுதிதிருத்துவரே.

(இ-ள்.) திருமேற்றளி வளர் கம்பன் - திருமேற்றளியென்னுந் தலத்தில் வாழுந் திருவேகம்பநாதரும்—பனியும் திண் கோடையும் கூதிரும் ஏற்று அளியுடன் செய் தவத்தோர்க்கு இறை - பனியையும் முதுவேனிலின் வெப்பத்தையும் குளிரையும் பொறுத்து அன்போடு செய்யுந்தவத்தையுடைய முனிவர்களுக்குத் தலைவரும்—சீர் எழில் முதிரும் ஏற்றளி முரல் கொன்றையன் தாள் சிந்தியார் - சிறந்த அழகு முதிர்ந்த ஆண்வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றைமாலையை அணிந்தவருமாகிய சிவபிரானுடைய திருவடிகளைத் தியானியாதவர்—சமன் அதிருமேல் தளி விட வேறு ஏது உறுதி திருத்துவர் - இயமன் ஆரவாரித்து வந்தவிடத்து விலக்கும் வண்ணம் வேறே யாது நிச்சயத்தைக் கைக்கொள்வரோ! எ-று. இறுதியடியில் தள்ளிவிடவெனற்பாலது தளிவிடவென இடைக்குறைந்து நின்றது. (௫௭)

திருவோணகாந்தன்றளிவளரேகம்பன்சீர்க்கருக [ண்ட
திருவோணகாந்தன்றன்கோன்வரைப்பாற்சென்றியான்முன்க
திருவோணகாந்தனிபேசாமெனுந்திண்விரதத்தின்மு
திருவோணகாந்தம்பிறிகொன்றுவ்வாணலம்பிற்சிரியனே.

(இ - ள்.) திருவோணகாந்தன்றளி வளர் ஏகம்பன் சீர்க்கு அருக -திருவோணகாந்தன்றளியென்னுந் திருப்பதியில் வாழுந் திருவேகம்பநாதரது புகழைப் பாடுதற்குரிய பாங்கனே,—திருவோணகாந்தன் தன் கோன் வரைப்பால் சென்று - திருவோணநக்ஷத்திரற்குரிய விஷ்ணுமூர்த்திக்குத் தலைவராகிய அவ்விறைவரது மலையிடத்தை அடைந்து—யான் முன் கண்ட திருவோள் - நான் முன்பு கண்ட இலக்குமிபோன்ற தலைவியானவள்—நகாம் தனி பேசாம் எனும் திண் விரதத்தின முதிருவோள் - நகைக்கமாட்டேம் தனிமையாக வசனிக்கமாட்டோம் என்கிற வலிய நோன்பில் முறுகுபவள்,—நகாந்தம் பிறிதொன்று ஒவ்வாள் - (அன்றிச்சிரமுதல்) நகமிறுதியாக மற்றொன்றால் உவமிக்கப்படாள், [அவைகட்கு அவையே ஒப்பென்றபடி]—நண்பில் சீரியனே - சிநேகத்திற்சிறந்துள்ளோய். எ-று. [தலைவியியலிடம் பாங்கற்குணர்த்தல்.] (ருஅ)

அனேகதங்காவதமப்புகழுக்கம்பவறுத்தருள்வா
யனேகதங்காவதம்பற்பலவோடியலைந்துவறி
யனேகதங்காவதன்பால்வரைப்பாற்றவமாற்றிக்கச்சி
யனேகதங்காவதனேயலையாவகைநன்னெறியே.

(இ-ள்.) அனேக - உலகெலாமானவரே,—அதமப் புகழ் தங்காக் கம்ப - அதமமாகிய கீர்த்தி பொருந்தாத திருவேகம்பநாதரே,—அனே - மாதாவே,—கதம் பற்பல காவதம் ஓடி அலைந்து வறியன் ஏகு அதம் அறுத்து - வலிமையோடு பலபலகாதவழி விரைந்து சென்று திரிந்து வறியேன் செல்கின்ற அதத்தை நீக்கி—கா அதன்பால் வரைப் பால் தவம் ஆற்றி அலையாவகை நன்னெறி அருள்வாய் - சோலையின்கண்ணும் மலையின்கண்ணும் (வசித்துக், காமியதவங்களைச் செய்து அலையாவண்ணம் நன்மார்க்கமாகிய சிவஞானத்தைத் தந்தருளும்,—கச்சி அனேகதங்காவதனே - கச்சியனேகதங்காவதமென்னுந்தலத்தில் வாழ்பவரே. எ-று. நீக்கித் தந்தருளுமெனக் கூட்டுக. (ருகூ)

நெறிக்காரைக்காட்டுகுழலார்பின்சென்றுநிற்பீருயிர்போ
நெறிக்காரைக்காட்டுவிர்கம்பனுக்காலையினோர்ந்தநெறு
நெறிக்காரைக்காட்டுப்பள்ளிக்கோவுக்கன்புநிகழ்த்திக்கச்சி
நெறிக்காரைக்காட்டுச்செல்லீர்துணையாவருநீர்மையரே.

(இ-ள்.) நெறிக் காரைக் காட்டு குழலார் பின் சென்று நிற்பீர் - நெறிப்பையுடைய மேகத்தைப்போலும் அளகத்தையுடைய பெண்கள் பின்னே போய் நிற்கின்ற மூடர்களே,—உயிர் போம் நெறிக்கு ஆரைக் காட்டுவிர் - ஆன்மாச்சரீரத்தை விட்டுப்போம் மார்க்கத்தில் யாவரை இலக்காகக்காண்பிப்பீர்!—கம்பனுக்கு - (ஆதலால்) திருவேகம்பநாதரும்— ஆலையின் நேர்ந்த நெறுநெறு இக்கு ஆர் ஐக் காட்டுப் பள்ளிக் கோவுக்கு - ஆலையில் அகப்பட்ட நெறுநெறு என்னும் ஒலியுள்ள கரும்புகள் நிறைந்த அழகியதிருக்காட்டுப்பள்ளியென்னுந்தலத்தில் வாழும் இறைவருமாகிய சிவபிரானுக்கு—அன்பு நிகழ்த்திக் கச்சிநெறிக் காரைக்காட்டுத்துணையாச்செல்லீர் - பத்திசெய்து கச்சிநெறிக்காரைக்காட்டில் விரைந்து போய் வசியுங்கள்—அருநீர்மையரே - குணமில்லாதவர்களே. எ-று. (௯௰)

மையானப்பதிவளர்கச்சிப்பிரான்வருமேறெனுந்தன்
மையானப்பதியினையூர்ந்தருளேகம்பவாணனிள
மையானப்பதிநன்னிலாநீந்துவேணிமௌலியன்க
மையானபபதினைந்துமூவேழுநீக்குவரந்தருமே.

(இ-ள்.) மயானப்பதி வளர் கச்சிப் பிரான் - திருமயானமென்னுந் தலத்தில் வாழுங் காஞ்சிநாதரும்—வரும் தன்மை ஏறு எனும் யானப் பதியினை ஊர்ந்தருள் ஏகம்பவாணன் - வாராநின்ற தருமநந்தியென்னுந் தலைமையாகிய வாகனத்தை நடத்தியருளுந் திருவேகம்பவாணரும்—இளமையான் அப்பதி நல் நிலா நீந்து வேணி மௌலியன் - சிறுபருவத்தாற் கங்கையின்கண்ணே நல்ல பிறையானது நீந்தி விளையாடப்பெற்ற சடைமுடியையுடையவருமாகிய சிவபெருமான்—கமையான் அப்பதினைந்தும் மூவேழும் நீக்க வரம்தரும்—(தமதடிச் சார்ந்தார்க்குண்டாகிய) சாந்தம் பற்றி அம் முப்பத்தாறு தத்துவங்களையும் நேதிசெய்யும்படித் திருவருள்புரிவர். எ-று. முதலடி இரண்டாமடிகளில் மயானப்பதி தன்மயானப்பதி என்பன மையானப்பதி தன்மையானப்பதியெனப் போலியாய் வந்தன. தத்துவம் முப்பத்தாறுவன-ஆன்மதத்துவம் இருபத்துநான்கும், வித்தியாதத்துவமேழும், சிவதத்துவம் ஐந்துமென இவை. (௯௧)

தருமந்தரதமந்தேர்கல்விவேட்டுத்தரையினுருந்
தருமந்தரதமங்கெய்தரரெனுஞ்சொற்றனைக்கம்பம்வாழ்
தருமந்தரதமர்க்கெட்டார்வரைதனிற்கைபுயமாந்
தருமந்தரதமக்கூந்தற்குநீசென்றுசாற்றுகவே.

(இ-ள்.) தருமம் தர தமம் தேர் கல்வி வேட்டு - புண்ணியங்களி லே தாழ்ச்சி உயர்ச்சிகளை ஆராய்ச்சிசெய்தற்கருவியாகிய வித்தை யை விரும்பி—தரையின் உருத்து - பூமியிற்பிறந்தும்,—அருமந்த ரதம் அங்கு எய்தார் எனும் சொல்தனை- அருமருந்தன்ன (அக்கல்வி) இன்பத்தை அங்கே அடையாது தாழ்த்திருக்கின்றார்களென்று நீர் சொல்லும் வார்த்தையை—கம்பம் வாழ்தரும் மந்தர் அதமர்க்கு எட் டார் வரைதனில் - திருவேகம்பத்தில் வாழும் (பரிபக்குவராகிய உத் தமர்க்கேயன்றி மற்றை அபரிபக்குவராகிய) மத்திமர் அதமர்க்கு எட் டாத திருவேகம்பநாதரது மலையின்கண் (வசிக்கின்ற)—கைபுயம் ஆம் தரு மந்தர - கையும் புயமும் கற்பகதருவும் மந்தரகிரியும் போலப் பெற்ற தலைவரே,—தமக் கூந்தற்கு நீ சென்று சாற்றுக - இருள்போ ன்ற கேசத்தையுடைய தலைவிக்கு நீரே போய்ச் சொல்வீராக. எ-று. முதலடியில் உருத்துமென்னும் உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற் றொ க்கது. [கல்விமேற் பிரிவு நீயே கூறென்றல்.] (௬௨)

கவளக்கரியன்றுவென்றோன்பாற்சொன்னகட்டுரைக்காங்
கவளக்கரியன்றுகொல்லாமித்தெய்வங்களையிருளாங்
கவளக்கரியன்றுதந்தநஞ்சுண்டிருள்கண்டனொன்றா
கவளக்கரியன்றுறைசூழ்கம்பன்வரைக்காரிகையே.

(இ-ள்.) அன்று கவளக் கரி வென்றோர் - அந்நாளிலே கவளத்தை யுண்ணும் யானையை வென்ற தலைவரானவர்—அன்பால் சொன்ன கட்டுரைக்கு ஆங்க இத்தெய்வம் வளக்கரிஅன்று கொல் ஆம் - அன் போடு சொன்ன உறுதிமொழிக்கு இம்மலையின்கண் வாழுங்கடவுள் மாட்சிமை பொருந்திய சாட்சியன்றோ,—கனை இருள் ஆங்கு அவ் அளக்கர் இயன்று தந்த நஞ்சு உண்டு இருள் கண்டன் - செறிந்த இ ருள்போன்ற அந்தச்சமுத்திரமானது (அன்பம்) உற்றுக் கொடுத்த வி டத்தை அருந்திக் கறுத்த மிடற்றையுடையவரும்—ஒன்றாக அளக்க அரியன் - (மற்றைக்கடவுளரில்) ஒருவராக வைத்தெண்ணக்கூடாத மகாதேவருமாகிய—துறை சூழ் கம்பன் வரைக் காரிகையே - நீர்த் துறைகள் சூழுந் திருவேகம்பவாணரது மலையின்கண்வசிக்கின்ற பெ ண்ணே. எ-று. கவளம் வாயளவு கொண்டவுணவு. ஆங்க உரையசை. ஆம் அசை. [தலைவனீடத் தலைவி வருந்தல்.] (௬௩)

காரியங்காரணமாம்பஞ்சபூதக்கலப்பின்மயங்
காரியங்காரணங்கெய்தாவகையருள்காட்டுமவி
காரியங்காரணஞ்சூழ்கம்பனூரல்லுங்காய்பகலுங்
காரியங்காரணவோசையைக்காட்டுங்கலிக்கச்சியே.

(இ-ள்.) காரணம் காரியம் ஆம் பஞ்ச பூதக் கலப்பில் மயங்கார் இயங்கார் - சூக்கும தூலங்களாகிய இரு திறத்தைம்பூதப்புணர்ச்சியாலாய தேகாதிப் பிரபஞ்சத்தின் மயக்குற்றுச் சரியாத பெரியராயினோர்—அணங்கு எய்தாவகை அருள்காட்டும் அவிகாரி - (பிறவிக்கடலுளழுந்தி) வருத்தமடையாவண்ணம் (அவர்கட்குத்) திருவருளை விளக்கியருள்கின்ற நிருவிகாரியும்—அங்கு ஆரணம் சூழ் கம்பன் ஊர் - அங்கே வேதங்கள் (முழங்கிச்) சூழ்கின்ற திருவேகம்பநாதருமாகிய சிவபிரானுடைய தலமாவது—அல்லும் காய் பகலும் கார் இயம் கார் அணவு ஓசையைக் காட்டும் கலிக் கச்சியே - இரவினும் வெப்பம்பொருந்தியபகலினும் பெருமை பெற்ற வாத்தியங்கள் மேகங்களிடத்தே பொருந்திய முழக்கத்தைப்போலும் முழங்குதலையுடைய காஞ்சிநகரமே. எ-று. மயங்கார் முற்றெச்சம். (௭௩)

கச்சித்தெருவில்வந்தார்நெகிழ்த்தாரென்களபமுலைக்
கச்சித்தெருளினர்யாவரென்பேற்குக்கல்லாலமர்யோ
கச்சித்தெருதினையூருஞ்செயுங்கன்னல்கல்லிபந்துய்க்
கச்சித்தெருவையுறுஞ்சூலமேந்திடுங்காணென்பரே.

(இ-ள்.) கச்சித் தெருவில் வந்தார் - காஞ்சிநகரத்தினது திருவீதியிலே பவனிவந்தவரும்—என் களப முலைக்கச்சு நெகிழ்த்தார் - என்னுடைய சாந்தணிந்த தனங்களின்கண்ணதாகிய கச்சை அவிழ்த்தவருமாகிய—இத்தெருளினர் யாவர் என்பேற்கு - இந்தத்தெளிவினையுடையார் எப்பெற்றியரென்று வினவிய எனக்கு,—கல்லால் யோகம் அமர் சித்து - கல்லாலநீழலிலே நிட்டையிலிருந்தருளிய இந்தச்சித்தானது—எருதினை ஊரும் - இடபத்தை நடத்தும்—கல் இபம் கன்னல் துய்க்கச் சித்துச் செயும் - கல்லானையானது கரும்பினை அருந்தும்வண்ணம் சித்தைச் செய்யும்—எருவை உறும் சூலம் ஏந்திடும் காண் என்பர் - இரத்தம் பொருந்திய சூலாயுதத்தைத் தரிக்கும் என்று சொல்லுவர். எ-று. காண் அசை. [திருவேகம்பநாதர் பவனிவருதலைத் தரிசித்து மால் கொண்டு நிறையழிந்த மாது சொல்லியது.] ()

பராரைவரைவரைபோல்வளைக்குங்கம்பரைத்திருவம்
பராரைவரைவரையோவறியார்பன்னெடுங்கணக்கும்
பராரைவரைவரையத்தெரியார்படித்தோரிற்செம்மாப்
பராரைவரைவரையிட்டொழிப்பாரவ்விதண்டையர்க்கே.

(இ-ள்.) பராரை வரை வரைபோல் வளைக்கும் கம்பரை - பரிய அரையினையுடைய மேருமலையை மூங்கில்போல வில்லாக வளைத்த திருவேகம்பநாதரும்—திரு அம்பராரை - திருவம்பரென்னுந் தலத்தையுடையவருமாகிய கடவுளை—வரைவர் ஐயோ அறியார் - (இவ்வடிவினரென்று யாவர்) எழுதுவர் ஐயையோ (ஒருவரும்) உணரார்,—(இங்ஙனமாகவும்)—பன் நெடுங் கணக்கு உம்பர் ஆர் ஐவரை வரையத் தெரியார் - (சிறுவர்கள்) ஓதும் நெடுங்கணக்கின்மேலே பொருந்திய (அகாரமுதல்) ஐகாரம் இறுதியாக எழுத அறியாத மூடர்கள்—படித்தோரின் செம்மாப்பர் - (உருவம் அருவம் உபயமாகிய வடிவங்களைக் கடந்துள்ள அவ்விறைவரையும் வரையக்) கற்றவர்போல் இறுமாந்திருப்பர்;—அவ்விதண்டையர்க்கு ஐவரை வரையிட்டொழிப்பார் ஆர் - அந்தவிதண்டாவாதிகட்குப் பஞ்சப்பொறிகளையும் களைந்தொழித்து உண்மையுணர்த்த வல்லவர் யாவர். எ-று. விதண்டை-தங்கோட்பாட்டைநிலைநிறுத்தாதகதை (௬௬)

தண்டகநாடகமாடுமெந்தாய்தண்குறங்கரம்பைத்
தண்டகநாடகலல்குல்பங்காபொற்றடவரைக்கோ
தண்டகநாடகராதிமண்காற்றங்கிதண்புனலாந்
தண்டகநாடகம்வாழ்கம்பனேநின்சரண்சரணே.

(இ-ள்.) தண்டக நாடகம் ஆடும் எந்தாய் - தண்டகமென்னும் தாண்டவத்தைச் செய்தருளும் எமது பிதாவே,—தண் அரம்பைத் தண்டு குறங்கு அகல் அல்குல் அகம் நாடு பங்கா - குளிர்ச்சி பொருந்திய வாழைத்தண்டுபோன்ற தொடையையும் விசாலமாகிய அல்குலையும் உடைய உமாதேவியார் திருவுளம் விரும்பப்பெற்ற பாதித்திருமேனியை யுடையவரே,—பொன் தட வரைக் கோதண்ட - பொன்மயமாயுள்ள பெரிய மேருகிரியாகிய வில்லையுடையவரே,—நாள் தகர் ஆதி மண் தண் புனல் அங்கி காற்று கம் ஆம் - நக்ஷத்திரங்களும் மேடமுதலிய இராசிகளும் பிருதிவியும் குளிர்ந்த அப்புவும் தேயுவும் வாயுவும் ஆகாசமுமாகிய—தண்டக நாடகம் வாழ் கம்பனே—ஆதொண்டநாட்டின்கண் வாழுந் திருவேகம்பநாதரே,—நின்சரணே சரண் - உம்முடைய பாதங்களே(அடியேற்குப்) புகலிடமாகும்.எ-று.

சரமைந்தனங்கனொருங்கேவுமுன்கொன்றைதந்திருட்குஞ்
சரமைந்தனங்கண் மெலியச்செய்யார்பொய்மைசாற்றுபரா
சரமைந்தனங்கணபோற்றியென்றேத்தக்கைதந்தருளீ
சரமைந்தனங்கண்மகிழ்கம்பைசூழ்கம்பஞ்சார்ந்தவரே.

(இ-ள்.) அனங்கன் ஐந்து சரம் ஒருங்கு ஏவுமுன் கொன்றை தந்து - மன்மதனானவன் பஞ்சபாணங்களையும் ஒருசேரப் பிரயோகிக்கு முன்னரே கொன்றைமாலை தந்தருளி,—அல் இருள் குஞ்சரம் ஐந்து நங்கண் மெலியச் செய்யார் - இராக்காலத்தே அந்தகாரமாகிய யானையின் வலிமையை நம்மிடத்தே இளைக்கும்வண்ணம் புரியார்,—பொய்மை சாற்று பராசரமைந்தன் அங்கண போற்றி என்று ஏத்தக் கைதந்தருள் ஈசர் - (விஷ்ணுவே பரமென்று) அசத்தியங்கூறிய வியாசமுநிவர் அருட்கண்ணரே இரக்ஷிப்பீராக என்று துதித்தமையால் (தம்பித்த) கரத்தைக் கொடுத்தருளிய இறைவரும்,—அனங்கள் அமைந்து மகிழ் கம்பை சூழ் கம்பம் சார்ந்தவர் - அன்னங்கள் செறிவுற்று இன்பமெய்தப்பெற்ற கம்பாநதி சூழ்ந்த திருவேகம்பத்தில் வாழ்பவருமாகிய சிவபெருமான். எ-று. [மாலை விருப்புரைத்தல்.) (௬௮)

தவந்தானங்காலந்தொறுமறவார்தங்குகச்சியினெய்
தவந்தானங்காலன்றிறல்வாட்டுகம்பன்றன்வெற்பினர்கை
தவந்தானங்காலந்தருமென்செய்கேன்சந்தக்குன்றினும்வந்
தவந்தானங்காலன்பிலாமதன்றானும்வருத்துவனே.

(இ-ள்.) தவம் தானம் காலம் தொறும் மறவார் தங்கு கச்சியின்—தவத்தையும் தானத்தையும் காலந்தோறும் மறவாதவர்கள் வசிக்குங் காஞ்சீபுரத்தில்—எய்த வந்தான் அம் காலன் திறல் வாட்டு கம்பன்றன் வெற்பினர் - அணுக வந்தவழி மேகம்போலும் நிறத்தையுடைய இயமனது வலிமையைக் கெடுத்தருளும் திருவேகம்பநாதரது மலையின் வாழுந்தலைவருடைய—கைதவந்தான் அங்கு ஆலம் தரும் என் செய்கேன் - வஞ்சகமானது (கடலாகிய) அவ்விடத்து(ப்பிறந்த) விடம்போலும் (துக்கத்தைக்) கொடுக்கும் (ஆதலால்யான்) யாது செய்வேன்!—(இஃதன்றி)—சந்தக்குன்றினும் வந்த வந்தால் நங்கால் அன்பு இலா மதன்றானும் வருத்துவன் - பொதியமலையினின்றும் வந்த தென்றற்காற்றினால் நம்மிடத்து இரக்கமில்லாத மன்மதனும் துன்பஞ்செய்வன். எ-று. [தலைவனீடத் தலைவி வருந்தல்.] (௬௯)

வரகந்தமாதனவாழ்வோருணற்குமற்றின்பம்விற்ப
வரகந்தமாதனமாயதென்னேகம்பர்மைந்தமெய்த்த
வரகந்தமாதனவள்ளிகொண்காவென்றுவாழ்த்தவருள்
வரகந்தமாதனவெற்பாளர்போலுநம்மன்னவர்க்கே.

(இ-ள்.) தன வாழ்வோர் உணற்கு வரகு அந்தமா - பொருட்செல்வராயினோர் புசித்தற்கு வரகின் அமுது அழகிதாமா(அதுபோல)—மற்று இன்பம் விற்பவர் அகம் தம் ஆதனம் ஆயது என்னே - சுகத்தை விற்கும் பரத்தையர் வீடு தம்முடைய ஆசனமாகியது என்னே!—கம்பர் மைந்த-திருவேகம்பநாதர்புதல்வரே,—மெய்த்த வர-உண்மையாகிய மேம்பாட்டையுடையவரே,—கந்தம் மா தன வள்ளிகொண்கா - மணந் தங்கிய பெரிய தனங்களையுடைய வள்ளி நாயகி கணவரே,—என்று வாழ்த்த அருள் வரம் - என்று (அடியார்) துதிக்கக் கருணைசெய்யாநின்ற வரத்தையுடைய—கந்தமாதன வெற்பாளர் போலும் நம் மன்னவர்க்கு - கந்தமாதனகிரியில் வாழ்கின்ற முருகக்கடவுள்போன்ற நமது தலைவருக்கு. எ-று. தலைவருக்கு ஆசனமாகியது என்னையெனக் கூட்டுக. மற்று அசை. அழகு கல்வி அறிவு முதலியவற்றாற் சிறந்த தலைவரென்பாள் கந்தமாதன வெற்பாளர்போலு நம்மன்னவரென்றாள். [பரத்தையிற் பிரிந்த தலைவனிடத் தலைவி வருந்தல்.] (௭0)

மன்றுதபோதனர்வாழ்கம்பவாணகின்வான்கருணை
மன்றுதபோதனகாடுகலேதென்முன்வந்துதரு
மன்றுதபோதனதாநரகாரவருந்துகென்று
மன்றுதபோதனரியறியாதமெய்வாழ்வருளே.

(இ-ள்.) மன்று - (எவ்வகைப்பொருட்கும்) இறைவரே,—தபோதனர் வாழ் கம்பவாண - முனிவரர் வசிக்கும் (காஞ்சிபுரத்துள்ள)திருவேகம்பத்தில் வாழ்பவரே,—அனகா - மலரகிதரே,—நின் வான் கருணை மன்றுத போது புகல் ஏது - உமது பேரருள் பதியாத காலத்தே பற்றுக்கோடு யாது!—என் முன் தருமன் வந்து ஆத போது அனது ஆம் நரகு ஆர வருந்துக என்றுமல் - அடியேனுக்கு முன்னே இயமன் வந்து அறிவில்லாதவனே வருவாயாக அத்தன்மைத்தாகிய நிரயத்திலே மிகத் துன்பப்படுவாயாக என்று சொல்லாவண்ணம்,—நாத - (ஆத்தும) நாயகரே,—போதன் அரி

அறியாத மெய் வாழ்வு அருள் - பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் உணராத உண்மைவாழ்வைத் தந்தருளும். எ-று. மலரகிநரே யெ ன்பதன்பின்னர் ஆத்துமநாயகரேயெனக் கூறிக்கொள்க. (௭௧)

வாவிக்கமலத்தடவாளைமாங்கனிவாய்கிழித்து
வாவிக்கமலச்சுரைதேக்கிநீந்தும்வணகச்சிக்கம்பா
வாவிக்கமலக்குநாச்செற்றுக்காலன்வந்தெய்துமுன்ன
வாவிக்கமலத்துணைத்தாடந்தாட்கொளவல்விரைந்தே.

(இ-ள்.) வாவிக் கமலத் தட வாளை - தடாகநீரிலே வாழும் பெரிய வாளை மீன்களானவை—மாங்கனி வாய் வாவிக் கிழித்துக் கமலச் சுரை தேக்கி நீந்தும் வண் கச்சிக் கம்பா - மாங்கனிகளி டத்தே பாய்ந்து (அவற்றைப்) பிளவுசெய்து (மீண்டு) தாமரைமல ரிலே (தங்கிய) தேனை நிறையவுண்டு நீந்துகின்ற மாட்சிமைபெற் ற காஞ்சீபுரத்தில் வாழுந்திருவேகம்பநாதரே,—வா - வந்தருளும்,— மலக்கு நாச்செற்று விக்கக் காலன் வந்துஎய்துமுன் - (பசைத்தை) ம யக்கி (உரையாடாவண்ணம்) நாவையடக்கி விக்குதலுண்டாய் (கால ன் வந்தடையுமுன்னரே,—அவாவிக் கு அமலத் துணைத்தாள் தந்து ஆட்கொள வல் விரைந்து - (திருவுளம்) விரும்பி (இப்) பூமியின்கண் ணே (உம்முடைய) நிருமலமாகிய உபயபாதங்களையும் தந்து அடிமை கொள்ளும்வண்ணம் பெரிதும்விரைவாக. எ-று. விரைவாக என்பத ன்பின்னர் வந்தருளுமென்னும் பயனிலையைக் கூறிக்கொள்க. (௭௨)

வல்லியங்கோட்டுமலைதிரிகானிருள்வாய்வருவான்
வல்லியங்கோட்டுவில்லார்மொழிவார்மலையீன்றமுலை
வல்லியங்கோட்டுநன்னீர்க்கம்பைவாய்த்தழுவக்குழைந்தார்
வல்லியங்கோட்டுடனூர்த்தெழுமேகம்பம்வாழ்வரைக்கே.

(இ-ள்.) வல்லியம் கோட்டு மலை திரி கான் இருள் வாய் வருவா ன் - புலிகளும் யானைகளும் சரிக்கின்ற வனத்தின்கண்ணே இராக்கா லத்திலே (தாம்) வரும்பொருட்டு—வல்லி - பெண்ணே—அம் கோட் டு வில்லார் மொழிவார் - அழகிய வளைந்த வில்லையுடைய தலைவர் சொல்லுவர்,—மலை ஈன்ற முலை வல்லி அங்கு ஓட்டு நல் நீர்க் கம்பை வாய் தழுவக் குழைந்தார் - இமையகிரி பெற்ற தனங்களாகிய குதா டுகருவிகளையுடைய உமாதேவியார் அங்கே ஓட்டம் பொருந்திய நறு

நீரையுடைய கம்பாநதிக்கண்ணே தழுவக் குழைந்த திருமேனியையு டைய திருவேகம்பநாதரது—வல் இயம் கோட்டுடன் ஆர்த்து எழும் ஏகம்பம் வாழ் வரைக்கு - வலிய வாத்தியங்கள் ஊதுகொம்போடு முழங்கிக் கிளர்கின்ற திருவேகம்பமென்னும் ஆலயம் தங்குதற்கிட மாகிய (காஞ்சிநகரத்தைச் சார்ந்த) மலையிடத்தில். எ-று. மலையிடத்தி ல் வனத்தின்கண்ணே வரும்பொருட்டுப் பெண்ணே தலைவர் சொல் லுவரெனக் கூட்டுக. வரைக்கு வேற்றுமைமயக்கம். [இரவரவுரை த்தல்.] (எ௩)

வரையும்வரையுமுள்வாடாதிருந்ததடியவர்யா
வரையும்வரையுமவ்வேட்டன்பர்பார்த்திவனாரிவனை
வரையும்வரையுமென்றதெனைச்சேர்த்துவரையுங்கம்பர்
வரையும்வரையுந்திடமுமுள்ளார்தந்தமாந்தழையே.

(இ-ள்.) வரையும் வரையும் உள் வாடாதிருந்தது - மணம் புண ர்த்துங்காறும் உள்ளீரம் உலர்ந்து புலராதிருந்தது,—அடியவர் யாவ ரையும் அவ் ஏட்டு அன்பர்பார்த்து - தொண்டரெல்லாரையும் எழு தும் அந்தவேக்க பத்தர் நோக்கி—இவன் ஆர் இவனை வரையும் வ ரையும் என்றது எனைச் சேர்த்து வரையும் கம்பர் - இவன் யாவன் இவனைத் தள்ளுந்தள்ளுமென்று சொல்லாது அடியேனையும் கூட்டி எழுதுவிக்கும் திருவேகம்பநாதரது—வரையும் வரை உந்து இடமு ம் உள்ளார் தந்தமாந்தழை - மலையினும் மூங்கில் செறிந்தவிடத்தினு ம் வாழும் தலைவர் நல்கிய மாந்தளிரானது. எ - று. மாந்தளிரானது புலராதிருந்ததெனக் கூட்டுக. மூன்றாமடியிறுதியில் வரைவிக்குமெ னற்பாலது வரையுமென விவ்விகுதி தொக்குநின்றது. [தழைநயப் புரைத்தல்.] (எச)

மாந்தருமங்கலவாவிடமாந்தியவ்வானவரு
மாந்தருமங்கலரிட்டேத்தவாழ்கம்பவாணனொற்றை
மாந்தருமங்கலவைப்பாக்கொண்டானடிவாழ்த்துபுவிம்
மாந்தருமங்கலமாகக்கொள்ளாம்வம்பின்மாழ்குதுமே.

(இ-ள்) மாந்த அரும் அம் கலவா விடம் மாந்தி -(பிறதேவரால்) அருந்துதற்கரிய அழகு பொருந்தாத நஞ்சை யுண்டு—அவ்வானவரு ம் மாந்தரும் அலர் இட்டு ஏத்த அங்கு வாழ் கம்பவாணன் - அந்தத் தேவரும் மானுடரும் மலர்களை அருச்சித்துத் துதிக்கும்படி (காஞ்சிபு

ரமாகிய) அவ்விடத்தே வீற்றிருக்கின்ற திருவேகம்பவாணரும்—ஒற் றை மாந்தரு மங்கலவைப்பாக் கொண்டான் - ஒன்றான (அம்) மாம ரத்தடியை இன்பத்தானமாகக் கொண்டருளியவருமாகிய சிவபிரா னது—அடி வாழ்த்துபு விம்மாம் - பாதங்களைப் புகழ்ந்து மகிழமாட் டேம்,—தருமம் கலமாகக் கொள்ளாம் - சிவபுண்ணியங்களை ஆபர ணமாகக் கைக்கொள்ளமாட்டேம்,—வம்பில் மாழ்குதும் - வீணாக மயங்குகின்றோம். எ-று. (எரு)

மாவலியேவலையாப்பகைமீன்களைமாட்டிமண்மேன்
மாவலியேவலைமாற்றினன்றாழ்கம்பமஞ்சுளரோ
மாவலியேவலைநோக்கிபங்காமகன்பெண்ணெனுநா
மாவலியேவலையேகொடியேன்வினைமாய்த்திடவே.

(இ-ள்) மா வலியே வலையாப் பகை மீன்களை மாட்டி - மிகுந்த பலத்தையே கண்ணியாகக்கொண்டு பகைவராகிய மச்சங்களை அகப்ப டுத்தி (வென்று)—மண்மேல் மாவலி ஏவலை மாற்றினன் தாழ் கம்ப —இப்பூமிக்கண்ணே மகாபலிச்சக்கிரவர்த்தியின் ஆணையைக் கெடுத் த விஷ்ணுமூர்த்தி வணங்குகின்ற திருவேகம்பநாதரே,—மஞ்சுளரோ ம ஆவலி ஏ அலை நோக்கி பங்கா - அழகிய மயிரொழுங்கினையும் அம் பினை வருத்துகின்ற கண்களையுமுடைய உமாதேவியாரை (வாம) பாகத்திலுடையவரே,—மகன் பெண் அலியே எனும் நாமா - ஆண் பெண் அலி என்னும் பெயர்களையுடையவரே,—கொடியேன் வினை மாய்த்திட வலை - (நீரே) கொடியேனுடைய கன்மங்களைப் போக் கியருளவல்லீர். எ-று. (எசு)

வேதனைவாய்ப்பணிவுற்றவமேமெலிவேனுமுற
வேதனைவாய்ப்பணியார்கம்பத்தேவெளிநின்றுவிண்டு
வேதனைவாய்ப்பணிசெய்துமெட்டாதெங்குமேவுசம
வேதனைவாய்ப்பணியான்றடுத்தாண்டனன்மேதகவே.

(இ-ள்.) வேதனைவாய்ப் பணிவு உற்று அவமே மெலிவேனும் உற ஏ - துக்கத்தின் மூழ்கி வாளா (மனம்) தளர்கின்ற அடியே னும் (திருவருள்) பெறும்வண்ணம்—தனை வாய்ப்ப அணியார் கம்ப த்தே வெளி நின்று - தந்திருவடியை நேர்பட அணுகிய பரிபக்குவ ர் (சூழப்பெற்ற காஞ்சீபுரத்துள்ள) திருவேகம்பத்திலே வெளிப்பட் டு நின்று,—விண்டு வேதன் வாய்ப் பணிசெய்தும் எட்டாது -

விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் (மனம்) உருகித் தொண்டுசெய ப்பெற்றும் நேர்படாது—எங்கும் மேவு சமவேதன் - எவ்விடத்தும் நிறைந்த சமவேதசத்தியையுடையவரும்—ஐவாய்ப் பணியான் - பஞ்சசிரசுகளைப்பொருந்திய சர்ப்பாபரணருமாகிய திருவேகம்பநாதர்—தடுத்து மே தக ஆண்டனன்- (விடயத்திற்செல்லவொட்டாது) மீட்டு மாட்சிமை பெற அடிமை கொண்டருளினர். எ-று. திருவேகம்பநாதர் அடியேனும் திருவருள் பெறும்வண்ணம் வெளிப்பட்டு நின்று அடிமை கொண்டருளினரெனக் கூட்டுக. இரண்டாமடியில் ஏ அசை. சமவேதம் விட்டுநீங்காமை. (எஎ)

தகரங்கந்திக்குங்குழலாயினியுயிர்தாங்கெனுஞ்சொற்
றகரங்கந்திக்குமருள்வாரலர்தபனன்றனைச்சேர்ந்
தகரங்கந்திக்குமுகனைக்கொய்கம்பர்தடவரைப்போ
தகரங்கந்திக்குமரம்போற்கொல்யானைத்தனிமன்னரே.

(இ-ள்.) தகரம் கந்திக்கும் குழலாய் - மயிர்ச்சாந்து கமழ்கின்ற அளகத்தையுடைய மாதே,—அங்கு அந்திக்கும் அருள்வார் அலர் இனி உயிர் தாங்கு எனும் சொல் தகர் - அவ்விடத்தினின்றும் (வந்து) மாலைக்காலத்தினும் கருணைசெய்வாரல்லர் (ஆதலால்) இனி ஆவியைப் பாதுகாப்பாயாக என்று (நீ) கூறும் கூற்றை விட்டொழி,—தபனன் றனைச் சேர்ந்த கரம் திக்கு முகனைக் கம்கொய்கம்பர் - அக்கினிதேவனைச் சிவந்த கையையும் நான்முகக்கடவுளைச்சிரத்தையும் அறுத்தருளிய திருவேகம்பநாதரது—தட வரைப் போதகர் அம் கந்து இக்கு மரம் போல் கொல் யானைத் தனி மன்னர்- பெரிய மலையிடத்து வசித்துப் பிறர்க்கு உணர்த்துதலின் வல்லராகிய அழகிய கட்டுத்தறியைக் கரும்புபோலக் கொல்கின்ற யானைகளையுடைய ஒப்பற்றதலைவரானவர். எ-று. மாதே தலைவரானவர்கருணைசெய்வாரல்லர் ஆதலால் நீ கூறும் கூற்றை விட்டொழியெனக் கூட்டுக. இரண்டாமடியில் அந்திக்கும் வேற்றுமைமயக்கம். [மாலையம்பொழுது கண்டிரங்கல்.]

(எஅ)

தனித்தனமேயன்பர்க்காகின்றோன்றமிழ்க்கச்சிக்கம்பத்
தனித்தனமேயன்பராசத்திபூசனைகொண்டபுனி
தனித்தனமேயபசப்பொழியான்மற்றோர்சார்புமில்லேந்
தனித்தனமேயனமேயினியேதுய்யத்தக்கதுவே.

(இ-ள்.) அன்பர்க்குத் தனித் தனமே ஆகி நின்றோன் - பத்தர்க ளுக்கு ஒப்பற்ற நிதியமேயாய் நின்றவரும்—தமிழ்க் கச்சிக்கம்பத்தன் —தமிழையுடைய காஞ்சிநகரத்துள்ள திருவேகம்பநாதரும்—நித்த ன் - என்றும் உள்ளவரும்—அமேயன் - பிரமாணாதீதரும்—பராசத் தி பூசனை கொண்ட புனிதன் - காமாக்ஷியம்மையுடைய ஆராதனை யை ஏற்றருளிய சுத்தருமாகிய சிவபிரான்,—இத்தனம் மேய பசப்பு ஒழியான் - இந்தமுலைகளிலே தங்கிய பசலையைப் போக்கியருளார்,- மற்று ஓர் சார்பும் இல்லேம் தனித்தனமே - (ஆதலால்) பிறிதொரு ப ற்றுக்கோடுமில்லாதவர்களாய்த் தனிமையானோமன்றே,—அனமே இ னி உய்யத்தக்கது ஏது - அன்னம்போலும் நடையினையுடைய பெண் ணே மேற் பிழைக்கும்வண்ணம் யாதோ! எ-று. பாங்கி கூறுமாயா ளவென்பது எஞ்சி நின்றது. [தலைவனிடத் தலைவி வருந்தல்.] (௭௯)

வேதாகமங்கலைகற்றதனான் முத்திவேட்பதறி
வேதாகமங்கலைநீர்போக்குமேவியன்பத்திவிளை
வேதாகமங்கலைமாமதிவேய்ந்தவெண்ணீற்றொளிச்சு
வேதாகமங்கலையாத்திசைகொண்டமெய்யேகம்பனே.

(இ-ள்.) வேதாகமம் கலை கற்றதனால் முத்தி வேட்பது அறிவே- (அநுபவஞானத்தாலன்றி) வேதாகமங்களைப்படித்ததனால் மோக்ஷத் தை (அடைய) விரும்புதல் விவேகமாமா!—ஆகம் அங்கு அலை நீர் போக்குமே - தாகத்தை (நறுநீரேயன்றி) அவ்விடத்துள்ள உவரிநீர் ஒ ழிக்குமா!—வியன்பத்தி விளைவே தா - (ஆதலால்) பரபத்தியையும்(அ தன்) முதிர்ச்சியாகிய பரஞானத்தையுமே தந்தருளும்,—கம் அம் க லை மா மதி வேய்ந்த வெள் நீற்றொளிச் சுவேதா - சிரத்தையும் கங் கையையும் கலையும் பெருமையும் பொருந்திய பிறையையும் அணிந் த வெண்மையாகிய விபூதிப்பிரகாசத்தையுடைய தவளவண்ணனே,- திசை கமம் கலையாக் கொண்ட மெய் ஏகம்பனே - திக்குகளை நிறைந் த ஆடையாகப் புனைந்தருளிய தத்துவப்பொருளாயுள்ள திருவேகம் பநாதரே. எ-று. திருவேகம்பநாதரே தந்தருளுமெனக் கூட்டுக. (௮௰)

ஏகம்பத்தானையரிதிசையூர்புகழேறுகச்சி
யேகம்பத்தானையுரிபோர்வைவாழிடஞ்சூதமதா
மேகம்பத்தானையுகைத்தடியார்க்கெளிவந்தருளு
மேகம்பத்தானையரிக்கண்ணிபாகனுக்கென்பர்களே.

(இ-ள்.) ஏகு அம்பு அத்தானே அரி திசை - (பகைவர்மேற்) செல்லும் பாணமும் அந்தவஸ்திரமும் விஷ்ணுமூர்த்தியும் திக்குகளுமே,—ஊர் புகழ் ஏறு கச்சியே - நகரம் கீர்த்தி மிகுந்த காஞ்சிபுரமே,—போர்வை கம்பத்து ஆனை உரி - மேற்போர்வை தறியிற் கட்டப்படும் யானையினது தோலே,—வாழ் இடம் சூதமது ஆம் ஏகம்பத்து - வீற்றிருக்குந் தானம் மாமரத்தடியிலுள்ள திருவேகம்பத்ததாகிய தலமே,—ஆனை உகைத்து அடியார்க்கு எளிவந்து ஏகம் பத்தான் அருளும்- இடபத்தை நடாத்தி அன்பர்களுக்குஎளிதிற்போந்து ஒன்றாகிய ஞானபாதத்தைத் தசகாரியத்தால் உபதேசித்தருளுகின்ற—ஐஅரிக்கண்ணி பாகனுக்கு என்பர்கள் - அழகிய வரிபொருந்திய கண்களையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலிருத்திய சிவபெருமானுக் கென்று (பெரியோர்) சொல்லுவர். எ-று. இறுதியடியில் ஏகம் பத்தான் அருளுமென்பதற்கு ஈண்டுக் கூறிய பொருளே பொருளென்பது "ஞானபாதத்தை யீரைந்தா நண்ணு காரியத்தா லெனக்குபதேச நல்கும்" என ஆன்றோர் கூறிய திருவாக்கானுணர்க. (அகூ)

பரம்பரமானந்தவாதவர்சூழ்கம்பனேயிம்பரும்
பரம்பரமானந்தமாநிறைந்தோய்பசுஞ்சாபக்கரும்
பரம்பரமானந்தமொத்தகண்ணார்திறம்பாறவெங்கும்
பரம்பரமானந்தமுத்திதந்தாண்டருள்பாலிப்பையே.

(இ-ள்.) பரம் பர - முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே,—மானம் தவாதவர் சூழ் கம்பனே - மாட்சிமை நீங்காத மகத்துக்கள் சூழ்கின்ற திருவேகம்பநாதரே,—இம்பர் உம்பர் அம் பரமானந்த மா நிறைந்தோய் - கீழினும் மேலினும் அழகிய பரமசுகவடிவாக வியாபித்தவரே,—பசும் சாபக் கரும்பர் அம்பு அரம் மான் ஒத்த அந்தக் கண்ணார் திறம் பாற - பசிய வில்லாகிய கரும்பையுடைய மன்மதனுரும் பாணத்தையும் அரத்தையும் மானேக்கத்தையும் போன்ற அழகிய கண்களையுடைய பெண்களுமாகிய (இருதிறத்தாருஞ்செய்கின்ற மயக்க) வலிமை கெடவும்,—எங்கும் பரம்பு அர - எவ்விடத்தும் நிறைந்த (ஆன்மாக்களது பாசத்தை) அரிக்கின்றவரே,- மால் நந்த முத்தி தந்து ஆண்டு அருள் பாலிப்பை - (ஆணவமல) மயக்கம்கெடவும் வீடுபேற்றை உதவி (அடியேனை) அடிமைகொண்டு கருணை புரிவீராக. எ-று. வியாபித்தவரே யென்பதன்பின்னர் அரிக்கின்றவரேயெனக் கூறிக்கொள்க. (அ௰)

பாலனஞ்செய்துதவார்கொன்றைமாலைதண்பாசடைமேற்,
பாலனஞ்செய்துறுதென்கச்சியேகம்பர்பானுவுமேற், பாலனஞ்
செய்துதல்போலெய்துமாலையின் பைந்துளவோன், பாலனஞ்
செய்துகொல்வானென்றென்றேங்குமென்பான்மொழியே.

(இ-ள்.) பாலனம் செய்து கொன்றை மாலை உதவார் - காத்தற்றொழில் புரிந்து கொன்றைமாலையைத் தந்தருளார்,—தண் பாசடைமேல் பால் அனம் செய் துறு தென் கச்சி ஏகம்பர் - குளிர்ந்த பசிய இலைகளின்மீது வெண்ணிறத்தையுடைய அன்னங்கள் கழனிகடோறும் நெருங்குகின்ற அழகிய காஞ்சிநகரத்தில் வாழும் திருவேகம்பநாதர்,—பானுவும் மேற்பாலன் - (ஆதலால்) சூரியனும் மேற்குத்திக்கை அடைந்தான்,—நஞ்சு எய்துதல் போல் எய்தும் மாலையின் - ஆலாகலம் வருதல் போன்று வாராநின்ற அந்திக்காலத்தே—பைந்துளவோன் பாலன் அஞ்சு எய்து கொல்வான் என்று என்று என் பால் மொழி எங்கும் - பசிய துளசிமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தியின் புதல்வனாகிய மன்மதன் பஞ்சபாணங்களையும் பிரயோகித்துக் கொல்வானென்று பலமுறை பாலினிரதம்போலும் வசனத்தையுடைய எனது புதல்வி பரிவுற்றுக் கூறுவள். எ-று. திருவேகம்பநாதர் கொன்றைமாலையைத் தந்தருளார் ஆதலால் எனது புதல்வி பரிவுற்றுக் கூறுவளெனக் கூட்டுக. [நற்றாயிரங்கல்.] (அங)

பாதகமஞ்சனவெற்பாகவீட்டுநற்பண்புவிரும்
பாதகமஞ்சனமாட்டாதுகைபன்னுநாப்புகழ்செப்
பாதகமஞ்சனகண்டாகம்பாபன்றிநாடரிய
பாதகமஞ்சனமின்னமுங்காணரும்பண்ணவனே.

(இ-ள்.) அகம் பாதகம் அஞ்சன வெற்பாக ஈட்டும் நற் பண்பு விரும்பாது - நெஞ்சமானது பாபங்களைக் கரிய மலைபோல (மேலும் மேலும்) ஆர்ச்சிப்பதேயன்றிச் சன்மார்க்கங்களை (ச் சிறிதும்) சிந்தியாது,—கை மஞ்சனம் ஆட்டாது - கரமானது (உமது திருவடிகளிலே) திவ்வியோதகத்தை அபிஷேகம் செய்யாது,—பன்னு நாப் புகழ் தகச் செப்பா - வசனிக்கும் நாக்கானது (உமது) சீர்த்திகளை மாட்சிமை பெறச் சொல்லாது,—மஞ்சு அன கண்டா - (ஆதலால்) மேகம்போன்ற (கரிய) கழுத்தையுடையவரே,—கம்பா - திருவேகம்பநாதரே,—பன்றி நாடரிய பாத - பன்றிவடிவமான விஷ்ணுமூர்த்தி தேடுதற்கரிய

பாதங்களையுடையவரே,—அனம் கம் அஞ்சு இன்னமும் காணரும் பண்ணவனே - அன்னவடிவமான பிரமதேவர் திருமுடிகள் ஐந்தனை யும் இன்னும் அறிதற்கரிய மகாதேவரே. எ-று. பாபத்தை உவர்ப்பி த்துச் சிவபுண்ணியத்தை ருசிப்பித்தருளுமென்பது எஞ்சி நின்றது. செப்பாதென்பது செப்பாவெனத் துவ்வீறுதொக்கு நின்றது. (அச)

வனப்புண்டரிகமுகத்தார்தமுற்பலமாமலரின்
வனப்புண்டரிகவர்கண்விரும்பேல்வணங்காயுரைசெய்
வனப்புண்டரிகலவாமலருண்டுவண்கம்பமுண்டு
வனப்புண்டரிகவுரியானுண்டேமனம்வாய்கையுண்டே.

(இ-ள்.) வனப் புண்டரிக முகத்தார்தம் - நீர்நிலையினுள்ள தாம ரைமலர் போன்ற முகத்தையுடைய பெண்களது—மா உற்பல மலரி ன் வனப்பு உண்டு அரி கவர் கண் விரும்பேல் - அழகிய குவளைமலரி ன் அழகைக் கவர்ந்து வரிகளை அவாவிய கண்களை இச்சியாதே,—வ ணங்காய் உரைசெய்வன் - (மாணுக்கனே கடைப்பிடித்து)வழிபடுவா யாக சொல்லுவேன்;—அப்பு உண்டு-(பூஜோபகரணமாகத் தடாகத்தி லே) ஜலமும் உள்ளது,—அரிகலவாமலர் உண்டு - (வனத்திலே வண் டுகள் அணுகாத அலரும் உள்ளது,—வண் கம்பம் உண்டு-மாட்சிமை பெற்ற(ஆலயமாகத்) திருவேகம்பமும் உள்ளது,—வனப் புண்டரிக உ ரியான்உண்டு - காட்டில் வாழும் புலித்தோலையுடைய சிவபிரானும் (ஆராதனையை ஏற்றுப் பயன்கொடுக்கும்படி சிவலிங்கமூர்த்தங்கொ ண்டருளி அத்திருவேகம்பத்தில்) வீற்றிருக்கின்றனர்,—மனம் வாய் கை உண்டு - (சற்பாவனைசெய்யும் கருவியாக) நெஞ்சமும் (ஸ்ரீபஞ்சா க்கரத்தை உச்சரிக்குங்கருவியாக) வாக்கும் (பூஜிக்குங்கருவியாகக்) கரமும் உள்ளன.எ-று. ஆதலாற் புதிதாகஅமையவேண்டுவதொன்று மின்றென்பது எஞ்சி நின்றது. எளிதிற்செயற்பாலதாகிய இவ்வழிபா டே புத்திமுத்தி சாதனமென்பது கருத்து. (அரு)

கைத்தாயினையகன்றுயமும்யானுங்கவலமறு
கைத்தாயினையவருகாலன்போலுமோர்சண்டகன்றன்
கைத்தாயினையவென்கண்மணியேகக்கடவியெனைக்
கைத்தாயினையாறகம்பந்தொழாரிற்கடுந்தெய்வமே.

(இ-ள்.) கைத்தாயினை அகன்று ஆயமும் யானும் கவலமறுகைத் தாய் - செவிலித்தாயையும் நீங்கிப் பெண்கள் கூட்டமும் நானும் வருந்தும்வண்ணம் வீதியைக் கடந்து—இல் மைய வரு காலன் போலும் ஓர் கண்டகன்றன் கைத்தாய் - வீட்டினுள்ளார் துன்பமுறுமாறு (உயிரைக் கவர) வருகின்ற இயமன்போன்ற ஒருகொடியோன் வயத்ததாகி—இனைய என் கண்மணி ஏகக் கடவி எனைக் கைத்தாய் - இப்பெற்றித்தாய என்னிருகண்ணினுண்மணி (போன்ற பெண்மணி) செல்லும்வண்ணம் நடாத்தி என்னை உவர்ப்பித்தாய்,—கடும் தெய்வமே நற் கம்பம் தொழாரின் இனைய - (ஆதலால்) கொடிய விதியே நல்ல திருவேகம்பத்தை வழிபடாதாரைப்போல (நீ) துன் பப்படுவாயாக. எ-று. இரண்டாமடியில் இல் ஆகுபெயர். [விதியொடு வெறுத்தல்.]

கடமாதங்கம்பப்பிரானைச்சிவநிசிக்கண்வணங்கிற்
கடமாதங்கம்பறபலசூழவாழ்ந்தங்குக்கஞ்சர்கண்ணர்
கடமாதங்கம்பணியாப்பூண்டுவைகிப்பின்கார்மலச்சங்
கடமாதங்கப்பற்றறப்போய்க்கலப்பர்திருவடியே.

(இ-ள்.) கடமாதம் சிவநிசிக்கண் கம்பப் பிரானைவணங்கில் - மாசிமாசத்திலே சிவராத்திரிகாலத்திலே திருவேகம்பநாதரைத் தொழுதால்,—கட மாதங்கம் பற பல சூழ வாழ்ந்து - (இகலோகத்திலே) மதத்தையுடைய யானைகள் பல பல (தமது முன்றிலிற்) சூழும்வண்ணம் வாழ்ந்திருந்து,—அங்குக் கஞ்சர் கண்ணர்கள் தமாது அங்கம் பணியாப் பூண்டு வைகி - பரலோகத்திலே பிரம விஷ்ணுக்களுடைய என்புகளை ஆபரணமாகத் தரித்து (ச் சிவசாருப்பியராய் மகாசங்காரங்காறும்) இருந்து,—பின் கார் மலச் சங்கடம் ஆதங்கம் பற்று அறப் போய்த் திருவடியே கலப்பர் - பின்னர்க் கரிய ஆணவமலத்தானாய துன்பமாகிய பொல்லாங்குத்தொடர்பு முழுதுமொழிந்து திருவடிக்கண்ணே (இரண்டறக்) கலப்பர். எ-று. (அஎ)

திருக்கோவையாரணனைப்படைத்தேகம்பத்தேமகிழ்வாய்
திருக்கோவையாருளத்தோரன்பர்கூடிடச்சிற்றம்பலத்
திருக்கோவையார்கரத்தால்வரைந்தாண்டசெல்வாவருள்கூ
திருக்கோவையார்படைவேட்கோவின்றூற்றுமென்மேல்விழி
[யே.

(இ-ள்.) திருக்கோவை ஆரணனைப் படைத்து ஏகம்பத்தே மகி ழ்வோய் - இலக்குமிக்கு நாயகனாகிய விஷ்ணுமூர்த்தியையும் பிரம தேவனையும் (உலகத்தினது தோற்றநிலைகளின் பொருட்டுத் தம்மினி ன்றும்) தோற்றுவித்தருளித் திருவேகம்பத்திற் களிகூர்ந்து வாழ்பவரே,—உளத்துத் திருக்கோவையார் ஓரன்பர் கூறிட - மனத்தின்கண் ணே குற்றம் சிறிதும் பற்றாதாரும் ஒப்பற்ற அடியாருமாகிய மாணிக் கவாசகசுவாமிகள் சொல்ல—திருச் சிற்றம்பலக் கோவையார் கரத் தால் வரைந்து ஆண்ட செல்வா - (திருவாசகத்தோடு) திருச்சிற்ற ம்பலக்கோவையாரையும் திருக்கரத்தினால் எழுதி அடிமைகொண் டருளிய சீரியரே,—கூதிருக்கோ வை ஆர் படை வேட்கோ இன்று என் சேல் விழி ஆற்றும் - குளிர்காற்றுக்கா (அன்றிக்) கூர்மைபொரு ந்திய பாணங்களையுடைய மன்மதனுக்கா இப்போழ்து எனது மீன் போலும் நோக்கினையுடைய மடமகள் சகிப்பள்,—அருள் - (ஆத லால்) கருணைசெய்தருளும். எ-று. இரண்டாமடியில் ஒகாரம் ஒழிபி சை. [நற்றாயிரங்கல். (அஅ)

விழுமந்தவாதவர்சார்பேநயந்துவிவேகங்கள
விழுமந்தவாதவவேனோர்மதங்களைமேற்கொண்டங்கண்
விழுமந்தவாதவமென்றுமைகாட்டிவிளக்கினைநல்
விழுமந்தவாதவர்வெற்பாகம்பாவென்விளம்புவனே.

(இ-ள்.) விழுமம் தவாதவர் சார்பே நயந்து விவேகங்கள் அவி ழும் மந்த - (பெத்த) துக்கங்கெடாதவருடைய நண்பையே மகிழ்ந்து (கொண்டாடி) அறிவுகள் பறிபோய அபக்குவனே,—ஆ தவ ஏனோர் மதங்களை மேற்கொண்டு அங்கண்விழும் அந்த வாது -பெரும்பான் மையும் வேதவாகியரானோர் சமயங்களை வெல்லுதலிலே தலைப்பட்டு அதன்கண்ணே கருத்தழுந்திச் செய்யும் அத்தருக்கமானது—அவம் என்றுமை காட்டி நல் விழுமம் விளக்கினை - பயனற்றதென்று (அப் பரபக்கத்தின்) குற்றத்தைப் புலப்படுத்தி (மலைவு தீர்த்துச்சுபக்கமாகிய சித்தாந்தசைவத்தின்) ஞானபாதச் சிறப்புப்பொருளை உபதேசித்தரு ளினீர்,—தவா தவர் வெற்பா கம்பா என் விளம்புவன் - (ஆதலால்) நாயகரே மேருமலையாகிய வில்லையுடையவரே திருவேகம்பநாதரே (உமது கருணையைப்பற்றி) அடியேன் யாது புகழ்ந்து கூறுவேன் எ-று. (அக)

புவனம்பவனங்கமண்ணழலாவன்புள்ளூர்களர்காம்
புவனம்பவனங்களாவமர்வோன்வினைபொய்மலந்த
புவனம்பவனங்கணன்கம்பனென்றென்றுபோற்றிவிரும்
புவனம்பவனங்கனத்தனென்றேகொண்டபோதனையே.

(இ-ள்.) மண் புவனம் அழல் பவனம் கம் ஆவன் - பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாயம் (ஆகிய பஞ்சபூதமும்) ஆகின்றவர்,—புள்ளூர் களர் காம்பு வனம் பவனங்களா அமர்வோன் - புள்ளிருக்குவேளூர் திருக்களர் திருநெல்வேலியாகிய தலங்களை ஆலயங்களாகக் கொண்டு வீற்றிருப்பவர்,—வினை பொய் மலம் தபுவன் - (பக்குவான்மாக்கட்குக்) கன்மமும் மாயையும் ஆணவமுமாகிய (மும்மலங்களையும்) கெடுத்தருள்பவர்,—அம்பவன் - அழகிய விச்சுவகாரணர்,—அம் கணன் - அருட்கண்ணர்—கம்பன் - திருவேகம்பநாதர்,—என்று என்று போற்றி விரும்புவன் - என்று பலமுறை (அடியேன்) துதித்துச் சிந்திப்பன்,—அம்பு அவ் அனங்கன் அத்தன் என்று கொண்ட போதனை - பாணமானது அந்த மன்மதன் பிதாவாகிய விஷ்ணுமூர்த்தியாகக் கொண்டருளிய ஞானமூர்த்தியை. எ-று. ஞானமூர்த்தியைத் துதித்துச் சிந்திப்பனெனக் கூட்டுக. மாயையாகிய காரணத்தை அதன்காரியமாகிய தநுவாதிமேல் வைத்துப் பொய்யென உபசரித்தார். என்றேயென்றதில் ஏகாரம் அசை. (௯௦)

போதுமினையம்பரேநடவாதிங்கும்பூம்பகழிப்
பொதுமினையம்பரத்தைப்பொருமிடையார்வசையும்
போதுமினையம்பரிகம்பர்தார்புரிந்தாரினியோர்
போதுமினையம்பரவையின்விரமும்பொன்றுகவே.

(இ-ள்.) ஐ அம்பரே உம் பூம் பகழிப் போது இங்கு நடவாது போதுமின் - பஞ்சபாணங்களையுடைய மன்மதனாரே உமது பொலிவுபெற்ற அம்புகளாகிய மலர்கள் ஈண்டுச் செல்லாது செல்வீராக,—மினை அம்பரத்தைப் பொரும் இடையார் வசையும் போதும் - மின்னலையும் ஆகாசத்தையும் போன்ற இடையையுடைய பெண்கள் அலர்தூற்றலும் அமையும்,—அரி இன் ஐ அம்பு கம்பர் தார் புரிந்தார் - விஷ்ணுமூர்த்தியை இனிய அழகிய பாணமாகக் கொண்ட திருவேகம்பநாதர் மாலை தந்தருளினார்—(ஆதலால்)—இனி ஓர் போதும் இனையம் - இனி ஒருபொழுதும் வருந்தமாட்டேம்,—பர

வையின் வீரமும் பொன்றுக - கடலின் வலிமையும் மெலிந்தொழிய க்கடவது. எ-று. திருவேகம்பநாதர் மாலை தந்தருளினுர் ஆதலால் ம ன்மதனுரே செல்வீராக பெண்கள் அலர்தூற்றலும் அமையும் இனி வருந்தமாட்டேம் கடலின் வலிமையும் ஒழியக்கடவது எனக் கூட்டு க. [மாலைவிருப்புரைத்தல்.] (கூக)

கவலைக்கரும்பரவப்பூம்பகழிக்குங்கன்னியர்நோக்
கவலைக்கரும்பரவேர்நகையல்குலுக்காசைகொண்டு
கவலைக்கரும்பரவைக்குள்விழாதுகருணைபெரு
கவலைக்கரும்பரமானந்தமீந்தனன்கம்பத்தனே.

(இ-ள்.) கவலைக் கரும்பர் அவப் பூம் பகழிக்கும் - (காம) நோ யை (வளர்க்கும்) கருப்புவில்லையுடைய மன்மதனுரது வறிதாகிய பு ட்பபாணங்களுக்கும்—கன்னியர் நோக்க வலைக்கு அரும்பு அரவு ஏர் நகை அல்குலுக்கு - பெண்களது பார்வை வலைக்கும் (முல்லை) முகை யும் பாம்பின் படமும்போன்ற தந்த (பந்திக்கும்) நிதம்பத்திற்கும் —ஆசை கொண்டு கவலைக் கரும் பரவைக்குள் விழாது - மையல் பூண்டு துக்கமாகிய கரிய கடலின் வீழ்ந்து மூழ்காவண்ணம்,—கம்ப த்தன் - திருவேகம்பவாணர்—கருணை பெருக அலைக்க அரும் பரமா னந்தம் ஈந்தனன் - திருவருள் பெருக அலைத்தல் கூடாத பரமசுகத் தை (அடியேற்குத்) தந்தருளினர். எ-று. இரண்டாமடியில் அரவு ஆகுபெயர். (கூஉ)

கம்பாகம்பாநதிப்பாற்பூசைசெய்கவுரிக்கருணேக்
கம்பாகம்பாலித்தகோவேமகளிர்கடிதடநா
கம்பாகம்பாமொழிகண்களென்னுதுன்கழலைமுறுக்
கம்பாகம்பாகமுறுந்தமிழ்பாடுங்கடன்பணியே.

(இ-ள்.) கம்பா - திருவேகம்பநாதரே,—கம்பா நதிப்பால் பூசை செய் கவுரிக்கு அருள் நோக்கம் பாகம் பாலித்தகோவே - கம்பையா ற்றின் கண்ணே (திருவடிகளைப்) பூசித்த உமாதேவியாருக்குக் கருணை ப்பார்வையும் (வாம) பாகமும் அளித்தருளிய முதல்வரே,—மகளிர் கடிதடம் நாகம் மொழி கண்கள் பாகு அம்பு ஆம் என்னுது - பெ ண்களுடைய நிதம்பம் பாம்பின் படமாகும் வசனங்களும் நேத்திர ங்களும் பாலின் சுவையும் பாணங்களுமாகும் என்று புனைந்துரை

யாது,—உன் கழலை முறுக்கம் பாகம் பாகம் உறும் தமிழ் பாடும் கடன் பணி - உமது திருவடிகளை (ப் புகழ்ந்து நாளிகேரபாகமாகிய) முறுகிய பாகமும் (கதலீபாகமாகிய) செம்பாகமும் பெற்ற தமிழ்ச்செய்யுள்கள் இயற்றும் முறைமையை (அடியேனுக்கு) அருள்செய்வீராக. எ-று. இக்ஷு பாகம் திராக்ஷாபாகமாகிய இரண்டையும் முதலினும் இறுதியினும் கூட்டி நான்கென வடநூலார் கூறுப. அவற்றுள் இடைநின்ற நாளிகேரபாகம் கதலீபாகமாகிய இரண்டுமே பெரும்பயனுடையனவென்பார் முறுக்கம்பாகம் பாகமுறுந்தமிழ் பாடுங்கடன் பணியென்றார். இக்ஷு கரும்பு. திராக்ஷை - முந்திரிகை. நாளிகேரம் தெங்கு. கதலி - வாழை. (௯௯)

பணியாதனந்தம்பரிசடியாரெதிர்ப்பட்டிடிற்செய்
பணியாதனந்தன்புகழநிற்பீரென்றுபாடிப்புத்தி
பணியாதனந்தந்துபசரியாதுகம்பாவரவப்
பணியாதனந்தஞ்சமென்றழிவேனெப்படியுய்வனே.

(இ-ள்.) அடியார் எதிர்ப்பட்டிடில் அனந்தம் பரிசு பணியாது - தொண்டர்கள் நேர்பட்டாற் பலமுறை வணங்குதல் செய்யாதும்,—செய் பணி யாது அனந்தன் புகழ நிற்பீர் என்று பாடிப் புத்தி பணி—(அடியேனால்) இயற்றத்தக்க குற்றேவல் யாது சேடனும் துதிக்கநிற்கும் மகான்களே யென்று புகழ்ந்து (சிவமாக) மதித்து (வினவி),—ஆதனம் தந்து உபசரியாது - ஆசனங்கொடுத்து வழிபடாதும்,—கம்பா அரவப் பணியா - திருவேகம்பநாதரே சர்ப்பாபரணரே—தனம் தஞ்சம் என்று அழிவேன் எப்படி உய்வன் - திரவியத்தையே பற்றுக்கோடாகக்கொண்டு கெடுகின்ற அடியேன் எவ்வண்ணம் பிழைப்பேன்! எ-று. மேலுமேலும் பொய்ப்பொருளை யீட்டமுயலாது கருத்தமைந்து இயன்றமாத்திரம் சற்பாத்திரத்தில் உபகரித்தலே உய்யுநெறியென்பது கருத்து. (௱)

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை,

திருச்சிற்றம்பலம்.

# வட திருமுல்லைவாயிலந்தாதி.

இஃது,

திருவாவடுதுறை ஆதீனத்துத்

திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய

**சிவஞானயோகிகள்**

அருளிச்செய்தது.

மதுராபுரிவாசியாகிய

இ. இராமசுவாமிப்பிள்ளை என்று

வழங்குகின்ற

**ஞானசம்பந்தப்பிள்ளை**

செய்த உரையுடன்

இராமநாதபுர சமஸ்தானம் ம-ா-ா-ஸ்ரீ

பொன்னுச்சாமித்தேவரவர்களுடைய

புத்திரர் ம-ா-ா-ஸ்ரீ

பாண்டித்துரைத்தேவரவர்கள்

விரும்பியவண்ணம்

சபாபதிநாவலரவர்களது

சித்தாந்தவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

சென்னை: ஏகவல்லியம்மன்கோயில்வீதி - 79.

1889.

விரோதி ஹு

## சிறப்புப்பாயிரம்.

பொருட்டுறை மலிந்த முல்லையந் தாதி
புலவர்கட் கமிழ்தெனப் பொழிந்த
தருட்டுறை யடியர் நிதியமாய்ப் போந்த
வண்ணன்மெய் கண்டமா தேவன்
மருட்டுறை யொழிப்பான் வார்த்திகப் பொழிப்பான்
வகுசிவ ஞானபோ தத்தின்
றெருட்டுறை பிறங்கப் பாடிய முறையிற்
செய்சிவ ஞானவான் முகிலே.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருமுல்லைவாயிலந்தாதி.

## மூலமும் உரையும்.



### காப்பு.



மல்லைவிநாயகனிந்தெம்மையாளொற்றிவைவிற்புகல்வே
றில்லைவிநாயகனன்கேனுமில்லென்றிகழ்வெனுஞ்
சொல்லைவிநாயகனைந்திரப்போர்க்கருள்சோதிபெற்ற
முல்லைவிநாயகன்முல்லையந்தாதிக்குமுன்னிற்குமே.

(இதனது பதப்பொருள்.) மல்லை வில் நாயகனிந்து எம்மை ஆள் ஒற்றி வை வில் வேறு புகல் இல்லை—மேருமலையை வில்லாகவுடைய முதல்வரே திருவுளமிரங்கி அடியேங்களை அடிமை பூண்டருளும் (பூண்டு) ஒற்றிசெய்தருளும் (அல்லது) விற்றருளும் பிறிது பற்றுக்கோடு இன்று,—நாய் அகன் நன்கு ஏனும் இல் என்று இகழ்வு எனும் சொல்லை விநாய்—நாயிடத்துள்ள நன்மையாயினும் இல்லையேயென இகழாதிரும் என்று புகழ்கின்ற விண்ணப்பத்தைக் கேட்டருளி,—அகன் நைந்து இரப்போர்க்கு அருள் சோதி பெற்ற முல்லை விநாயகன்—மனம் உருகி யாஜிக்கின்ற (அத்) திருவடியார்களுக்குக் கருணைசெய்யுஞ் சிவபிரான் தந்தருளிய முல்லைவிநாயக மூர்த்தியானவர்,—முல்லையந்தாதிக்கு முன்னிற்கும்— (யான், பாடத்தொடங்கிய) திருமுல்லைவாயிலந்தாதி என்னும் இப்பிரபந்தத்தின்பொருட்டு (வரும் இடையூற்றைப்போக்கி) முன்னின்றருளுவர். என்றவாறு.

மலையென்பது மல்லையென ஒற்றொற்று விரிந்து நின்றது, எதுகை நோக்கி. மூன்றாமடியில் விநாயென்பது கேட்டென்னும் பொருளில் வந்தது. ஏகாரம் ஈற்றசை.

## நூல்.

திருத்தங்குமாமுல்லைவாயிற்பிரானிருசேவடிநீர்த்
திருத்தங்குமார்க்கத்திற்செல்லாமலாடப்பெற்றேமினிமால்
திருத்தங்குமாரனென்றேதிப்பிறனைப்பின்சென்றுநின்று
திருத்தங்குமாதுமுனிந்தாலுநைந்துளந்தேம்பிலமே.

(இ - ள்.) திருத் தங்கு மா முல்லைவாயிற் பிரான் இரு சேவடி நீர்த் திருத்தம்—அழகுதங்கிய பெரிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற கடவுளாகிய சிவபெருமானுடைய சிவந்த இரண்டு திருவடிகளில் (அபிடேகிக்கப்படும்) திவ்விய தீர்த்தத்திலே,—கு மார்க்கத்தில் செல்லாமல் ஆடப் பெற்றேம்—கீழ்மையாகிய வழியில் ஒழுகாவண்ணம் மூழ்கப்பெற்றேம்,—(ஆதலால்) இனிப் பிறனை மால் திருத்தம் குமாரன் என்று ஓதிப் பின் சென்று நின்று திருத்தம்—இனி (உலகத்தையாளும் அரசராகிய) அயலோரை விஷ்ணுவுக்கும் இலக்குமிக்கும் புத்திரனாகிய மன்மதனென்று புகழ்ந்து பின்னே போய் நின்று சீர்ப்படுத்தமாட்டோம்,—கு மாது முனிந்தாலும் உளம் நைந்து தேம்பிலம்—(அங்ஙனம் புகழாமை பற்றிப்) பூமாது கோபித்தவிடத்தும் மனம் வருந்தித் தளரமாட்டோம். எ - று.

இரு சேவடி நீர்த் திருத்தமென்பதற்கு நிருமலமாகிய பேருட்சத்தி (பதிந்த) தீர்த்தத்திலெனினும் அமையும். மூன்றாமடியில் தம் சாரியை. (க)

தேங்கொன்றையாரணவுஞ்சடைவாழ்வைத்திசையனைத்துந்
தேங்கொன்றையாரணவல்லாரெமைச்சினஞ்செய்துபொறி
தாங்கொன்றையாரணஞ்செய்யாதுமுல்லைத்தலத்திறைவா
தாங்கொன்றையாரணவென்றிரந்தேத்துந்தவம்பெறினே.

(இ - ள்.) தேம் கொன்றை ஆர் அணவும் சடைவாழ்வை—தேன்பொருந்திய கொன்றைமலரும் ஆத்திமலரும் அணிந்த சடையையுடைய செல்வமாயுள்ளவரும்,—திசை அனைத்தும் தேங்கு ஒன்றை அண வல்லார் யார்—திக்குகள் முழுவதும் நிறைந்துள்ள ஒரு பொருளுமாகிய சிவபெருமானை அடையமாட்டாதவர் யாவர்,—பொறிதாம் எமைச் சினஞ்செய்து கொன்று ஐயாரணஞ்செய்யாது—பஞ்சேந்திரியங்களானவை எங்களைக்கோபித்து மிக வருத்தி பிதாவே

புண்ணாக்காது,—முல்லைத் தலத்து இறைவா தாங்கு—திருமுல்லைவாயிலாகிய திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் முதல்வரே காத்தருளும்,—ஒன்று ஐ ஆரண என்று இரந்து ஏத்தும் தவம் பெறின்—ஒன்றிய அழகிய வேதப்பொருளானவரே என்று வேண்டிப் புகழ்கின்ற தவத்தைப்பெற்றால். எ - று.

பிதாவே முதல்வரே ஆனவரே புண்ணாக்காது காத்தருளுமென்று புகழ்கின்ற தவத்தைப்பெற்றால் சிவபெருமானை அடையமாட்டாதவர் யாவரெனக்கூட்டுக. முதலடியில் கொன்றை ஆர் ஆகுபெயர்கள். மூன்றாமடியில் இரணம் ரணமெனத் தொகுத்தல்விகாரம் பெற்று நின்றது. (௨)

தவலரும்பல்கலைதேர்முல்லைவாயிற்சயிலவில்லார்
சுவலரும்பல்கலைதந்திடக்கொண்டவர்தூயமதி
நுவலரும்பல்கலைநீர்முடியானைநுவன்றறியா
வவலரும்பல்கலைவேண்டியென்வீணிலலைவதுவே.

(இ-ள்.) தவல் அரும் பல் கலை தேர் முல்லைவாயிற் சயில வில் ஆர் சுவலர்—கெடுதலில்லாத பலநூல்களை ஆராய்ச்சிசெய்கின்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற மேருமலையாகிய வில்லானது பொருந்திய பிடரினையுடையாரும்,—உம்பல் கலை தந்திடக் கொண்டவர்—யானையானது தோலாகிய வஸ்திரத்தைக் கொடுக்க (அதனை) அணிந்துகொண்டவரும்,—நுவல்தூய மதி அரும்பு அலை நீர் அல்கு முடியானை—சொல்கின்ற சுத்தமுடைய பிறைக்கண்ணியும் திரையையுடைய கங்கைநீரும் தங்கிய திருமுடியையுடையாருமாகிய சிவபெருமானை,—நுவன்று அறியா அவலரும்—துதித்தறியாத எளியரும்,—பல்கலை வேண்டி வீணில் அலைவது என்—(போகங்கள்) அபிவிருத்தியாதலை விரும்பி வீணாக உழல்வது என்னையோ. எ-று.

யான் அறியேனென்பது எஞ்சி நின்றது. துதித்தால் எண்ணியவற்றை இருக்குமிடத்தே கூட்டுவரென்பது கருத்து. (௩)

அலைவனமந்தரங்காற்றங்கிமண்ணெனுமைந்துமல்லாத்
திலைவனமந்தரங்கத்தானமாத்திருமுல்லையின்வாழ்
தலைவனமந்தரங்காட்டுநஞ்சுண்டுதெருவிசும்பிற்
கலைவனமந்தரங்காப்பினைமாற்றுங்கருணையென்னே.

(இ-ள்.) அலை வனம் அந்தரம் காற்று அங்கி மண் எனும் ஐந்தும் அல்லா—அலையையுடைய நீரும் ஆகாயமும் காற்றும் அக்கினியும் பூமியுமாகிய பஞ்சபூதங்களுமல்லாத,—இலை வனம் அந்தரங்கத் தானம் ஆ—(சிதாகாசவடிவமான) சிதம்பர ஸ்தலத்தை இரகசிய ஸ்தலமாகக்கொண்டு,—திருமுல்லையின் வாழ் தலைவன்—(அத்தாணித்தானமாகிய) திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும் முதல்வராகிய சிவபிரான்,—அ மந்தரம் காட்டும் நஞ்சு உண்டு—(கடலைக்கடைந்து) அந்த மந்தரகிரியினாற் கொடுக்கப்பட்ட விடத்தை உண்டு,—தரு விசும்பிற் கலைவு அன மந்தர் அங்காப் பிணை—(பஞ்ச) தருக்களையுடைய சுவர்க்கலோகத்திலுள்ள குலைவுற்றோடிய அத்தன்மையுடைய அறிவிலிகளாகிய தேவர்கள் வாய்திறந்தழுதலை,—மாற்றும் கருணை என்—போக்கிய திருவருள் (இருந்தபடி) என்னை. எ-று.

அத்தாணித்தானம் அரசிருக்கைத்தலம். தில்லை என்பது இலையென இடைக்குறைந்து நின்றது. மூன்றாமடியில் அம்மந்தரமென்பது அமந்தரமென நின்றது. இறுதியடியில் அன்னமென்பது அனவென இடைக்குறைந்து நின்றது. பஞ்சதருக்களாவன அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பனவாம். இரண்டாமடியில் அந்தரங்கத்தானமென்பதற்கு அழகையுடைய அம்பலத்தானமெனினும் அமையும். அப்பொருள் கொள்ளுங்கால் அரங்கமென்பது ரங்கமென அகரம் தொகுத்தல் விகாரம் பெற்று நின்றதாகக்கொள்க. (௫)

கருமமலங்கொடுமாயையுநீக்கிக்கதிர்த்துவரா
றருமமலங்கொடுபாய்தடஞ்சூழ்முல்லைதன்னிலொன்றோர்
மருமமலங்கொடுசெற்றோன்பரசவரும்பெருமா
னருமமலங்கொடுமாமாசிலாமணியாண்டகையே.

(இ-ள்.) கருமம் மலம் கொடு மாயையும் நீக்கி—கன்மமும் ஆணவமும் கொடிய மாயையுமாகிய பாசங்கள் மூன்றையும் கெடுத்து,—வரால் கதிர்த்து தரும மலங்கொடு பாய் தடம் சூழ் முல்லை தன்னில்—வரால்மீன் கருவங்கொண்டு இயல்பாகிய மலங்குமீனோடு பொருகின்ற வாவிகள் சூழ்ந்த திருமுல்லைவாயிலின்கண்ணே,—ஒன்றோர் மருமம் அலங்கொடு செற்றோன் பரசவரும் பெருமான்—பகைவருடைய மார்பத்தைக் கலப்பையாகிய படைக்கலத்தாற் (பிளந்து) கொன்ற பலராமன் புகழும் வண்ணம் எழுந்தருளிய கடவுளே,—அரும் அம

லம் கொடு—அரிய பரிசுத்தத்தன்மையை (அடியேனுக்குக்) கொடுத்தருளும்,—மா மாசிலாமணி ஆண்டகையே—பெருமையாகிய மாசிலாமணி யீசரே. எ-று.

கடவுளே ஈசரே பாசங்கள் மூன்றையும் கெடுத்துப் பரிசுத்தத் தன்மையைக் கொடுத்தருளுமெனக் கூட்டுக. (ரு)

கைதவநாடகங்காட்டியறிவைக்கமரகத்தே
பெய்தவநாடகவாக்கழித்தாய்புகழ்பெற்றதொண்டைச்
செய்தவநாடகமுல்லைப்பிரான்பதஞ்சிந்தைசெய்தே
நைதவநாடகமேயெங்குளானெங்கணம்பனென்றே.

(இ-ள்.) கைதவ நாடகம் காட்டி—வஞ்சகமாகிய நடிப்பைச் செய்து,—அறிவைக் கமரகத்தே பெய்து—உணர்வை (உலகமார்க்கமாகிய) பிளவிலே ஒழுகவிட்டு,—தகவு நாள் அவம் ஆக் கழித்தாய்—பயன்பெறத்தக்க காலங்களை (இதுவரையும்) வீணாகப் போக்கினாய் (இன்னமும் அவ்வாறிருக்காது),—புகழ் பெற்ற தவம் செய் தொண்டைநாடு அகம் முல்லைப் பிரான் பதம் சிந்தை செய்தே—(சான்றோருடைத்தென்பதுமுதலிய) கீர்த்திகள் அடைந்த பதிபுண்ணியங்கள் செய்யத்தக்க தொண்டைமண்டலத்தி னிடத்ததாகிய திருமுல்லைவாயிலின்கண் வீற்றிருந்தருளும் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டே,—அகமே எங்கள் நம்பன் எங்கு உளான் என்று தவ நாடு நை—மனமே நம்முடைய நம்பனென்னுந் திருநாமமுள்ள(அச்) சிவபிரான் எங்கே எழுந்தருளி யிருப்பானெனப் பெரும்பான்மையும் ஆராய்ச்சி செய்வாயாக (செய்து) உருகுவாயாக. எ-று.

இங்ஙனம் பத்திசெய்தலே புத்தி முத்தி சாதனமென்பது கருத்து. மனமே யென்பதை முதலிற் கூறிக்கொள்க. சான்றோருடைத்தென்பதற்குப் பிரமாணம் தமிழ்நாட்டு மூவேந்தரும், ஒருங்குகூடிய அவைக்களத்தே, தேயவியற்கைகளைப் பற்றி வினாநிகழ்ந்தவழி, ஓதாதுணர்ந்த ஔவையார் "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து" எனக்கூறிய, உண்மைத் திருவாக்கானு முணர்க. (சு)

எங்கணம்பன்பரசேரடியாரினிணைமலர்த்தா
ளங்கணம்பன்பரசேமுல்லையாயருளென்றமரர்
தங்கணம்பன்பரசேய்கரத்தான்முல்லைதன்னிறையாஞ்
செங்கணம்பன்பரசேதனன்பாதமென்சிந்தையதே.

(இ-ள்.) எங்கள் நம்பன்—நம்முடைய நம்பனென்னுந் திருநாமத்தை யுடையவரோ,—பரசு அடியாரின் மலர் ஏர் இணைத்தாள் அங்கண் நம்பு அன்பு—(உலக முழுவதும்) துதிக்கின்ற (உம்முடைய) திருத்தொண்டர்களது செந்தாமரை மலர்போலும் அழகிய இரண்டு திருவடிகளை அவ்விடத்து விரும்புகின்ற பத்திமையை,—அரசே முல்லையாய் அருள் என்று அமரர் தம் கணம் பன்—நாயகரோ திருமுல்லைவாயிலையுடையவரோ தந்தருளுமெனத் தேவர்கூட்டங்கள் புகழ்கின்ற,—பரசு ஏய் கரத்தான்—மழுப்படையைத் தாங்கிய திருக்கையை யுடையவரும்,—முல்லை தன் இறையாம் செங்கண் அம்பன்—முல்லை நிலத்திற்குக் கடவுளாகிய சிவந்த கண்ணையுடைய விஷ்ணுவைப் பாணமாகவுடையவரும்,—பரசேதனன் பாதம்—பரஞானவடிவினருமாகிய சிவபிரான் திருவடியானது,—என் சிந்தையது—என்னுடைய மனசின்கண் இருக்கின்றது. எ-று.

உடையவரோ நாயகரோ உடையவரோ பத்திதந்தருளுமெனப் புகழ்கின்ற வென்க. செங்கண் அன்மொழித் தொகை. (எ)

சிந்தைத்திருக்குமரமுங்களவுஞ்செறிந்தவஞ்ச
கந்தைத்திருக்குமரநேர்விழியவர்காமங்களு
முந்தைத்திருக்குமரன்மாயமுமுடித்தாளுமொரு
விந்தைத்திருக்குமரபறியாமுல்லைமெய்ப்பொருளே.

(இ-ள்.) சிந்தைத் திருக்கு மரமும்—கோணிய மரம்போன்ற மனத்தையும்,—களவும்—களவையும்,—செறிந்த வஞ்சகம் தைத்து இருக்கும் அரம் நேர் விழியவர் காமங்களும்—மிக்க கபடத்தை அடைத்திருக்கின்ற அராவுங் கருவிபோன்ற கண்களையுடைய பெண்களிடத் துண்டாகிய ஆசைகளையும்,—திரு முந்தைக் குமரன் மாயமும்—இலக்குமியின் மூத்தபிள்ளையாகிய மன்மதன் (செய்கின்ற) வஞ்சகத்தையும்,—முடித்து ஆளும் ஒரு விந்தைத்து—கெடுத்து (நண்பர்களே என்னை) ஆண்டருளும் ஓரதிசயத்தை யுடையதாயிருக்கின்றது,—இருக்கும் மரபு அறியாமுல்லை மெய்ப்பொருள்—வேதங்களாலும் இவ்வியல்பினதென்று உணரப்படாத திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளி யிராநின்ற தத்துவப்பொருள். எ-று.

பொருப்புக்குழைத்தகரத்தார்வமுல்லைப்புரத்தநியான்
கருப்புக்குழைத்தகரத்தார்நகக்கலங்காதருளும்

விருப்புக்குழைத்தகரத்தார்மலர்க்குழன்மெல்லியலா
மருப்புக்குழைத்தகரத்தார்தலைமைத்தென்வாழ்முதலே.

(இ-ள்.) பொருப்புக் குழைத்த கரத்து—மேருமலையை 'வில் லாக வளைத்த திருக்கையையுடையது,—ஆர்வ முல்லைப் புரத்தது--(தேவரும்) விரும்பத்தக்க திருமுல்லைவாயிலாகிய திருப்பதியையு டையது,— யான் கருப் புக்கு உழைத்து அகரத்தார் நகக் கலங்காது அருளும்—நான் (இன்னமும் அன்னை) வயிற்றிற் புகுந்து வருந்தி உலகத்தார்(இகழ்ந்து) நகைக்கும் வண்ணம் சஞ்சலப்படாமற் கருணை செய்கின்ற,—விருப்புக் குழைத் தகரத்து ஆர் மலர்க்குழல் ஆம் மரு ப்பு மெல் இயற்கு உழைத்து—விரும்புதலுடைய காதணியையும், மயிர்ச்சாந்தையும் இணைத்த புஷ்பங்களையும் (அணிந்த) கூந்தலையும், (வளப்ப) மாகிய பூங்கொம்புபோன்ற மிருதுவாகிய தன்மையையு டைய திருமேனியையும் பெற்ற உமாதேவியாருக்கு (வலப்) பாகத் தையுடையது,—அகரத்து ஆர் தலைமைத்து—(மெய்யும் உயிருமாகிய எழுத்துக்களெல்லாவற்றினு நிறைந்த தலைமையுடைய)அகாரத்தைப் போல [ச் சடாசடப் பிரபஞ்சங்க ளெல்லாவற்றினும்) நிறைந்த தலை மையையுடையது,—என் வாழ் முதல்—என்னுடைய (மெய்ச்)செல் வமாகிய முதற்பொருள். எ - று.

முதலடியில் கரத்தது எனற்பாலது கரத்து என அகரச்சாரியை தொக்கது. மெல்லியல் அன்மொழித் தொகை. வாழ்வு என்பது வாழ் என முதனிலை மாத்திரையாக நின்றது. (௬)

வாரம்படைத்தகருநீலக்கண்மயில்பாகரயில்
வாரம்படைத்தகருவந்தகோன்றொழுமன்னர்செய்யின்
வாரம்படைத்தகருவறுப்பார்க்கிடம்வண்டொழில்செய்
வாரம்படைத்தகருவாற்குலைசெய்வளமுல்லையே.

(இ-ள்.) வாரம் படைத்த கரு நீலக் கண் மயில் பாகர்—நீரி னுண்டாகிய கரிய நீல மலர்போலும் கண்களையும் மயில்போலும் சா யலையுமுடைய உமாதேவியாரைப் பாகத்திலே வைத்தருளியவரா யும்,—வார் அம் அயிற்படைத் தகர் உவந்த கோன் தொழும் மன் னர்—நீண்ட அழகிய வேற்படையோடு ஆட்டுக்கடாவையும் மகிழ்ச்சி யாகக் கொண்டருளிய முதல்வராகிய முருகக் கடவுளால் வழிபடப் பெற்ற நாயகராயும்,—வாரம் செய்யின் படைத்த கரு அறுப்பார்க்கு இடம்—பத்திசெய்தால் (வினைக்கீடாகப்) பெற்ற பிறவியை ஒழிக்கி

ன்றவராயுமுள்ள சிவபிரான் எழுந்தருளியிருத்தற்குத் தானமாவ
து,—வண் தொழில் செய்வார் அம்பு அகருவால் அடைத்துக் குலை
செய் வளம் முல்லை—நல்ல (உழவுமுதலிய) தொழில்செய்வாராகிய
மள்ளர் நீரை அகிற்கட்டைகளால் அடைத்துக் கரைசெய்யப்பெற்ற (௰)
பெருமையுடைய திருமுல்லைவாயிலாகும். எ - று.

முல்லைப்பதிகமஞ்சூற்கொண்டல்சூழ்முதுகின்றினும்வாழ்
தில்லைப்பதிகமடமார்பன்மூவர்திருத்தமிழின்
சொல்லைப்பதிகமலர்த்தொடையான்றன் றுணைமலர்த்தா
ளொல்லைப்பதிகமனத்தேயமன்வருமுப்பொழுதே.

(இ - ள்.) முல்லைப்பதி—திருமுல்லைவாயிலாகிய திருப்பதியிலு
ம்,—கமம் சூற் கொண்டல் சூழ் முது குன்றினும்—நிறைவுபெற்ற
கருப்பத்தையுடைய மேகங்கள் சூழ்கின்ற பழமலையாகிய திருப்பதி
யிலும்,—தில்லை வாழ் பதி—ஸ்ரீசிதம்பரமாகிய திருப்பதியிலும் எழு
ந்தருளியிருக்கின்ற முதல்வராயும்,—கமடம் மார்பன்—கூர்மத்தின்
புறவோட்டை (ப் பதக்கமாகத் தரித்த) திருமார்பையுடையவரா
யும்,—மூவர் திருத்தமிழ் இன்சொல் மலர் ஐப் பதிகத் தொடையான்
றன்—திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார்,
சுந்தரமூர்த்தி நாயனாராகிய மூவரும் (திருவாய் மலர்ந்தருளிய) திரு
நெறித் தமிழாகிய இனிய சொல்லாகிய மலர்களால் (அமையப்பெ
ற்ற) அழகிய திருப்பதிக மாலையை அணிந்தவராயுமுள்ள சிவபெருமா
னுடைய,—மலர்த் துணைத்தாள் மனத்தே எல்லைப் பதிக உப்பொழு
தே யமன் வரும்—செந்தாமரை மலர்போலும் இரண்டு திருவடிகளை
(நண்பர்களே) மனசின்கண்ணே சீக்கிரம் அழுத்தக்கடவீர் உந்தக்
கணப்பொழுதிலே இயமன் வருவனாதலால். எ - ு.

கமடம் ஆகுபெயர். இறுதியடியில் பதிக்க வெனற்பாலது பதிக (௰௧)
வெனக் ககரமெய் விகாரத்தாற் றொக்கது.

தேங்கடம்புந்திகழுமலர்ச்சென்னிச்செவ்வேளைப்பெற்றோய்
தாங்கடம்புந்திகழுமலக்கோன்றமிழ்சூடியடி
யோங்கடம்புந்திகழுமலற்றோங்கவுயர்முல்லையா
யாங்கடம்புந்திகழுமலத்தெவ்வறவாணைகொண்டே.

(இ - ள்.) தேம் கடம்பு மலரும் திகழும் சென்னிச் செவ்வே
ளைப் பெற்றோய்—தேனையுடைய கடப்பம்பூவும் (வெட்சிப்பூவும்)

விளங்குகின்ற திருமுடியையுடைய முருகக் கடவுளைத் தந்தருளிய வரே,—தாங்கு—காத்தருளும்,—அடம்பு உந்தி கழுமலக்கோன் தமிழ் சூடி—அடம்பந்தளிரையும் கங்கையாற்றையும் சீர்காழிப்பதிக்குத் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகமாலையையும் தரித்துள்ளவரே,—அடியோங்கள் தம் புந்தி கழுமல் அற்று ஓங்க—அடியேங்களுடைய அறிவு மயக்கத்தினின்றும் நீங்கித்தெளிவையடையும்பொருட்டு,—உயர்முல்லையாய்—மேலாகிய திருமுல்லைவாயிலையுடையவரே,—ஆங்கு அடு—அவ்வறிவின்கண் அடுத்தருளும்,—இகழும் மலத் தெவ் அறக் கொண்டு ஆணை அம்பு உந்து—நிந்திக்கப்படும் ஆணவமலத்தினது பகைமைகெடும் பொருட்டுத் திருவுளங்கொண்டு திருவருளாகிய பாணத்தைத் தொடுத்தருளும். எ - று.

திருநாமங்களை அடுக்கித், தெளியும்பொருட்டு அடுத்தருளும்காத் தருளும் தொடுத்தருளுமெனக் கூட்டுக. இரண்டாமடியில் அடம்பு ஆகுபெயர். சூடியென்பது பெயர். (௰உ)

கொண்டலங்கண்டருமால்போலுமுல்லைக்குழகர்முன்னாள்
விண்டலங்கண்டருமாலுழந்தேங்கவெகுண்டெழுநஞ்
சுண்டலங்கண்டருமாபதியார்முடியூடுமதித்
துண்டலங்கண்டருமாவாவெனைத்தொண்டுகொண்டனரே.

(இ - ள்) மால்போலும் கொண்டல் அங்கு அண் தரு முல்லைக் குழகர்—(வணங்கும்படி-வரும்) விஷ்ணுவைப்போலும் (மேகங்கள் சூழும்) திருமுல்லைவாயிலையுடைய அழகரும்,—முன்னாள் விண் தலம் கண்டு அருமால் உழந்து ஏங்க—பண்டைக்காலத்தே தேவர்கள் கண்டு பெரிய மயக்கம் அடைந்து பயப்படும்வண்ணம்,—வெகுண்டு எழு நஞ்சு உண்டு அலம் கண்டர்—(திருப்பாற்கடலினின்றும்) கோபங்கொண்டு தோன்றிய விடத்தையுண்டு அமைந்த கழுத்தையுடையவரும்,—உமா பதியார்—உமாதேவியாருக்குத் தலைவரும்,—முடியூடு மதித்துண்டு அலங்கு அண்டரும்—திருமுடியிலே பிறைமதி விளங்கப்பெற்ற (மகா) தேவருமாகிய சிவபிரான்,—ஆ ஆ எனைத்தொண்டு கொண்டனர்—ஆ ஆ (பரிபக்குவமில்லாத) என்னையும் அடிமையாக்கிக் கொண்டனர். எ - று.

அன்பர்களே இவர் பெருங்கருணை இருந்தபடி என்னையென்பது எஞ்சி நின்றது. முதலடியில் அங்கு அசை. விண்டலம் ஆகுபெயர் இழிவு சிறப்பும்மை தொக்கு நின்றது. (௰௩)

கொண்டானனங்கனஞ்சக்கொடும்பார்வைகுரைகடனஞ்
சுண்டானனங்கனம்வாவியுங்காவுமுலாவுமுல்லைக்
கண்டானனங்கனகம்புத்திமுத்தியுங்காட்டவஞ்சு
பிண்டானனங்கனற்கண்ணொடுவாழும்பெருமையென்னே.

(இ-ள்.) அனங்கன் அஞ்சக் கொடும் பார்வை கொண்டான்—மன்மதன் அஞ்சும்பொருட்டுக் கொடிய பார்வையைச் செய்தவரும், குரை கடல் நஞ்சு உண்டான்—ஒலிக்கின்ற கடலில் (உதித்த) விடத்தை யுண்டவருமாகிய சிவபெருமான்,—அனம் கனம் வாவியும் காவும் உலாவும் முல்லைக்கண்தான்—அன்னங்களும் மேகங்களும் (முறையே) தடாகங்களிடத்தும் சோலைகளிடத்தும் சஞ்சரிக்கப்பெற்ற திருமுல்லைவாயிலின் கண்ணே,—அனம் கனகம் புத்தி முத்தியும் காட்ட—அமுது திரவியம் (முதலாகிய இகபர) போகங்களும் வீடுபேறும் (பத்தர்களுக்குத்) தந்தருளும்பொருட்டுத் (திருவுளங்கொண்டு), கனற் கண் அஞ்சு பிண்ட ஆனனமொடு வாழும் பெருமை என்—அக்கினிக்கண்கள் (அமைந்த) ஒற்றுமையாகிய ஐந்து திருமுகங்களோடும் (சிவலிங்கமூர்த்தியாக) எழுந்தருளி யிருக்கின்ற மகிமை (இருந்தபடி) யாது. எ-று.

மூன்றுமடியில் தான் அசை. (கச)

பெரும்புங்கவருமகிழ்ந்தேத்துமுல்லைப்பெம்மான்களவே
விரும்புங்கவருமதியாளர்நட்பைவிழையும்வெறுந்
துரும்புங்கவருமனமிதுதீர்த்தென்றுரிசுளத்தே
யரும்புங்கவருமவைகளுமாயவரும்பொருளே.

(இ-ள்.) பெரும் புங்கவரும் மகிழ்ந்து ஏத்து முல்லைப்பெம்மான் (தேவர்களிலே) சிறந்த அரிபிரமேந்திராதி தேவரும் (மற்றும் யாவரும்) மனமகிழ்ந்து துதிக்கும் திருமுல்லை வாயிலையுடைய கடவுளே,—களவே விரும்பும் கவரும் மதியாளர் நட்பை விழையும்—(பிறர்பொருளை) அபகரித்தலையே இச்சிக்கின்ற இரண்டுபட்ட புத்தியையுடைய தீயோரது சிநேகத்தை விரும்பும்,—வெறுந் துரும்பும் கவரும் என் மனம்—(அன்றி) வறிதாகிய துரும்பையும் (பொருளாகக்கொண்டு) கிருகிக்கும் என்னுடைய (அசுத்த) மனம்,—துரிசு இது தீர்த்து உளத்தே அரும்பு—(ஆதலால்) குற்றமாகிய இதனைப் போக்கி (என்னுடைய சுத்த) மனத்தில் எழுந்தருளியிரு,—உங்கு அவரும் அவைக

ளும் ஆய அரும் பொருளே—உயர்திணைப் பிரபஞ்சமும் அஃறிணைப் பிரபஞ்சமுமாகிய பெரும் பொருளே. எ-று.

கடவுளே பெரும் பொருளே என அடுக்கி யுரைத்துக்கொள்க. இறுதியடியில் உங்கு அசை. (கரு)

அருவினையேனையெவர்புரப்பாரென்றழுங்கிநெஞ்சே
கருவினையேனைகரமின்றித்தென்முல்லைகாவலன்றாண்
மருவினையேனைவினைகளுநீங்கினைமாற்றினையிவ்
வுருவினையேனையுறுதியினியுனக்கென்குறையே.

(இ-ள்.) நெஞ்சே அரு வினையேனை எவர் புரப்பார் என்று அழுங்கிக் கருவில் நையேல்—மனமே பொறுத்தற்கரிய தீவினையை யுடைய என்னை யாவர் காத்தருளுவார் என்று அஞ்சி (இப்) பிறப்பின்கண்ணே தளராதே,—நைகரம் இன்றித் தென் முல்லை காவலன் தாள் மருவினை—வருத்தமின்றி (எளிதாக) அழகிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற முதல்வருடைய திருவடிகளை அடைந்தாயல்லவா,—ஏனை வினைகளும் நீங்கினை—(ஆதலால் ஆணவமலத்தோடு) மற்றைய வினைகளும் ஒழியப்பெற்றாய்,—இவ் உருவினை மாற்றினை—(மாயாகாரியமாகிய) இந்த உடலையும் (அசுத்தம் துக்கம் அநித்தியம் என உவர்த்து) வேறுபடுத்தினாய்,—இனி ஏன் ஐயுறுதி உனக்கு என்குறை—இனி எதன்பொருட்டுச் சந்தேகிக்கின்றாய் (பசுத்துவம் நீங்கிய) உனக்கு யாது குறையுளது. எ-று.

சிவத்துவம் விளங்குதல் சத்தியமே யென்பது எஞ்சிநின்றது—இனம்பற்றி ஆணவமலம் வருவிக்கப்பட்டது. கரு இனையேல் எனப் பிரித்துக் கருவின்கண் வருந்தாதே எனப்பொருள் கூறினும் பொருந்தும். (கசு)

குறைமதியாதவமாற்றுநர்கேண்மைவெங்கோளர்பொய்ம்மை
மறைமதியாதவமாமோபரமதமார்க்கமிந்த
மிறைமதியாதவமாதவர்வாழ்முல்லைமேவுமனை
னிறைமதியாதவமால்விழியானைநினைநெஞ்சமே.

(இ-ள்.) குறை மதியாது அவம் ஆற்றுநர் கேண்மை—(தமது) குற்றத்தை எண்ணுமல் (உலக) வம்புகளைச் செய்கின்ற அறிவிலிகளது நண்பையும்,—வெங் கோளர் பொய்ம்மை மறைமதி—கொடிய குறளையர் (கூறும்) அசத்தியத்தையும் மறுத்தல் செய்வாய்,—பரமத

மார்க்கம் ஆதவம் ஆமோ—புறச்சமய ஒழுக்கம் ஆதவனிலையாகுமா,— இந்த பிறை மதியா—இந்தக் குற்றத்தில் சேருவானவைகக் கோடல் அறிவா,—(ஆதலால் இதனையும் போக்கி)—மாதவர் தவ வாழ் முல்லை மேவும்—பெரிய தவத்தினர் மிகுதியும் தங்கப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும்,—பிறை மதி ஆதவம் அனல் மால் விழியானை நெஞ்சமே நினை—(கலைகள்) நிறைந்த சந்திரனும் சூரியனும் அக்கினியுமாகிய முச்சுடரையும் பெருமைபொருந்திய கண்களாகவுடைய சிவபெருமானை மனமே சிந்திக்கக்கடவாய். எ-று.

இரண்டாமடியில் மதியென்பது முன்னிலை யசைச்சொல். இறுதியடியில் ஆதவமுடைய சூரியனை ஆதவமென வுபசரித்தார். ஆதவம் ஒளி. (கஎ)

நெஞ்சகங்கோடிமறமேபயின்றுநன் னீர்மையின்றி
வஞ்சகங்கோடிசெய்தாலும்பொறுத்தருள்வாயையனே
யஞ்சகங்கோடிரிந்தும்பர்குன்றாமலமுதுசெய்த
நஞ்சகங்கோடிவளைமுத்தமின்முல்லைநாயகனே.

(இ-ள்.) நெஞ்சகம் கோடி—(என்னுடைய) மனம் கோணுதலை ற்று,—மறமே பயின்று நல் நீர்மை இன்றி—பாபச்செய்கைகளிலே பழகி நன்மையாகிய குணம் இல்லாமல்,—கோடி வஞ்சகம் செய்தாலும் பொறுத்தருள்வாய்—அளவுகடந்த கபடத்தைச் செய்தாலும் சகித்தருளும்,—ஐயனே—பிதாவே,—கோள் திரிந்து அம் சகம் உம்பர் குன்றாமல் அமுதுசெய்த நஞ்ச—நக்ஷத்திரங்களும் பிறழ்ந்து அழகிய மண்ணுலகமும் விண்ணுலகமும் நிலைகுலையாவண்ணம் விடத்தையுண்டருளியவனே,—வளை சங்கு ஓடி முத்தம் ஈன் முல்லை நாயகனே—சங்குகள் வாய்ப்புகளிலே ஓடி முத்துக்களை ஈன்றுகின்ற (அகழிகள் சூழப்பெற்ற) திருமுல்லைவாயிலுக்கு முதல்வனே. எ-று. (கஅ)

நாயகங்கைக்கிளைதாய்தெங்கங்காயுதிரு மென்செயுந்
தூயகங்கைக்கிளைநீனமெல்லாமைக்கைவரிகொள்ளுமோ
தீயகங்கைக்கிளையார்சேர்திருமுல்லைத்தென்பதியெங்
நாயகங்கைக்கிளையாற்பயன்கோடைத்தன்மையதே.

(இ-ள்.) நாய் அகம் கைக்கு இளைதாக் தெங்கங்காய் உதிர்ன் நாய் என் செயும்—நாயினிடத்தே கைக்கு முதிராததாகிய தேங்காய் அகப்பட்டால் (அதனை அந்த) நாயானது யாது செய்யற்பாலது,—

தூய கங்கைக்கிளை மீனம் எல்லாம் அச்சுவை கொள்ளுமோ—சுத்த மாகிய கங்காஜலத்திலே வளர்கின்ற மீன்களெல்லாம் அந்த (நறுநீ ரின்) இரதத்தைக் கிருகிக்குமா,— நீ அகம் கைக்கு இளையார் சேர் கிலா முல்லைத் திண் பதி எந்தாய் - நீமையாகிய பாவவொழுக்கத்தி ற்குத் தளராதார் அடையப்பெறாத திருமுல்லைவாயிலின்கண் எழு ந்தருளியிராநின்ற வலிமையுடைய முதல்வரே என்னுடைய பிதா வே,—அகம் கைக்கிளையாற் பயன் கோடல் அத்தன்மையது-(தேவரீர் திருவருள் கைகூடாது) நான் ஒருதலைக்காமத்தாற் பிரயோசனத்தை ப்பெறுதல் அவ்வியல்பிற்றாகும்(எ—று.)நாயகமென்பதற்குத் தலைமை யுடையவரே என இலக்கணையாகப் பொருள் கூறினும் பொருந்தும்.

தன்னகராவதுதென்முல்லையே தன்பணிமணிகண்
மின்னகராவதுவைப்பெண் கொடியிடைவெள்விடைநஞ்
சன்னகராவதுசெற்றதுவாமன்பர் நால்வர்க்கறஞ்
சொன்னகராவதுலாவென வேத்துநந்தோன்றலுக்கே.

(இ-ள்.) தன் நகர் ஆவது தென் முல்லையே—தமது திருப்பதியா வது அழகையுடைய திருமுல்லைவாயிலே,— தன் பணி மின் நகு மணிகள் அரா-தம்முடைய ஆபரணங்களாவன மிக்க விளக்கமுள்ள மாணிக்கங்கள் (அமைந்த தலைகளையுடைய) பாம்புகளே,—வதுவைப் பெண் கொடியிடை - திருமணஞ்செய்யப்பெற்ற திருமணவாட்டி கொடியிடையம்மையே,—வெள் விடை நஞ்சு அன்னகரா அது செற்றதுவாம்-வெள்ளியஇடபமாவது விடம்போலும் (கொடிய) முத லையைக் கொன்றவிஷ்ணுவே,—அன்பர் நால்வர்க்கு அறம் சொன்ன கரா அதுலா எனஏத்தும் நம் தோன்றலுக்கு-சநகர் சநந்தனர் சநாத னர் சநற்குமாரர் ஆகிய நான்கு பத்தர்களுக்கும் சிவதன்மங்களை விள க்கிய (சின்முத்திரைபொருந்திய) திருக்கையை யுடையவரே ஒப்பில் லாதவரே என்று துதிக்கின்ற நம்முடையதலைவராகிய சிவபெருமா னுக்கு (எ—று.) சிவபெருமானுக்கென்பதை முதலின் எடுத்துரைக்க. மூன்றாமடியில் அது பகுதிப்பொருள் விகுதி. (உ௰)

தோன்றற்கரியபொரு ளெளிதேவந்துதோன்றிநற
வூன்றற்கரியகுழன்மாதொடு முல்லையுள்ளிருந்து
கூன்றற்கரியல்பறியா முடிபுண்மைகூறியென்னை
யேன்றற்கரியபனேனே ரழுக்கறுத்தென்பயனே.

(இ-ள்.) தோன்றற்கு அரிய பொருள் எளிதே தோன்றி வந்து, வெளிப்படுதற்கு அருமையாகிய முதற்பொருள் (பெருங்கருணையினாலே திருவுருக்கொண்டு) எளிமையாக வெளிப்பட்டு (இப்பூமியின்கண்) வந்து,—நறவு ஊன்று அல் கரிய குழல்மாதொடு முல்லையுள் இருந்து - தேன்றங்கிய (பூக்களை அணிந்த) இருள்போலும் கரிய கூந்தலையுடைய உமாதேவி சமேதராகத் திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருந்து,--- கூன் தர்க்கர் அறியா முடிபு உண்மை இயல்பு கூறி- குதர்க்கிகளால் உணரப்படாத (சிவாகமத்தின்) ஞானபாதச் சிறப்பிலக்கணத்தை விளக்கியருளி, --- என்னை என்றற்கு --- என்னை (ஒரு பொருட்படுத்தி) அங்கீகரித்தருளினமைக்கு, --- அரி அயன் ஏனோர் அழுக்கறுத்து என் பயன் --- விஷ்ணுவும் பிரமனும் மற்றை இந்திராதி தேவரும் பொறாமைப்படுதலால் யாது பிரயோஜனமாகும் (எ---று.) (உக)

என்பதிகந்தனையேந்துங் குடங்கையிறைவனரு
ளென்பதிகந்தனை முல்லையிற் சேர்ந்திலையித்துடக்கா
மென்பதிகந்தனையன்புவி பொன்பொருளென்றறிவை
தென்பதிகந்தனையைய சொல்லோபுகலேழைநெஞ்சே.

(இ-ள்.) என்பதி—எனக்குத் தலைவரும்,—கம்தனை ஏந்துங் குடங்கை இறைவன் அருள் என்பது இகந்தனை—(பிரம) கபாலத்தைத் தாங்குகின்ற அகங்கையையுடைய ஈசருமாகிய சிவபிரானது கருணையைப் பற்றிலை,—முல்லையிற் சேர்ந்திலை—(அன்றி அவர் எழுந்தருளியிருக்கும்) திருமுல்லைவாயிலை (க்காயத்தால்) அடைந்தாயில்லை; இத் துடக்காம் என்பு அதிகம்—இந்த (அக)ப்பற்றாகிய உடம்பும் மிக்க சுமையாயிருக்கவும்,—தனையன் புவி பொன் பொருள் என்று அறிவை து என்—(புறப்பற்றாகிய) புத்திரனும் பூமியும் திரவியமுமே பொருளென்ன (மதித்துக்) கெடுவது யாது,—ஐய சொல்லோ பதிகந்தனைப் புகல் ஏழை நெஞ்சே—ஐயையோ (இனியாதல் உய்யும்வண்ணம் என்னைத் தமிழ்வேதமாகிய தேவாரத்) திருப்பதிகங்களை (பலகாலேனும்வாக்கினாலே) ஓதக்கடவாய் பேதைமனமே—(எ—று.)

என்பு—ஆகுபெயர்; உம்மைத்தொகை. சொல் ஓ அசைகள். உடம்பும்மிக்கசுமையென்பது "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கலுற்றார்க் குடம்பு மிகை" என்னுந் திருக்குறளானுமுணர்க.

சேவடிவானவரேத்தத்திசை முகன்றேர்செலுத்தச்
சேவடிவானரிதாங்கப் புரஞ்செற்றதென்முல்லையாய்
சேவடிவானரமேவுங் கயிலைச்சிலம்பினர
சேவடிவானறுந்தீந்தமிழ் பாடவுஞ்செய்தருளே.

(இ-ள்.) வானவர் சேவடி ஏத்த—தேவேந்திரன்முதலிய தேவர்கள் சிவந்த திருவடிகளைத் துதிசெய்யவும்,— திசைமுகன் தேர்செலுத்த—பிரமன் (பூமியாகிய) இரதத்தை நடாத்தவும்,— அரி சேவடிவான் தாங்க—விஷ்ணு இடபவடிவங்கொண்டு (திருமேனியைத்) தாங்கவும்; —புரம் செற்ற தென் முல்லையாய்—(பகைவருடைய) நகரங்கள் (மூன்றையும்) அழித்தருளிய அழகுபெற்ற திருமுல்லைவாயிலையுடையவரே;—சே அடி வான்ரம் மேவும்கயிலைச்சிலம்பின் அரசே-சேமரத்தின் அடியிலே குரங்குகள் நெருங்கும் திருக்கைலாசமலையின்கண் எழுந்தருளியிருக்கின்ற நாயகரே,—வடி வான் நறும் தீந் தமிழும் பாடச் செய்தருள்—தெளிவும் மேம்பாடும் அமைந்த நல்லமதுரமாகிய செந்தமிழ்ச் செய்யுள்களும்(ஏனைமுறுகியசெய்யுள்களும்) இயற்றும்படிசெய்தருளும்—(எ—று.)பாடவும் உம்மை எதிரதுதழீஇயது. முறுகிய செய்யுள்கள் சித்திரகவிமுதலியன. (உ௬)

அருளாதரித்திரந்தன்பு செய்வேங்கட்கமருலகோர் [ளா
பொருளாதரித்திரந்தானிற்குமோமுல்லைப்பொன்னையுள்
மருளாதரித்திரந்தேர்ந்தறியா ரம்மடவரையே
வெருளாதரித்திரந்தோ வினைகாளிங்குமேவரிதே.

(இ-ள்.) அருள் ஆதரித்து இரந்து அன்பு செய் வேங்கட்கு —கருணையைப் பாதுகாத்து யாஜித்துப் பத்திசெய்கின்ற எங்களுக்கு,—அமரர் உலகு ஓர் பொருளா—தேவருலகம் ஒரு பொருளாகுமா,—தரித்திரந்தான் நிற்குமோ—(இவ்விடத்து) நல்குரவானது நிலைபெறுமா,—முல்லைப் பொன்னை உள்ளா மருள் ஆதர் இத் திரம் தேர்ந்து அறியார்—திருமுல்லைவாயிலின் கண் எழுந்தருளியிருந்து (புத்திமுத்திகளைத் தந்தருளும் பரம்) பொருளைச் சிந்தியாத மயக்கத்தையுடைய மடவோர் இந்தத்துணிவைத் தெளிந்துணரார்,—(ஆதலால்) —அம் மடவரையே அந்தோ வினைகாள் வெருளாது அரித்திர்—அந்தஅறிவிலிகளையே ஐயோ கன்மத்தொகுதிகளே அஞ்சாமற் கெடுங்கள்,—இங்கு மேவு அரிது—இங்கே(எங்களிடத்தே) அடைதல்(உங்களுக்குப்)பொ

ருந்தாது—(எ—று.) அமராருலகு அமருலகுஎனக் கடைக்குறைந்துநி ன்றது. மேவுதல் மேவு என முதனிலைமாத்திரையாகநின்றது. (உ௫)

மேவருந்தென்றலுக்காற்றா தென்மான்வெம்பிநைந்துத
யேவருந்தென்றனக்கார்துணையாவரென்றேங்கியிந்த[னி
நோவருந்தென்றயனேன் விதித்தானென்றுநொந்தழுமா
பாவருந்தென்றமிழ்முல்லைப் பிரானருள்பாலிப்பையே[ம்

(இ-ள்.) என் மான் மேவரும் தென்றலுக்கு ஆற்றாது—என்னு டைய பெண்ணானவள் விரும்பத்தக்க தென்றற்காற்றுக்குச் சகிக்கா மல்,—வெம்பி நைந்து தனியே வருந்து என்றனக்கு—வாடித் தளர் ந்து தனிமையாகத் துன்பப்படுகின்ற எனக்கு,—ஆர் துணை ஆவர் எ ன்று ஏங்கி-யாவர் சகாயஞ்செய்வார் என்று இரங்கியும்,—இந்த நோ வு அருந்து என்று அயன் ஏன் விதித்தான் என்று நொந்து அழும் ஆ ல்—இந்த நோயை அநுபவிப்பாயெனப் பிரமன் எதன்பொருட்டுப் படைத்தான் என்று வருந்தியும் அழுவாள்,—(ஆதலால்)—அரும் தெ ன் தமிழ்ப்பா முல்லைப் பிரான் அருள் பாலிப்பை—அரிய செந்தமி ழ்ப்பாடல்களையுடைய திருமுல்லைவாயிலையுடைத்தாகிய கடவுளே க ருணைசெய்யும் (எ—று.) ஆல் அசை. [நற்றாயிரங்கல்] (உ௬)

பாலிவடகரைகோடியுமொன் றெனப்பார்ப்பவர்வாழ்
பாலிவடகரைமுல்லைப் பிரான்பழிதீரவருள்
பாலிவடகரைவேலெம ரென்னினைப்பாரெனுமைம்
பாலிவடகரையன்னையர் நேர்ந்தும்பசப்புறினே.

(இ-ள்.) இவ் அடகு பால் அரை கோடியும் ஒன்று எனப் பார்ப்ப வர் வாழ்—இந்த இலைக்கறியும் பாலன்னமும் அரைப்பணமும் கோ டிபொன்னும் ஒருசமம்மென்று நோக்கும் பெருந்துறவினர்வசிக்கும், பாலி வடகரை முல்லைப் பிரான்—பாலி நதியின் வடகரையிலுள்ள திருமுல்லைவாயிலை யுடைய கடவுளே,—பழி தீர அருள்பாலி—(இப்) பழிமொழி ஒழியும்வண்ணம் கருணைசெய்யும்,—வடகு அரை வேல் எமர் என் நினைப்பார் எனும் ஐம்பால் இவள்—தோலை அரையிலுடை ய வேலையேந்திய எங்கள் சுற்றத்தார் யாது கருதுவாரோ வென்று நி னைக்கின்ற அளகத்தையுடைய இத்தலைவியானவள்,—அன்னையர் த கரை நேர்ந்தும் பசப்பு உறின்—தாய்மார் ஆட்டுக்கடாவை (முருகக் கடவுளுக்குப் பலிகொடுப்பதாகப்) பிரார்த்தித்தும்பசலைபூத்தலை

அடைவளானல்(எ—று.)என்னை செய்யலாம் ஆதலால் என்பது எஞ்சிநின்றது. ஒழியும் வண்ணம் கருணைசெய்யுமென்பதை இறுதியிற் கூறிக்கொள்க. முதலடியில் இவ்வடகு எனற்பாலது இவடகு என வகரமெய் விகாரத்தாற் றொக்கது. அடகாலாகிய கறியை அடகென்றும் பாலாலாகிய அன்னத்தைப் பாலென்றும் உபசரித்தார். மூன்றாமடியில் வடகமென்பது வடகு என ஈறுகெட்டது. [அலரறிவுறுத்தி வரைவுகடாதல்] (உகூ)

உறுமாசிலாமணிமாயையென்றேகொள்ளுயிர்க்கிவற்றைத்
தெறுமாசிலாமணிவள்ளல்வெற்பாவுனைத்தேடிக்கண்ணீ
ரறுமாசிலாமணிவைத்த மண்பாவையன்னேனெனுஞ்சீர்
பெறுமாசிலாமணிகேட்குமுன் சோரும்பேதையின்றே.

(இ-ள்.) மண் இ மாயையே ஆசு உறும் இலாம் என்றுகொள் உயிர்க்கு—(காரியமாகிய) பிருதிவிமுதலிய தத்துவங்களும் (காரணமாகிய) இந்தமாயையுமே குற்றம்பொருந்திய வீடாமென்றுகொள்ளுகின்ற (பரிபக்குவமுடைய) ஆன்மாக்களுக்கு,—இவற்றைத் தெறும் மாசிலாமணிவள்ளல் வெற்பா—காரியகாரணங்களாகிய இவைகளைக் கெடுத்தருள்கின்ற மாசிலாமணியீசருடைய மலையின்கண் இருக்கும் தலைவரே,—உனைத்தேடிக் கண்ணீர் அறுமா—உம்மைத் தேடி(க்கண்டு கண்(களினின்றும் வழிகின்ற)நீரானது ஒழியப்பெறுவாளா—சிலா மணிவைத்த மண்பாவை அன்னேன் எனும்-கல்லின்கண் அலங்கரித்து வைத்த மண்ணாலாகிய பிரதிமைபோலும் (பயனற்ற) யான் என்று சொல்லித் துக்கப்படுகின்ற,—சீர் பெறும் ஆ சிலஆம் மணி கேட்கும் முன் சோரும் இப்பேதை இன்று —மகிமைபெற்ற பசுக்களினது சிலவாகிய மணிகளின் ஓசை கேட்குமுன்பே தளர்கின்ற இத்தலைவியானவள் இற்றைநாளிலே (எ—று.) நீரானது ஒழியப்பெறுவாளாவென்பதை இறுதியிற் கூறிக்கொள்க. முதலடியில் மண் உபலக்கணம். இம்மாயை இமாயையென மகரவொற்றுத் தொக்கது. இல்லாமென்பது இலாமெனவும், மூன்றாமடியில் மண்ணியென்பது மணியெனவும், இடைக்குறைந்து நின்றன. இறுதியடியில் சிலவாமென்பது சிலாமென அகரம் தொக்கது. மணிஆகுபெயர். துக்கப்படுகின்ற தளர்கின்ற தலைவியென்க. [இரவுக்குறி நேரும்பாங்கி தலைவிபருவரலுரைத்தல்.] (உஎ)

இன்றகலங்கலவாதொழிந் தாலுமெடுத்தசிலைக் [ன்
குன்றகலங்கலநன்கொன்றையேனுங்கொடுத்தியன்றே

மன்றகலங்கலனே தூணிகட் புனல்வாரவிடா
நின்றகலங்கலர்காணுக முல்லைதிருமலனே.

(இ-ள்.) இன்று அகலம் கலவாது ஒழிந்தாலும் — இற்றைநாள்
(எங்கள்) மார்பத்தை (நீர்) அணையாது விடினும்,—எடுத்துமிலைக் குன்
று—மேருமலையைவில்லாகக் கைக்கொண்டவரே,—கலங்கலம்—(யா
ங்கள்) மயங்கமாட்டோம்,—நன் கொன்றை எனும் கொடுத்தி—(நீர்
அணிந்துள்ள) நல்லகொன்றைப் பூமாலையாயினும் தந்தருளும்,—அ
ன்றேல்—அங்ஙனம தந்தருளாவிடில்,— மன்ற—அம்பலத்தையுடை
யவரே, கலம்கலனே தூணி கட்புனல் வாரவிடா நின்று அகலம் - கல
னே தூணியோ(என்னும் அளவுபெறுமென்னும்)கண்ணீரை ஒழுக்கிக்
கொண்டு (உமது சந்நிதியைவிட்டு)விலகமாட்டோம்,— கலர்காணுத
முல்லைதிருமலனே—(புறச்சமயிகளாகிய கீழ்மக்களால் உணரப்படா
த திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற (அநாதி) முத்த
ரே (எ—று.) திருநாமங்களை அடுக்கிமுதலின் உரைத்துக்கொள்க.
(௨௪)

[மாலைவிருப்புரைத்தல்.]

நிருதியமனனலிந்திரனாதியர்நேர்ந்திறைஞ்சிக்
கருதியமனனார்ச்சிக்க நல்குங்கடிமுல்லைத்தலை
வருதியமனனல்காதி புலாவரைவாழ்த்துவமிப்
பருதியமனனயப்பேமலமலப்பாழ்ங்குழிக்கே.

(இ-ள்.) நிருதி யமன் அனல் இந்திரன் ஆதியர் நேர்ந்து
இறைஞ்சி—நிருதியும் இயமனும் அக்கினியும் தேவேந்திரன் முத
லிய தேவரும் எதிர்ப்பட்டு வணங்கி—அர்ச்சிக்க,— மனன் கருதிய
நல்கும் கடிமுல்லைத் தலைவர் - புரிந்த வாளிமேல மனதில் எண்ணி
யவைகளை (எண்ணியபடி அவருக்குக்) கொடுத்தருளுகின்ற காவலை
யுடைய திருமுல்லைவாயிலுக்கு நாயகரும்,—உதியமனனர் மரபு ஆ
தியுலாவரை வாழ்த்துவம் - சேரமான் பெருமாணாயனார் (திருக்கை
லாசமலை யின்கண்) ஏற்பித்த ஆதித்திரு வுலாவையுடையவருமா
கியசிவபிரானைத் துதிக்கப்பெற்றோம்,—இப்பர் உதியம் - (ஆதலால்
இனி) இப்பூமியின்கண்ணே பிறக்கமாட்டோம்,—மலப் பாழ்ங்குழி
க்கு மனல் நயப்பேம் அலம் - (அன்றிப்பசியையுடைய பாழ்நரகத்
திற் பொருந்துதலை விரும்பவுமாட்டோம் (எ—று.) மோக்ஷவீட்
டுலகத்தையே அடைவோமென்பது எஞ்சிநின்றது. முன்றமடி ஈர
ண்காமடிகளில் மன்னான் மன்னல் இடைக்குறை. குழிக்கென்பது
(௨௫)

உருபுமயக்கம்.

பத்தர்களாகிய ஒருவருக்கத்தை யுடையவருமாகிய சிவபெருமான், முல்லை ஊரில் வந்து இ நாள் அறுத்தான்-திருமுல்லைவாயிலாகிய திருப்பதியின்கண் எழுந்தருளி இக்காலத்தே கெடுத்தருளினார் (எ—று) சிவபெருமான் பிறவியைக் கெடுத்தருளினாரெனக்கூட்டுக. இந்நாள் இநாளென நகரவொற்றுத் தொக்குநின்றது. (௯௧)

வந்தனையாற்றமவாக்கொண்டு தாளிணைவாழ்த்துமெய்த்த
வந்தனையாற்றமர்வார்க்கருள்வான் றருமையல்கொண்டு
வந்தனையாற்றமர்காணிலென்று மென்றுவைதெனைத்தை
வந்தனையாற்றமருண்டே னருண்முல்லைவான்பொருளே.

(இ-ள்.) இணைத்தாள் தமவாக் கொண்டு வந்தனையால் வாழ்த்தும்—இரண்டு திருவடிகளையும் தம்முடையனவாக(மனசின்கண்ணே)பற்றி (க்காயிக) வணக்கத்தோடு (வாக்கினாலே) புகழ்கின்ற,—மெய்த்தவம் தன் ஐ ஆற்று அமர்வார்க்கு அருள்வான் தரும் மையல் கொண்டு வந்தனை ஆல்—உண்மைத்தவத்தினது அழகிய நெறியிலே தங்குகின்ற தொண்டர்களுக்குக் கருணைசெய்வாராகிய சிவபெருமான்கொடுத்த மயக்கம்பூண்டு வந்தாய்,—தமர் காணில் என்றும் என்று எனை வைது தைவந்து—(இதனை நம்முடைய) சுற்றத்தார் கண்டால்யாதாகுமென்று சொல்லி என்னைத் திட்டி. (முதுகு) தைவந்து,—அனை ஆற்ற மருண்டேன்—மாதாவானவள் சாந்தஞ்செய்யவும்மயங்கினேன்-, முல்லை வான் பொருளே அருள்—(ஆதலால்) திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற பரம்பொருளே கருணைசெய்யும் (எ—று.) மூன்றாமடியில் ஆல் அசை. மெய்த்தவம் தன் ஐயாற்று அமர்வார்க்கு என்பதற்கு—உண்மைத்தவத்தைத் தமது திருவையாற்றில்வழிபடுவர்க்கெனப்பொருள் கூறினும் பொருந்தும். [சிவபெருமானைப் பவனியிற் கண்ணுற்று மால்கொண்டமாது சொல்லியது.] (௯௨)

பொருதவிசாகரஞ்சத்தியுங் கும்பனும்பொற்பழிக்க
விருதவிசாகரந்தானும் வருந்துமெய்யன்பருள்ள
மொருதவிசாகரந்தென்முல்லை யாவுடையாரருணா
ரிருதவிசாகர நெஞ்சே யல்லாற்செயலியாதுனக்கே.

(இ-ள்.) பொருத விசாகர் அம் சத்தியும் கும்பனும் பொற்பு அழிக்க—(சூரபன்மனோடு)பொருத முருகக்கடவுளுடைய அழகிய வேற்படையும் அகத்திய மகாமுனிவரும்(முறையே கலக்கியும் உண்டும்பொ)

விவினைக் கெடுத்தமையால்,—விருது அவி சாகரந்தானும் வருத்தும்-வெற்றியழிந்த கடலும் துன்பப்படுத்தும்,—மெய் அன்பர் உள்ளம் ஒரு தவிசு (ஆ)—உண்மைநாயன்மாருடைய இருதயமானது ஒப்பற்ற ஆதனமாகவும்,—தென் முல்லை ஆகரம் ஆ உடையார் அருளார்—அழகையுடைய திருமுல்லைவாயிலானது எழுந்தருளியிருக்கும் தானமாகவுமுடைய சிவபெருமான் கருணைசெய்வாருமல்லர்,—நெஞ்சே இரு தவி கர சா அல்லால் உனக்குயாதுசெயல்—(ஆதலால்) மனமே இருப்பாயாக (அல்லது) இளைப்பாயாக (அல்லது) ஒளிப்பாயாக (அல்லது) சாவாயாக (இங்ஙனம்) அன்றி உனக்கு என்னை தொழிலிருக்கின்றது (எ—று.) [தலைவி நெஞ்சொடு புலத்தல்]. (கூக)

யாதவமாதவனாரணனா ரின்னுநாடியறி
யாதவமாதவடன்பால் வளரெழின்முல்லையினை
யாதவமாதவமன்றோ வென்னேரிரங்காதிருத்தல்
யாதவமாதவர்வெற்பா வறியவியம்புகவே,

(இ-ள்.) யாதவ மாதவன் ஆரணனார் இன்னும் நாடி அறியாதவ — யாதவ குலத்திற் பிறந்த விஷ்ணுவும் பிரமனுமாகிய இருவரும் இன்னமும் தேடிக் காணப்படாதவரே; — மாது அவள் தன்பால் வளர் எழில் முல்லையின் ஐயா - உமாதேவியாருடைய பாகத்தில் எழுந்தருளியிருக்கும் அழகையுடைய திருமுல்லைவாயிலுக்கு நாயகரே; — தவமா தவம் அன்றோ என் நேர் இரங்காது அவம் இருத்தல் யாது — (எளியேன் செய்தல்) தவமோ (அல்லது) அவமோ (அதனை நோக்காது பெருங்கருணையினாலே) அடியேன் முன்னே (எழுந்தருளித்) திருவருள்செய்யாது சும்மாவிருத்தல் என்னை, — மாதவர் வெற்பா - பெரியமேருமலையை வில்லாகவுடையவரே, — அறிய இயம்புக—தெளியும் வண்ணம் சொல்லியருளும்(எ—று.)அவள் பகுதிப் பொருள்விகுதி. திருநாமங்களை அடுக்கி யுரைக்க. (கூச)

இயம்புகவேதனையா மந்திரப்பொருளென்றுசிறைக் [?]ர்
கயம்புகவேதனைவீழ்த்தோன் புகழ்முல்லைக்கண்ணிருவ
பயம்புகவேதனை நாடரிதாவளர்பண்ணவன்கா
லியம்புகவேதனையுற்றேற் கருண்மிகவைப்பதென்றே.

(இ-ள்.) வேத அனையாம் மந்திரப் பொருள் இயம்புக என்று, வேத மாதாவாகிய பிரணவப்பொருளைச் சொல்லக்கடவாயென்று (வினவியதற்குத் தடுமாறினமைபற்றி)—சிறைக்கயம் புக வேதனை வீழ்

த்தோன் புகழ் முல்லைக்கண்—காவற் கூடமாகிய அகழியினுள்ளே செல்லும்பொருட்டு நான்முகக்கடவுளை அமிழ்த்திய அறுமுகக்கடவுளாலே துதிக்கப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண்ணே,—இருவர் பயம் புகத் தனைநாட அரிதாவே வளர்பண்ணவன்—பிரமவிஷ்ணுக்கள் இருவரும் அச்சமுற்றுத் தம்மை ஆராய்ந்து காணுதற்கு அருமையாகவே ஓங்குகின்ற (முதற்) கடவுளே,—காவி அம்பு உக வேதனை உற்றேற்கு மிக அருள் வைப்பது என்று —(மன்மதனுனவன்) கருங்குவளைமலராகிய பாணத்தைத் தொடுத்தல் பற்றி வருத்தமடைந்த என்பொருட்டு (நீர்) பெருங்கருணைசெய்தல் எந்நாளோ (எ—று.) யானறியேனென்பது எஞ்சிநின்றது. முதலடியில் வேதவனேவேதனையென அகரந்தொக்கியும், இடைக்குறைந்தும் நின்றன. இறுதியடியில் உருக்கவென்னும் பிறவினை உகவெனத்தன் வினைபோல நின்றது. [தலைவனீடத்தலைவி வருந்தல்.] (௬௭)

வைப்பதுமத்தகமீதோர் விழிமுல்லைமாநகர்வ
சிப்பதுமத்தகயத்துரி போர்ப்பதுதேவிசர
ணப்பதுமத்தகம்வைப்பார்க் கறுப்பதுநான்கிரண்டு
முப்பதுமத்தகவாளர்க் கென்றோமயன்மூண்டதுவே.

(இ-ள்.) மத்தகம்மீது வைப்பது ஓர் விழி—நெற்றியிலே தரிப்பது (அக்கினியாகிய) ஒருகண்ணே,— வசிப்பது மாமுல்லைநகர் —எழுந்தருளியிருப்பது பெரிய திருமுல்லைவாயிலென்னுந் திருப்பதியே,—போர்ப்பது மத்த கயத்து உரி— (திருமேனியிற் போர்த்துக்கொள்வது மதத்தையுடைய யானைத்தோலே,—தேவி சரணப் பதுமத்து அகம்வைப்பார்க்கு-(தம்முடைய அருட்சத்தியாகிய) உமாதேவியாரது பாதாரவிந்தங்களிலே சிந்தையைச் செலுத்தும் அடியவருக்கு, —அறுப்பது முப்பதும் நான்கு இரண்டும்—கெடுப்பது முப்பத்தாறு தத்துவங்களுமே,—அத்தகவாளர்க்கு மயல் மூண்டது என்றோ- அந்த மேம்பட்ட குணமுடைய சிவபிரான் பொருட்டு மோகம் மிகுந்தது என்னையோ (எ—று.)பெண்ணரசி சொல்லுவாயாக வென்பது எஞ்சிநின்றது. தத்துவங்கள் முப்பத்தாறுவன, ஆன்மதத்துவம் இருபத்துநான்கும், வித்தியாதத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்துமெனவிவை. [பாங்கி தலைவி குறிப்பறிதல்.] (௬௮)

மூண்டவிக்காமன்றனைக் கம்பலர்மொழிநாணழிவின்
னிண்டவிக்காமன்னவைத்தமை போர்நெடுங்காமமகத்

நீண்டவிக்காமன்வருத்தாதெமைக்கொக்கிருண்மிடற்றி
றீண்டவிக்காமன்மிசைதடஞ்சூழ்முல்லைச்சிற்பரனே. [ற்

(இ-ள்.) மூண்ட இக் காமன்றனக்கு அம்பு அலர் மொழி நாண் அரி வில் நீண்ட இக்காம்—(போரின்) மூளுதலுற்ற இந்த மன்மதனுக்கு அம்பு மலரும் சொல்லுகின்ற நாணி வண்டும் வில்லு நெடியகரும்பும் ஆகும்,—அன்ன வைத்து அமை போர் நெடுங் காமம் அகத்து எமை வருத்தாது ஈண்டு அவிக்காம் மன்—அப்படிப்பட்ட கருவிகளைப் பொருத்தி நடாத்தும் போரால் மிக்க காமநோய் மனதிலே (தங்கி) எங்களைத் துன்பஞ்செய்யாமல் விரைவிலே கெடுக்கமாட்டோம் கெடுத்தால் உடனே கருணைக்கு இலக்காவோம்,—கொக்கு இருள் மிடற்றில் திண்ட விக்காமல் மிசை தடம் சூழ்—கொக்குகள் மீன்களைக் கழுத்திலே தண்டும்படி விக்கிக்கொள்ளாது விழுங்கப்பெற்ற வாவிகள் சூழ்ந்த,—முல்லைச் சிற்பரனே-திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற ஞானவடிவாகிய கடவுளே (எ—று.) மூன்றாமடியில் மன் ஒழியிசை. (௩௭)

பரம்பரன்பண்டரங்கன்முல்லைவாணனெண்பாற்குணமு
நிரம்பரன்பண்டரங்கன்றேட நீண்டநிமலனெண்டிக்
கொரம்பரன்பண்டரங்கண்டோதும் பத்திரவுத்தமயாழ்
நரம்பரன்பண்டரங்கஞ் சேரருட்கடனற்றெய்வமே.

(இ-ள்.) பரம்பரன்—முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளும்,—பண்டரங்கன்-பாண்டரங்கமென்னுந் திருக்கூத்தையுடையவரும்,—முல்லை வாணன்—திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்றவரும்,—எண்பாற் குணமும் நிரம்பு அரன்—எண்வகைக் குணங்களு நிறைந்த அரனென்னுந் திருநாமத்தையுடையவரும்,—அரங்கன் பண்டு தேட நீண்ட நிமலன்—திருவரங்கஸ்தலத்தையுடைய திருமால் பண்டைக்காலத்தே தேடும்படி (அக்கினிப்பிழம்பாக) ஓங்கிய (அநாதி) முத்தரும்,—எண் திக்கு ஓர் அம்பரன் - எட்டுத்திசைகளையும் ஒருவஸ்திரமாகக் கொண்டவரும்,—பண் தரம் கண்டு ஓதும் பத்திர நரம்பு உத்தம யாழர் அன்பு—பண்களின் முறைமை நோக்கிப் பாடுகின்ற திரண்ட தந்திகள்பொருந்திய உத்தமமுள்ள யாழ்ப்பாணரது பத்தி(வலையிற்படுவோரும்),—அண்டர் அங்கம் சேர் அருட்கடல்—(பிற்காலத்துள்ள தேவர்கள் செருக்கடையாதபடி பண்டைத்)தேவர்களுடைய எலும்புகளையணிந்த கிருபாசமுத்திரமுமா

கிய சிவபெருமானே,—நம்தெய்வம்-நம்முடைய கடவுளாம்(எ—று) எண்வகைக் குணங்களாவன, அளவிலாற்ற லுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல் இயற்கையுணர்வினனாதல், தன்வயத்தனாதல், முற்றுமுணர்தல், பேரருளுடைமை, தூயவுடம்பினனாதல், வரம்பிலின்பமுடைமை எனவிவை.

(க.அ)

நந்தமருமந்தமெய்வாழ்வுமற்றைநலங்களுந்தி
கந்தமருமந்தவான்புகழ்சேர்முல்லைக்கண்ணிருந்த
பந்தமருமந்தமெல்விரல்பாகன்பகைவருரஞ்
சிந்தமருமந்தனைப்போலுஞ்சூலத்திருக்கரனே.

(இ-ள்.) நந்தம் அருமந்த மெய் வாழ்வும் மற்றை நலங்களும் - நம்முடைய அருமருந்தன்ன நித்தியமாகிய (முத்திச்) செல்வமும் ஏனை (இகபர) போகங்களும்,---திக் அந்தம் மரும் அந்த வான் புகழ் சேர் முல்லைக்கண் இருந்த - திசைகளினது முடிவிடத்தைச் (சென்று) பொருந்திய அந்த மேம்பட்ட கீர்த்திபெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருந்த,--- பந்து அமரும் அந்தம் மெல் விரல் பாகன் - பந்து பொருந்திய அழகையுடைய மிருதுவாகிய விரல்களையுடைய கையையுடைய உமாதேவியாரைப் பாகத்திலுடையவரும்,---பகைவர் உரம் சிந்த மருமந்தனைப் போலும் சூலத் திருக்கரனே - பகைவருடைய வலிமை கெடும்பொருட்டு (அவர்கள்) மார்பத்தைப் பிளக்கின்ற முத்தலைப்படையை (ஏந்திய) திருக்கையை யுடையவருமாகிய சிவபிரானே (ஆவர்) (எ—று.)

இருந்த சிவபிரானே செல்வமும் போகங்களும் ஆவரெனக் கூட்டுக. இரண்டாமடியில் மருவுமெனற்பாலது மருமெனநின்றது. மெல்விரல் அன்மொழித்தொகை. இறுதி ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது.

(ககூ)

திருமுலைவாயின் மருவுமெந்தாயிளஞ்சேய்க்கழகு
தருமுலைவாயின்வைத்தாலன்றி யுண்ணுந்தகுதியுண்டே
வருமுலைவாயினற்பாட்டமுந்தா தெனையாண்டமனை
மிருமுலைவாயின்மெழுகாயுருகச்செய்தென்றுகொள்ளே.

(இ-ள்.) திருமுலைவாயில் மருவும் எந்தாய் - திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற என்னுடைய பிதாவே,--- இளஞ்சேய்க்கு அழகு தரும் முலை வாயின் வைத்தால் அன்றி உண்ணும் தகுதி

உண்டோ—இளமைப் பருவமுள்ள குழந்தையின்பொருட்டு (அன்னையானவள் இரங்கி) அழகுபொருந்திய தனத்தை (அக்குழந்தையினது) வாயில் வைத்தாலல்லது (பசிநீங்கும் பொருட்டுப் பாலைக்) குடிக்குந்தன்மை யுளதோ [ஒருநாளும் இல்லையென்றபடி] —,உலைவு ஆய் அரும் இனற் பட்டு அழுந்தாது எமை ஆண்டு—(அதுபோலப் பிறவியின்கண்) அச்சமுடைத்தாய்ப் பெருந்துன்பக் கடலிலே அகப்பட்டு மூழ்காது (கருணை கூர்ந்து குருமூர்த்தியை அதிட்டித்து வலிதிலே) எங்களை அடிமை பூண்டு,—மனம் இரும் உலை வாய் இன் மெழுகு ஆய் உருகச்செய்து—மனசானது (கொல்லனது) பெரிய உலைமுகப்பட்ட இனிய மெழுகுபோலும் இளகச்செய்து,—ஏன்றுகொள்—(உமது திருவடிக்கீழ்த் தூங்கும்படி) அமைத் தருளும் (எ—று.) முதலடியில் முல்லை முலையென இடைக்குறைந்து நின்றது. (௪0)

கொள்ளுந்திகம்பரமுல்லைப்பிரான்பைங்குழவிநிலா
வெள்ளுந்திகம்பரவுஞ்சடையான்வெற்பினீர்ச்சுழியைத்
தள்ளுந்திகம்பரநேர்களங்கண்ணிதருநலத்திற்
குள்ளுந்திகம்பரமெல்லாமதிப்பினுமொப்பல்லவே.

(இ-ள்.) திக் அம்பரம் கொள்ளும் முல்லைப் பிரான்—திக்குகளை வஸ்திரமாகத் தரிக்கின்ற திருமுல்லைவாயிலையுடைய கடவுளும்,—பைங் குழவி நிலா வெள் உந்தி கம் பரவும் சடையான் வெற்பின்—மிக்க இளமையாகிய சந்திரனும் வெண்மையாகிய கங்காநதியும் (நகு) சிரமும் (தங்கிய) விரிந்த சடையை யுடையவருமாகிய சிவபிரானது மலையின்கண்ணே,—நீர்ச் சுழியைத் தள் உந்தி கம்பு அரம் நேர் களம் கண்ணி தரு நலத்திற்கு—நீரிலே (தோன்றிய) சுழியை (ச்சமமல்லவென்று) தள்ளுகின்ற நாபியையும் (முறையே) சங்கையும் அரத்தையும் போன்ற கழுத்தையும் கண்ணையுமுடைய தலைவி தரப்பெற்ற இன்பத்திற்கு,—உள்ளுந்து இகம் பரம் எல்லாம் மதிப்பினும் ஒப்பல்ல—(யாவரும்) மதிக்கத்தக்க பூவுலகத்தும் தேவுலகத்தும் (பொருந்திய இன்ப) முழுவதையும் (அளவுசெய்து) கருதினாலும் ஒரு சமமாகாது (எ—று.) ஆதலால் மனமே இதனைச் சிந்திப்பாயாக வென்பது எஞ்சி நின்றது. இறுதியடியில் உள்ளுமென்பது உள்ளுந்தென நின்றது எதுகைநோக்கி. [கலவியின் மகிழ்தல்] (௪௧)

அல்லியந்தாமரையாளிடமோர்பொழுதவ்வளம்போய்
வல்லியந்தாமரையாளிடமாமதைவாழ்த்திடன்மின்
பல்லியந்தாமரையாமத்தினுங்கண்படாமுல்லையார்ப்
புல்லியந்தாமரையாசையின்வாழ்த்தும்புலவர்களே.

(இ-ள்.) அம் அல்லித் தாமரையாள் இடம்—சீரினிடத்தாகிய அகவிதழ்களையுடைய செந்தாமரைப்பூவை ஆதனமாக வுடைய இலக்குமியிருக்கும் இடமாகிய நாடானது,—ஓர் பொழுது அவ்வளம் போய் வல்லியம் தாம் மனை ஆள் இடம் ஆம்—ஒருகாலத்தில் அந்தப் பொலிவு கெட்டுப் புலியும் தாவுகின்ற மனையும் ஆளுகின்ற இடமாகியகாடாகும்,—அதைவாழ்த்திடன்மின்—(ஆதலால் அநித்தியமாகிய) அவ் (வுலகச்சிறு) வாழ்வைப்பற்றிப் புகழாதேயுங்கள்,—பல் இயந்தாம் அரை யாமத்திலும் கண்படா முல்லையார்ப் புல்லி—பலவித வாத்தியங்களானவை அர்த்தயாமத்திலும் உறங்குதலின்றி (முழங்குந்) திருமுல்லைவாயிலை யுடையானை அடுத்து,—அம் தாமரை ஆசையின் வாழ்த்தும் புலவர்களே—அழகிய சோதிவடிவாகிய (அச்) சிவபெருமானைச் சிரத்தையோடு (நித்தியமாகிய முத்திப் பெருவாழ்வைவேண்டிப்) புகழுங்கள் அறிஞர்களே (எ—று.) இரண்டாமடியில் தாவுமென்பது தாமெனநின்றது. முல்லை ஆர்ப் புல்லி அம் தாமரை என்பதற்கு திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற ஆத்திமலரினது புறவிதழாலாகிய அழகிய மாலையை யுடையவனை என்று பொருள் கூறினும் பொருந்தும். (௩௨)

புலத்தலைவாவினியாற்றேமென்றெய்துநர்புந்திவெந்தீப்
புலத்தலைவாவினுங்கைகொடுப்பார்முல்லைப்பூவைவிடு
புலத்தலைவாவிநன்னீர்விளையாடிப்புணருதும்வா
புலத்தலைவாவிங்ஙனென்றருள்வாய்மலர்ப்பூங்கொடியே.

(இ-ள்.) புலத்து அலைவு ஆ இனி ஆற்றேம் என்று எய்துநர் புந்தி - அறிவின்கண்ணே சஞ்சலமுண்டாக (அப்பொழுதே) இனிப் பொறுக்க மாட்டோமென்று (அடைக்கலமாக) அடைகின்ற பத்தர்களது புத்தியானது,—வெந்தீப் புலத்தலை வாவினும் கை கொடுப்பார் முல்லைப் பூவை - வெவ்விய தீய விடயக் (கட) விலே (வீழும்படி ஒருபோது) தாவினும் (அங்ஙனம் தாவவொட்டாது தடுத்தும்

கருணைக்) கையைத் தந்தருள்வாராகிய சிவபெருமானது திருமு ல்லைவாயிலின்கண் இருக்குந் தலைவி, — புலத்தலை விடு - ஊடுதலை ஒழி (ஒழிந்தபின் முதலிலே),— வாவி நல் நீர்ப் புணருதும் விளையாடி - தடாகத்திலுள்ள சுத்த ஜலத்திலே சேர்ந்து விளையாடுவோம், — தலைவா மலர்ப் பூங் கொடி வாய் இங்ஙன் புல் வா என்று அருள்— (பின்பு) தலைவரே மலர்களையுடைய பொலிவாகிய கொடிகள் செறிந்த இவ்விடத்தே தழுவும் வண்ணம் வருவீராக என்று (நீயே) சொல்லுவாயாக (எ - று.) எனத் தலைவன் கூறினனென்பது எஞ்சி நின்றது. இறுதியடியில் புல்லவென்பது புலவென இடைக் குறைந்தது. [இடம்பெற்றுத்தழால்.] (சந)

கொடியானையந்தநல்லூரனையாண்டநங்கோனைமதக்
கொடியானையந்தகனைச்சீறிமுல்லையுட்கோவைமுல்லைக்
கொடியானையந்தபவாண்டானையீண்டுறற்குக்கரைந்தாற்
கொடியானையந்தமுள்ளாய்க்கிடுவேன் கொளுமூன்பலியே.

(இ-ள்.) கொடி ஆனை அந்த நல்லூரனை ஆண்ட நம் கோனை- கொடியின்கண் இடபத்தையும் உயர்ச்சிபெற்ற திருநாவலூராகிய சுந்தரமூர்த்தி நாயனுரையும் ஆண்டருளிய நம்முடைய தலைவரும், —மதக் கொடியானை அந்தகனைச் சீறு - மன்மதனாகிய கொடியனையும் இயமனையும் கோபித்த,— இ முல்லையுட் கோவை முல்லைக் கொடியான் ஐயம் தப ஆண்டானை-இத்திருமுல்லைவாயிலின்கண்ணே சோழராஜனை (அவனது யானையை) முல்லைக்கொடியினாலே (தடைபடச்செய்து பின்பு அச்) சந்தேகம் போம்படி (வெளிப்பட்டு) ஆண்டருளியவருமாகிய சிவபிரானை,— ஈண்டு உறற்குக் கொடி கரைந்தால் - இவ்விடத்தே எழுந்தருளும் நிமித்தமாகக் காகமே (நீ)அழைத்தால்,— ஐ அந்தம் உள்ளாய்க்குக் கொளும் ஊன் பலி யான் இடுவேன் - ஐந்தாகிய அழகிய குணங்களையுடைய உனக்குக் கொள்ளத்தக்க புலாலுணவை நான் எந்நாளும் வைத்துவருவேன்(எ-று.) முதலடியில் அந்த வென்னுஞ்சுட்டு உயர்ச்சியின்மேற்று. இம் முல்லை இ முல்லையென நின்றது. இறுதியடியில் அந்தம் ஆகுபெயர். குணங்கள் ஐந்தாவன மறைந்த புணர்ச்சித்தாதலும், கலங்காமையும், பொழுதிறவாதிடம் புகுதலும், நெடுகக்காண்டலும், மடியின்மையும். [கொடிக்குறிபார்த்தல்.] (சச)

ஊன்காளத்திக்குச்சுவையுளதோதிண்ணுடற்கறைக்கா
ஞன்காளத்திக்குத்தெளிவுளதோமுல்லைநாயகனெங்
கோன்காளத்திக்குத்தரனலம்யானறிகொள்கையல்லான்
மான்காளத்திக்குக்கியாராவர்போலுமற்றெங்கையரே.

(இ-ள்.) ஊன் காள் அத்திக்குச் சுவை உளதோ - புலால் கழிந்த எலும்புக்கு இரதமுண்டோ,— திண் உடல் கறை நான்கு கால் ஆள் அத்திக்குத் தெளிவு உளதோ - திண்ணிய உடம்பையும் உரல் போன்ற நான்கு பாதங்களையும் உடைத்தாகிய (மத) யானைக்குப் புத்திப்பிரகாச முண்டோ,— முல்லை நாயகன் எம் கோன் காளத்திக்குத் தான் நலம் — (ஆதலால்) திருமுல்லைவாயிலுக்கு நாயகரும் எங்கள் முதல்வருமாகிய சிவபெருமானுடைய திருக்காளத்திமலைக்குரிய தலைவர் (தரும்) இன்பத்தை,— யான் அறி கொள்கை அல்லால் - நானே உணர்ந்து (அநுபவிக்கும்) தகுதியல்லது,— மான் காள் அத்திக்குக்கு மற்று எங்கையர் யாராவர்போலும் - மான்போலுந் தோழியரே அம்மலையினது திசைக்குத்தான் என்றங்கைமார் யாராவர்போலும் (எ-று.) நீங்கள் சொல்லுங்களென்பது எஞ்சிநின்றது. முதலடியில் கால்காள்என லகரளகரங்கள் அபேதமென்னும் வழக்குப்பற்றி வந்தது. அஸ்திக்குச் சுவையின்மைபோலக், காமக் கிழத்தி காதற்பரத்தையராகிய எங்கையரிடத்தே இன்பமில்லை எனவும், யானைக்குத் தெளிவின்மைபோலத், தலைவர் இதனைத் தெளியாதிருந்தார் எனவும் உள்ளுறைகாண்க. மற்று அசை. [பரத்தையைப் பழித்தல்.] (சஅ)

கைக்கவிகமகனைந்தழுங்கிக்கலங்காதருள்சேர்
கைக்கவிகமகவாதியிலாசைகருத்துள்ளுக
கைக்கவிகமகனுதியர்வாழ்முல்லைகாவலன்புன்
கைக்கவிகமகவுங்கொடுபாய்கழுக்குன்றனையே.

(இ-ள்.) அகம் இகம் கைக்க - மனமே இவ்வுலகத்துப் பொருட்சார்பில் அருவருப்படையக்கடவாய்,— னைந்து அழுங்கிக் கலங்காது அருள் சேர்கைக்கு— (பிறவியின்கண்) வருந்தி அழுது மயங்காது திருவருட்சத்தி பதியும்பொருட்டு,— மகவு ஆதியில் ஆசை அவிக - மக்கள் மனைவி முதலிய உயிர்ச்சார்பில் (வைத்த) ஆசையை ஒழியக்கடவாய்,— கருத்து உள்ளுக—(உன்னுடைய) எண்

ஊத்திற் (பிறழாது) சிந்தனைசெய்யக்கடவாய், —கைக்கவி கமகன் ஆதியர் வாழ் முல்லை காவலன் - நல்லொழுக்கமுடைய கவி கமகவ ஊதி வாக்கியாகிய நால்வகைப் பண்டிதரும் வாழப்பெற்ற திருமுல்லைவாயிலுக்கு நாயகரும், —புன் கைக்கவி மகவும் கொடு கம் பாய் கழுக்குன்றனை - சிறிய கைகளையுடைய மந்திகள் (தம்மைப்பற்றிய) குட்டிகளையும் (விடாது) கொண்டு ஆகாயத்திலே தாவுகின்ற திருக்கழுகுமலையை யுடையவருமாகிய சிவபெருமானது திருவுருவை (எ-று.) மனமே பதியும் பொருட்டு அருவருப்படையக் கடவாய் ஒழியக்கடவாய் திருவுருவைச் சிந்தனைசெய்யக்கடவாயெனக் கூட்டுக. முதலடியில் இகத்திலுள்ள பொருட்சார்பை இகமென்று உபசரித்தார். விடுதல் பற்றுதலாகிய இருவழியிலும் ஒருங்கு பயில வேண்டுமென்பது கருத்து. (சகூ)

குன்றத்தஞ்சாதிமலர்க்கூந்தன்மாதிடங்கொண்டிருந்த
னன்றத்தஞ்சாதிவழாமுல்லைவாணனடித்தனன்றென்
மன்றத்தஞ்சாதிநெஞ்சேநமக்கென்குறைவாழ்வுபெற்றேம்
பின்றத்தஞ்சாதிரிமாயாயென்றேவெற்றிபேசுவமே.

(இ-ள்.) அம் சாதி மலர்க் கூந்தற் குன்றத்து மாது இடம் கொண்டு இருந்தனன் - அழகிய தேன்பொருந்திய பூக்களை (அணிந்த) அளகத்தையுடைய பார்ப்பதிதேவியாரை வாமபாகத்தில் வைத்துள்ளவராய், — தத்தம் சாதி வழா முல்லை வாணன் — (மாநுடர்) தங்கள் தங்கள் வருண (நெறி)யில் வழுவாமைக்கிடமாகிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரான், —தென் மன்றத்து நடித்தனன்-(யாவரும் எளிதிலே தரிசித்து உய்யும்பொருட்டு) அழகிய (கனக) சபையிலே திருநிருத்தஞ் செய்தருளினார், — நெஞ்சே அஞ்சாதி நமக்கு என்குறை வாழ்வுபெற்றேம்-(ஆதலால்) மனமே பயப்படாதே நமக்கு யாது குறையுளது (திருவடியைத் தரிசித்துப் பேரின்ப) வாழ்வை அடைந்தோம், — திரி மாயாய் பின் றத்தம் சா என்றே வெற்றிபேசுவம்-(உணர்வை) மாறுபடுத்துகின்ற மாயையே (உனக்குப்) பிற்பட்டு ஓடமாட்டோம் (நீ) கெடுவாயாக என்றே (இனி) வெற்றி கூறுவோம் (எ—று.) (சஎ)

பேசித்திருந்தநம்முல்லையில்வந்தெமைப்பேணித்தொண்டர்
பூசித்திருந்தம்வினைதீர்த்துமென்றருள்பொற்பர்வெற்பி

னேசித்திருந்தண்புன லீர்க்கும்போதுற்றுநேர்ந்தெடுத்தா
ராசித்திருந்தபடிபோலொருவரஞ்சாதியென்றே.

(இ-ள்.) தொண்டீர் நம் முல்லையில் வந்து எமைத் திருந்தப்
பேணிப் பேசிப் பூசித்திர்-பத்தர்களே (நீங்கள்) நமது திருமுல்லை
வாயிலின்கண் வந்து நம்மைத் தெளிவுபட (மனசினாலே) தியானி
த்து (வாக்கினாலே) துதித்து (க்கைகளினாலே) அருச்சனை செய்வீரா
க,—உந்தம் வினை தீர்த்தும் என்று அருள் பொற்பர் வெற்பில்-உங்க
ளுடைய கர்மங்களை ஒழிப்போமென்று திருவாய்மலர்ந்தருள்கின்ற
அழகினை யுடையாராகிய சிவபெருமானது மலையின்கண்ணே,—
இரும் தண்புனல் ஈர்க்கும்போது நேர்ந்து உற்று நேசித்து-மிகுந்த
குளிர்மையுடைய (சுனை) நீர் இழுக்கும்பொழுது எதிர்ப்பட்டுவந்து
ஆசைகொண்டு,—ஒருவர் அஞ்சாதி என்று ஆசித்து இருந்தபடிபோ
ல் எடுத்தார் - ஒருதலைவர் அஞ்சாதேயென்று சொல்லி ஆச்சரியம்
(தமக்குச்) சித்திருந்தாற்போல (அச்சுனையில்அமிழாவண்ணம் என்
னைக்) கரையேற்றினார் (எ—று.) என்னை பெண்ணே கூறுவாயாக
வென்பது எஞ்சிநின்றது. [புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்]()

சாதிப்பரியதவத்தார்க்குமுல்லைத்தலத்தினுண்மை
போதிப்பரியனலம்பாடுதும்புல்லறிவுபரம்
பாதிப்பரியமனைதோறும்வண்டுபகர்ந்ததுமுன்
காதிப்பரியகளிற்றுரிபோர்த்ததுங்கட்டுரைத்தே.

(இ-ள்.) சாதிப்பு அரிய தவத்தார்க்கு-(பிறராலே) சாதித்தற்க
ரிய தவத்தையுடைய முனிவர்களுக்கு,—முல்லைத்தலத்தின் உண்மை
போதிப்பர் இயல் நலம் பாடுதும் - திருமுல்லைவாயிலாகிய திருப்ப
தியில் எழுந்தருளியிருந்து மெய் (ப்பொருளை) விளக்கியருள்வாராகிய
சிவபிரான்(பெத்த முத்தியிரண்டிலும்உயிர்களுக்குச்)செய்து (வரும்)
உபகாரத்தை(எடுத்துத்)துதிக்கப்பெற்றேம்,—புல்லறிவுபரம்பாது-வி
டயவுணர்வுமேலிடாவண்ணம்,—இயம் இப்பர் மனைதோறும் முன்
வண்டு பகர்ந்ததும் - வாத்தியங்கள் (முழங்குகின்ற) செட்டிப்பெ
ண்களுடைய வீடுகள்தோறும் (போய்) முன்பு வளையல் விலைப்ப
டுத்திய எளிமையும்,—காது இப் பரிய களிற்று உரிபோர்த்ததும் கட்
டுரைத்து-(கோட்டியினாலே) தாக்கப்பெற்ற இந்தப் பெரிய யானைத்
தோலை (உரித்து)ப் போர்த்துக்கொண்டவலிமையும் உறுதியாகச்சொ

ல்வி (எ—று.) விடயவுணர்வுமேலிடாவண்ணம் உறுதியாகச் சொல்லித் துதிக்கப்பெற்றோமெனக்கூட்டுக. (௪௯)

கட்டோம்புதலெனக்காமாதியாறுங்கரிசறுத்தோ
முட்டோம்புதவுதிறந்தின்பவீடுபுக்குச்சரித்தோஞ்
சிட்டோம்புதல்விமண்ணோருந்திகஞ்சந்தெளிவின்முன்பின்
விட்டோம்புதலுறுநள்ளெழுத்தான்முல்லைமேவப்பெற்றே.

(இ-ள்.) புதல் எனக் காமாதி கரிசு ஆறும் கட்டோம் அறுத்தோம் - சிறுதூர்களைப்போலக் காமமுதலிய (புறக்) குற்றமாகிய சடூர்மிகளையும் களைந்து ஒழித்தோம்,— உள் தோம் புதவு திறந்து இன்ப வீடு புக்குச் சிட்டோம் உச்சரித்தோம் - அகக்குற்றமாகிய (ஆணவமலக்) கதவினைத் திறந்து ஆனந்தமயமாகிய வீட்டின்கண்ணே புகுந்து (அந்த) ஞானார்த்தத்தையுடைய பிரணவத்தை (மானசிகமாக) ஓதினோம்,—புதல்வி மண் ஓர் உந்தி கஞ்சம் தெளிவின் முன் பின் விட்டு - குமாரி காசினி ஒப்பற்ற பாலாறு தாமரை துணிவு என்னும் நாமங்களிலே முதலினும் இறுதியினும் உள்ள எழுத்துக்களை ஒழித்து,— ஓம்புதல் உறும் நள் எழுத்தான் முல்லை மேவப்பெற்று—(பத்தர்களாற்) பாதுகாக்கப்படும் இடையினுள்ள எழுத்துக்களாலாகிய மாசிலாமணியீசரது திருமுல்லைவாயிலை அடைந்து (எ-று.) திருமுல்லைவாயிலை அடைந்தென்பதை முதலிற்கூறிக்கொள்க. கட்டோம் முற்றெச்சம். காமமுதலிய சடூர்மிகளாவன காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் எனவிவை. சித்தோம் சிட்டோமென நின்றது. சிட்டோமெனவேகொண்டு (மந்திரங்களின் ஆதாரமாய்) மேம்பட்ட (அந்தப்பொருளைத்தரும்) பிரணவமெனினும் அமையும். (௫௦)

பெற்றவரம்பலவுங்குன்றயான்பிணைபோல்வெருள
வுற்றவரம்பலங்கோதவென்பேதையொருதனியே
முற்றவரம்பலசெய்தகன்றாளென்னைமுல்லைப்பிரான்
கற்றவரம்பலவற்பணியாரிற்கடுஞ்சுரமே.

(இ-ள்.) யான் பெற்ற பல வரமும் குன்றப்பிணைபோல்வெருள—நான் அடைந்த பல மேன்மைகளும் கெட்டொழியவும் மான்போல அச்சமுறவும்,—அங்கு உற்றவர் அம்பல் ஓத - அவ்வூரிலுள்ளார் பழிமொழி கூறவும்,— என் ஒரு பேதை தனியே முற்றவரம்பு

அலசெய்து அகன்ருள் - என்னுடைய ஒப்பற்ற பெண்ணுனவள் (துணையின்றி) ஏகமாக முழுவதும் முறையல்லாதவைகளைச் செய்து போயினுள்,—என்னை-(இச்செய்கை இருந்தபடி) என்னை,—முல்லைப் பிரான் கல் தவர் அம்பலவற் பணியாரின் கடுஞ் சுரமே - திருமுல்லை வாயிலுக்கு முதல்வரும் மேருமலையை வில்லாகக்கொண்ட கனகச பையை யுடையவருமாகிய சிவபிரானை வழிபடாதாரைப்போலும் கொடிய பாலைநிலத்திலே(எ-று.) ஒழியவும் அச்சமுறவும் கூறவும்பெ ண் நிலத்திலே போயினுள் என்னையெனக்கூட்டுக. [நற்ருயிரங்கல்.]

கடுத்தியம்பாம்பன்மலரானையாதுகவலைநெஞ்சே
விடுத்தியம்பாம்பனல்வாயாற்புகழ்ந்தின்றுமேவுதுமுட்
படுத்தியம்பாம்பலுரிபிறைமான்வெம்பரசொடுந்து
வடுத்தியம்பாம்பணிமுல்லையுளம்பலவாணனையே.

(இ-ள்.) நெஞ்சே - மனமே,—அம்பாம் பல் மலரால் நையாது கடுத்தி—(மன்மதனுலே தொடுக்கப்படும்) பாணங்களாகிய பலவகை ப்பட்ட புஷ்பங்களால் வருந்தாமல் (அவற்றைச்) சினந்தொழிப்பாய்,—கவலை விடுத்து ஆம்பல் இயம்பு நல்வாயாற் புகழ்ந்து உட்படுத்தி இன்று மேவுதும்—(பின்பு) சஞ்சலத்தைப் போக்கி அல்லிமலர்போலும் சொல்லத்தக்க சுத்தமாகிய வாக்கினுலே துதித்துக் கருத்தின் அமைத்து இற்றைநாள் (நாங்கள்) அடைவோம்,— அம்பு பிறை ஆம்பல் உரி மான் வெம் பரசொடும்— (திருமுடியிலே) கங்கைநீரும் இளஞ்சந்திரனும் (திருமேனியிலே) யானைத்தோலும் (திருக்கைக ளிலே) மானும் வெவ்விய மழுப்படையும் ஆகிய இவைகளோடு,— துவள் துத்தி அம் பாம்பு அணி முல்லையுள் அம்பலவாணனையே- அசைகின்ற படப்பொறிகளையுடைய அழகிய பாம்புகளை (அவயவங்கள் முழுவதினும்) அணிந்துதிருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளி யிராநின்ற அம்பலவாணரையே(எ-று.) மனமே ஒழிப்பாய் பின்பு அம்பலவாணரையே அடைவேமெனக்கூட்டுக. மாநுடப்பதரையும், ஏனைச் சிறுதெய்வங்களையும், புகழ்ந்தறியாத, சுத்தவாக்கினுலெ ன்பார், நல்வாயாலென்ருர். இறுதி ஏகாரம் தேற்றம். (௫௨)

அம்பலவாணன்மடவார்விழியென்றழிந்துழலு
மம்பலவாணங்களையவியாகியமாந்தருளு
மம்பலவாணன்றிருமுல்லைவாயிலழகன்றில்லை
யம்பலவாணன்வழியினில்லா வென்னறிவுகளே.

(இ-ள்.) நல் மடவார் விழி அம்பு அல வாள் என்று அழிந்து உழலும் அம்பல - அழகிய பெண்களுடைய கண்கள் பாணங்களாகும் அல்லது வாட்படைகளாகும் என்று (புதிது புதிதாகப்) புகழ்ந்து உருகி (வீணாகப் பிறவியிலே) சுழலும், (அதனாற்) பழிமொழிகளையுடையன (அன்றி),—ஆண் அங்கனை அல் ஆகி அமர்ந்தருளும் ஆனன்- ஒருவன் ஒருத்தி ஒன்றென்று (சுட்டப்பட்ட) பிரபஞ்சமெல்லாமாய் (அல்லவாய்)எழுந்தருளியிருக்கின்ற அன்புருவானவரும்,—பலஅம் திருமுல்லைவாயில் அழகன்- பலவகை அழகுபெற்ற திருமுல்லைவாயிலையுடையஅழகரும்,—தில்லை அம்பலவாணன் வழியில் நில்லா-தில்லைப் பதியினிடத்ததாகிய(கனக)சபையை யுடையவருமாகிய சிவபெருமான்அருளிய வீட்டு நெறியிலே நிலைபெறுவனவல்ல,—என் அறிவுகள்- என்னுடைய உணர்வுகளானவை (எ-று.) செல்லும்வழி பலவாதல் பற்றி அறிவுகளெனப்பன்மைப் பாலாற் கூறினார். சிற்றின்பத்திற்குக் காரணமாகிய பெண்களைத் துறந்து, பேரின்பத்திற்குக் காரணமாகிய வீட்டுநெறியைக் கேட்டுச், சிந்தித்துத், தெளிந்து, நிட்டைகூடிச், சிவபிரான் திருவடிவியாபகத்துள், வியாப்பியமாய் நிற்கவேண்டுமென்பது கருத்து. (ருக)

அறிவறியாகமெதுவதுவாகமல்லாதவென்னுங்
குறிவறியாகடிமுல்லையிற்சேர்புழுக்கூட்டைவிண்டு
தறிவறியாகஞ்செயன்பாலெனையர்ச்சனைசெயுன்பாற்
செறிவறியாகந்தருவலென்றுண்டனன்சின்மயனே.

(இ-ள்.) அறிவு அறி ஆகம் எது அது ஆகம் அல்லாத என்னும் குறி-(தத்துவ) உணர்வை ஆராய்தற்கு (க்கருவியாகக்கிடைத்த) உடம்பு எதுவோ அதுவே உடம்பாகும் மற்றையுடம்பு ஏதாகும் [பயனில்லாததே என்றபடி] (இதனை) மதிப்பாயாக (மதித்து),—வறியா கடி முல்லையிற் சேர் - நுண்ணறிவில்லாதவறியனே காவலுள்ள (நம்முடைய) திருமுல்லைவாயிலை அடைவாயாக (அடைந்து),—புழுக்கூட்டை விண்டு உதறு இவறி யாகம் செய் அன்பால் எனை அர்ச்சனை செய்-கிருமிகள்பொருந்திய (உனது) உடம்பில் வைத்த ஆசையைவிட்டொழி (ஒழித்து நமது திருவடிகளிலே) இச்சைவைத்து (ஜெப ஓம) வேள்விகளைச் செய் (செய்து மந்திரக்கிரியா பாவனைகளிலே குறைவின்றி அகத்தும் புறத்தும்) பத்திமையோடு நம்மைப் பூ

ஜைசெய்வாயாக (இங்ஙனம்விரத்தியும் சிரத்தையுங் கொண்டு மு றையே சரியை கிரியாயோகங்களைச் செய்தால்),—உன்பாற் செறி வல் தியாகம்தருவல் என்று சின்மயன் ஆண்டனன்-(அவைகளாலே சுத்தம்பொருந்திய) உன்னிடத்தே (இரண்டறக்) கலப்போம் (கல ந்து நிரதிசயவின்பப் பெருவாழ்வாகிய) கொடையைக் கொடுப்போ மென்று திருவாய்மலர்ந்து ஞானமூர்த்தியாகிய சிவபிரானவர் (நாயினேனை) அடிமைபூண்டருளினர் (எ-று.) (௩௪)

மயங்காதுவரையும்பொய்ப்பொருளியாவும்வரையச்செய்ய
பயங்காதுவரையுண்மால்போற்றுமுல்லைநம்பாவிழிப்பங்
கயங்காதுவரையுநீள்சீர்க்கொடியிடைகாதலசூர்
சயங்காதுவரையுமைங்கரனுரையுந்தந்தவனே.

(இ-ள்.) வரையும் பொய்ப் பொருள் யாவும் மயங்காது வரை யச் செய்ய கா அபயம்-ஒழிக்கத்தக்க அநித்தியமாகிய செல்வங்கள் எல்லாவற்றினும் மயங்காமல் (ஆசை) ஒழியும்படி செய்து (அடியே னைக்) காத்தருளும் (உமக்கு) அடைக்கலம்,— துவரையுள் மால்போ ற்றும் முல்லை நம்பா-துவாரகாபுரியிலுள்ள விஷ்ணுவினால் வழிபட ப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற நம்பனெ ன்னுந் திருநாமத்தையுடையவரே,—விழிப் பங்கயம் காது வரையு ம் நீள் சீர்க் கொடியிடை காதல-கண்களாகிய தாமரைமலர்கள் செ வியளவும் நீண்ட அழகிய கொடியிடை யம்மைக்கு நாயகரே,— சூர் காது சயம் உவரையும் ஐங்கரனுரையும் தந்தவனே - சூரபன் மனைக் கொன்று வெற்றிகொண்ட உந்த இளையபிள்ளையாரையும் ஐந்துதிருக்கைகளையுடைய மூத்தபிள்ளையாரையும் பெற்றருளியவ ரே (எ-று.) செய்-முற்றெச்சம். (௩௫)

தவத்துக்கணிகலனட்டோனென்றேறிற்றவறுமனைவை
பவத்துக்கணிகலனெஞ்சேயிவைவிடப்பார்வடிவ
நவத்துக்கணிகலன்மாவாக்குமுல்லையினாரியா
யவத்துக்கணிகலந்தோர்பான்மருவுமெம்மண்ணலையே.

(இ-ள்.) தவத்துக் கண் இகலன் நட்டோன் என்று ஏறிற் தவறும் - தவஞ்செய்தற்கண் (இவன்) பகைவன் (இவன்) நண்பன் எனப் பகுத்து உணரில் (அத்தவம்) அவமாம்,—நெஞ்சே அவை பவத் துக்கு அணிகலன் இவை விடப் பார் - மனமே அப் பகுப்புகள்

பிறவிக்கு ஆபரணமாம் (ஆதலால்) இப்பகுப்புகள் ஒழியும்படி சிந்திக்கக்கடவாய்,—நவ வடிவத்துக்கண் - உருவம்நான்கும் அருவம் நான்கும் உபயம் ஒன்றுமாகிய நவவடிவத்தை யுடைய கண்போல் பவரும்;—இகலன் மா ஆக்கும் முல்லையினான்-நரிகளைப் பரிகளாகச் செய்தருளிய திருமுல்லைவாயிலையுடையவரும்,—அரி ஆய வத்துக்கு அணி கலந்து ஒர்பால் மருவும் எம் அண்ணலை - திருமாலாகியபொருளுக்கு (மண) மாலை சூட்டி ஒருபுறத்தே பொருந்தச்செய்த எங்கள் கடவுளுமாகிய சிவபிரானை (எ-று.) மனமே ஒழியும்படி சிவபிரானைச் சிந்திக்கக்கடவாயெனக் கூட்டுக. தவஞ்செய்தலைத் தவமென உபசரித்தார். பிறவிக்கு ஆபரணமாவது பிறவியை வளர்த்தல். தார்க்கிகர்மதம்பற்றி அரியாயவத்துவென்றார். மருவிக்குமென்னும் பிறவினை மருவுமெனவிவ்விகுதி விகாரத்தாற் றொக்கது. (௩௬)

அண்ணலந்தோயமனை வீட்டிமுல்லையிலார்ந்ததுவு
மெண்ணலந்தோயமுடித்ததுமற்றெம்மிறைவியைப்போ
லுண்ணலந்தோயவிழைந்திரந்தேங்கியுளைந்துநந்தம்
பெண்ணலந்தோயவெளிவந்தருளுமெய்ப்பேறன்றியே.

(இ-ள்.) அண்ணல் யமனை வீட்டி அந்தோ முல்லையில் ஆர்ந்ததுவும்-பெருமையிற் சிறந்தவராகியசிவபிரானே (நீர்) இயமனைக் கொன்று ஐயோ திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருந்ததும்,—தோயம் முடித்ததும் எண்ணலம்-கங்கை (யின்செருக்கை அடக்கித்திருமுடியிலே) தரித்ததும் (ஆகிய வெற்றிகளை) நினைக்கமாட்டோம்,—மற்று எம் இறைவியைப்போல் நலம் தோய உள் விழைந்து-எங்கள் பிராட்டியாராகிய உமாதேவியாரைப்போலும் (உம்மைக்கலந்து) சுகத்தை அநுபவிக்கும்பொருட்டு மனசிலே விரும்பி,—நந்தம் பெண் இரந்து ஏங்கி உளைந்து அலந்து ஓய - எங்களுடையபெண் (உமது தரிசனத்தை) வேண்டிப் பயந்து வருந்தித் துன்பமுற்றுத் தளரும் பொழுதிலே,— எளி வந்து அருளும் மெய்ப்பேறு அன்றி-(நீர்) எளிதாக (ப்பவனி) வந்து கருணைசெய்யும் உண்மைப் பயனையல்லது (எ—று.) உண்மைப்பயனையல்லது வெற்றிகளை நினைக்கமாட்டோமெனக் கூட்டுக. மற்று அசை. [நற்றாயிரங்கல்] (௩௭)

அன்றினங்காதரமாய்நின்றுகத்துமலைகடலெம்
முன்றினங்காதரவத்துக்களவிலைமூரிமதன்

கன்றினங்காதரவாருளரோவிருகண்ணுந்துஞ்சா
வின்றினங்காதரமாமுல்லைவாணமற்றெங்களையே.

(இ-ள்) அன்றில் நம் காதரமாய் நின்று கத்தும் - அன்றில் நமக்குத் துன்பந்தருவதாய் (க் கொம்பிலே) இருந்து கூவும்,— அலை கடல் எம் முன் தினம் காது அரவத்துக்கு அளவு இலை - திரையையுடைய சமுத்திரம் எங்கள் முன்னே நாடோறும் மோதுகின்ற முழக்கத்திற்கோ முடிவு சொல்லக்கூடாது,— மூரி மதன் கன்றின் அங்கு ஆதரவு ஆர் உளர் ஓ - (இச்சமயத்திலே) வலிமையுடைய மன்மதன் கோபித்தால் அவ்விடத்தே பற்றுக்கோடாக (ஆற்றுவிப்பார்) யாவர் உள்ளார். [ஒருவருமில்லை யென்றபடி] ,— இரு கண்ணும் துஞ்சா இனம்— (இவ்வாறாகிய கவலைகள்பற்றி) இரண்டு கண்களும் நித்திரைசெய்யமாட்டா இன்னமும்,— தரம் மா முல்லைவாண மற்று எங்களை இன்று கா— (ஆதலால் திருவடியார்) திருக்கூட்டமுள்ள பெரிய திருமுல்லை வாயிலின் கண் எழுந்தருளி யிருக்கின்ற மாசிலாமணியீசரே எங்களை இப்பொழுதே (அங்கீகரித்துக்) காத்தருளும் (எ-று.) ஓ மற்று அசைகள். [பவனிபோந்த மாசிலாமணியீசரை நோக்கி மையலுற்ற மகளிர் சொல்லியது. (௫௮)

களைகண்டனம்புயமாமுல்லைக்கோன்வெற்பகாதன்மிக்க
கிளைகண்டனம்புயன்மேவுந்தடவரைக்கீழொருசார் [பந்
விளைகண்டனம்புயங்கஞ்சேல்வல்வேய்சொன்னடைநிதம்
திளைகண்டனம்புயமாக்கொண்டுநிற்குமோர்தீங்கரும்பே.

(இ-ள்.) களை கண்டன் அம்புயம் மாமுல்லைக் கோன்வெற்ப— (துன்பத்தை) விலக்கிய (கரிய) கழுத்தையுடையாரும் (செந்) தாமரைமலரில் இருக்கும் இலக்குமி (தங்கப்பெற்ற) திருமுல்லைவாயிலுக்கு முதல்வருமாகிய சிவபிரானது மலையையுடைய தலைவரே,— காதல் மிக்க கிளை கண்டனம் - அன்பு மிகுந்த (பெண்கள்) கூட்டத்திலே (நாங்கள்) கண்டோம்,—புயல் மேவும் தடவரைக் கீழ் ஒரு சார் - மேகங்கள் அமைந்த பெரிய மலைச்சாரலின் ஒருபுறத்தே,— விளை கண்டு அனம் புயங்கம் சேல் வல் வேய்—(கருப்பஞ்சாற்றிலே உண்டாகிய கற்கண்டையும் அன்னநடையையும் பாம்பின்படத்தையும் மீனையும் சூதாடுகருவியையும் மூங்கிலையும்,—சொல் நடை நிதம்பம் திளை கண் தனம் புயம் ஆக் கொண்டு நிற்கும் ஓர் தீங்கரும்பு- (முறையே) சொல்லும் நடையும் அல்குலும் (அழகு) நிறைந்த கண்

ணும் கொங்கையும் தோளுமாகப் பெற்றுநிற்கின்ற ஒப்பற்ற இனிய கரும்புபோலும் தலைவியை (எ-று.) தலைவரே ஒருபுறத்தே பெண்கள் கூட்டத்திலே தலைவியைக் கண்டோமெனக் கூட்டுக. களகண்டன் என்பதற்கு அழகிய (நீல) கண்டரெனப் பொருள்கூறினும் பொருந்தும். அன்னமும் புயங்கமும் ஆகுபெயர். தீங்கரும்பு அன்மொழித் தொகை. [தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்.] (௫௧)

தீங்கரும்புங்கவறாடிப்பயனிலைசெப்பின்மின்னார்
தாங்கரும்புங்கவலாக்கனியும்மெனச்சாற்றியந்தோ
நீங்கரும்புங்கவசையுறுவீர்முல்லைநீணகரின்
பாங்கரும்புங்கவரும்போற்றுமீசனைப்பாடுமினே.

(இ-ள்.) இங்கு அரும்பும் கவறு ஆடி - பொல்லாங்கு விளைதற்கு (ஏதுவாகிய) சூதாடலைச்செய்தும்,— செப்பில் பயன் இலை— தூக்கிச்) சொல்லுமிடத்து (இத்தீத்தொழில்களாற் சிறிதும்) பிரயோசனமில்லையாம்,— மின்னார்தாம் கரும்பும் கவலாக்கனியும் எனச் சாற்றி - மங்கையரானவர் கரும்பும் கன்றாத பழமும் ஆவர் என்று புகழ்ந்தும்,— அந்தோ நீங்க அரும் புங்க வசை உறுவீர் - ஐயோ ஒழியக்கூடாத(பாவத்தோடு)மிக்க பழியை அடைகின்றீர்கள்,—முல்லை நீள் நகரின் பாங்கரும் புங்கவரும் போற்றும் ஈசனைப் பாடுமின் —(ஆதலால் நண்பர்களே) திருமுல்லைவாயிலாகிய பெரியதிருப்பதியின் பக்கத்தும் தேவரும் சூழ்ந்து வழிபடுகின்ற சிவபெருமானையே (புகழ்ந்து) பாடுங்கள் (எ-று.) சூதாடலைச் செய்தும் புகழ்ந்தும் பழியை அடைகின்றீர்கள்; சொல்லுமிடத்து இத்தீத்தொழில்களாற் பிரயோசனமில்லையாம்; ஆதலால் சிவபெருமானையே பாடுங்களெனக்கூட்டுக. கனியும்மென மகரவொற்று விரித்தல் விகாரம். நீங்கவரும் நீங்கருமென அகரம் தொக்கது. புகழ்ந்துபாடினால் புலமை நிலைமைபெற்றுப் போகமும் வீடுபேறும் அடைந்து உய்யலாமென்பது கருத்து. (௬0)

பாடகமன்னவருந்துயர்தீரப்பரன்புகழ்வாய்
பாடகமன்னவருங்குணம்போனலம்பார்த்தெடுத்துப்
பாடகமன்னவருளான்றன்பாற்பைங்கொடியிடையென்
பாடகமன்னவரும்போற்றவாழ்முல்லைப்பண்ணவனே.

(இ-ள்.) பாடகம் அன்ன வரும் துயர் தீர — பாடகத்தினது தொடர்ச்சிபோல (த் தீவினைக் கீடாக) வருகின்ற துன்பங்கள் நீங்கும் பொருட்டு,—பரன் புகழ் வாய்பாடு - சிவபெருமானுடைய கீர்த்தி களாகிய வாய்பாடுகளை, — அகம் - மனமே (நீ கற்றவைகளின் மற்ற வைகளை விட்டு) ,—அன்ன அரும் குணம்போல்—(நீரொடு கலந்துள்ள பாலைப் பிரித்துண்ணும்) அன்னப்புள்ளினது அரிய குணம்போல, —நலம் பார்த்து எடுத்துப் பாடு—நன்றாக நோக்கிச் சிறப்பித்துப் பாடுவாயாக,—அகம் மன்ன அருளான் - (பாடினாற் றுன்பங்களையும் போக்கிப் பின்னும்) பாவங்களை அடையச் செய்வாரல்லர்—தன் பாற் பைங்கொடி யிடை என்பாள் தக - தம்முடைய பாகத்திலே பசிய கொடியிடையம்மை உரிமையோடு (தங்கும்வண்ணம்) ,— மன்னவரும் போற்ற முல்லை வாழ் பண்ணவன் - (தேவுலகத்தும் பூவுலகத்துமுள்ள) வேந்தரும் வழிபடப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற (அக்) கடவுள் (எ-று.) அன்னப்புள்ளின் குணம் போல மனமே விட்டு வாய்பாடுகளை நீங்கும் பொருட்டுப் பாடுவாயாக; பாடினால் கடவுள் பாவங்களை அடையச் செய்வாரல்லரெனக் கூட்டுக. வாய்பாடு ஆன்றோர் வாக்கின் ஆளப்பட்டு வருதல். (௫௭)

பண்ணகங்காரிகைபான் முல்லைவாயும்பதிந்திருந்தோய்
வண்ணகங்காரிகைமற்றுமென்போற்பகர்வாரிலையென்
றெண்ணகங்காரிகைதூவாதியற்றுமிருவினையாந்
திண்ணகங்காரிகைதீண்டுமெந்தாய்கெடச்செய்தருளே.

(இ-ள்.) காரிகை பால் முல்லை வாய்ப் பண் அகமும் பதிந்து இருந்தோய் - உமாதேவியாரைப் பாகத்திலே கொண்டருளித் திருமுல்லை வாயிலினிடத்ததாகிய அழகையுடைய திருக்கோயிலினும் (திருவடியாரது திருவுளக்கோயில் வேத சிரசு முதலியவற்றினும்) இடைவிடாமல் எழுந்தருளியிராநின்ற சிவபிரானே,—காரிகை மற்றும் வண்ணகம் என்போற் பகர்வார் இலை என்று என் அகங்காரி - கட்டளைக் கலித்துறையும் மற்றும் முடுகியற்பாக்களும் என்னைப்போல (அமைத்து) ப் பாடுவோர் (தமிழ்வழங்கும் நிலத்திலே) இல்லையாகுமென்று மதிக்கின்ற அகந்தையை யுடையேன்,—கை தூவாது இயற்றும் இருவினையாம் திண் நகம்—ஒழியாது செய்கின்ற கன்மமாகிய திண்ணிய மலையை,—காரி கை தீண்டும் எந்தாய்—(கடலிலுண்டாகிய) நஞ்சை அமுதுசெய்தருளிய என்னுடைய பிதாவே,—கெடச்செய்தருள்

—(உமதருட்பார்வையாற்) போக்கியருளும் (எ-று.) சிவபிரானே பிதாவேயென அடுக்கியுரைக்க. வாயுமென்னும் உம்மை எதிரது தழீஇயது. (௬௨)

செய்தவமாயத்தன்செல்வமுநீயெனச்சிந்தைசெய்யா
தெய்தவமாயத்தன்மங்களைமாற்றியியற்றுமென்றன்
கைதவமாயத்தன்மைக்கோரளவில்லைகண்ணருளாற்
பொய்தவமாயத்தன்முல்லையுள்ளாய்நலம்போதிப்பையே.

(இ-ள்.) செய் தவம் ஆய் அத்தன் செல்வமும் நீ எனச் சிந்தை செய்யாது - செய்கின்ற தவமும் மாதாவும் பிதாவும் செல்வமுமாகிய எல்லாம் நீரென்று புத்திபண்ணுமல்,—எய்து தன்மங்களை மாய மாற்றி அவம் இயற்றும் -.பொருந்திய புண்ணியங்களை மறையும்படிகைவிட்டுப் பாவங்களைச் செய்கின்ற,—என்றன் கைதவம் மாயத்தன்மைக்கு ஓர் அளவு இல்லை - என்னுடைய வஞ்சகமாகிய மாயத்தன்மைக்கு ஒரு பிரமாணம் இல்லையாம்,— அருட் கண்ணால் பொய் தவ மாயத்தன் முல்லை உள்ளாய் நலம் போதிப்பை - (ஆதலால்) அருட்பார்வையால் அசத்திய (முழுதும்) ஒழிய (ச் செய்து) விஷ்ணுவுடைய முல்லைநிலத்தின் கண்ணதாகிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே (சிவ) தருமங்களை உபதேசித்தருளும் (எ-று.) சிவபெருமானே யென்பதை முதலின் எடுத்துரைக்க. (௬௩)

திப்பியமாவடுதண்டுறைக்கண்ணுந்திருந்துநிலை
தப்பியமாவடுத்தீர்முல்லையூரினுஞ்சந்தமுலை
யம்பியமாவடுவார்கண்ணிபாகனமர்ந்துபுகழ்
பப்பியமாவடுநாமமொன்றுக்கொண்டுபோரிப்பதே.

(இ-ள்.) திப்பியம் - திவ்வியமாகும்,—தண் ஆவடுதுறைக் கண்ணும்—குளிர்ந்த நீர் சூழ்ந்த திருவாவடுதுறையென்னுந் திருப்பதியிலும்,—திருந்து நிலை தப்பிய மா வடுத் தீர் முல்லை ஊரினும் - திருந்தும் அடைதற்கேதுவாகிய வருணாச்சிரம தருமங்களினின்றும் வழுவிய பெருங்குற்றங்கள் ஒழிதற்கிடமாகிய திருமுல்லைவாயிலென்னுந் திருப்பதியிலும்,—சந்தம் அப்பிய முலை மா வடு வார் கண்ணி பாகன்-சந்தனம் பூசிய தனங்களையும் மாவடுவின் (பிளவு) போலும் நீண்ட கண்களையுமுடைய உமாதேவியாரைப் பாகத்திலுடைய சிவபிரான்,

—அமர்ந்து புகழ் பப்பி அமா அடு நாமம் ஒன்ருக் கொண்டு பாரிப்ப து - விரும்பிக் கீர்த்திகளைப் பரப்பிப் பொருந்திய (மாசிலாமணி யீச ரெனத்)திருநாமமும் ஏகமாகவேகொண்டருளித்தோற்றியது (எ-று.) திவ்வியமாகுமென்பதை இறுதியிற் கூறிக்கொள்க. தண், ஆகுபெயர். இறுதியடியில் அம்மாவென்னும் உரையசை அமாவெனத் தொகுத்த ல் விகாரம்பெற்று நின்றது. (௯௪)

பாரகந்தைக்குமரும்புகழ்சேர்முல்லைப்பாலவருள்
பாரகந்தைக்குமதியார்பின்சென்றுதண்பாலிநதிப்
பாரகந்தைக்கும்வழியின்றிவாடும்பரிசுநன்றே
பாரகந்தைக்குமைக்குங்கயஞ்செற்றபராபரனே.

(இ-ள்) பாரகம் தைக்கும் அரும் புகழ் சேர் முல்லைப்பால - உலகம் (முழுவதும்) வியாபித்த பெரிய கீர்த்திகள் அமைந்த திருமுல்லைவாயிலைக் காப்பவரே,—அருள் பார் - (ஆதலால்முத்திப் பெருஞ்செல்வம் பெறும்படி) கருணையோடு திருநோக்கஞ் செய்தருளும்,—அகந்தைக் குமதியார் பின் சென்று - (உலகச் சிறுசெல்வச்) செருக்கையுடைய புல்லறிவாளர் பின்னே போய்,—தண் பாலி நதிப் பார -குளிர்மையுடைய பாலியாற்றின்கரையை யுடையவரே,—கந்தைக்கும்வழி இன்றிவாடும் பரிசு நன்றே-பீறற்றுணிக்கும்வழியில்லாது மெலியுந்தன்மை நன்மையாமா,— பார கந்தைக் குமைக்கும் கயம் செற்றபராபரனே-தேவதாருவனத்து முனிவர் விடுத்த) பெரிய கட்டுத்தறியைக் கொல்லும் யானையைக் கொன்றருளிய (உலகத்தோற்ற மிறுதிகட்கு) முன்னும் பின்னு முள்ள கடவுளே (எ-று.) காப்பவரே உடையவரே கடவுளே போய்மெலியுந்தன்மை நன்மையாமா? ஆதலால் திருநோக்கஞ் செய்தருளுமெனக் கூட்டுக. (௯௫)

பரங்கிரியாவிகள்சூழ்முல்லைபோற்பரிந்தென்னுளமா
மரங்கிரியாவிடையாரருளுண்மையறிவின்ற
வரங்கிரியாவியினுள்ளேயழுத்தும்வகையறியேன்
சிரங்கிரியாவிதியாற்றுஞ்செல்லேனுய்யுஞ்செய்கையென்னே.

(இ-ள்.) பரங்கிரி ஆவிகள் சூழ் முல்லைபோல் - (சிறந்த) திருப்பரங்குன்றத்தினும் வாவிகள் சூழ்ந்த திருமுல்லைவாயிலினும் போல,— என் உளமாம் அரங்கு பரிந்து இரியா விடையார் -(சி

ந்வாத) என்னுடைய இருதயமாகிய சபையிலும் (திருவுளம்) இரங்கி நீங்காமல் எழுந்தருளி யிருக்கின்ற இடபவாகனத்தையுடையார்,— அருள் உண்மை அறிவின் நின்று - (குருமூர்த்தியை அதிட்டித்து) உபதேசித்தருளிய தத்துவவுணர்வின் (வழியே) நின்று,— அவர் அங்கிரி ஆவியின் உள்ளே அழுத்தும் வகை அறியேன் - அச்சிவபிரானுடைய திருவடிகளை ஆன்மாவினிடத்தே அழுந்தச் செய்யும் (நிட்டையின்) முறைமையை உணர்கிலேன்,—சிரம் கிரி கிரியாவிதி ஆற்றும் செல்லேன் (அன்றி அத்தத்துவ வுணர்விற்கு வாயிலாகிய) உயர்ச்சியுடைய (உண்மைக்) கிரியாவிதி மார்க்கத்திலும் புகமாட்டேன்,—உய்யும் செய்கை என் - (இங்ஙனமாயிற்) பிழைக்குந்தொழில் என்னையோ (எ—று.) ஆப்தர்களே நீங்கள் சொல்லுங்களென்பது எஞ்சிநின்றது. கடைப்பட்ட உலகவியலினிற்றல் குற்றமென்பது கருத்து. (கூகூ)

செய்வசித்தாந்தமிழ்முல்லையுளீசசெவ்வேமநய
வைவசித்தாந்தம்பொருளைந்துடையவவற்றிரண்டு
நைவசித்தாந்தவிர்மூன்றுமொன்றொன்றினணுகுமென்னுஞ்
சைவசித்தாந்தநெறியுபதேசந்தனையெமக்கே.

(இ-ள்.) தமிழ் ஆம் முல்லையுள் ஈச வசித்துச் செய் - தமிழ் வளர்கின்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்குங் கடவுளே (உமது) வசமாக்கிச் செய்தருளும்,— செவ்வே ம ந ய ஐ வ சித்தாம் தம் பொருள் ஐந்து உடைய - முறையே மகர நகர யகரங்களும் அழகிய வகர சிகரங்களுமாகிய திருவைந்தெழுத்துக்கடாம் (பாசமுதலியவாகத்) தமக்குரிய பொருள்கள் ஐந்தினை உடையனவாகும்,—அவற்று இரண்டு நைவ-அவைகளில்(மலதிரோதங்கள்) இரண்டும்ஒழியத்தக்க(அசேதனப்)பொருளாகும்,—தவிர்மூன்றும் சித்து ஆம் ஒன்று ஒன்றின் நணுகும் என்னும் - எஞ்சிய பசுவும் அருளும் பதியு மாகிய) திரிபதார்த்தங்களுஞ் சேதனப் பொருளாகும் (பாசங்களினின்று நீங்கிய) பசு அருளோடுகூடிப் பதியின்வியாபகத்துள்வியாப்பியமாக (இரண்டறக்) கலக்குமென்று (வேதசிவாகமங்களின்) எடுத்தோதுகின்ற,—சைவசித்தாந்த நெறி உபதேசந்தனை எமக்கு - சித்தாந்தசைவமார்க்க உபதேசத்தை அடியேங்களுக்கு (எ-று.) கடவுளே வசமாக்கி அடியேங்களுக்கு உபதேசத்தைச் செய்தருளுமெனக்கூட்டுக. ம ந ய என்றும், தவிர்மூன்றுஞ் சித்

தாம் என்றும், கூட்டிப்பிரித்தமையால் சத்தொடுகூடிச் சத்தாயும் அசத்தொடுகூடி அசத்தாயும் நிற்குஞ் சதசத்துப் பசுவென்பதும், ஒன்றொன்றினணுகும் என்றமையால், பசு தூலசித்தென்பதும், அருளும் பதியும் சூக்கும சித்தென்பதும், பெறப்படும். இவற்றின் விரிவெல்லாம் குருமுகத்தாற் கேட்டுணர்க. (௬௭)

தனையரியானனநான்கானுந்தேடிடத்தான்முடியாஞ்
சினையரியானனமார்தடஞ்சூழ்முல்லைச்சிற்பரனென்
வினையரியானருள்சேர்ந்துநீயொருமின்னின்விழி
யினையரியானனனேர்மெழுகாயினென்னும்பிறிதே.

(இ-ள்.) அரி ஆனனம் நான்கானும் தனைத் தேடிட - விஷ்ணுவும் நான்கு முகங்களையுடைய பிரமனும் தம்மைத் தேடியவழி,—தாள் முடி ஆம் சினை அரியான் - (முறையே) அடியு முடியுமாகிய திருவுறுப்புக்களை (அவருக்கு) க் காட்டாத வராயும்,—அனம் ஆர் தடம் சூழ் முல்லைச் சிற்பரன் - அன்னங்கள் பொருந்திய வாவிகள் சூழப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற ஞானரூபியாகிய கடவுளாயும்,—என் வினை அரி ஆனன் அருள் சேர்ந்தும் - என்னுடையகன்மங்களை ஒழிக்கின்ற இடபாரூடராயுமுள்ள சிவபிரானது கருணையைப்பெற்றும்,— நீ ஒரு மின்னின் ஐ அரியின் விழியான் அனல் நேர் மெழுகு ஆயின் - நீ ஒரு பெண்ணினது அழகிய வரிகளையுடைய கண்ணின் பார்வையால் அக்கினி முகம்பட்ட அரக்குப்போல உருகுவாயானல்,—பிறிது என் ஆம் - வேறே (யான் சொல்லத்தக்கது) யாதாகும் (எ-று.) [கற்றறிபாங்கன் கழறல்.] (௬௮)

தேவருந்தானவருங்காரி கண்டஞ்சித்தீவினையா
னேவருந்தானவனும் பகுப்பற்றவர்நேர்முல்லைநம்
பாவருந்தானவவென்றோ விடப்பண்டருந்தியுமந்
தோவருந்தானவமீதறியார் சிலர்தொண்டர்களே.

(இ-ள்.) தேவரும் தானவரும் காரி கண்டு அஞ்சி - தேவரும் அசுரரும் (திருப்பாற்கடலி னின்றுந் தோன்றிய) ஆலாகல விடத்தைக் கண்டு பயந்து,—தீ வினையானே வரும் தான் அவன் ஆம் பகுப்பு அற்றவர் நேர் முல்லை நம்பர் - கொடிய கன்மத்தொடர்பினாலே வருகின்ற நான் அவன் என்கிற சுட்டுணர்வு கெட்ட அனுபூதிச் செல்வர் அணுகப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநி

ன்ற நம்பனென்னுந் திருநாமத்தையுடையவரே,— ஆனவ - இடப வாகனத்தை யுடையவரே,—அருந்து என்று ஓலிட (அந்நஞ்சத்தை) உண்டு காத்தருளுமென்று முறையிட்ட வளவிலே,—பண்டு அருந் தியும் வருந்தான் - (பெருங்கருணையினால் அச்சிவபிரான்) பண்டைக் காலத்திலே அமுதுசெய்தருளியும் துன்பம் அடைந்திலர் ,—(இங் ஙனமாகியும்) — அந்தோ தொண்டர்களே நவம் ஈது சிலர் அறியார் —ஐயையோ அடியார்களே புதுமையாகிய இவ்வற்புதத்தை (இன் னமும்) சில புன் மதத்தர் உணரமாட்டார் (எ-று.) அவரது அறி யாமை இருந்தபடி என்னையென்பது எஞ்சிநின்றது. பகுக்கும் உ ணர்வைப் பகுப்பென்று உபசரித்தார். (சகூ)

தொண்டையநாடுகடீரச்செய்யாமற்றுவரிதழ்வாய்த்
தொண்டையனுடுமலர்க்கூந்தலார்க்குடைந்தும்பிழைத்தேன்
றொண்டையனுடுபுகழோங்குமுல்லையிற்றோன்றுமுருத்
தொண்டையனுடுமலரடிக்கீழின்றுதொண்டுசெய்தே.

(இ-ள்.) அ நாள் தொண்டைத் துகள் தீரச் செய்யாமல்-ப ண்டைக் காலத்தே அடிமைத்திறத்தை ஆணவமலம் நீங்கும் வண் ணம் கைக்கொள்ளாது,— துவர் இதழ் தொண்டை வாய் அல் நா டும் மலர்க் கூந்தலார்க்குஉடைந்தும் - பவளம்போன்றஅதரத்தையு ம் கொவ்வைக்கனிபோன்ற வாயையும் இருளும் ஆராயத்தக்கபூக் களை அணிந்தஅளகத்தையுமுடைய பெண்கள் பொருட்டு(மனம்)தள ர்ந்தேனாயினும்,—பிழைத்தேன்-உய்ந்தேன்,— தொண்டையன் நாடு புகழ் ஓங்கும் முல்லையில் தோன்றும் - தொண்டைமானால் ஆள ப்பட்ட தொண்டைமண்டலத்தின்கண்ணே கீர்த்திகள் உயர்கின்ற திருமுல்லைவாயிலினிடத்தே எழுந்தருளிய,—தொண்டு உரு ஐயன் ஆடும் மலர் அடிக் கீழ் இன்று தொண்டு செய்து - நவவடிவத்தை யுடைய பிதாவாகிய சிவபிரானுடைய (கனகசபையிலே) திருநிரு த்தஞ்செய்கின்ற செந்தாமரை மலர்போலும் திருவடிக்கீழ் இக்கா லத்தே வழிபாடுசெய்து (எ—று.) உய்ந்தேனென்னும் பயனிலையை இறுதியிற் கூறிக் கொள்க. (எ0)

செய்யுடையல்குலைக்காட்டிமய்க்குநர்தீமைகெடச்
செய்யுடையல்குலைப்பால்வளைவெண்ணித்திலம்பரப்புஞ்
செய்யுடையல்குலையாவளமுல்லையிற்சேர்ந்துபகர்
செய்யுடையல்குலைத்தாரானைப்பால்வைத்ததேவைநெஞ்சே.

மயக்குநர் திமை கெ
(இ-ள்.) செய் உடை அல்குலைக் காட்டி
டச் செய் உடையல் - செவ்விய ஆடைசூழ்ந்த அல்குலை (அந்தர
ங்கத்திலே) காண்பித்து அறிவைக் கெடுக்கின்ற பெண்கள் (செய்
யும்) தீங்கு நீங்கும்பொருட்டு (முயற்சி) செய்வாயாக, (அம்முயற்சி
யிலே) தளர்ச்சி அடையற்க,— (அம்முயற்சியாவது) குலைப்பால் வ
ளை வெள் நித்திலம் பரப்பும் செய் உடை - வரம்புகளிலே சங்கு
கள் வெள்ளிய முத்துக்களை (உமிழ்ந்து) நிறைக்கின்ற கழனிகளை
யுடைமையால் ,—உலையா வளம் அல்கு முல்லையிற் சேர்ந்து செ
ய்யுள் பகர் — கெடாத வளப்பம் தங்கிய திருமுல்லைவாயிலை அ
டைந்து பாடல்கள் (இயற்றித்) துதித்தலேயாம் ,— தையல் குலை
த் தாராளைப் பால் வைத்த தேவை - உமாதேவியாரையும் துளசி
மாலையையுடைய விஷ்ணுவையும் பாகத்திலே கொண்டருளிய கட
வுளை,— நெஞ்சே - மனமே (எ-று) மனமே திங்கு நீங்கும்பொரு
ட்டு முயற்சிசெய்; அம் முயற்சியாவது திருமுல்லைவாயிலை அடைந்
துகடவுளைத் துதித்தலேயாமெனக் கூட்டுக. பகர்தல் பகர் எனப் பகு
திமாத்திரையாகி நின்றது. இறுதியடியில் குல்லை குலையென இடைக்
குறைந்து நின்றது. (எக)

நெஞ்சலமந்திரங்கக்கூற்றந் தோன்றினுநெக்குருகி
யஞ்சலமந்திரந்தான் முதலாறுமற்றேழுறுத்தேஞ்
சஞ்சலமந்திரம்பெற்றுள முல்லைத்தலத்தழகு
துஞ்சலமந்திரந்தன்னிலெங் கோனைத்துதிக்கப்பெற்றே.

(இ-ள்.) நெஞ்சு அலமந்து இரங்கக் கூற்றம் தோன்றினும் நெ
க்கு உருகி அஞ்சலம்—(ஆதலால்) மனம் சுழன்று பரிதபிக்கும்வ
ண்ணம் இயமன் எதிர்ப்படினும் உடைந்துருகி அஞ்சமாட்டோம்,—
மந்திரம் தான் முதல் ஆறும் அற்றேம் — மந்திரம் ஆதியாகிய
சடத்துவாக்களின் (பந்தம்) ஒழிந்தோம், — சஞ்சலம் அறுத்தேம்-
(அப்பந்தங்காரணமாகவரும்) கவலையையும் களைந்தோம்,— அம் தி
ரம் பெற்று உள முல்லைத் தலத்து - நீர் (வளம்) நிலைபெறாறுள்ள
திருமுல்லைவாயிலாகிய திருப்பதியில்,— அழகு துஞ்சல் அ மந்திரம்
தன்னில் எம் கோனைத் துதிக்கப்பெற்று - அழகு நிலைபெறுடைய
அந்தத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிராநின்ற நம்முடைய
முதல்வராகிய சிவபிரானை வாழ்த்தப்பெற்று (எ-று.) சிவபிரானை
வாழ்த்தப்பெற்றுப் பந்தம் ஒழிந்தோம்; கவலை களைந்தோம்; ஆதலா

ல் அஞ்சமாட்டோமெனக் கூட்டுக. தான் அசை. சடத்துவாக்க ளாவன மந்திரம், பதம், வன்னம், கலை, தத்துவம், புவனம் என விவை. இறுதியடியில் அம்மந்திர மெனற் பாலது அமந்திரமென நின்றது. (எஉ)

பெற்றத்திருந்துறுவாழ் வெமக்கீயப்பெருகுவள
முற்றத்திருந்துறுமுல்லையின் முல்லையின்முல்லையில்வாழ்
நற்றத்திருந்துறுநீர்வேணியீர் நள்ளுமன்பரென்னுஞ் [னே.
சுற்றத்திருந்துறுகண்டீர்த் தெமைத்தொண்டுகொள்ளுமி

(இ-ள்.) பெற்றத்து இருந்து எமக்கு உறு வாழ்வு ஈய - இடபத்தின்மேல் எழுந்தருளி எங்களுக்கு (த் தரிசனந் தந்து முத்தி) ப் பெருவாழ்வைக் கொடுக்கும் பொருட்டு,—பெருகு வளம் முற்றத் திருந்துறும் முல்லையின் முல்லையின் முல்லையில் வாழ்-(உலகத்தின்)மி குந்தவளப்பம் முழுவதும் விளங்கப்பெற்றமுல்லைநிலத்தின்கண்ணதா கிய திருமுல்லைவாயிலின்கண் முல்லைக்கொடி நீழலில் வீற்றிருந்த ருளும்,— தத்து நல் நீர் துறு இரும் வேணியீர் - தாவுகின்ற சுத் தமாகிய கங்கைநீர் நெருங்கிய பெருமையாகிய சடையை யுடைய வரே,—நள்ளும் அன்பர் என்னும் சுற்றத்திர் - நேசிக்கின்ற பத்தர் களாகிய நல்லினங்களை யுடையவரே,— எமை உந்து உறுகண் தீர்த்துத் தொண்டு கொள்ளுமின் - எங்களைத் துரக்கும் (வினை)த்துன் பத்தைப் போக்கி அடிமையாகக் கொண்டருளும். (எ-று.) (எங)

மின்பங்கம்பொன்றுந்துமேருவில் லோடமர்வேதியவென்
றன்பங்கம்பொன்றுந்துறைகாட்டி முத்தியிற்சாரவரு
ளன்பங்கம்பொன்றுந்துபியோசை யென்றுமமுமுல்லைவா
யின்பங்கம்பொன்றுந்துவர்க்கையற் கீந்தருளென்னரசே.

(இ-ள்) ஒன்று அம்பு உந்து மேரு வில்லோடு மின் அமர் பங்கு வேதிய - (விஷ்ணுவாகிய) ஒருபாணம் பொருந்திய மகாமேரு மலையென்னும் வில்லோடும் உமாதேவியார் தங்கியபாகத்தை யுடைய (தேவப்) பிராமணரே,— என்றன் பங்கம் பொன்றும் துறை காட்டி - என்னுடைய (மும்மலக்) குற்றம் ஒழிதற்கேதுவாகிய (சன்) மார்க்கத்தை விளக்கி,—முத்தியில் சார அன்பு அங்கம் அருள் — பரமுத்தியிற் கலக்கும் வண்ணம் பரபத்தியையும் (அதற்கு) அங்

(இ-ள்.) செய் உடை அல்குலைக் காட்டி மயக்குநர் தீமை கெ
டச் செய் உடையல் - செவ்விய ஆடைசூழ்ந்த அல்குலை (அந்தர
ங்கத்திலே) காண்பித்து அறிவைக் கெடுக்கின்ற பெண்கள் (செய்
யும்) தீங்கு நீங்கும்பொருட்டு (முயற்சி) செய்வாயாக, (அம்முயற்சி
யிலே) தளர்ச்சி அடையற்க,— (அம்முயற்சியாவது) குலைப்பால் வ
ளை வெள் நித்திலம் பரப்பும் செய் உடை - வரம்புகளிலே சங்கு
கள் வெள்ளிய முத்துக்களை (உமிழ்ந்து) நிறைக்கின்ற கழனிகளை
யுடைமையால் ,—உலையா வளம் அல்கு முல்லையிற் சேர்ந்து செ
ய்யுள் பகர் — கெடாத வளப்பம் தங்கிய திருமுல்லைவாயிலை அ
டைந்து பாடல்கள் (இயற்றித்) துதித்தலேயாம் ,— தையல் குலை
த் தாரானைப் பால் வைத்த தேவை - உமாதேவியாரையும் துளசி
மாலையையுடைய விஷ்ணுவையும் பாகத்திலே கொண்டருளிய கட
வுளை,— நெஞ்சே - மனமே (எ-று) மனமே தீங்கு நீங்கும்பொரு
ட்டு முயற்சிசெய்; அம் முயற்சியாவது திருமுல்லைவாயிலை அடைந்
துகடவுளைத் துதித்தலேயாமெனக் கூட்டுக. பகர்தல் பகர் எனப் பகு
திமாத்திரையாகி நின்றது. இறுதியடியில் குல்லை குலையென இடைக்
குறைந்து நின்றது. (எக)

நெஞ்சலமந்திரங்கக்கூற்றந் தோன்றினுநெக்குருகி
யஞ்சலமந்திரந்தான் முதலாறுமற்றேழுறுந்தேஞ்
சஞ்சலமந்திரம்பெற்றுள முல்லைத்தலத்தழகு
துஞ்சலமந்திரந்தன்னிலெங் கோனைத்துதிக்கப்பெற்றே.

(இ-ள்.) நெஞ்சு அலமந்து இரங்கக் கூற்றம் தோன்றினும் நெ
க்கு உருகி அஞ்சலம்—(ஆதலால்) மனம் சுழன்று பரிதபிக்கும்வ
ண்ணம் இயமன் எதிர்ப்படினும் உடைந்துருகி அஞ்சமாட்டோம்,—
மந்திரம் தான் முதல் ஆறும் அற்றேம் — மந்திரம் ஆதியாகிய
சடத்துவாக்களின் (பந்தம்) ஒழிந்தோம், — சஞ்சலம் அறுத்தேம்-
(அப்பந்தங்காரணமாகவரும்) கவலையையும் களைந்தோம்,— அம் தி
ரம் பெற்று உள முல்லைத் தலத்து - நீர் (வளம்) நிலைபெறாறுள்ள
திருமுல்லைவாயிலாகிய திருப்பதியில்,— அழகு துஞ்சல் அ மந்திரம்
தன்னில் எம் கோனைத் துதிக்கப்பெற்று - அழகு நிலைபேறுடைய
அந்தத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிராநின்ற நம்முடைய
முதல்வராகிய சிவபிரானை வாழ்த்தப்பெற்று (எ-று.) சிவபிரானை
வாழ்த்தப்பெற்றுப் பந்தம் ஒழிந்தோம்; கவலை களைந்தோம்; ஆதலா

ல் அஞ்சமாட்டோமெனக் கூட்டுக. தான் அசை. சடத்துவாக்க ளாவன மந்திரம், பதம், வன்னம், கலை, தத்துவம், புவனம் என விவை. இறுதியடியில் அம்மந்திர மெனற் பாலது அமந்திரமென நின்றது. (௭௨)

பெற்றத்திருந்துறுவாழ் வெமக்கீயப்பெருகுவள
முற்றத்திருந்துறுமுல்லையின் முல்லையின்முல்லையில்வாழ்
நற்றத்திருந்துறுநீர்வேணியீர் நள்ளுமன்பரென்னுஞ் [னே.
சுற்றத்திருந்துறுகண்டீர்த் தெமைத்தொண்டுகொள்ளுமி

(இ-ள்.) பெற்றத்து இருந்து எமக்கு உறு வாழ்வு ஈய - இடபத்தின்மேல் எழுந்தருளி எங்களுக்கு (த் தரிசனந் தந்து முத்தி) ப் பெருவாழ்வைக் கொடுக்கும் பொருட்டு,—பெருகு வளம் முற்றத் திருந்துறும் முல்லையின் முல்லையின் முல்லையில் வாழ்-(உலகத்தின்) மிகுந்தவளப்பம் முழுவதும் விளங்கப்பெற்றமுல்லைநிலத்தின்கண்ணதாகிய திருமுல்லைவாயிலின்கண் முல்லைக்கொடி நீழலில் வீற்றிருந்தருளும், — தத்து நல் நீர் துறு இரும் வேணியீர் - தாவுகின்ற சுத்தமாகிய கங்கைநீர் நெருங்கிய பெருமையாகிய சடையை யுடையவரே,—நள்ளும் அன்பர் என்னும் சுற்றத்திர் - நேசிக்கின்ற பத்தர்களாகிய நல்லினங்களை யுடையவரே,— எமை உந்து உறுகண் தீர்த்துத் தொண்டு கொள்ளுமின் - எங்களைத் தூக்கும் (வினை)த்துன்பத்தைப் போக்கி அடிமையாகக் கொண்டருளும். (எ-று.) (௭௩)

மின்பங்கம்பொன்றுந்துமேருவில் லோடமர்வேதியவென்
றன்பங்கம்பொன்றுந்துறைகாட்டி முத்தியிற்சாரவரு
ளன்பங்கம்பொன்றுந்துபியோசை யென்றுமறுமுல்லையா
யின்பங்கம்பொன்றுந்துவர்க்கையற் கீந்தருளென்னரசே.

(இ-ள்) ஒன்று அம்பு உந்து மேரு வில்லோடு மின் அமர் பங்கு வேதிய - (விஷ்ணுவாகிய) ஒருபாணம் பொருந்திய மகாமேரு மலையென்னும் வில்லோடும் உமாதேவியார் தங்கியபாகத்தை யுடைய (தேவப்) பிராமணரே,— என்றன் பங்கம் பொன்றும் துறை காட்டி - என்னுடைய (மும்மலச்) குற்றம் ஒழிதற்கேதுவாகிய (சன்) மார்க்கத்தை விளக்கி,—முத்தியில் சார அன்பு அங்கம் அருள் — பரமுத்தியிற் கலக்கும் வண்ணம் பரபத்தியையும் (அதற்கு) அங்

கமாகிய நல்லொழுக்கத்தையும் கொடுத்தருளும்,—பொன் துந்துபி ஓசை என்றும் அறு முல்லையாய் - இலக்குமியும் வாத்தியங்களின் முழக்கமும் எந்நாளும் நீங்காத திருமுல்லைவாயிலையுடையவரே,— கம்பு ஒன்றும் அவர்க்கையற்கு இன்பம் ஈந்தருள் என் அரசே-சங்கம் பொருந்திய சிவந்த கையையுடைய விஷ்ணுவுக்கு ஆனந்தத்தைத் தந்தருளிய என்னுடைய முதல்வரே (எ-று.) பிராமணரே உடையவரோ முதல்வரே என அடுக்கி யுரைத்துக்கொள்க. (எச)

அரங்கந்திருவம்பலமுக்கணனுக்கமர்விடஞ்சீ
ரிரங்கந்திருவம்பலர்தொறும் வாழவிலங்கும்பிர
மரங்கந்திருவம்பலபாடும் வாவிகண்மல்குமுல்லைப்
புரங்கந்திருவம்பலங்குங் கொடியிடைப்பூண்முலையே.

(இ-ள்.) முக்கணனுக்கு அரங்கம் - மூன்று கண்களையுடைய சிவபிரானுக்குத் (திருநிருத்தஞ்செய்யுஞ்) சபை,—திரு அம்பலம்—(தில்லைப்பதியிடத்ததாகிய) அழகிய (கனக) சபையே ,—அமர்வு இடம் - எழுந்தருளியிருக்கும் இடம்,— இரங்கு சீர்த் திரு வாழ இலங்கும் அம் வம்பு அலர் தொறும் - (யாவரும் எடுத்து) முழக்கும் சிறப்பினையுடைய இலக்குமி தங்கும்படி விளங்குகின்ற அழகும் மணமும் பொருந்திய செந்தாமரை மலர்கள் தோறும்,—பிரமரம் கந்திருவம் பலபாடும் வாவிகள் மல்கு முல்லைப் புரம் - வண்டுகள் கந்தருவமுதலிய பலவகைப் பண்களைப் பாடப்பெற்ற தடாகங்கள் மிகுந்துள்ள திருமுல்லைவாயிலென்னுந் திருப்பதியே,—கந்து - பற்றுக்கோடு,—வம்பு அலங்கும் பூண் இரு முலைக் கொடியிடை—கச்சின்மேல் விளங்கும் ஆபரணங்களையணிந்த இரண்டு தனங்களையுடைய கொடியிடையம்மையே. (எ-று.) (எரு)

பூண்டிலஞ்சித்தத்துமெய்யன்பெவ்வாறினிப்பொன்பெண்மண்ணாந், தூண்டிலஞ்சித்தத்துவங்கடந்தானந்தந்தோய்வுறவூர்,பாண்டிலஞ்சித்தத்துவாத்துடக்கொக்கப்பறித்தருள்வா,
யாண்டிலஞ்சித்தத்துநீர்புடைசூழ்முல்லையங்கணனே.

(இ-ள்.) சித்தத்து மெய் அன்பு பூண்டிலம் - (யாங்கள்)மனதின்கண்ணே மெய்ப் பத்தியைக் கொண்டிலோம்,—இனி எவ்வாறு பொன் பெண் மண் ஆம் தூண்டில் அஞ்சி - இனி எப்படிப் பொன்னும் பெண்ணும் மண்ணுமாகிய தூண்டிலுக்குப் பயந்து,—

தத்துவம் கடந்து ஆனந்தம் தோய்வுறல் - (மாயாகாரியமாகிய) கருவிகளை நீங்கி (உமது திருவடி) இன்பப் பெருக்கின் மூழ்குதல்,— அம் பாண்டில் ஊர் சித்து - அழகிய இடபவாகனத்தைச் செலுத்துகின்ற ஞானமூர்த்தீ,— அத்துவாத் தொடக்கு ஒக்கப் பறித்து ஆண்டருள்வாய் - (ஆதலால் நீர்குருமூர்த்தியாகி எழுந்தருளிச் சிவதீக்கை செய்து) சடத்துவாக்களின் பந்தம் முழுவதும் களைந்து (அப்பத்தி முத்திகள் சித்திக்கும் பொருட்டு) அடிமைபூண்டருளும்,— தத்து நீர் இலஞ்சி புடை சூழ் முல்லை அம் கணனே - தாவுகின்ற நீரையுடைய தடாகங்கள் புறத்தே சூழுந் திருமுல்லைவாயிலையுடைய அருட்கண்ணரே (எ—று.) ஞானமூர்த்தி அருட்கண்ணரே என்பவைகளை முதலின் ஓதிக்கொள்க. தூண்டில் இவ்விடத்தே அறிவைக்கவருங் கருவி. (எசு)

அங்கங்கரகரவென்றோதம்போலொலியார்ப்பவன்பர்
சங்கங்கரகரகத்தோர்துதிக்கத்தண்ணீற்றினொளி
பொங்கங்கரகரமுல்லையுள்ளாரெனைப்பொத்திக்கொண்ட
பங்கங்கரகரநின்றாலுனைப்பற்றிக்கொல்லுவரே.

(இ-ள்.) அங்கு அங்கு ஓதம் போல் அன்பர் அர அர என்று ஒலி ஆர்ப்ப - அங்கங்கே கடல்போலப் பத்தர்கள் அரகரவென்று பெருமுழக்கஞ்செய்யவும்,— கரகம் சங்கம் கரத்தோர் துதிக்க - கமண்டலத்தையும் சங்கையும் (முறையே) கைகளிற்கொண்ட பிரமாவும் விஷ்ணுவும் (வேதசிவாகமங்களை எடுத்து) ஓதவும்,— தண் நீற்றின் ஒளி பொங்கு அங்கர் முல்லை அகரம் உள்ளார் - தண்ணிய திருநீற்றினது விளக்கம் மிகுந்த திருமேனியையுடையவராகிய சிவபெருமான் திருமுல்லைவாயிலென்னுந் திருப்பதியின் கண் எழுந்தருளியிருக்கின்றார் (ஆதலால்),— எனைப்பொத்திக்கொண்ட பங்கம் கர கர - என்னை மூடிக்கொண்ட (ஆணவமலமாகிய) களங்கமே ஒளித்துவிடு ஒளித்துவிடு,— நின்றால் உனைப் பற்றிக் கொல்லுவர் - தங்கி நிற்பாயாயின் உன்னை அகப்படுத்திக் கொன்றுவிடுவர் (எ—று.) அன்பர் சங்கம் கர கரகத்தோர் என்பதற்கு அன்பர்குழாமும் கையிலே கமண்டலத்தையுடைய முனிவரும் எனப் பொருள் கூறலும் ஒன்று. (எஎ)

பற்றிக்கொல்லாதொழிவேனோவினிமலப்பாவமறங், கற்றிக்கொல்லாருலைவேற்கண்ணிபால்கவர்முல்லைப்பிரான், பெற்

றிக்கொல்லாதவர்போலென்றனையெண்ணும்பேதையெண்ணா,
முற்றிக்கொல்லாம்வருகின்றனைபாரின்றென்முன்னர்வந்தே.

(இ-ள்.) மலப் பாவம் இனிப் பற்றிக் கொல்லாது ஒழிவையோ - மூலமலமாகிய பாதகமே இனி (உன்னை) அகப்படுத்திக்கொல்லாமல் விடுவையோ,—மறம் கற்று இக் கொல் உலை ஆர் வேற் கண்ணி பால் கவர் - கொல்லுந்தொழிற்கண்ணே பழகி இந்தக் கொல்லன் உலைமுகத்திற் காயப்பெற்ற வேல்போலும் கண்களையுடைய உமாதேவியாரது பாகத்தைக் கவர்ந்து,—முல்லைப் பிரான் பெற்றிக்கு ஒல்லாதவர்போல் - திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும் முதல்வருடைய திருவருணீர்மைக்குப் பொருந்தாதவன்பர் போலும்,—என்றனை எண்ணும் பேதை எண்ணம் முற்றிக் கொல்லாம் வருகின்றனை — என்னை நினைக்கின்ற மடமைக்கருத்து முதிர்ந்தல்லவா (இதுவரையும் தொடர்ந்து) வருகின்றாய்,—இன்று என் முன்னர் வந்து பார் - இப்பொழுது (அச்சிவபிரானுடைய பெருங் கருணைபெற்ற) என்முன்னேவந்து பார்ப்பாயாக (எ-று.) (எஅ)

வந்தியன்றேவரை நின்னன்றியான்முல்லைவாணவென்றே
வந்தியன்றேவரையாதருளாமைமண்முற்றும்பெற்றும்
வந்தியன்றேவரைமாமாதுநீயுமவ்வாறுநின்செவ்
வந்தியன்றேவரைவாட்கரித்தான்கெடவைத்தவனே.

(இ-ள்.) முல்லை வாண - திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானே,—நின் அன்றித் தேவரை யான் வந்தியன் —(பதி யாகிய) உம்மையல்லது (பசுக்களாகிய) தேவர்களை நான் வணங்கமாட்டேன்,—வரையாது இயன்றே வந்து அருளாமை என்றோ - (ஆதலால் அடியேனைத்) தள்ளிவிடாது (இருவுளம்) பொருந்தியே எழுந்தருளிக் கருணைசெய்யாமை என்னையோ,—மண் முற்றும் பெற்றும் மா வரை மாது வந்தி அன்றோ நீயும் அவ்வாறு— பிருதிவி (முதலிய சடமும் சித்துமாகிய பிரபஞ்சங்களை) யெல்லாம் பெற்றருளியும் மகிமைபொருந்திய பார்ப்பதிதேவி பெருந்தகன்னிகையல்லவா (அப்பார்ப்பதிதேவிக்குத் தலைவராகிய) நீரும் பிரமசாரியே,—நின் செவ்வந்தி அன்றே வரைவாட்கு அரித்தான் கெட வைத்தவனே - உமது (திருமேனிப்பாங்காகப்பெற்ற) செவ்வந்திமலர்களை முற்காலத்தே தன்னுடைய மனைவி (குடும்) பொருட்டு (த்

திருச்சிராப்பள்ளியிலே) முற்றுங்கவர்ந்த பராந்தகச் சோழனை அழியும்படி செய்தவரே (எ-று.) சிவபிரானே பிரமசாரியே செய்தவரே யென அடுக்கியுரைக்க. மண் - உபலக்கணம். (எகூ)

வைத்தலைவாளிநிகர்விழியாண்மதனம்புடல்சு
வைத்தலைவாளினியாற்றகில்லாண்மன்னச்செய்தியருள்
வைத்தலைவாளினிதார்முல்லைவாண்மதிக்குடைக்கோ
வைத்தலைவாளினிலேற்றன்றிச்சாந்தம்வாரதிவட்கே.

(இ-ள்.) வைத் தலை வாளி நிகர் விழியாள் - கூரிய நுனியையுடைய அம்புபோலும் கண்களையுடைய என்னுடைய பெண்ணானவள்,— மதன் அம்பு உடல் சுவைத்து அலைவாள் இனி ஆற்றகில்லாள்—மன்மதனுடைய பாணங்களாலே (தனது) உடம்பு (முழுவதும் புண்ணாகத் துளைத்து) உண்ணப்பட்டுச் சுழலுகின்றாள் இனிப் பொறுக்கமாட்டாள் போலும்,—அருள் வைத்து மன்னச் செய்தி - (ஆதலால்) கருணைசெய்து (அங்கீகரித்து அவளறிவு) நிலைபெறும்படி செய்தருளும்,—அலை இனிது ஆர் வாள் முல்லைவாண - இருளை இனிதாக உண்ணுகின்ற ஒளியையுடைய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே,—மதிக் குடைக் கோத் தலையை வாளினில் ஏற்று அன்றி - சந்திரனாகிய குடையையுடைய அரசனாகிய (அம்) மன்மதனது தலையை வாளாயுதத்தால் வீசினாலல்லது,—இவட்குச் சாந்தம் வாராது - இவளுக்கு ஆறுதல் உண்டாகாது (எ-று.) சிவபெருமானே என்பதை முதலின் எடுத்தோதிக்கொள்க. மூன்றாமடியில் அல்லை அலையென இடைக்குறைந்து நின்றது. [நற்றாயிரங்கல்.] (அ0)

வட்காதகைதவரூரெரித்தாயுன்னைவாஞ்சித்தவி
வட்காதகைதவமிக்கோர்புகழ்மணிவார்த்தைநிறை
யுட்காதகைதவவாணர்கள்வாழ்முல்லையுத்தமனே
யுட்காதகைதவன்கைப்பிரம்பாலடியுண்டவனே.

(இ-ள்.) வட்காத கைதவர் ஊர் எரித்தாய் - கெடுதலில்லாத வஞ்சகத்தையுடைய பகைவருடைய நகரங்களைத் தகித்தவரே,— உன்னை வாஞ்சித்த இவட்குத் தகையா தவ மிக்கோர் புகழ் வார்த்தை (யா) மணி - உம்மைவிரும்பிய இத்தலைவிக்கு அழகா மிக்க தாகும் (புலமையின்) மேலாயினர் துதிக்கின்ற சொல்லா மாணிக்

கமாகும் (ஆதலால் அங்கீகரித்தருளும்),—நிறை உட்காத கைத் தவ வாணர்கள் வாழ் முல்லை உத்தமனே - மகிமை குன்றாத ஒழுக்கத் தையுடைய தவத்தினர் வாழ்கின்ற திருமுல்லைவாயிலின்கண் எழு ந்தருளியிருக்கும் முதல்வரே,—உட்கார்த கைதவன் கைப் பிரம்பா ல் அடியுண்டவனே - அஞ்சாத பாண்டியராஜனது கையிலுள்ள பி ரப்பங்கோலால் அடிபெற்றவரே (எ-று.) திருநாமங்களை அடுக்கியு ரைத்துக்கொள்க. ஆதலால் அங்கீகரித்தருளுமென்பது இசையெச் சம். மூன்றாமடியில் கைத்தவமெனற்பாலது கைதவவெனத் தகர வொற்றுத் தொக்குநின்றது. [பாங்கிதலைமகளதவயவத்தருமை சா ற்றல்.] (அக)

உண்டாயினந்தமயல்செய்வதென்னினியோடுநெஞ்ச
முண்டாயினந்தமதாண்டவன்முல்லையுறுருறும்புன் [ன்
கண்டாயினந்தமர்போல்வந்தெம்மான் கண்ணருள்புரிந்தா
கண்டாயினந்தமமேயுனக்கிங்கென்னகாரியமே.

(இ-ள்.) உண்டாயின் நந்த மயல் செய்வது என் இனி ஓடு—(என்னோடு) பிறந்தாயானால் (யான்) கெடும்வண்ணம் (நீ) மயக்கஞ் செய்தல் என்னை இப்பொழுதே ஓடக்கடவாய்,— நஞ்சம் உண் தாயின் நந்தமது ஆண்டவன் முல்லை உறுர் உறும் புன்கண் தாயின ம் - விடத்தை உண்டருளிய, மாதாவைப்போலும் (கருணையிருந்து தேவரைக் காத்தருளிய,) நம்முடைய (அம்) முதற்கடவுளது திரு முல்லைவாயிலை அணுகாதவர் அடையத்தக்க துன்பங்களைக் கடந் தோம்,— எம் மான் தமர் போல் வந்து அருட்கண் புரிந்தான் கண் டாய் - எம்முடைய பெரியராகிய சிவபிரான் (மாறுடச்சட்டைசாத் தி) உறவினர்போல எழுந்தருளித் திருவருட்பார்வை செய்தருளி னாரல்லவா,—(ஆதலால்)—தமமே இனம் உனக்கு ஈங்கு என்ன கா ரியம் - இருண்ட ஆணவமலமே இன்னமும் உனக்கு இவ்விடத்தே என்னகாரியமிருக்கின்றது (எ—று.) சிவபிரான் திருவருள்செய்தரு ளினார் ஆதலால் துன்பங்களைக் கடந்தோம் ஆணவமலமே என்னோ டு பிறந்தாயானால் மயக்கஞ்செய்தல் என்னை ஓடக்கடவாய் இன்ன மும் என்னகாரியமிருக்கின்றதெனக்கூட்டுக. (அஉ)

மேதக்கசிந்தனைத்தாபதர்வாழ்முல்லைமேவுநம்ப
வாதக்கசிந்தனைத்தாவீரமென்றட்டுமன்மதனைக்

காதக்கசிந்தனைத்துங்குடியார்முடிக்கண்ணுதலென்
றோதக்கசிந்தனைக்கென்னெஞ்சமேகுறையோதுதியே.

(இ-ள்.) மேதக்க சிந்தனைத் தாபதர் வாழ் முல்லை மேவு நம்ப-மேம்பட்ட (திருவடித்) தியானத்தையுடைய துறவிகள் வாழும் திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற நம்பனென்னுந் திருநாமத்தையுடையவரே,—தக்க சிந்தனை வா வீரம் தா என்று அட்டு மன்மதனைக் காது அக்க - தகுதியுடைய குறள்வடிவினனாகிய விஷ்ணுவை வருவாயாக (உனது) வலிமையைத் தருவாயாக என்று சொல்லி அழித்து மன்மதனை எரித்துக் கொன்ற (அக்கினிக்) கண்ணையுடையவரே,— சிந்து அனைத்தும் குடியார் முடிக் கண்ணுதல் என்று ஓத - கங்கையாறு முழுவதும் தங்கப்பெற்ற திருமுடியையுடைய சிவபிரானே என்று (திவ்வியநாமங்களை) எடுத்துப் புகழ்ந்த மாத்திரையில்,—கசிந்தனைக்கு நெஞ்சமே குறை என் ஓதுதி - உருகியவனக்கு மனமே குற்றம் ஏது சொல்லுவாயாக (எ-று.) (அங)

துதிப்பருந்தாதவிழ்பூம்பொய்கைசூழ்முல்லைத்தொன்னகர்வா
மதிப்பருந்தாதகிகொன்றைச்சடாதரவானியங்குங் [ழ்
கதிப்பருந்தாதரவாயென்னுடம்பிற்கசியும்புலாற்
குதிப்பருந்தாதமுன்வந்தென்றனைத்தொண்டுகொண்டருளே.

(இ-ள்.) துதிப்பு அரும் தாது அவிழ் பூம் பொய்கை சூழ் முல்லைத் தொல் நகர் வாழ் - புகழ்தற்கரிய இதழ்கள் விரிந்த பூக்களையுடைய வாவிகள் சூழ்ந்த திருமுல்லைவாயிலென்னும் பழைய திருப்பதியின்கண் எழுந்தருளியிராநின்ற,—மதி பருந் தாதகி கொன்றைச் சடாதர - சந்திரனையும் பெரிய ஆத்திப்பூமாலையையும் கொன்றைப்பூமாலையையும் அணிந்த சடையை யுடையவராகிய சிவபெருமானே,—வான் இயங்கும் கதிப் பருந்து - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற நடையுள்ள பருந்தானது,—என் உடம்பின் கசியும் புலால் ஆதரவாய்க் குதிப்பு அருந்தாத முன் வந்து - என்னுடைய உடலினின்றும் வழிகின்ற ஊனை விருப்பமாகப் பாய்தலுற்றுப் புசிக்குமுன்னமே எழுந்தருளி,—என்றனைத் தொண்டு கொண்டருள்—என்னை அடிமைபூண்டருளும் (எ-று.) (அச)

அருந்துதியானன்பினேத்தவைத்தாரருள்கற்பினல
மருந்துதியானம்புவிக்களித்தாரகுளாரமுதை

யருந்துதியானம்புரிமனமேவிரைந்தாள்வரெம்மை
யருந்துதியான்னகவர்முல்லைக்கேசொல்லுமவ்வெண்ணமே.

(இ-ள்.) அருந்துதி யான் அன்பின் ஏத்த அருள் வைத்தார்—அருமையாகிய (தேவாரமுதலிய) தோத்திரங்களை அடியேன் பத்திமையோடு எடுத் தோதும்பொருட்டுக் கருணைசெய்தவரும்,—கற்பின் நலம் அருந்துதியான் அம் புவிக்கு அளித்தார் - கற்பினது நன்மையை அருந்ததிமுகமாக அழகிய பூவுலகத்திற்குக் கொடுத்தவருமாகிய சிவபிரானுடைய,— ஆர் அருள் அமுதை அருந்து தியானம் புரி - நிறைந்த அருளாகிய அமிர்தத்தைப் புசித்தற்கு (உரிய) தியானம் செய்யக்கடவாய்,—மனமே எம் ஐயர் விரைந்து ஆள்வர் - (அங்ஙனஞ்செய்தால்) நெஞ்சமே நம்முடைய (அக்) கடவுள் விரைவில் எழுந்தருளி அடிமைபூண்டருளுவர்,—நன்கு அவர் முல்லைக்கே செல்லும் அவ் எண்ணம் உந்துதி ஆல் - (ஆகையால்) நன்மையாக அச்சிவபெருமானது திருமுல்லைவாயிலுக்கே செல்லுகின்ற அக்கருத்தினைச் செலுத்துவாயாக (எ-று.) இரண்டாமடியில் அருந்ததி அருந்துதியென மரீஇயிற்று. நான்காமடியில் ஆல் அசை. (அரு)

எண்ணப்படிகடியாதன்பர்க்கீந்தெழின்முல்லையினுங்
கண்ணப்படிகடியானத்துந்தோன்றுமிக்கான்கழற்கீழ்
நண்ணப்படிகடிநெஞ்சேயவனம்பிழையெண்ணினுந்
தண்ணப்படிகடிதாறுதல்போலுமத்தன்மையனே.

(இ-ள்.) கடியாது எண்ணப்படி அன்பர்க்கு ஈந்து எழில் முல்லையினும் - தள்ளிவிடாமல் எண்ணியவண்ணம் பத்தர்களுக்குக் கொடுத்தருளி அழகையுடைய திருமுல்லைவாயிலின்கண்ணும்,—கண்ணப்ப அடிகள் தியானத்தும் தோன்றும் மிக்கான் - கண்ணப்பசுவாமிகளுடைய (அத்துவித) பாவனையின்கண்ணும் வெளிப்பட்டருளுகின்ற மேலானவருடைய,—கழற் கீழ் நண்ணப் படி கடி நெஞ்சே—திருவடி (வியாபகத்தில்) வியாப்பியமாகக் கலக்கும்பொருட்டு உண்மைநிட்டையைக் குருமுகமாகப்) பயிற்சி செய்வாயாக விளக்கமுள்ள மனமே,—அவன் நம் பிழை எண்ணினும் - அச்சிவபிரான் (இதுவரை வீணாகப்போக்கிய) நம்முடைய குற்றங்களைத் திருவுளத்துக் கருதினும்,— தண் அப்பு அடி கடிது ஆறுதல்போலும் அத்தன்மையனே - குளிர்ந்த நீரில் அடிக்கப்பட்டவடு விரைவிலே ஒழிதல்

போல (க்கருணைசெய்கின்ற) அவ்வருளுடையவரேயாவர் (எ-று) கண்ணப்பவடிகள் கண்ணப்படிகளென நின்றது. (அசு)

அத்தன்மையர்ந்தெரியற்குழலாரமர்முல்லைநில
யத்தன்மையாந்தெரிமூழ்காமலுண்மையருவுருக்கா
ரத்தன்மையாந்தெரியக்குருவாய்வந்தனைத்துமல்லா
வத்தன்மையாந்தெரிவைபாகத்தாமறியென்றனனே.

(இ-ள்.) அத்தன் - பிதாவும்,—தெரியல் மையாம் குழலார் அமர் முல்லை நிலயத்தன் - மலர்மாலை (அணிந்த) கருமையாகிய கூந்தலையுடைய மங்கையர் தங்கப்பெற்ற திருமுல்லைவாயிலின்கண்ணதாகிய திருக்கோயிலையுடைய வருமாகிய சிவபிரான்,—மையாந்து எரி மூழ்காமல் - (சிறியேன் உலகவியலிற்) சுழன்று எரிவாய் நிரயத்திலே அழுந்திவிடாது,— அருக் காரத்து உரு உண்மை அல் மை ஆம் தெரியக் குருவாய் வந்து - (கன்மத்துக்கீடாகக்கூட்டுவித்த) தத்துவமாகிய (மாயா) காரியத்தினது சொரூபவுண்மையும் இருண்ட ஆணவமலத்தினது (சொரூபவுண்மையும்) பசு (வாகிய எனது சொரூபவுண்மையும்) அறியும்பொருட்டுக் குருமூர்த்தியாகி எழுந்தருளி (அறிவித்து),—அனைத்தும் அல்லா அத்தன்மையாம் - (எழுத்துக்கள்) எல்லாம் (ஆகியும்) ஆகாத அகரத்தின் இயல்பு (போல உலகெலாமாகியும் வேறாகிய அகளவடிவை) உடையாம்,—தெரிவை பாகத்தாம் - (உயிர்களுக்குப் போகமும் விடுபேறும் கொடுக்கும்பொருட்டுப்) பராசத்தியைப் பாகத்திற் (கொண்ட சகளவடிவையும்) உடையாம்,— அறி என்றனன் - உணர்வாயாகவென்று (பதியாகியதம்முடைய சிறப்புருவம் பொதுவுருவங்களையும் முறையே) உபதேசித்தருளினர் (எ—று.) ஆதலால் அப்பெருமானுடைய கருணை இருந்தபடி என்னையென்பது எஞ்சிநின்றது.()

அறிவென்றவவழிச்செல்லார்தமையுமடக்குங்கண்ணாய்
குறிவென்றவவடியேற்களித்தாயிணைக்கூற்றின்மையாற் [வை
பொறிவென்றவவர்பெறும்பேற்றையொக்குமிப்பொன்னுரு[ச்
செறிவென்றவவலியென்றேருவெம்மான்முல்லைத்தீங்கரும்பே.

(இ-ள்.) அறிவு என்று அவ வழிச் செல்லார்தமையும் அடக்கும் கண்ணாய் - அவ (மாகிய உலக) வழியிற் செல்லுதலை அறிவெ

ன்று கொள்ளாத அறிஞரையும் அகப்படுத்துகின்ற கண்ணையுடை
யவனே,— குறி வென் தவ அடியேற்கு அளித்தாய் - (நீ) குறித்த மு
துகாகியபுறத்தை மிகவும் எளியேனுக்குத் தந்தருளினை, —இணைக்
கூறு இன்மையால் - சமமாகிய கூறுபாடில்லாமையினால்,—பொறி
வென்ற அவர் பெறும் பேற்றை ஒக்கும் இப்பொன் உருவைச் செ
றிவு - இந்திரியநிக்கிரகஞ் செய்த அத்துறவிகளால் அடையத்தக்க
(முத்திப்) பயனைப் போலும் இப்பொன் போன்ற சரீரத்தை அணை
தற்கு,—தவ வலி என் என்றோ - (இவனுக்குத்) தவவலிமை யாது
ளதென்று கருதியோ,—எம் மான் முல்லைத்தீங்கரும்பே - எம்பெரு
மானுடைய திருமுல்லைவாயிலின்கண் இருக்கும் இனிய கரும்பு போ
ல் பவனே (எ-று.) கண்ணையுடையவனே கரும்புபோல்பவனே ச
மமில்லாமையினால் அணைதற்குக் கருதியோ நீ தந்தருளினை யென
க்கூட்டுக. [புறங்காட்டல்.) (௮௮)

கருப்பந்தங்குங்குறியான்முல்லைவாணகதிகடொறுந்
திருப்பந்தங்குங்குமலமரல்போன்றுதெரிவையரைப் [ழிப்பா
பொருப்பந்தங்குங்குமக்கொங்கையென்றோதிப்பொய்யாதொ
யுருப்பந்தங்குங்குலியக்கலயன்றொழுமுத்தமனே.

(இ-ள்.) முல்லைவாண - திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளி
யிருக்கின்ற சிவபெருமானே,— கருப்பம் தங்கும் குறியால் - (திரு
ம்பவும்) கருப்பத்திற் பொருந்துதற்கேதுவான (தீய) கருத்தால்,—
கதிகள் தொறும் திருப் பந்து அங்கு உங்கும் அலமரல் போன்று-
தேவகதி மாநுடகதி மிருககதி நரககதியாகிய நாற்கதிகளினும் அழ
கிய பந்து அவ்விடத்தும் உவ்விடத்தும் சுழலுதல்போல (ச்சுழன்
று) ,—தெரிவையரைப் பொருப்பு அந்தம் குங்குமக் கொங்கை எ
ன்று ஓதிப் பொய்யாது - பெண்களை மலைபோலும் அழகையுடைய
செஞ்சாந்தணிந்த தனங்களையுடையாரென்று புகழ்ந்து பொய்ம்
மையுடையேனாகாது,— உருப் பந்தம் ஒழிப்பாய் - தேகபந்தத்தை
விடுவித்தருளும்,—குங்குலியக்கலயன் தொழும் உத்தமனே - குங்கு
லியக்கலயநாயனாரால் வழிபடப்பெற்ற முதல்வரே (எ-று.) சிவபெ
ருமானே முதல்வரே எனவும் சுழன்று என்றதன்பின் திரும்பவும்
கருத்தால் எனவும் உரைத்துக்கொள்ள. குங்குமக் கொங்கை அன்
மொழித்தொகை. (௮௯)

தமக்கடியாகமையொன்றித்தவஞ்செய்யுந்தன்மையிலா
தமக்கடியாகமுதவாரைச்சாரத்தருமுனக்குத்
தமக்கடியாகமறையாளர்முல்லைத்தலத்திறைவர்
தமக்கடியாகமெய்த்தொண்டுசெய்வேங்களைச்சார்வரிதே.

(இ-ள்.) தமக் கடியா - இருள்வடிவாகிய ஆணவக்கொடியாய்,—ஈமை ஒன்றித் தவம் செயும் தன்மை இலாத மக்கள் - (துறவறத்தினின்றும் துன்பங்களைப்) பொறுத்தலாகிய குணத்தைப் பொருந்தித் தவங்களைச் செய்கின்ற இயல்பில்லாத மாநுட (ப்பதரையும்,— தியாகம் உதவாரைச் சார உனக்குத் தரும் - (இல்லறத்தினின்றும் துறவறத்தாருக்கு உணவுமுதலிய) கொடுத்தலை உபகரியாதவ (ராகிய பாமர) ரையுமே பந்திக்க உனக்கு அருகமாகும்,— உத்தமக் கடி யாகம் மறையாளர் முல்லைத் தலத்து இறைவர்தமக்கு - மேம்பட்ட விளக்கமுள்ள வேள்விகள் (செய்கின்ற) பிராமணர்களுடைய திருமுல்லைவாயிலாகிய திருப்பதிக்கு முதல்வராகிய சிவபெருமானுக்கு,— அடியாக மெய்த்தொண்டு செய்வேங்களைச் சார்வு அரிது - (பிறவிகடோறும்) அடிப்பாடாக மெய்ப்பணிகளைச் செய்கின்ற எங்களைப் பொருந்துதல் (உனக்கு) அருகமல்ல (எ—று.) தமக்கடியாவென்பதனை இயமன்மேலேற்றிப் பொருள்கூறினும் பொருந்தும். (கூ0)

சார்வருந்திப்பியமால்கொள்வதென்னை தண்முல்லைநகர்ச்
சார்வருந்திக்குடையார்செயல்கேட்டிதருவர்கட
மூர்வருந்திக்கெடப்புன்மூரல்கொள்ளுவரோரெருதை
யூர்வருந்திப்புனல்சூடுவராடுவரொண்ணுதலே.

(இ-ள்.) சார்பு அருந் திப்பியம் மால் கொள்வது என்னை - (ஆதலால் இத்தன்மையுடையாரிடத்தே) அடைதற்கரிய மிக்க ஆசைகொள்ளுதல் யாது (காரணம்),—தண் முல்லை நகர்ச்சார்வரும் திக்கு உடையார் செயல் கேட்டி - தண்ணியநீர் சூழப்பெற்ற திருமுல்லைவாயிலென்னும் திருப்பதியின்கண்ணே (பவனி) வருகின்ற திக்குகளை வஸ்திரமாகக் கொண்டவராகிய மாசிலாமணியீசருடைய சரிதங்களைக் கேட்பாயாக,—தருவர்கள் தம் ஊர் வருந்திக் கெடப் புன்மூரல் கொள்ளுவர் - அசுரர்களுடைய (முப்) புரங்களும் துன்பப்பட்டுக் கெடும்பொருட்டு இளநகை செய்தவர்,—ஓர் எருதை

ஊர்வர் - ஒன்றாகிய இடபத்தைச் செலுத்துபவர்,— உந்திப் புனல் சூடுவர் - கங்கையாற்று நீரைத்(திருமுடியிலே) தரிப்பவர்,—ஆடுவர்- (மயானத்தின்கண்ணே) திருநடஞ்செய்பவர்,—ஒள் நுதலே - அழகி ய நெற்றியையுடைய பெண்ணே (எ-று.) பெண்ணே என முதலினு ம் ஆதலால் ஆசைகொள்ளுதல் யாதுகாரணம் என இறுதியினும் கூ றிக்கொள்க. தண் - ஆகுபெயர். ஒண்ணுதல் - அன்மொழித்தொகை. [மாசிலாமணியீசர் பவனிபோதலைத் தரிசித்து மால்கொண்ட மாதை நோக்கி நற்றாய்கூறியது. (௬௧)

ஒண்ணுதலங்கனைமாரிடந்தோறுமுவந்துநடம்
பண்ணுதலங்கனையக்குழைத்தார்முல்லைப்பாடியினை
யண்ணுதலங்கனையானைத்தொழலிவையன்றிநெஞ்சின்
கண்ணுதலங்கனைமுன்னீருலகிற்கருமங்களே.

(இ-ள்.) இடந்தோறும் ஒள் நுதல் அங்கனைமார் - அரங்கங்கள் தோறும் ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெண்கள்,—உவந்து நடம் பண்ணுதல் அம் கல்லையக் குழைத்து ஆர் - மனமகிழ்ந்து நடனஞ்செய்கின்ற ஒலியான்து அழகிய கல்லும் உடையும் வண் ணம் குழைத்து நிரம்பப்பெற்ற,—முல்லைப் பாடியினை அண்ணுதல் அங்கு அனையானைத் தொழல் இவை அன்றி - திருமுல்லைவாயிலை அடைதலும் அவ்விடத்தே எழுந்தருளியிருக்கின்ற தாய்போலும் (கருணையுடைய) சிவபெருமானை (விதிப்படி) வழிபடுதலுமாகிய இ ச்சிவதன்மங்களையல்லது,—கனை முந்நீர் உலகின் கருமங்கள் நெஞ் சின்கண் நுதலம் - முழங்குகின்ற கடலாற் சூழப்பட்ட உலகத்தி ன்கண்ணே (பிறிதொரு) கருமங்களை மனசிலே நினைத்தலும் செய் யாம் (எ-று.) பண்ணுதல் ஆகுபெயர். மூன்றாமடியில் அன்னை அ னையென இடைக்குறைந்து நின்றது. (௬௨)

மங்களமேவியன்முல்லைப்பிரானின்றுவைத்தனன்கா
மங்களமேவியனுட்டத்தவர்பொய்மமைதங்கன்
மங்களமேவியசெய்தெனைவாட்டுமனமினிநீ
மங்களமேவியபுன்புதன்மானவலியிழந்தே.

(இ-ள்.) முல்லைப் பிரான் வியன் மங்களமே இன்று வைத்த னன் - திருமுல்லைவாயிலையுடைய கடவுள் மேம்பட்ட (நித்திய)மங் களத்தையே இப்பொழுது (எனக்குச்) செய்தருளினார்,—(ஆதலால்)

—காமம் கள் அம் ஏ இயல் நாட்டத்தவர் பொய் மலம் மதம் கன்மம் களம்—ஆசையும் கள்ளும் அழகிய அம்பை யொத்த தன்மையுள்ள கண்களையுடைய பெண்களிடத்துச் (செய்கின்ற) பொய்யும் பாவமும் செருக்கும் (தீய) தொழிலும் வஞ்சகமுமாகியவற்றை,—மேவிய செய்து எனை வாட்டும் மனம் - விரும்பச்செய்து என்னை வருத்திய நெஞ்சமே,—இனி அளம் மேவிய புன் புதல் மான வலி இழந்து நீ மங்கு - இனி உப்பளத்தைச் சேர்ந்த சிறிய துரும்புபோலும் வலிமை கெட்டு நீ மங்குவாயாக (எ-று.) (௬௩)

இழவாதென்போதமிழப்பித்தமுல்லைக்கிறையவனைத் [களி
தெழவாதென்போதகங்கைக்கொண் டென்றன்மைத்துரிசு
ழுழவாதென்போதமெய்யன்புசெய்வீணிலுழலுமிந்தப்
பழவாதென்போதவிர்நெஞ்சேயுனக்கிதுபண்பல்லவே.

(இ-ள்) இழவாது என்போதம் இழப்பித்த முல்லைக்கு இறையவனை - (பசுவாகிய என்னை) இழக்காமல் என்னுடைய பசுத்துவத்தை இழக்கும் வண்ணம் செய்தருளிய திருமுல்லைவாயிலுக்குத் தலைவராகிய சிவபெருமானை,—தென் போது அகங்கைக் கொண்டு தொழ வா - அழகிய மலர்களை உள்ளங்கையிலே ஏந்திக்கொண்டு (மந்திரக் கிரியா பாவனைகளோடு பூஜித்து) வழிபடும்பொருட்டு வருவாயாக,— என் தன்மைத் துரிசுகளின் உழவாது என்பு ஓத மெய் அன்பு செய் - என்னுடைய பசுத்துவ (வாசனை) க் குற்றங்களின் (வழியே போய்) வருந்தாமல் என்பும் உருகியுணர்த்தச் சற்பத்தி செய்வாயாக,— வீணில் உழலும் பழ இந்த வாது என் - வம்பாகச் சுழலுகின்ற பழைமையாகிய இந்த (உலக) விவகாரம் யாது (பயன்றரும் ஆதலால்) ,—நெஞ்சே போ தவிர் இது உனக்குப் பண்பு அல்ல - மனமே (எனைவிட்டு) நீங்கு (அல்லது விவகாரத்தை) ஒழி இது (வன்றி மறுதலைப்பட ஒழுகுதல்) உனக்கு முறையன்று (எ-று.) மூன்றுமடியில் ஓதவென்பது உபசாரவழக்கு. (௬௪)

அல்லாக்குமாரிருணெஞ்சேதொழும்பர்க்கடித்தொழில்செ
யல்லாக்குமாரியென்றேத்தேலகிலமுமீன்றுமுதிர்
வல்லாக்குமாரிதன்பங்காளனீலவரங்கமெல்லை
யல்லாக்குமாரியமுல்லைப்பிரானடிக்கன்புசெய்யே.

(இ-ள்.) அல்லாக்கும் இருள் ஆர் நெஞ்சே - (விடயங்களிற்) சுழலுகின்ற மடமை நிறைந்த மனமே,— தொழும்பர்க்கு அடித் தொழில் செய்யல் ஆ கு மாரி என்று ஏத்தேல் - குற்றேவல் செய்யுங் கீழ்மக்களுக்கு அடிமைத்தொழில் செய்யாதே (அருளிலும் பொறையிலும் கொடையிலும் முறையே) காமதேனுவும் பூமியும் மேகமும் (ஆகும்) என்று (அக்கீழ்களைப்) புகழாதே,—அகிலமும் ஈன்றும் முதிர்வு அல்லாக் குமாரிதன் பங்கு ஆளன் - (சடாசடப் பிரபஞ்சங்கள்) எல்லாவற்றையும் பெற்றும் மூப்புப்பருவமில்லாத இளமைப்பருவத்தையுடைய உமாதேவியாரது பாகத்தை ஆளுகின்றவரும் ,— நீல அரங்கம் எல்லை அல் ஆக்கும் ஆரியம் முல்லைப் பிரான் - நீலமணிகளாலாகிய நடனசபைகள் பகலை இரவாகச்செய்கின்ற பெருமையாகிய திருமுல்லைவாயிலையுடைய கடவுளுமாகிய சிவபிரானுடைய,—அடிக்கு அன்பு செய் - திருவடிகளின்பொருட்டுப் பத்திமைசெய்வாயாக (எ-று.) செய்தாற் போகமும் வீடு பேறும் பெற்றுய்யலாமென்பது கருத்து. (கரு)

அன்புடையாளியங்காக்குறுங்கானத்திவல்சியெனத்
தன்புடையாளியங்காக்குமதர்தனியெய்தவிவ
டுன்புடையாளியங்காக்குமொலிமுல்லைத்தோன்றலதள்
வன்புடையாளியங்காக்குமிடறன்னவல்லிருளே.

(இ-ள்) அன்பு உடை ஆள் இயங்காக் குறும் கான் - (தம்மிடத்தும்) அன்பில்லாத வேடரும் சஞ்சரியாத அருநெறியையுடையகாட்டிலே,— தன் புடை அத்தி வல்சி என யாளி அங்காக்கும் அதர் - தனது பக்கங்களிலே (செல்லும்) யானைகளை உணவென்று நினைத்துச் சிங்கம் வாய்திறக்கின்ற வழியிலே,—தனி எய்த இவள் துன்புடையாள் - (ஆதலால் தலைவரே நீர்) ஏகமாக வர இத்தலைவி துக்கமுடையவளாவாள்,— இயம் காக்கும் ஒலி முல்லைத் தோன்றல் - வாத்தியங்களின் (முழக்கமும்) காவல் செய்தற்கண் உண்டாகின்றமுழக்கமும் உடைய திருமுல்லைவாயிலுக்கு முதல்வரும்,— வன்பு அதள் உடை ஆளி மிடறு அன்ன அல் இருள் அங்கு ஆக்கும் - வலிமையுடைய (புலித்) தோலை வஸ்திரமாகத் தரித்தவருமாகிய சிவபெருமானுடைய கழுத்துப்போல இரவானது இருளை அவ்விடத்தே செய்யாநிற்கும் (எ—று.) காட்டிலே வழியிலே இரவானது இருளைச் செய்யாநிற்கும்; ஆதலால் நீர் வரத் துக்கமுடையவளாவாளெனக் கூட்டுக. [இரவுவரல் விலக்கல்]

வல்லியம்போதகவண்டோடொலிக்கும்வளமுல்லைவாழ்
வல்லியம்போதகமாய்த்தபிரான்வரைமேலிடையோ
வல்லியம்போதகவாம்விழிதாமிந்தவார்முலையோ
வல்லியம்போதகரக்குழலாய்திருவாய்மலர்ந்தே.

(இ-ள்.) வல் இயம் போது அகம் வண்டோடு ஒலிக்கும் வளம் முல்லை வாழ் - வலிய வாத்தியங்கள் பூக்களிலுள்ள வண்டுகளுடன் (ஒருசமமாக) முழங்குகின்ற பெருமையாகிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற,—வல்லியம் போதகம் மாய்த்த பிரான் வரைமேல் - (தேவதாருவனத்து முனிவர் விடுத்த) புலியையும் யானையையும் கொன்ற கடவுளுடைய மலையில் (இருக்கும்),— இடை வல்லியோ தகவு ஆம் விழி தாம் அம்போ இந்த வார் முலை வல்லோ- இடை கொடியோ அருளுடைத்தாகிய கண்கள் பாணங்களோ இந்தக் கச்சணிந்த தனங்கள் சூதாடுகருவிகளோ,—ஓதகரக் குழலாய் திருவாய்மலர்ந்து இயம்பு - ஓ மயிர்ச்சாந்து பூசிய கூந்தலையுடையாய் (உனது) திருவாய் திறந்து செப்புவாயாக (எ-று.) மலையிலிருக்கும் கூந்தலையுடையாய் இடைகொடியோ ? கண்கள் பாணங்களோ ? தனங்கள் சூதாடுகருவிகளோ ? செப்புவாயாக வெனக்கூட்டுக. [கிளவிவேட்டல்.] (கஎ)

வாயானஞ்சக்கரமால்விடையாவைத்தமுல்லைப்பிரான்
வாயானஞ்சக்கரமோதித்தொழாதவறியர்க்கெய்த
வாயானஞ்சக்கரமீதுணவேந்திமயிலைத்துறை
வாயானஞ்சக்கரவாதழலாய்வருமம்புலியே.

(இ—ள்.) சக்கரம் மால் விடை வாயானம் ஆ வைத்த முல்லைப் பிரான் - சக்கரப்படையையுடைய விஷ்ணுவாகிய இடபத்தை வாவுகின்ற சிவிகையாகக் கொண்டருளிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற கடவுளே,—வாயான் அஞ்சு அக்கரம் ஓதித் தொழாத வறியர்க்கு எய்த வாயான் - வாக்கினலே பஞ்சாக்கரத்தை உச்சரித்து வழிபடாத அறிவிலிகளுக்குப் பொருந்த அகப்படாதவரே,—அக் கரம் மீது நஞ்சு உண ஏந்தி - அக்கைகளிலே விடத்தை யுண்டருளும்படி கொண்டவரே,—மயிலைத் துறைவா - திருமயிலைப்பதியாகிய கடற்றுறையையுடையவரே,—யான் அஞ்ச அம்புலி கரவாது அழலாய் வரும் - நான் பயமுறும்படி சந்திரன் மறைதலின்றி அக்கினிவடிவாக வெளிப்படுவன் (எ—று.)

இந்த விந்தை என்னையென்பது எஞ்சிநின்றது. முதலடியில் வாவு எனற்பாலது வா எனநின்றது. அன்றி வாய்மையான் வாயான் என மைவிகுதி தொக்கதாகக்கொண்டு அதற்குச் சற்சொரூபரே எனப் பொருள்கூறினும் பொருந்தும். [நிலவுவெளிப்படவருந்தல்.]

அம்பவளவளவா யெனக்கும்முல்லையாளர்வில்லி
னம்பவளவளவாம்விழியெங்கைக்குமன்புவைத்த
நம்பவளவளவாச்சொரிபாலொக்குநட்பறியாய்
நம்பவளவளவாவேதகுமிங்குநண்ணலையே.

(இ—ள்.) அம் பவள வள வாய் எனக்கும் - அழகிய பவளம் போலும் வளப்பமாகிய அதரத்தையுடைய என்னிடத்தும்,—முல்லை ஆளர் வில்லின் அம்பு அவளவு அள் அவாம் விழி எங்கைக்கும் - திருமுல்லைவாயிலை ஆளுகின்றவராகிய சிவபெருமான் (கைக் கொண்ட) வில்லிற் (பூட்டிய விஷ்ணுவாகிய) பாணத்தினது அவ்வளவு (வஞ்சகம் பொருந்திச்) செவிவரையும் நீண்ட கண்களையுடைய என்றங்கையிடத்தும்,—அன்பு வைத்த நம்ப - (ஒத்தபடியாக) ஆசை கொண்ட தலைவரே,—சொரி பால் ஒக்கும் நட்பு அளவளவா அறியாய் - சொரியாநின்ற பால்போல (க் கபடமில்லாத எனது) நண்பினை (நீர்) கலந்தும் உணர்கிலிர்போலும்,— (அங்ஙனமாயின்)—அவள் வள் அவாவே நம்பத்தகும் இங்கு நண்ணலை—(எங்கையாகிய) அப்பெண்ணினது மிக்க ஆசையே (உமக்கு) நம்பத்தக்கதாகலின் இவ்விடத்தே வாராதிரும் (எ-று.) எனக்கும் மென்பது வேற்றுமைமயக்கமாய் மகரவொற்று விரிந்து நின்றது. எங்கைக்குமென்பது வேற்றுமைமயக்கம். மூன்றாமடியில் அளவளாவா வென்றபாலது அளவளவா வெனக்குறுகி உம்மை தொக்கு நின்றது. [அணைந்தவழிப்புலத்தல்.] (௯௧)

நண்ணத்திருவளவானந்தவீட்டினயந்தெண்ணிடு
மெண்ணத்திருவளகத்திகழ்ந்தேகியிரும்பரிதி
வெண்ணத்திருவளர்கையேந்திகாணரும்வேந்தனமர்
திண்ணத்திருவளமுல்லையிற்சேர்மின்றிருந்தகவே.

(இ-ள்.) வள வீட்டின் ஆனந்தத் திரு நயந்து நண்ண எண்ணிடும் எண்ணத்திர் - பெருமையுடைய வீடுபேற்றின்கண்ணதாகிய இன்பவாழ்வை விரும்பிச் சேரும்பொருட்டுக் கருதுகின்ற கருத்தையுடையவர்களே,—உவளகத்து இகழ்ந்து ஏகி இரும் பரிதி வெள்

நத்து வளர் இரு கை ஏந்தி காண அரும் - (திருக்கைலாசமலையின்க ண்) அந்தப் புரத்திலே நிந்தைகூறிப் புகுந்த (மையால் உமாதேவி யாராற் சபிக்கப்பட்ட) பிரமனும் பெரிய சக்கரப்படையையும் வெ ள்ளிய சங்கையும் உயர்ந்த இரண்டு கைகளிற்கொண்ட விஷ்ணு வும் தரிசித்தற்கரிய,—திண்ணத்து வேந்தன் அமர் இரு வளத் தி ருமுல்லைவாயில் தகச் சேர்மின் - வலிமையுடைய முதல்வர் எழுந் தருளி யிராநின்ற மிக்க அழகையுடைய திருமுல்லைவாயிலை நல்லொ ழுக்கத்தோடு அடையுங்கள். (எ-று.) எண்ணிய வண்ணம் அச்சிவ பிரான் திருவருள் செய்வாரென்பது எஞ்சிநின்றது. ஏகி ஏந்தி என்பன பெயர்கள். காணவருமென்பது காணருமென அகரம் வி காரத்தாற் றொக்கது. உவளகத்து இகழ்ந்து ஏகி என்பதற்கு அந்த ப்புரத்தில் அநுபவிக்கும் சிற்றின்பத்தை வெறுத்துச் சென்று எனப்பொருள்கூறலுமொன்று. அதற்கு உவளகத்தநுபவிக்கு மின் பத்தை உவளகமென உபசரித்ததாகக் கொள்க. (க00)

## திருமுல்லைவாயிலந்தாதியுரை முற்றியது.



மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர் திருநாமக்கோவை.

காப்பு.

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங்
கையன் றிருவடியே காப்பு.

நூல்.

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனார்
இல்லை யளித்த வியற்பகையார் - தொல்லை
இளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரொன்றும்
இளையா விறன்மிண்ட ரின்பம் - அளவுமமர்
நீதி யெறிபத்தர் நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர் - மேதகுசீர்
மானக்கஞ் சாறரரி வாட்டாய ரானாயர்
ஞானத் திருமூர்த்தி நாயனார் - மேன்மை
முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்
துரிசி றிருக்குறிப்புத் தொண்டர் - மருவுமறைச்
சண்டேசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார் - தொண்டுசெயும்
நீள்காரைக் காலம்மை யப்பூதி நீலநக்கர்
மூளு நமிநந்தி முத்தமிழை - ஆளுந்
திருஞான சம்பந்தர் செய்யகலிக் காமர்
அருண்மூலர் தண்டி யடிகள் - வருமூர்க்கர்
சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றொண்டின் - ஏமச்
சிறுத்தொண்டர் சேரமான் செய்யகண நாதர்
விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத் - திறத்துமிகும்

பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர்
மொய்கொ ணரசிங்க முனையரையர் - ஐயாதி
பத்தர்கலிக் கம்பர் கலியர்பகர் சத்தி
கைத்தபுல னையடிகள் காடவர்கோன் - மொய்த்தகணம்
புல்லனூர் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார் நாயனார் - மல்குகழற்
சிங்க ரிடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியார் - அங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தஞ் சிவன்பாலே சேர்த்துள்ளார் - நித்தமும்
முத்திநெறி காட்டு முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தார்கள் - அத்தனையே
முப்போதுந் தீண்டுவார் முழுநீறு பூசுவார்
அப்பாலு மீச னடிச்சார்ந்தார் - மெய்ப்பூசல்
மானியார் நேசனார் வாழ்செங்கட் சோழனார்
பான்மையார் நீலகண்டப் பாணனார் - மேன்மைச்
சடையரிசை ஞானியிவர் தம்மையெல்லாஞ் சேர்த்துத்
தொடையாகப் பாடியவன் றொண்டர் - அடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து - நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு - மையலுந்தீர்ந்
தத்துவிதா னந்த வகண்டபரி பூரணத்தின்
நித்தியமா வாழ்வார் நிசம்.

திருத்தொண்டர்திருநாமக்கோவைமுடிந்தது.



மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சாக்கரதேசிகர்மாலை.

## கட்டளைக்கலித்துறை.

அறிவேயருட்செல்வமேநிறைவேயரசேயடியா
ருறவேயென்னுருயிரோமணியேயுருகாதநெஞ்சிற்
பிறிவே துரியங்கடந்தசிவானந்தப்பேரமுதச்
செறிவே கருணைப்பிழம்பேபஞ்சாக்கரதேசிகனே. (க)

பொய்யுங்கவடுங்கொடுமையும்வஞ்சமும்பூண்டபொல்லாக்
கையன்கலதிமுழுமூடனேனுநின்கண்ணருளா
லுய்யும்படியென்றுகூடுமெந்தாயுண்மையாளரன்பு
செய்யுந்துறைசையுட்டேவேபஞ்சாக்கரதேசிகனே. (உ)

பரிசறியேனருட்பண்பறியேனெனைப்பற்றும்வினைக்
கரிசறியேனதுமாற்றறியேன்கலரோடிணங்கித்
துரிசுகளேசெயும்பொல்லாவுலகத்தொழும்பனுக்குன்
றெரிசனங்கிட்டுவதென்றோபஞ்சாக்கரதேசிகனே. (ஙு)

மருவேனுனதடியார்திருக்கூட்டமருவிவஞ்ச
மொருவேன்மகளிர்விழிக்கடைநோக்குக்குளம்பதைத்து
வெருவேனடிமையுமெந்நாளுனதருண்மேவுவனோ
திருவாவடுதுறைத்தேவேபஞ்சாக்கரதேசிகனே. (ச)

ஆனந்தவாழ்விலடியாரெல்லாருமகங்களிப்ப
நானிந்தமாயத்தொடக்கினில்வீழ்ந்துநலிதனன்றோ
வானந்தநீண்டமதிலாவடுதுறைவாழ்முதலே
தேனுந்துபங்கயத்தாளாய்பஞ்சாக்கரதேசிகனே. (ரு)

வற்றாக்கருணைத்திருநோக்குநின்முகமண்டலமுஞ்
சற்றேமுகிழ்த்தகுறுமூரலுந்தடமார்பழகும்
பொற்றாளுஞ்சின்முத்திரையுநெஞ்சூடுபொறித்துவைப்பாய்
செற்றார்புரஞ்செற்றதேவேபஞ்சாக்கரதேசிகனே. (சு)

தேறாதநெஞ்சுந்தெளியாதசிந்தையுந்தேங்கியின்ப
மூறாதகண்ணுமொழியாக்கவலையுமுன்புகழே
கூறாதநாவுமெனக்கேதகுமென்றுகூட்டினையே
சீறாதருள்செயுந்தேவேபஞ்சாக்கரதேசிகனே. (௭)

நின்னருணோக்கினுக்கெவ்வளவேனுநெகிழ்ந்துருகா
தென்னுடைவன்மனமின்னார்விழிக்கடைக்கென்னிலந்தோ
வன்னியினேர்மெழுகாயுருகாநிற்குமாயமென்னே
செந்நெறியாய்நின்றதேவேபஞ்சாக்கரதேசிகனே. (௮)

பிறவித்துயரினியாற்றேனடைக்கலம்பேயுலகின்
மறுகித்திரிந்தலைந்தெய்த்தேனடைக்கலமங்கைநல்லா
ருறவைத்தவிர்த்துய்யக்கொள்வாயடைக்கலமுண்மையன்பர்
செறிவுக்குள்வாழுமெய்த்தேவேபஞ்சாக்கரதேசிகனே. (௯)

இருவினைதாமிவைமும்மலமீங்கிவையீதுசிவங்
கருவுறுமாருயிருண்மையிதுவென்றுகாட்டவல்ல
குருபரனீயன்றிவேறறியேனிக்குவலயத்திற்
றிருவெண்ணெய்மெய்கண்டதேவேபஞ்சாக்கரதேசிகனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

உலகுடையநாயனார்

அருளிச்செய்த

# கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின்
மாயையாங் கிழங்கிலங் குரித்து
மன்னுமூ வெட்டாந் தத்துவ நாள
மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு
நண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொகுட் டாகு நாதமே விந்து
நயந்தகண் ணுமென விரவி
இலகுமென் னுடலப் பதுமபீ டிகைமீ
யிருந்தரு ளாசன மெனுமல்
எனதுபுக் கிலதா யெண்ணினேன் றெளிய
வியலருட் பார்வைதந் தனையே
அலகிலா வுயிர்கண் மலநடைக் கிலையா
யருணடைக் குண்மையாய் நின்ற
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (க)

புசிப்பினல் வினையாற் சகலனு மென்பாற்
புசிப்பொடு வினையுமாய்ப் புகுந்து
புல்லிய வரவின் வாய்மணி கொள்வார்
போன்மலத் தெனைவெளிப் படுத்தி
நசிப்பிலாக் கருணை யுருவமாய் வந்து
ஞானபா தத்தையீ ணாந்தா
நண்ணுகா ரியத்தா லெனக்குப தேச
நல்குநின் பெருமைநா னறியேன்

வசிக்குமைந் தொழிலின் மலநடை நான்காய்
மற்றொரு தொழிலரு ணடையாய்
மன்னுயிர்க் கிரங்கி நடத்தொழில் புரியும்
வள்ளலே மருவுசித் திடத்தும்
அசித்தினு நீங்கா தகண்டமாய் நிறைந்த
வருட்பரி பூரணக் கடலே
ஆவடு துறைசை யம்பல வாணா
வடியவர்க் கருளுமா நிதியே. (௨)

†சீவனே வியாபி யவத்தையி லிழிந்து
திரும்புதல் குற்றமாங் கருவி
சேருதல் பிரித லில்லையா முறையிற்
செயற்படுங் கருவியே தெரியுங்
தாவிலா வறிவு தங்கின விடமே
தகுமுயிர்க் கிருப்பிட மென்று
சாற்றியென் னுளத்தி லையமுந் திரிவுந்
தவிர்த்தெனை யாண்டுகொண் டனையே
பாவனை கடந்த வுனைவச மாக்கப்
பாசமும் பசுவுமா ஞானம்
பற்றிநாட் டத்தை முகிழ்த்துவாய் நீரைப்
பசையறப் பருகுவார் தங்கள்
ஆவல்சேர் நிட்டை யபாயமாய்க் கருதி
யதற்கியல் பினையளித் தவனே
ஆவடு துறைசை யம்பல வாணா
வடியவர்க் கருளுமா நிதியே. (௩)

நாலுகை தனிலே நாலுகை யமைப்பு
நற்றுடி முளரியை நயந்து
நளினபா தத்தி னொன்றெடுத் தொன்றை
ஞானவான் பொதுவிலே நாட்டிக்

† சீவனேவியாபி—தகுமுயிர்க்கிருப்பிடம் என்பதனை, சிவஞானபோதத்திற்குச் செய்தருளிய சிற்றுரையில் நான்காஞ்சூத்திரம் மூன்றாமதிகரணம் ஏதுப்பொருளுக்கு உதாகரணமாகச் சிவஞானயோகிகள் கூறியருளினார்.

கோலமார் கூத்து விடாதநீ *யுன்றன்
குலமிரண் டென்குல மிரண்டுங்
குறுகிடா வண்ண மின்பமா யென்பாற்
கூத்தையுங் கொண்டதெப் படிதான்
ஏலுமா மலர்க்காய் நாசிகை வேழ
மெறிந்தநீ சினகரந் தகர்க்க
எப்படி பொறுத்தா யிதற்குமேல் வினையு
மில்லையென் றுரைத்தது மிலையோ
ஆலநீ ழலிலே யயன்றரு புதல்வர்க்
காகம முரைத்தபூ ரணனே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (௪)

முந்தநான் செய்த விதத்தினுக் கிதமே
முடித்தவா பிறப்பினை முடிப்பாய்
மூளுமிக் காலத் திவ்வுடல் வினையை
முற்றுநின் றொழிலெனக் கொள்வாய்
நந்திடா வென்னை யுனக்குட லாக்கி
நண்ணுமென் னுயிருமாய் நயப்பாய்
நாடிலுன் கருணைக் கேற்றகைம் மாறு
நான்செய முடியுமோ நவில்வாய்
சிந்தைமெய் வாக்கு மூன்றினு முயிர்கள்
செய்வினை கொடுத்திட வதற்காத்
தேகமே கொடுத்து மலபரி பாகஞ்
செய்தறி வினிற்பவ முடித்த
அந்தமார் குரவர் சிகாமணி நீயே
யண்ணலே யென்னுயிர்க் கமுதே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (௫)

---

* உன்றன் குலமிரண்டென்—கொண்டதெப்படிதான் என்பதனை, சிவஞானசித்தியாருக்குச் செய்தருளிய பொழிப்புரையில், ஒன்பதாஞ்சூத்திரம் ஏழாஞ்செய்யுளில், உதாகரணமாகச் சிவஞானயோகிகள் கூறியருளினார்.

காந்தமுன் கரும்பொன் கதிரின்முன் படிகங்
கசனநேத் திரவொளி தானை
கலைமதி பொருந்துந் தன்மையா யுனது
கருணையி னுள்ளுறக் கலந்து
மாந்திய கனியு மதுரமும் பண்ணு
மருவுறு மோசையு முடனும்
மன்னிய வுயிரும் போலமூன் றில்லா
வகையிரண் டல்லது மானேன்
ஏய்ந்தமூன் றவத்தை யுயிரினுக் காதி
யிருக்கினும் வினைமுதிர்ச் சியினால்
இரண்டுமுன் னடாத்தி மலபரி பாக
மியற்றிமற் றொன்றையீ னாந்தாய்
ஆய்ந்தகா ரியமா வவத்தையோ னாந்தி
னடக்கிநா னறிந்திடச் செய்த
ஆவடு துறைசை யம்பல வாணா
வடியவர்க் கருளுமா நிதியே. (௬)

என்னையு முனையுந் தன்னையுங் காட்டா
திந்திய விடயமே காட்டி
இயல்வினை மாயை யிரண்டையு மெனையு
மிணக்கிய வாணவ மலத்தின்
தன்னுறு வழிநின் சத்தியை நடாத்தித்
தருமதன் சத்திக ளெல்லாந்
தயங்குநின் னுருவ மூன்றினுள் மாற்றித்
தாணிழ றந்துகாத் தனையே
*கன்னலங் கழனிக் காழிமா நகரிற்
கவுணிய னிரண்டுஞா னமுமே
கற்றிடா துணர வீர்க்கிடை போகாக்
கதிர்முலைப் பால்கறந் தளித்த

*"கன்னலங் கழனிக்காழிமாநகரிற் கவுணியனிரண்டுஞானமுமே கற்றிடாதுணர,, என்றருளிச்செய்திருப்பதால், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணத்திலே,"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகுசிவஞானம், பவமதனையறமாற்றும்பாங்கினிலோங்கியஞானம், உவமையிலாக்கலைஞானமுணர்வரியமெய்ஞ்ஞானம், தவமுதல்வர்சம்பந்தர்தாமுணர்ந்தாரந்நிலையில்.,, என்றசெய்யுளிலேகூறியருளியஞானம்இரண்டேயெனக்கொண்டு, திருத்தணிகைப்புராணநூலுடையார்"மேவருஞானமிரண்டவற்றொன்றுவிமலனார்பாததாமரையே,ஓவறுமன்பினுணர்திருவளிக்குமொப்பிலாவுயர்கலைஞானம்,தாவரும்பவத்தைவேரொடுங்களையுந்தக்கமெய்ஞ்ஞானமொன்று,, எனஅந்நுவயஞ்செய்துகூறியருளினர்.

அன்னைதன் பசுவாந் தன்மையை யகற்றி
யாதரித் தருள்கொடுத் தவனே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (எ)

தணவிலா மலத்தின் குருடனேற் குடலந்
தாவொரு கோலெனக் கொடுத்துச்
சத்தமே யாதி விடயமோ ரைந்தின்
றன்வழி புசித்திடத் தந்து
குணவழி நடவார் குணவழி நடந்து
குணத்தினைத் திருப்புவார் போலக்
கொடுவினை யொப்புச் சத்திநி பாதங்
கூர்மல பாகமுங் குறித்தே
இணையிலா வின்ப வடிவமா முன்றோ
டென்னையு மிரண்டற வைத்தாய்
ஏழையே னுன்ற னடியருக் கடியா
னென்னவும் பற்றிலே னரவின்
அணைதுயி லெழுந்தே யருவிகண் பொழியு
மரியரிக் குரைத்தகூத் துடையாய்
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (அ)

இருங்கடன் மணலை யெண்ணினு முவர்நீ
ரிவ்வள வெனவளந் திடினும்
இருவினைக் கீடா வெடுத்தவென் னுடல
மெண்ணிறந் தனவிவை யொழிய
வருஞ்சிவ தருமந் தன்னிலுன் றிருமுன்
வந்தனை செய்துனக் களிக்க
வாய்த்தவிவ் வுடலே யெனக்குப கார
மாகவே வந்திடு முடல்காண்
பெருஞ்சிவ னடியார் வேடமுற் றிடாநான்
பிறனெனத் திருவுளத் துறுமற்

பேதையேன் றன்பா னேக்கொடு பரிசம்
பிறங்குபா வனைத்தொழில் பெருக்கி
அருந்திறன் மலந்தீர்த் தறிவினைத் திருப்பி
யாண்டருள் கருணையங் கடலே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா மணியே. (௯)

முந்துமா கமத்தை யருட்டுறை யண்ணன்
மொழிபெயர்த் துரைத்தநூன் முதலா
முதல்வழி சார்பா மூன்றநூற் கருத்து
முறைதெரி யாமலே கருதி
நந்தவே யெழுது முறைதனைக் குருவாய்
நாடிய குரவனை நம்பி
நற்கதி யடையா வுயிர்களுக் கிரங்கி
நற்கதி கொடுத்திட வேண்டிச்
சிந்தனை யாக்கிப் பதிபசு பாசந்
தெரிந்திட லளிதமா வுரைத்துன்
திருவடி நீழன் மருவிட வைத்த
தேசிக சிகாமணி நீகாண்
ஐந்தலை யரவி னடித்தமா லீரைந்
தாதிய பிறவிநோய் தவிர்த்த
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா மணியே. (௧௦)

கழிநெடில்முடிந்தது.

---

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவபுரம் பெரியபிள்ளையவர்கள்

அருளிச்செய்த

# திருவெண்பா.

அந்தமலத்துத்துவிதமானபணியாலகற்றி
வந்தமலத்துத்துவிதம்வைத்தாயே - எந்தாய்
திருவாவடுதுறைவாழ்தேசிகாபொய்யில்
மருவாதவம்பலவாணா. (க)

உண்போகந்தந்தாயுனக்குவினையேனருந்தும்
என்போகந்தந்தேனென்னீசனே - இன்புருவா
கைம்மாறுண்டாமோகவினாவடுதுறையின்
அம்மானேயம்பலவாணா. (உ)

ஆதிவருணத்தாலரியாலுனையிழந்த
பாதகருக்கேகிரயம்பாலிப்பாய் - நீதியுடன்
தானந்தமானவனைத்தற்பரமாய்விட்டகலா
ஆனந்தவம்பலவாணா. (ங)

இருளிரவிதீபமிவைமூன்றடங்க
வருகதிர்போலேமூன்றுமாயத் - தருஞான
பானுவாய்வந்தவனேபண்பாவடுதுறைவாழ்
வானவனேயம்பலவாணா. (ச)

முத்தியிலுஞ்செய்கையைப்போன்மூன்றுமலமுந்தவிராப்
பெத்தமுமுன்செய்கையெனப்பேசுவார் - சத்தியமே
காணாதமூடர்கண்டாய்காவாவடுதுறையில்
வாணாநம்மம்பலவாணா. (ரு)

அஞ்சாமவத்தைதனிலாணவம்போமென்றுரைப்பார்
எஞ்சாச்சரியாதியெண்ணியான் - வஞ்சமலம்
முன்னகற்றுமாறறியார்மூடர்கண்டாய்தென்றுறைசை
மன்னவனேயம்பலவாணா. (௬)

ஆதியேதென்றுறைசையம்பலவாணாவெனைநீ
பேதமறக்கூடிநின்றபெற்றிதனை - ஓதிலது
சாக்கிராதீதந்தருமான்மலாபமின்பம்
ஆக்குசிவபோகமெனலாம். (௭)

அத்தனேதென்றுறைசையம்பலவாணாவமைந்த
சித்தமுருவிரண்டுந்தீபமென்றாய் - சுத்தத்தில்
ஒன்றுபதார்த்தமாமொன்றுநின்னோடொன்றும்
ஒன்றுமனவாதேயுரை. (௮)

மருளிற்பிறந்துமயங்குமெனையுன்றன்
அருளிற்பிறப்பித்தாயையா - பொருளான
நானுனக்கென்செய்வேனவிலாவடுதுறைவாழ்
வானவனேயம்பலவாணா. (௯)

அந்தந்தெரியாவசிந்திதநீசிந்திதனை
வந்துன்னோடென்னைவசமாக்கிப் - பந்தமுறும்
சித்தமுதற்கரணமெல்லாந்திருவருளாய்
வைத்தனையேயம்பலவாணா. (௧0)

திருவெண்பாமுடிந்தது.



மெய்கண்டதேவர்மெல்லடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க,



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கைலாசசந்தானகுரவர்களின்

## தோத்திரங்கள்.

*திருநந்திதேவர், சநற்குமாரமுநிவர், சத்தியஞானதரிசனிகள்,*

### பரஞ்சோதிமுநிவர்.

அருட்குழகனொழிற்கயிலைமுழுக்காவனந்திபிரானடிகள்போற்றி
தெருட்சிபெறுமனக்கமலசநற்குமரமுநிவனிருதிருத்தாள்போற்றி
இருட்மலத்தகல்சத்யஞானதரிசனிசரணவிணைகள்போற்றி
மருட்சியறுபரஞ்சோதியருஞ்சீலகுருபரன்கான்மலர்கள்போற்றி. (க)

### மெய்கண்டதேவர்.

திங்களொடுகங்கைபுனையங்கணனார்செப்புதிருவருளினோடு
தங்குருவாம்பரஞ்சோதிமுநிவனினிதறைகுறிப்புந்தகவாக்கொண்டு
துங்கமுறுசிவஞானபோதமும்வார்த்திகப்பொழிப்புஞ்சுழிப்புநீர்சூழ்ந்
திங்கமருந்தமிழ்நாடுவீடுபெறப்புரிகுரவரிருதாள்போற்றி. (உ)

### அருணந்திசிவாசாரியர்.

முப்பொருளினீரியல்புமோரியல்பாதுவலாதுமுறைவெவ்வேறாய்ச்
செப்புசிவாகமங்களின்றன்பொருளொருமைபெறவுணர்த்து திறமுன்
னூலை, ஒப்பவிரியாப்பதனுற்சித்தியெனும்வழிநூலாயொளிர்பிற்கா
லத், திப்புவியோர்தெளிந்துய்யமொழிந்தவருணந்திசிவனிணைத்தாள்
போற்றி. (ஙு)

### மறைஞானசம்பந்தசிவாசாரியர்.

திருவளருஞ்சாமமறைதிகழ்பராசரன்மரபோன்
விரசுநர்பான்மறையுணர்வுவிரிந்தொளிரப்புணர்த்துவோன்
மருதமொடுகடந்தையையாண்மறைஞானசம்பந்த
குருமணிதன்மருமலர்த்தாள்குறித்துகிப்பரசிடுவாரும். (ச)

உமாபதிசிவாசாரியர்.

அடியார்க்கெளியனெனத்தில்லையண்ணலருளுந்திருமுகத்தின்
படியேபெற்றான்சாம்பாற்குப்பரமுத்தியப்பொழுதே
உடலுங்கரைவுற்றடைந்திடவொனுயர்தீக்கையினையருளுேக்காற்
கடிதிற்புரிகொற்றங்குடியார்கமலமலரின்கழல்போற்றி. (ரு)

அருணமச்சிவாயதேசிகர்.

பெற்றான்சாம்பான்மனைவியிறைமுதலோர்பேறுறவாற்பெற்றவைய
இற்றேடத்தம்பூசையீசனுக்காட்டருளீர்பாய்ந்தெளிதாய்ப்பாகம் [ம்
உற்றேங்குமுள்ளிக்குவீடீந்தவுமாபதியாருபதேசத்தின்
முற்றேன்றலாகியமாருணமச்சிவாயகுருமுதற்றாள்போற்றி. (சு)

திருவளர்கொற்றங்குடியிடையமர்ந்தசீருமாபதிசிவாசிரியன்
அருளுபதேசத்தோடுதன்பூசையம்பலவாணர்பூசனையும்
புரிதருமதிகாரத்தையுமீந்துபொன்னடிசூட்டிடப்பெற்ற
குருவருணமச்சிவாயகோமான்றன்குலமலர்த்தாளிணைபோற்றி. (எ)

சித்தர்சிவப்பிரகாசதேசிகர்.

உத்தமக்கோமுத்திபெறுமொருபதியின்வதிந்தருளி
எத்திறத்தவுயிர்களுக்குமெளிதாகவொளிர்ஞானம்
பத்திகொளவறிவுறுத்திப்பரவீடுதரும்பெரிய
சித்தர்சிவப்பிரகாசதேசிகர்தாள்சிரத்தணிவாம். (அ)

நமச்சிவாயதேசிகர்.

இருதயநாப்பணஞ்செழுத்துருவினிறைவனையுயிர்க்கொலைசெயாமை, அருள்பொறியடக்கல்பொறைதவம்வாய்மையன்பறிவென்னுமெண்மலர்கொண், டொருமையொடருச்சித்திடுகவென்றடியார்க்கௌளியதீக்கைசெய்துணர்த்தத், திருவமர்துறைசையுறையருட்குருவாந்திருநமச்சிவாயர்தாள்போற்றி. (கூ)

மறைஞானதேசிகர்.

மறைகளெலாமுறையுணர்ந்துமறைஞானமுறப்பின்னும்
இறைஞானம்பெறும்விருப்போர்க்கெய்தருமந்நிட்டைநிலைத்
துறைகாட்டித்தன்பெயரினியல்காட்டுந்துறைசையினின்
மறைஞானதேசிகன்றன்மலர்க்கழல்கடலைக்கணிவாம். (க0)

அம்பலவாணதேசிகர்.

உரவுதசமார்க்கசித்திசிவாச்சிரமமுபதேசமுபாயநிட்டை
தெருளுநிட்டைவிளக்கமேபஃறொடைசிகாமணியதிசயமாலை
திருநமச்சிவாயதுதியெனுஞானநூல்பத்துஞ்சிறப்பச்செய்தே [ம்.
அருள்குருவாய்த்துறைசையமரம்பலவாணன்றிருத்தாளனுகிவாழ்வா

உருத்திரகோடிதேசிகர்.

பெருகாநின்றிபெருவம்பெயராதகாவிரிசூழ்
ஒருமாவாழ்துறைசையுறைந்துருத்திரகோடிகளாகப்
பரயோகமெய்ஞ்ஞானம்பரிபாகர்க்கருளுமுருத்
திரகோடிதேசிகன்றாள்சென்னியினின்மன்னுவிப்பாம். (௧௨)

வேலப்பதேசிகர்.

நறுமலர்மஞ்சனமமுதுமுதலியன்மனமதனுடிக்கொண்டு
மறுவில்சிந்தைதனிற்புரியந்தரியாகமாபூசைமன்னுயிர்க்குப்
பெறுபுனிதமாகுமெனவடியவர்க்குவிளக்கியருள்பிறங்குந்தூய்மை
உறுதுறைசைவேலப்பதேசிகன்றன்விரைமலர்த்தாளுன்னிவாழ்வாம்.

குமாரசுவாமிதேசிகர்.

புத்தியையபுத்திபூருவமிரண்டும்பொருந்துறுமுபாயமுண்மையினி
வைத்திடுஞ்சரியைகிரியைநல்யோகஞானமாவகுத்திடுமெட்டும்
ஒத்திடிற்பத்தாம்புண்ணியமென்னவுணர்த்துவான்கோமுத்திவாழுஞ்
சுத்தன்முற்குமாரசாமிதேசிகன்றன்றுணையடிதொழுதுவாழ்ந்திடுவாம்

குமாரசுவாமிதேசிகர்.

சொற்குவைமாறுக்கழனிபுறஞ்சூழ்ந்த துறைசைதனிற்றொல்லுயிர்க்
நற்பருவவரசவிளங்குமரனெனத்தம்முயர்வுநயப்பக்கூறிக் [கு
குற்றமலப்புலவேடக்குறும்பகற்றிப்பதியாக்குங்குமாரசாமி
சற்குரவன்செங்கமலமலர்போலுந்தாளிணைகள்சார்ந்துவாழ்வாம். (௧௫)

மாசிலாமணிதேசிகர்.

திருவெண்காடுறைமறையோருச்சிட்டஞ்சேர்கூவற்செறிகிடங்கள்
பெருகுமுவர்நீர்கண்டதஞ்சையினிற்மகிழவன்பிற்பிறங்குமாகே
சுரருண்டபரிகலத்தாலுவர்க்கூபநறுநீராய்ச்சுரக்கமேலாம்
அருளுந்துகோமுத்திக்குருமாசிலாமணியாரடிகள்போற்றி. (௧௬)

இராமலிங்கதேசிகர்.

படைத்தல்காத்தறுடைத்தலெனப்பகருமும்மைத்தொழிலுடற்கே
கிடைக்குமெனவுமறைப்பருளல்கெழுமவுயிருக்காமெனவுங்
தொடர்ச்சியகன்றதூயவர்க்குத்துறைசையுறைந்துசொலிநாளும்
நடத்துமிராமலிங்ககுருநற்றாள்பற்றியுய்ந்திடுவாம். (௧௭)

வேலப்பதேசிகர்.

நிறைமதியாதித்தருபராகத்திராகுவொடுநிழலாங்கேது, மறை
வின்றிவிளங்குதல்போலிறைவனைத்தம்மனமலரின் வருணமைந்தின்,
முறைமையினிற்காண்டலுறிற்றோன்றிமெம்முதல்வனெனமுதிர்பாக
ர்க்குத், துறைசைதனிலறிவுறுத்துகுருமுதல்வேலப்பன்மலர்த்துணைத்
தாள்போற்றி. (௧௮)

### வேலப்பதேசிகர்.

சட்டியுணருலகசத்தென்றோரொன்றாவொழிந்துயிரிற்சுட்டற்றோங்கும், அட்டகுணன்றனையாய்ந்துசோகமெனப்பாவிக்கினதனாற்றோன்றும், எட்டுருவனாற்கருடதியானத்துவிடம்போலவினையகந்தனுனம், விட்டொழியுமெனுந்துறைசைவேலப்பதேசிகன்றாள்விரும்பி வாழ்வாம். (௧௯)

### திருச்சிற்றம்பலதேசிகர்.

திருமுகனைவக்கிறைவேண்டவவ்வணமேயுலகின்வெம்மைசிதையத்துன்னி, வருதுழனிமுகில்சுரந்துநீர்பொழிந்துவளம்பெருகவாய்மலர்ந்த, பெருவினையாக்கலியுடையான்சிவாகமத்தினிரிலக்கம்பெரிதுமோர்ந்தோன், குருதிருச்சிற்றம்பலவன்றுறைசையமர்கோமான்றன் குலத்தாள்போற்றி. (௨௦)

### அம்பலவாணதேசிகர்.

ஐந்தொழிலிற்படைப்பாதிநான்கூனநடத்திறலாருயிர்க்கு
நந்துபரிபாகமுறச்செய்தருளலெனுஞானநடத்திறலே
பந்தமறமுத்திநிலைகைகூட்டுவான்றுறைசைப்பதியின்வைகுஞ்
சுந்தரவம்பலவாணகுரவனிருதிருத்தாள்கடொழுதுவாழ்வாம். (௨௧)

### சுப்பிரமணியதேசிகர்.

சத்தசித்தமுற்றுருகித்தொழும்பாயொழுகுகுழாங்கட்குப்
பெத்தமுத்தியிரண்டினிலும்பிறழாமும்மைப்பொருளியலென்
றுத்தியோடுந்தெளித்தருள்பாக்கொளிசாறுறைசைக்கண்வாழும்
அத்தன்குருசுப்பிரமணியவமலன்கமலவடிபோற்றி. (௨௨)

### அம்பலவாணதேசிகர்.

சரியைமுதலாந்தவங்கடமைச்சாதிப்பவர்கட்குணவாதி
உரிமையாகவுதவலின்மேலுயர்ந்தவறமின்றென்றுணர
அரியவன்னதானமடியவர்க்குப்பரிந்துபுரிதுறைசைப்
பெரியகுருவம்பலவாணபெருமானடியைமுடிவைப்பாம். (௨௩)

### சுப்பிரமணியதேசிகர்.

பத்திபுரியுமன்பர்மும்மைப்பாசவிருளைத்துரந்துபர
முத்திநெறியையறிவுறுத்திமூவாநிரதிசயவின்ப
அத்தியதனிலமிழ்விப்பானமருந்துறைசைப்பதிமுத்த
சித்தன்குருசுப்பிரமணியதேவன்கழல்கடொழுதுய்வாம். (௨௪)

தோத்திரங்கள் முடிந்தன.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானயோகிகள் மீது கீர்த்தனை.

தொட்டிக்கலைச் சுப்பிரமணியசுவாமிகள் அருளிச்செய்தது.

பல்லவி.

நினைத்தாற் சகிக்கப் போமோ-என்சுவாமியை
நினைத்தாற் சகிக்கப் போமோ.

அநுபல்லவி.

எனைத்தனிவிட்டகன்ற
எந்தைசிவ ஞானவாழ்வை நினைத்தால்.

சரணங்கள்.

கருணைமுகத்தைக்காட்டிக்
கனிந்தமொழியைக்காட்டித்
தருணவடிவைக்காட்டித்
தனித்துவிட்டகன்றானை, நினைத்தால்.

காவியுடையழகுங்
கவினார்வெண்ணீற்றொளியும்
பாவியேன்கண்ணிற்காட்டிப்
பரவீடுசேர்ந்தானை, நினைத்தால்.

சிவவேடச்சேவைதந்துந்
திருவடிநீழல்தந்தும்
அவமேனைவிட்டிங்கென்னை
அகன்றானாடியந்தோ, நினைத்தால்.

கலைஞானஞ்சிவஞானங்
கலந்தளித்தென்னையாளும்
நிலையானையென்னுயிராய்
நிறைந்துநின்றகன்றானை, நினைத்தால்.

கருவிலென்னோடிருந்து
கருணையாய்க்கொண்டுவந்து
பெருவாழ்வில்வைத்தகன்ற
பேரருளாளனானான், நினைத்தால்.

கண்ணினுளகலாரைக்
கருத்தினுள்விலகாரை
எண்ணியெண்ணித்தவிக்க
இங்ககன்றாரையையோ, நினைத்தால்.

என்னுயிர்கவர்ந்தாரை
என்றெழில்கவர்ந்தாரை
மன்னுதுயர்தந்தாரை
மறக்கவுங்கூடவில்லை, நினைத்தால்.

கண்டார்நெய்பால்கனிதேன்
கடலமுதுங்கலந்து
கொண்டார்போல்நான்மகிழக்
கூடிப்பிரிந்தவரை, நினைத்தால்.

துணைபிரியாவனமே
சுகமேமயில்குயிலே
இணைபிரியாவன்றிலே
எனைப்பிரிந்தாரைநாடி, நினைத்தால்.

பாம்பின்வாய்த்தேரைபோலப்
பலபலதுயருற்றுத்
தேம்பினேன்றன்னையாளச்
சீக்கிரம்வருவாரை, நினைத்தால்.

ஆரோனும்பத்தியனு
வளவுசெய்தாலுமவர்
சீரோறுசெல்வமுறச்
செய்தாரைப்பிரிந்தத்தை, நினைத்தால்.

ஆயிலியநாளாரை
ஆவடுதுறையாரை
நாயேனைப்பிரிசிவ
ஞானபூரணரைநான், நினைத்தால்.

கீர்த்தனைமுடிந்தது.

---

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானயோகிகள்மீது

தொட்டிக்கலைச்

# சுப்பிரமணியசுவாமிகள் அருளிய

# செய்யுட்கள்.

கருணைபொழிதிருமுகத்திற்றிருநீற்றுநுதலுங்
கண்டாரைவசப்படுத்தக்கனிந்தவாயழகும்
பெருமைதருதுறவோடுபொறையுளத்திற்பொறுத்தே
பிஞ்ஞகனார்மலர்த்தாள்கள்பிரியாதமனமும்
மருவினர்களகலாதஞானமேவடிவாம்
வளர்துறைசைச்சிவஞானமாமுனிவன்மலர்த்தாள்
ஒருபொழுதுநீங்காமலெமதுளத்திற்சிரத்தில்
ஓதிடுநாவினிலென்றுமுன்னிவைத்தேயுமைப்பாம். (க)

திண்ணவின்பச் சேவடியுந் திருவிழியுந்
திருமார்புஞ் செல்வக் கையும்
நண்ணுமன்பர்க் கருள்கருணைத் திருமுகமும்
பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணியத்தின் பொலிவாகி யற்புதக்கோ
லக்கொழுந்தாய்ப் புலைநா யேற்குக்
கண்ணைவிட்டு நீங்காத சிவஞான
சற்குருவே கருணை வாழ்வே. (உ)

ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலா
முற்றபே ராக ரமதாய்
ஓங்குதிரு வாவடு துறைப்பதியி லற்புதத்
தொருவடிவு கொண்ட ருளியே
பேதமுறு சமயவா திகளுள மயக்கைப்
பெயர்க்கும்ரச குளிகை யாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
பெருங்கருணை மேரு வாகி
ஆதரித் தடியேங்க ளுண்ணத் தெவிட்டாத
வமிர்தசா கரமா கியே
அழகுபொலி கலைசைச் சிதம்பரே சுராடிக்
கதிமதுர கவிதை மாரி
மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மன்னிவளர் சந்நி தியிலோர்
மணிவிளக் கென்னவளர் சிவஞான மாதவன்
மலர்ப்பதம் வணங்கு வாமே. (௯)

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

# பரிசோதநபத்திரம்.

### கம்பரந்தாதியுரை.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௬ | ௧௧ | ௫ | தாளால் | தாளாள் |
| ௧௧ | ௨௦ | ௭ | மேன்மை | மென்மை |
| ௧௩ | ௨௪ | ௧௪ | தகி | தகித் |
| ௨௦ | ௩௭ | ௧௩ | ஞயஞ | நாயஞ |
| ,, | ௩௮ | ௬ | உயிர்த்கு | உயிர்த்து |
| ௨௨ | ௪௧ | ௧ | வசன | வனச |
| ௨௪ | ௪௫ | ௧௦ | வண்ண | வண்ணம் |
| ௨௮ | ௫௩ | ௧௧ | படிப் | படி |
| ,, | ௫௪ | ௭ | ாஞமகி | ஞமாகி |
| ௩௨ | ௬௧ | ௧௪ | படித் | படி |
| ௩௩ | ௬௨ | ௧௧ | சாத்று | சாற்று |
| ௩௫ | ௬௬ | ௪ | யிட் | விட் |
| ,, | ௬௭ | ௧௫ | ஆதொண்ட | ஆதொண்டை |
| ௩௮ | ௭௨ | ௧௩ | துனை | துணை |
| ௩௯ | ௭௪ | ௭ | ளையும் | ளையும்வளையும் |
| ,, | ,, | ௮ | லேக்க | லேகக |
| ௪௦ | ௭௭ | ௧௦ | ன்நிறு | நின்று |
| ௪௧ | ௭௮ | ௧௭ | விட்யொ | விட்டொ |
| ௪௮ | ௯௦ | ௧௬ | ணிமூர் | ணுமூர் |
| ,, | ௯௧ | ௨ | பொது | போது |
| ,, | ,, | ௫ | நவா | நடவா |

### முல்லையந்தாதியுரை.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧ | காப்பு | ௧௪ | விஞ | விநா |
| ௨ | ௨ | ௭ | அனைத்கும் | அனைத்தும் |
| ௮ | ௧௧ | ௧ | முதுகின் | முதுகுன் |
| ,, | ,, | ௧௬ | எல்லை | ஒல்லை |
| ௯ | ௧௨ | ௩ | அடம்பந் | அடப்பந் |
| ௧௮ | ௨௮ | ௯ | அகலம்- | அகலம்-கலமோ |
| ,, | ,, | ௧௦ | பெறு | பெறும் |
| ,, | ௨௯ | ௭ | அர்ச்சிக்க,— | ,—அர்ச்சிக்க |
| ௨௩ | ௩௮ | ௮ | சூணமும் | குணமும் |
| ௨௪ | ௪௦ | ௨ | யுண்டே | யுண்டோ |
| ௨௬ | ௪௨ | ௫ | ணிடத்தாகி | ணிடத்ததாகி |
| ௨௭ | ௪௪ | ௬ | லூராகிய | லூரராகிய |
| ௨௮ | ௪௫ | ௧௦ | தான் | தரன் |
| ௩௫ | ௫௬ | ௧௧ | மருவிக்கு | மருவுவிக்கு |

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| சஉ | சாஅ | க | தான் | தாண் |
| ,, | ,, | கரு | முகம்பட்ட | முகப்பட்ட |
| சகூ | அ0 | க | விழியான் | விழியாண் |
| ,, | ,, | ஙு | வாண் | வாண |
| ,, | ,, | ச | வார | வரா |
| ரு0 | அக | அ | மெனற் | வெனற் |
| ருஙு | அஎ | கஅ | விடுபே | வீடுபே |
| ,, | ,, | உஙு | கருணே | கருணை |
| ருச | அகூ | கஅ | கொள்ள | கொள்க |
| ருரு | கூக | ரு | சார்பு | சார்வு |
| ருசா | கூஉ | ச | முன்நீ | முந்நீ |
| சாக | க00 | சா | முல்லைவாயில் | முல்லையில் |
| **சிவஞானயோகிகள்வரலாறு.** | | | | |
| ரு | | ஙு | நாயககர் | நாயகர் |
| கசா | | கஉ | வளப்படு | வளப்படுத் |
| ,, | | கஅ | வருகின்றன | வருகின்றது |
| **சிவதத்துவவிவேகமூலம்.** | | | | |
| உ | சா | உ | நீர்தாய்த் | நீர்த்தாய்ந் |
| ஙு | க0 | உ | பிரதியக் | பிரத்தியக் |
| ச | கஙு | உ | ளிறைவனே | னிறைவனை |
| எ | ஙுக | க | மாண்டுக்கிய | மாண்டூக்கிய |
| கூ | சஉ | உ | முறைபெரு | முறைபெறு |
| **துளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி.** | | | | |
| ச | உக | க | தனிவாய் | தனியாய் |
| எ | ருஉ | ஙு | முறைமையு | முறைமையும் |
| அ | ருரு | ச | வொருழருவங் | வொருழவருங் |
| **ஆனந்தக்களிப்பு.** | | | | |
| உ | | எ | ஆங்றுகுற்ற | ஆறுகுற்றங் |
| **விநாயகர்பிள்ளைத்தமிழ்.** | | | | |
| உ0 | ரு | உ | யேம்பாற் | யெம்பாற் |
| உஉ | உ | கஙு | வருட்டும் | வுருட்டும் |
| **துளத்தூர்ப்பிள்ளைத்தமிழ்.** | | | | |
| ஙுக | எ | உ | நில | நித்தில |
| ,, | அ | ஙு | பலவ | பல |
| ,, | ,, | ச | துற்றும் | முற்றும் |
| ஙுஉ | க0 | ரு | வேண் | வெண் |
| **சந்தானகுரவர்தோத்திரங்கள்.** | | | | |
| க | ச | ச | இப்பரசிவொரும் | ருஇப்பரசிவொம் |
| ஙு | கச | க | மையினி | மையினில் |